## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்:

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 25:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 25:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து அன்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1: 10:40-43)

CHIEF PASTOR N. LAZAR

## இதழின் உள்ளே ...

# ஆசிரியர் உரை

மனிதன் ஒன்று நினைக்கிறான்; தேவன் ஒன்று நினைக்கிறார். தேவன் நினைக்கிறது எதுவோ அதுவே நடைபெறும். மனிதன் தன்னுடைய திட்டத்தை நிறைவேற்ற பல குயுக்திகளைக் கடைப்பிடிக்கிறான். ஆனால், அவனுடைய வழி சரியாயிருந்தால்தான் அது நிறைவேறும். இல்லையென்றால் தேவன் அதை முறியடித்துப் போடுவார். தனி மனிதனாயிருக்கட்டும், மனிதர்கள் கூட்டாகச் சேர்ந்ததாயிருக்கட்டும், தேவன் நினைக்கிறது எதுவோ அதுவே நிறைவேறும். நம்முடைய வழி கர்த்தருக்குப் பிரியமாயிருந்தால் அது வெற்றியடையும். அல்லது நம்முடைய தவறான வழி முறைகளே அதை தகர்த்துப் போடும். ஆனபடியால், இந்த ஆண்டிலேயும் நாம் நம்முடைய வாழ்க்கையை, சேவையை, தேவனுக்குப் பிரியமாய், தேவ வசனத்தின்படி அமைத்துக் கொள்வோமாக! தேவனுடைய ஆலோசனை பெற்று முன்னேறுவோமாக தேவ ஆவியின் நடத்துதலின்படி நடப்போமாக! அவர் நடை செய்வதை உணர்ந்து அதற்கேற்றபடி நடப்போமாக. கிறிஸ்தவ ஜீவியமே தேவ ஆவியானவரின் பொறுப்பில் இருக்கிறது. எந்த மனிதன் பரிசுத்த ஆவியின் ஐக்கியத்திலிருந்து அவருடைய ஏவுதல், கட்டளை, உணர்த்துதல்படி நடக்கிறானோ அவனே வெற்றி வாழ்க்கை வாழ முடியும். மேலும் எவர்கள் தேவனுடைய ஆவியினால் நடத்தப்படுகிறார்களோ அவர்கள் தேவனுடைய புத்திரராயிருக்கிறார்கள் என்று வேதமும் சொல்லுகிறதே. தவறான வழியில் செல்லும் மக்களின் வெற்றியைப் பற்றி கவலைப்பட வேண்டாம். அவர்கள் சீக்கிரம் தோல்வியடைவார்கள். அவர்கள் நிலைப்பதில்லை, அவர்கள் யோசனையும் அழிந்து போம். நீயோ, தேவனுடைய மனுஷனே கர்த்தர் சொல்ல அப்படிச் செய்.

கிறிஸ்துவுக்குள்,

(CHIEF PASTOR N. LAZAR)

# அவர்கள் கோத்திரங்களில் பலவீனப்பட்டவன் ஒருவனும் இருந்ததில்லை சங். 105:37.

பழைய ஏற்பாட்டின் மக்கள் எகிப்து தேசத்திலிருந்து புறப்பட்டார்கள். இருபது வயதுக்கு மேற்பட்ட பட்டயம் உருவத்தக்க காலாட்கள், புருஷர்கள் மட்டும் ஆறு லட்சத்திற்கு மேல் இருந்தார்கள். இளவயதுள்ளவர்களும், ஐம்பது வயதுக்கு மேற்பட்டவர்களும், வாலிப ஸ்திரீகளும், வயோதிப ஸ்திரீகளும், குழந்தைகளும் இன்னும் இவர்களோடிருந்த பல ஜாதியான ஜனங்களும் சேர்ந்து பல லட்சங்களாக காணப்பட்டனர்.

இஸ்ரவேலர்கள் எகிப்திலே அடிமைகளாயிருந்தார்கள். அங்கிருந்து தேவன் தமது ஜனங்களை தம்முடைய வல்லமையினால் புறப்படச் செய்து வெள்ளியோடும், பொன்னோடும் மிகுந்த வஸ்திரங்களோடும் அவர்கள் வெளியே நடந்து வரச் செய்தார். வனாந்தர வழியாய் பிரயாணிகளாய் நாற்பது வருஷ காலமாய் நடந்து திரிந்தார்கள். அவர்களை பாதுகாக்க தேவன் வேண்டிய ஏற்பாடுகளைச் செய்திருந்தார். அவர்கள் வழி நடக்க பகலிலே மேக ஸ்தம்பமும் இரவிலே அக்கினி ஸ்தம்பமும் அவர்களுக்கு மேல் காணப்பட்டன. அவர்களுக்கு கன்மலையிலிருந்து தண்ணீர் புறப்படச் செய்தார். அவர்களுடைய தாகத்தை தீர்த்தார். வானத்திலிருந்து மன்னாவை பொழியச் செய்து, தூதர்களின் அப்பத்தை மனிதன் சாப்பிட்டான். அவர்களுக்கு ஆகாரத்தை பூரணமாய்க் கொடுத்தார் (சங். 79:23-25).

அந்த நாற்பது வருஷ பிரயாணங்களிலும் அவர்களுடைய கால்கள் வீங்கவில்லை, அவர்கள் அணிந்திருந்த பாதரட்சைகள் கிழியவில்லை, அவர்களுடைய வஸ்திரங்கள் பழமையாய்ப் போகவில்லை. அவர்களுக்கு பெலவீனம், வியாதிகள் உண்டாகும் போது தம்முடைய வசனத்தை அனுப்பி அவர்களைக் குணமாக்கினார். அவர்கள் கூட்டங்களில் பெலவீனப்பட்டவன் ஒருவனுமில்லை. கர்த்தர் அவர்கள் பரிகாரியாக இருந்தார் (சங். 107:20; யாத். 15:26).

விசுவாசியாதவர்கள், கீழ்ப்படியாதவர்கள் எதிர்த்து நின்றவர்கள் மட்டும் அகாலமாய்மரித்தார்கள். அவர்களுடைய ஸ்திரீகள் நல்ல பலசாலிகளாய் இருந்தார்கள் (யாத். 1:19). என்னென்றால் அவர்கள் கடுமையாய் வேலை செய்தார்கள் (வச. 13). ஆனால், இந்நாட்களிலோ கிறிஸ்தவர்களில் அநேகர் தேஞ்சான்களும், நோஞ்சான்களும், பூஞ்சான்களும், காஞ்சான்களுமாய், நோய் நொடியுள்ளவர்களாய், பலவீனப்பட்டவர்களுமாய் இருக்கிறார்கள். ஸ்திரீகளுடைய பிரசவத்தின் போது அவர்களின் வயிறுகள் கீறப்படுகின்றன. சிலர் இப்படி இருக்க வேண்டுமென்று போதிக்கிறார்களோ என்னவோ? அதினால் சிலர் நோய்வாய்ப்பட்டு மரிக்கிறார்கள். கோழைகளாக இருக்கிறார்கள். இது புதிய ஏற்பாட்டு உபதேசமல்ல.

கிறிஸ்தவம் பழைய ஏற்பாட்டை விட மேலானதாகும். பழைய உடன்படிக்கை பெலவீனமும் ஒன்றையும் பூரணப் படுத்தாததுமாய் இருந்ததினால் அது நீக்கப்பட்டது (எபி. 7:18,19). பழைய உடன்படிக்கை நீக்கப்பட்டது. புதிய உடன்படிக்கையோ விசேஷித்ததும் அதிக நன்மையை வருவிக்கிறதும், பூரணப் படுத்தக் கூடியதுமாயிருக்கிறது. இது விசேஷ வாக்குத்தத்தங்களையும் உடையதாக காணப்படுகிறது (எபி. 7:18,19; 8:6).

தேவன் நமக்குப் பயமுள்ள ஆவியைக் கொடாமல் அன்பும் பலமும்

தெளிந்த புத்தியுமுள்ள ஆவியையே கொடுத்திருக்கிறார் (2 தீமோ. 1:7). பழைய ஏற்பாட்டின் மக்களைக் குறித்து அவர்களில் பெலவீனப்பட்டவன் ஒருவனுமில்லை என்றும், புதிய ஏற்பாட்டின் மக்களில் பெலவீனமானவன் ஒருவனுமில்லை என்று எவ்வளவு அதிகமாய் நாம் சொல்ல வேண்டியவர்களாய் இருக்கிறோம். ஆம், புதிய ஏற்பாட்டில் பூரணமற்றவன் ஒருவனுமில்லை என்று சொல்ல வேண்டும்.

புதிய ஏற்பாடு இயேசு கிறிஸ்துவினால் உண்டான புதிதும் ஜீவனுமான மார்க்கமாகும். இது எல்லாவற்றையும் பூரணப்படுத்துகிறது.

புதிய ஏற்பாட்டின் விசுவாசி இரட்டிப்பான ஆசீர்வாதங்களை உடையவன்.

1. ஆபிரகாமுக்குண்டான ஆசீர்வாதங்களை உடையவன். அது சரீரப் பிரகாரமாக பூமிக்குரிய ஆசீர்வாதங்களும் வாக்குத்தத்தங்களும் உடையது.

2. ஆவிக்குரிய ஆசீர்வாதங்களையும் உடையவன். பரிசுத்த ஆவியின் அபிஷேகம், ஆவியினால் உண்டாகும் கனிகளும், வரங்களும் கிருபைகளும், தெய்வீகத் தொடர்பையும் வல்லமையையும் உடையதாகும்.

புதிய ஏற்பாட்டின் மக்கள் பலமுடையவர்களாகும். உண்மையான மதமானது நீதியும் வல்லமையுமுடையதாய் இருக்கிறது (ஏசா. 45:24). இதினால் மாத்திரமே ஜனங்கள் இறைவனண்டை வந்து சேர்வர்கள். இது கடைசிக் காலமாயிருக்கிறது. வெறும் உபதேசத்தினால் மாத்திரமல்ல, பரிசுத்த ஆவியின் நிறைவினாலும் வல்லமையினாலும் மாத்திரமே சத்தியத்தை நிலை நாட்ட முடியும்.

அப்போஸ்தலனாகிய பவுல் சொல்லும்போது எங்களுடைய சுவிசேஷம் உங்களிடத்தில் வசனத்தோடு மாத்திரமல்ல வல்லமையோடும், பரிசுத்த ஆவியோடும் முழு நிச்சயத்தோடும் வந்தது. நாங்கள் உங்களுக்குள்ளே இருந்தபோது உங்கள் நிமித்தம் எப்படிப்பட்டவர்களாயிருந்தோம் என்று அறிந்திருக்கிறீர்களே என்று சொல்லுகிறார் (1 தெச. 1:5).

மெய்க் கிறிஸ்தவத்துக்கு நிகரானது எது? தேவ ஜனங்கள் பெலமுள்ளவர்கள், ஆரோக்கியமுள்ளவர்கள், வல்லமையுடையவர்கள், ஆசீர்வாதமுடையவர்கள், நோயற்றவர்களாக, சகல சம்பத்திலும் தேர்ச்சி பெற்றவர்களாக விளங்க வேண்டும். முக்கியமாக, காலத்துக்கு முன் பலவீனப்பட்டு வியாதியில் மரிக்கக் கூடாது. வாலிப வயோதிபர்களாக விளங்கக் கூடாது.

எனக்கு இப்போது வயது எண்பத்தைந்து. நீர் என்னை காதேஸ் பர்னேயாவிலிருந்து அனுப்பும் போது எனக்கு வயது நாற்பது. இப்போதும் யுத்தத்திற்குப் போகத்தக்கதாக அப்போது இருந்த பெலன் இப்போதும் இருக்கிறது என்றார் காலேப் (யோசு. 14:7-12).

புதிய ஏற்பாட்டு பரிசுத்தவானே உமது காரியம் என்ன? கைப்பிடிக்க நாலு ஆள், கால் பிடிக்க நாலு ஆள் தேவையா? வியாதியிலே மருந்து சாப்பிட்டால் நீ சீக்கிரம் சாகிறாய். நீ இரத்த சாட்சி என்று பிசாசு உனக்கு போதித்து தற்கொலைக்கு உன்னை நடத்த இடங் கொடாதே. மற்றவர்களையும் கொன்று போடாதே. புதிய ஏற்பாட்டு விசுவாசியே இப்படிப்பட்ட சொல்காரர்களை விட்டு விலகு. விவாக முடிக்கக் கூடாது என்பான் தனக்கு பணிவிடை செய்ய இரண்டு பெண்களை வைத்துக் கொள்வான். பெண்களின் சேவை அவர்களுக்கு தேவையாயிருக்கிறது. இன்னும் சிலர் பெண்களுக்கு சேவை செய்கிறார்கள். இப்படிப்பட்ட அருவருப்பான உபதேசத்தை விட்டு மனந்திரும்புங்கள் என்று புத்தி சொல்கிறோம். பொய்யான உபதேசத்தி

னிடம், மார்க்கத்தினிடம் திரும்புங்கள் என்று புத்தி சொல்கிறோம்.

தேவ ஜனங்கள் அறிய வேண்டியது: வேதாகமத்தில் பாவம் நிகழ்ந்த விதமும், அதை நிவிர்த்திக்க தேவன் எடுத்த முயற்சிகளுமே முக்கியமாக குறிக்கப் பட்டிருக்கிறது. சரீரத்திற்கும் ஆத்துமாவிற்கும் வேண்டிய பயிற்சி, உழைப்பு நடைமுறைகளை ஆவியானவர் ஆங்காங்கு குறிப்பாய் சுட்டிக் காட்டியுள்ளாரேயொழிய விவரமாய் எழுதவில்லை. அதனதனை அதனதற்குரிய நல்ல பாரம்பரிய பழக்க வழக்கங்கள் மூலமாயும், மரபு முறைகள் மூலமாயும், நூற்கள் மூலமாயுமே நாம் கற்றுக் கொள்ள வேண்டும், தெரிந்து கொள்ள வேண்டும்.

மனிதனுடைய சரீரத்தின் அவயவங்களை தேவன் தமது வல்லமையை வெளிப்படுத்தும்படிக்கே உருவாக்கியுள்ளார். சோம்பலாயிராதே. பயப்படாதே. உடற்பயிற்சி செய், ஒழுங்காகச் செய். மனப் பயிற்சி செய். முன்னோர்களால் நமக்கு கற்றுத்தந்துள்ள பழக்க வழக்கங்களை, முறைகளை கடைபிடி. பலமுள்ளவனாயிரு. வீட்டுக்கும், திருச்சபைக்கும், நாட்டுக்கும் அது தேவை. எல்லாவற்றிலும் வாழ்ந்து சுகித்திருக்க அல்லவா இயேசு வந்தார் (3 யோ. 2 வச.)

புதிய எருசலேம் தேவனுடைய மெய் மார்க்கமாகும். முற்பிதாக்கள் இதைத் தூரத்திலே கண்டார்கள். நம்பி அணைத்துக் கொண்டார்கள். நாமோ இதில் பிரவேசிக்கிறோம். இந்த புத்தாண்டில் நீங்கள் உண்மையான மார்க்கத்தினராய் இருக்க ஆண்டின் ஆரம்பத்திலே ஆரம்பியுங்கள். ஆண்டு முழுவதிலும் மிகுதியான பலனைக் காண்பீர்கள். இன்னும் மேலான வழிகளையும் உங்களுக்குக் காண்பிப்போம்.

"பலவீனனும் தன்னை பலவான் என்று சொல்வானாக" யோவேல் 3:10.

## சத்திய வேதம் [தொடர்ச்சி]

5. சத்திய வேதாகமத்தில் சில வசனங்கள் ஒன்றுக்கொன்று மாறுபட்டது போல் காணப்படும். ஆனால் அதை உற்றுக் கவனித்து சரியாக ஆராய்ந்து படித்தால் அதனுடைய விளக்கத்தைத் தெளிவாகக் கண்டு கொள்ளலாம்.

எண்.25 - ம் அதிகாரம் 9-ம் வசனத்தில் அந்த வாதையால் செத்தவர்கள் 24,000 பேர் என்று எழுதப்பட்டிருக்கிறது. 1 கொரி. 10 ம் அதிகாரத்தில் அவர்களில் சிலர் வேசித்தனம் பண்ணி ஒரே நாளில் 23,000 பேர் விழுந்து போனார்கள். அது போல நாமும் வேசித்தனம் பண்ணாதிருப்போமாக என்று எழுதப்பட்டுள்ளது. எண். 25 ல் 24,000 என்றும், 1 கொரி. 10:8 ல் 23,000 என்றும் எழுதியிருப்பது விகற்பமாகத் தோன்றலாம். ஆனால் நன்றாகக் கவனித்துப் பார்த்தால் எண். 25:9 ல் எழுதப்பட்டிருக்கிறதும் 1 கொரி. 10-ம் அதிகாரத்தில் எழுதப்பட்டிருப்பதும் மிகவும் தெளிவாகயிருக்கிறது. எண்ணாகமத்தில் 24,000 என்றும், 1 கொரி. 10:8 ல் ஒரே நாளில் 23,000 என்றும் எழுதியிருக்கிறது.

1 கொரி. 10:8 ல் ஒரே நாளில் 23,000 பேர் விழுந்து போனார்கள் என்று குறிப்பிட்டிருக்கிறது. அன்றைய தினம் இறந்தவர்களின் குறிப்பாகும் அது. ஆனால் எண். 25:9 ல் அந்த வாதையால் தொடர்ந்து 1000 பேர் செத்தார்கள். எல்லாரையும் சேர்த்து அந்த வாதையால் செத்தவர்கள் 24,000 பேர் என்றே எழுதப்பட்டிருக்கிறதைக் கண்டு கொள்ளவும்.

இவ்விதமாகவே மற்ற வசனங்களிலும் விளங்காத வார்த்தைகளை அதற்குரிய ஒத்த வாக்கியங்களைக் (Reference) கண்டுபிடித்து கவனிக்கிறதின் மூலமாக அறிந்து கொள்ளலாம்.

6. சத்திய வேதத்தைப் பற்றி சில சந்தேகங்களும் அவற்றை நிவிர்த்திக்கும் முறைகளும்:

சத்திய வேதம் திவ்விய அருளினால் உண்டான நூலாகையால் அதைப் படிப்போரின் மனதில் சிற்சில ஐயங்கள் ஏற்படுவது சகஜமே. எப்படியெனில், சர்வ ஞானமுள்ள கடவுளின் தன்மை அற்பராகிய நமக்கு விளங்காதது போல அவருடைய திவ்விய நூலாகிய சத்திய வேதத்தில் ஆங்காங்கு மனிதருக்கு விளங்காதவை எப்படியும் காணப்பட வேண்டியது இப்படியிருக்க, வேதத்தை ஆராய்ச்சி செய்வோர் தங்களுக்கு வியப்பும் ஐயமும் உண்டாக்குகிறவைகளை அதில் காணும் போது இடறலடைய வேண்டுவதில்லை.

ஆனால், தேவன் அருளிய புத்தகத்தில் நமது அற்ப புத்திக்கு விளங்காத ஒன்றும் இல்லாவிடில் அதுவே நமக்கு பெரிய இடறலாயிருக்கும். தனக்கு விகற்பமாய்த் தோன்றும் வேத மொழிகளை குறித்து மிதமிஞ்சிக் கவலைப்படுகிறவன் சாப்பிடும் போது சாதத்தில் சிறு, சிறு கற்கள் காணப்பட்டால் தான் அதிக வருத்தப்படுகிறவனைப் போல ஆவான்.

சாப்பிடுகிற எந்த புத்திமானும் அந்த ஆகாரத்தை ருசித்து சந்தோஷமாய் அநுபவிக்கக் கவனமாயிருந்து அதிலுள்ள கல்லையும் அதில் காணப்படுகிற நெல் உமி போன்றவைகளையும் ஒதுக்கி விட வேண்டியது அவசியமாகும். ஒரு காரியம் விளங்கவில்லை என்றால் விளங்காத காரியத்தைக் குறித்து மனம் சோர்வடையாமல் அது விளங்கும் வரை பொறுமையாய்க் காத்திருக்க வேண்டும்.

எடுத்துக்காட்டாக, தாவீது அரசன் மிகவும் பாவியாக இருந்தாலும் அவர் இயற்றிய 23-ம் சங்கீதம் மகா அருமையானது என்று எல்லோரும் ஒப்புக்கொள்வர். அப்படியே பவுல் அப்போஸ்தலன் எழுதிய சில காரியங்கள் அறிகிறதற்கு அரிதாயிருந்தும் (2 பேது. 3:16) ஞானவான்கள் அந்நிருபங்களை ஆவலுற்று படிக்கின்றனர்.

நாஸ்திகர் கேட்கிற வீண் கேள்விகளே சத்திய வேதத்தை படிக்கும் பலரின் மனதில் சந்தேகத்தை புகட்டுகிறது. வேறொருவருடைய உள்ளத்தில் வேதங்களைப் பற்றி எழுப்பி வருகிற ஐயங்களுக்கு ஆதி காரணம் அவர்கள் உள்ளத்தை மடங்கடித்த ஏதோ ஒரு மகா கஷ்டமான அநுபவமே. சில கருகலான விஷயங்களை வேத ஆராய்ச்சியின் மூலம் தெளிவுறுத்தலாம். திருஷ்டாந்தமாக ராஜாக்களின் புஸ்தகங்களிலும், நாளாகம புஸ்தகங்களிலும் காணப்படுகிற சிற்சில சரித்திரக் குறிப்புகள் ஒன்றோடொன்று ஒத்து வருவதில்லை.

மேலும் வேத ஆராய்ச்சியைக் கொண்டு அப்படிப்பட்டவைகளை அநேகம் சமரசப்படுத்த முடியும். அப்படியே நான்கு சுவிசேஷ ஆகமங்களும் ஒன்றுக்கொன்று பேதமான குறிப்புகளை உடையதாயிருந்தாலும் ஆழ்ந்து படிப்பதனால் அவைகளில் பேதமில்லை, இவைகள் உண்மையென்று கண்டு கொள்

ளயாம். விளங்காத பல வேத பாகங்களை தெளிவாக அறிந்து கொள்வதற்கு தமிழ் வேத ஒத்த வாக்கிய அகராதியும், தமிழ் வேத பொருள் அகராதியும் மிகவும் பிரயோஜனப்படும். சத்திய வேத நூலை ஆராய்ச்சி செய்வோர்கள் இவ்விரண்டு புத்தகங்களை கண்டிப்பாக வாங்கி வைத்துக் கொள்ள வேண்டியது அவசியம்.

மீண்டும் நமது பாஷையில் எத்தனை வெவ்வேறு வேத மொழி பெயர்ப்புகள் இருக்கின்றனவோ அத்தனை திருப்புதல்களையும் படித்து ஒன்றோடொன்று ஒப்பிட்டுப் பார்ப்போமானால் விகற்பமாய்த் தோன்றும் பல வேத வசனங்களை சரிவர விளங்கிக் கொள்ளலாம். எந்த வேத திருப்புதலாகிலும் குறை சில இருக்கும். உலகத்திலுள்ள சகல மொழி பெயர்ப்புகளிலும் சிற்சில குறைகள் உண்டென்று நாம் நன்குணர்ந்து பல திருப்புதல்களைப் படித்துதான் சத்திய வேத மொழியிலுள்ள உள்ளான கருத்தைக் கற்றுக் கொள்ள முடியும்.

"கற்க கசடற" என்ற முது மொழிக்கேற்ப ஒருவன் வேதத்தை படிக்கப் படிக்க இலகுவில் விளங்காத பாகங்கள் முதலிலேயே அவனுக்குப் படிப்படியாக விளங்கும். மேலும் சத்திய வேத நூலுக்குரிய எந்த விஷயம் அறிய அரிதாயிருந்தாலும் ஆதியில் தேவன் திவ்விய ஏவுதலாய் இயற்றப் பெற்ற பிரதிகள் குறைவு, பிழையின்றி பூரணமாய் உண்மையாய் இருந்தனவென்றும், அடிப்படையான கொள்கையை நாம் எப்படியும் உறுதியாக நம்ப வேண்டும். வேதாகமம் பிழையற்ற நூல் என்று சாதிப்பதற்கு பலத்த நியாயங்களுண்டு.

அவை யாதெனில், தேவாதி தேவன் இந்நூலுக்கு அதி காரணர். அவர் தவறாக ஒன்றையும் செய்கிறதில்லை. ஆனபடியால் எழுதுவித்த வேதாகம நூலில் தப்பிதம் ஒன்றும் கிடையாது என்பவைகளே. சத்திய நூலை மொழி பெயர்த்தவர்கள் மொழி நடையிலும் சில தவறுகள் செய்திருக்கலாம். வேத பங்குகளை இயற்றிய நூலாசிரியர்களை தேவ ஆவியானவர் ஆட்கொண்டு நடத்தியமையால் அவர்கள் உள்ளதை உள்ளபடி பிழையின்றி அவற்றை எழுதி வைத்தனர்.

கற்க கசடற என்பது போல வேத சத்தியத்தைத் திரும்பத் திரும்ப படிக்க வேண்டும்.. ஆதியிலே எழுதப்பட்ட மூலப் பிரதிகளில் எந்தவிதமான தவறும் கிடையாது. ஆனால் அவைகளிலிருந்து வெவ்வேறு மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டு அந்த பாஷைகளில் இருந்து வேறு பாஷைகளில் மொழி பெயர்க்கப்பட்டு வரும் பொழுது மொழி பெயர்ப்புகளில் தவறு வருகிறது சகஜமே. எந்த மொழி பெயர்ப்பும் பூரணமானதல்ல. எழுத்துப் பிழைகளும், சில வார்த்தைகள் விடப்பட்டும் இருக்கலாம்.

ஆனால் பல மொழி பெயர்ப்புகளை நாம் கவனிக்கிறதின் மூலமாக முழு அறிவை, வேதத்தின் நோக்கத்தை நாம் அறிந்து கொள்ள முடியும். தேவன் என்ன சொல்கிறார் என்பதை விளங்கிக் கொள்ள முடியும். விளங்காத விஷயங்கள் வேதாகமத்தில் காணப்படும் பொழுது அதைக் குறித்து அநாவசியமாகக் குழம்பிக் கொள்ளாமல் பொறுமையாய்க் காத்திருந்தால்தான் அதைப் பற்றிய தெளிவை தேவன் நமக்குக் காட்டுவார். மேலும் நமக்கு விளங்காத காரியங்களும் வேதாகமத்தில் உண்டு. அவ்விதமாக விளங்காத காரியங்கள் இருக்கிறதினாலே இதை வேதம் என்று சொல்லி நாம் ஒப்புக் கொள்கிறோம். எல்லாம் நமக்கு விளங்கி விட முடியாது. விளங்காத காரியங்களும் உண்டு என்பதாம்.

7. வேதாகமம் அதிசய திவ்விய நூல் இது தேவனால் வெளிப்படுத்தப்பட்டது

என்பதை நாமெல்லாரும் அறிந்து கொள்ள வேண்டும்.

தானியேல் தீர்க்கதரிசிக்கு நேபுகாத்நேச்சாரின் கனவையும், கனவின் அர்த்தத்தையும் தேவன் வெளிப்படுத்தினது தெய்வீக செயலே. தானி. 2:17 முதல் இந்த சம்பவம் எழுதப்பட்டுள்ளது. அவ்விதமாகவே யாத்திராகமத்தில் மோசேயானவர் நிகழ்த்திய அற்புதங்களுக்கு போட்டியாக மந்திரவாதிகளும் சில அற்புதங்களை நிகழ்த்தின போதிலும் கடைசியில் அவர்கள் தோல்வியடைந்து இது தேவனுடைய விரல் என்று சொல்லி அந்த மந்திரவாதிகளின் மேலும் மோசேயினுடைய அதிகாரம் செலுத்தப்பட்டபடியினாலும் மெய் தேவனைப் பற்றிய அறிவு, மெய் தேவன் ஒருவரே அவருக்கு நிகரில்லை என்று வேதாகமம் வெளிப்படுத்துகிறது (யாத். 8:16-19).

1 இராஜாக்களின் புஸ்தகத்தில் தீர்க்கதரிசியாகிய எலியா இறைவன் யாரென்று பந்தயமிட்டு அக்கினியினால் உத்தரவு அருளுகிற தேவனே தேவன், யேகோவா இயேசு கிறிஸ்துவே மெய்யான தேவன் என்று சவால் விட்டு நிரூபித்து பிற தெய்வ வணக்கங்களையும், குறிசொல்கிறவர்களையும், மந்திரவாதிகளையும் முறியடித்த சம்பவத்தின் மூலமாக மெய் தேவன் ஒருவர் உண்டென்றும், அவர் யேகோவா என்றும் சத்திய வேதம் ஒன்றே தெளிவாகக் காண்பிக்கிறது. 1 இராஜாக்கள் 18-ம் அதிகாரத்தில் இச்சம்பவம் குறிக்கப்பட்டிருக்கிறது. இவைகளின் மூலமாக மெய் தேவனைப் பற்றிய அறிவை வேதாகமம் கொடுக்கிறது.

மற்ற வேதங்கள், சாஸ்திரங்களிலே அவர்கள் தெய்வம் என்று சொல்கிறவைகள் ஒரு இடத்தில் ஜெயித்து இன்னொரு இடத்தில் தோல்வியடைந்தும், இன்னொரு இடத்தில் அவமானப்பட்டும், இன்னொரு இடத்தில் ஒளித்தும், இன்னொரு இடத்தில் இயலாதவர்களாக தங்களைக் காண்பித்தும், இப்படி அவைகள் தெய்வங்கள் அல்ல என்பதை மனுமக்கள் கண்டு கொள்ளும்படியாக அவர்களுடைய சரித்திரங்கள் அமைந்திருக்கின்றன. ஆனபடியினால், வேதாகமத்தை வாசிக்கும் பொழுது இவைகளை கவனத்தில் வைக்கவும்.

(தொடரும்)

"வானத்தையும், பூமியையும் உண்டாக்காத தெய்வங்கள் பூமியிலும் இந்த வானத்தின் கீழும் இராதபடிக்கு அழிந்து போகும் என்பதை அவர்களுக்குச் சொல்லுங்கள்" எரே. 10:11.



# கிறிஸ்தவ மார்க்கம் (தொடர்ச்சி)

## 2. மனந்திரும்புதல்:

கிறிஸ்தவ உபதேசங்களில் இரண்டாவது பெரிய உபதேசம் மனந்திரும்புதல் என்பதாகும். மனந்திரும்புதல் என்று சொல்லும் பொழுது அது தேவனிடத்திற்கு மனந்திரும்புவதாகும். ஒருவன் தன் கடந்த கால செயல்களும், தான் சென்ற வழிகளும் தவறானவை, பாவமானவை என்று உணர்தல் வேண்டும். முற்காலத்தில் அவ்வாறு நடந்ததைக் குறித்து வருந்த அல்லது மனஸ்தாபங் கொள்ள வேண்டும். இதனிமித்தம் வாழ்க்கை முழுவதிலும் ஒரு முழு மாற்றம் ஏற்படும், ஏற்பட முடியும்.

மனந்திரும்புதல் என்றால் பாவத்தின் பலாபலன்களை சொந்த வாழ்க்கையில் கண்டு அஞ்சி வருந்துவதன்று. பழைய வாழ்க்கையின் குறிக்கோள், போக்கு யாவற்றையுமே வெறுத்துத் தள்ளி கடவுள் திருநோக்கத்தைத் தனது குறிக்கோளாகக் கொள்ளுதலே மனந்திரும்புதல்.

சிலர் பாவத்தினாலும், கெட்ட பழக்கங்களினாலும் வருகிற தீமையைக் கண்டு அதை விட்டு விட பிரயாசப்படுகிறார்கள், கொஞ்சக் காலம் விட்டு விடுவதுமுண்டு. பின்பு அது அவர்களைப் பற்றிக் கொள்ளும். திரும்புகிறார்கள், ஆனாலும் உன்னதமானவரிடத்திற்கு அல்ல மோசம் போக்கும் வில்லைப் போல் துவண்டு போகிறார்கள் என்று ஓசியா 7:16-ல் சொல்லப்பட்டுள்ளது.

கிறிஸ்தவ உபதேசமான மனந்திரும்புதல் என்று சொல்லப்படுவது அவ்விதமான மனித மனச்சாட்சியின் சீர்திருத்தமல்ல. மனந்திரும்புதல் தேவனால் அருளப்படுகிறதாகும். இரட்சிப்புக் கேற்ற மனந்திரும்புதல் என்று இதைக் குறித்துச் சொல்லப்பட்டிருக்கிறது. இது கடவுளிடமிருந்து வருகிறதாக இருக்கிறது (2 கொரி. 7:10).

மக்கள் மனம்மாறி திரும்ப வேண்டுமென்று வேதாகமத்தில் பழைய, புதிய ஏற்பாட்டில் திட்டமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. மனந்திரும்புதல் என்பது ஒரு பெரிய காரியம். Great is repentance என்று கூறப்பட்டுள்ளது. வருங்கால உலகத்தின் முழு வாழ்வை விட இவ்வுலகத்தில் ஒரு மணி நேர மனந்திரும்புதலே நலம் என அறிஞர்கள் கருதுகின்றனர். உண்மையான மனந்திரும்புதல் அவன் வாழ்வு முழுவதிலும் செயல்படக்கூடியதாயிருக்கிறது. மனந்திரும்புதலின் பொருள் தீமையை விட்டு விலகி கடவுளிடம் திரும்பி அல்லது கற்பனையைக் கைக்கொள்வதேயாகும்.

பிற்காலத்தில் இஸ்ரவேலர்கள் ஒரே ஒரு நாள் மாத்திரம் மனந்திரும்பினால் தாவீதின் குமாரனாகிய மேசியா உடனே வந்துவிடுவார் என்று யூத ரபிகள் எண்ணினார்கள். நாங்கள் மனந்திரும்பும்படி ஆண்டவரே, எங்களை உம்மண்டை கூட்டும் என்று அவர்கள் மன்றாடுவதின் மூலமாக நாம் அறிந்து கொள்ளலாம்.

ஜீவனுக்கேதுவான மனந்திரும்புதலை தேவன் புறஜாதிகளுக்கு அருளிச்செய்தார் என்று அப். 11:18 ல் குறிப்பிட்டிருக்கிறபடியினால் இந்த மனந்திரும்புதலையும், பாவ மன்னிப்பையும் அருளும்படியாக இயேசுவானவர் இரட்சகராகவும், அதிபதியாகவும் உயர்த்தப்பட்டிருக்கிறார் என்று அப். 5-ம் அதிகாரத்தில் குறிப்பிட்டிருக்கிற படியினாலும் மனந்திரும்புதல் இறைவனால் அருளப்படுகிற ஒரு அருள் பாக்கியமாக இருக்கிறது.

சிலர் பாவத்திற்காக மனஸ்தாபப்பட்டு கண்ணீர் விட்டு அழுகிறார்கள். அது மனந்திரும்புதல் அல்ல. யூதாசும் ஏசாவும் கண்ணீர் விட்டு கவலையோடு தேடியும் மனந்திரும்புதலைக் காணாமற்போனார்கள் என்று வேதத்தில் எழுதப்பட்டிருக்கிறது (எபி. 12:17). மனஸ்தாபம் மனந்திரும்புதலோடுகூட வருவதுண்டு. ஆயினும், தம்மில் தாமே அவைகள் மனந்திரும்புதல் அல்ல.

மனமாற்றம் நடக்கையில் மாற்றத்தை உண்டு பண்ணுகிறது. இவ்வளவு பெரிய காரியமாக மனந்திரும்புதல் காணப்படுகிறபடியினால் மனந்திரும்புதல் என்றால் என்ன என்பதைக் குறித்துப் பார்ப்போம்.

1. மக்கள் மனம்மாறி கடவுளிடத்தில் திரும்ப வேண்டும் என்று வேதாகமத்தில் சொல்லப்பட்டிருக்கிறது (அப். 26:20). 1 தெச. 1:9 ல் நீங்கள் ஊமையான விக்கிரகங்களை விட்டு மனந்திரும்பி, ஜீவனுள்ள தேவனுக்கு ஊழியஞ் செய்யும்படி வந்திருக்கிறீர்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறதைக் காண்கிறோம்.

2. மனந்திரும்புதல் பாவத்தை வெறுத்து விட்டு கடவுளை நோக்கித் திரும்புவதாகும். தவறான வழிகளை, முறைகளை தவறான ஜீவியத்தை விட்டு மனந்திரும்புவதாகும். சகேயுவினுடைய மனந்திரும்புதல் இதற்கு நல்ல உதாரணமாக இருக்கிறது. பாவ மன்னிப்புக்கு மனந்திரும்புதல் முந்திக் கொள்ள வேண்டும்.

3. மனுஷன் தன் பழைய நினைவுகளையும் தன்னுடைய கொள்கைகளையும் தன் கிரியைகளையும் விட்டு மனந்திரும்ப வேண்டும். மனிதனுடைய பாதை, அவனுடைய வழி அவனுடைய பார்வைக்கு செம்மையாகத் தோன்றுகிறது. மனிதனுக்கு செம்மையாய்த் தோன்றுகிற பாதைகள் மரணத்திற்குக் கொண்டு போய் விடும். அவைகள் மரண வழிகள் என்று வேதாகமத்தில் சொல்லப்பட்டிருக்கிறது (நீதி. 14:12). மதியீனனுடைய வழி அவனுடைய பார்வைக்குச் செம்மையாயிருக்கும். அது சரி போல அவனுக்குத் தோன்றும் (நீதி. 12:15). ஆனாலும் அவைகள் மரணத்திலே கொண்டு போய் விடும் (நீதி. 14:12).

மனிதன் தன் பொல்லாத வழிகளையும், நினைவுகளையும் விட்டு மனந்திரும்ப வேண்டுமென்று சத்திய வேதத்திலே அழைப்புக் கொடுக்கப்பட்டிருக்கிறது. துன்மார்க்கன் தன் வழியையும், அக்கிரமக்காரன் தன் நினைவுகளையும் விட்டு திரும்பக் கடவன் (ஏசா. 55:7). முன்னோர்களுடைய பாரம்பரியங்களை விட்டு மனந் திரும்ப வேண்டும். தேசா தேசங்களில் ஜாதிகளுடைய பலவிதமான பாரம்பரியங்கள், தவறான பாரம்பரியங்கள் கைக்கொள்ளப்பட்டு நம்பப்பட்டு வருகின்றன. அவைகளை விட்டு மனந்திரும்புவது அவசியம்.

சிலருக்கு ஜாதிப்பற்று, ஜாதி வெறி இருக்கிறதைப் பார்க்கிறோம். இது முன்னோர்களின் பாரம்பரியத்தைச் சார்ந்தது. இது இந்து மதத்தின் அடிப்படையாக இருக்கிறது. முன்னோர்கள் அனுசரித்து வந்த அநேக சகுனம் பார்க்குதல், குறி பார்க்குதல், மந்திரவாதங்கள், பில்லி சூனியங்கள், நிமித்தம் பார்க்குதல், இராகு கேது என்று காலம் பார்க்குதல், திசை பார்த்தல் என்று பலவிதமான பிசாசோடு சம்பந்தப்பட்ட ஜோசியங்கள் மந்திரவாதங்கள் காணப்படுகின்றன. இவைகளை விட்டு மனிதன் மனந்திரும்ப வேண்டும் (1 பேது. 1:17-19).

4. மனந்திரும்புதல் மிகவும் முக்கியமான செய்தியாக இருக்கிறது. மனந்திரும்புதல் மாத்திரமல்ல, அது கிரியையிலேயும் காணப்பட வேண்டும். இப்பொழுது சந்தோஷப்படுகிறேன். பின்பு மனஸ்தாபப்படுகிறதற்கு ஏதுவில்லாமல் இந்த

மனந்திரும்புதல் மிகவும் திட்டமானதாக இருக்கிறது (2 கொரி. 7:9,10). மனந்திரும்புகிறவர்கள் தங்கள் அக்கிரமத்தை அறிக்கையிட்டு மன்னிப்பைத் தேடுவார்கள் (சங். 38:18).

கெட்ட குமாரன்: நான் எழுந்து என் தகப்பனிடத்திற்குப் போவேன் என எழுந்து புறப்பட்டுத் தன் தகப்பனிடத்தில் வந்தான் என்று வாசிக்கிறோம் (லூக். 15:18,20). மனந்திரும்புதல் இரட்டையான செயலை உணர்த்துகிறது.

1. தேவனிடத்திற்குத் திரும்புதல்.
2. பாவத்தை விட்டுத் திரும்புதல்.

இவ்விதமாய், மனந்திரும்புகிறவர்கள் சாத்தானுடைய அதிகாரத்தை விட்டு தேவனிடத்திற்குக் கொண்டு வரப்படுகிறார்கள் (அப். 26:18).

5. மனந்திரும்புகிறவர்கள் இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து தங்கள் பாவங்களுக்காக மனஸ்தாபப்பட்டு மனந்திரும்புவது மாத்திரமல்ல, தங்கள் பாவங்களை அறிக்கை செய்து ஞானஸ்நானம் பெற்றுக் கொள்வார்கள். மனந்திரும்புதலுக்கேற்ற கனிகளைக் கொடுங்கள், கிரியைகளைச் செய்யுங்கள் என்று யோவான் ஸ்நானன் போதித்தார் (மத். 3-ம் அதி.)

மனந்திரும்பி, பாவமன்னிப்புக்கென்று இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ளுங்கள் என்று அப். பேதுரு போதித்தார் (அப். 2:38). இயேசுவானவரைப் பற்றி உங்களுடைய அபிப்பிராயம், எண்ணத்தை, அவர் மேசியாவல்ல, அவர் ஜனங்களை வஞ்சிக்கிறார் என்ற எண்ணங்களையெல்லாம் நீங்கள் விட்டு மனந்திரும்ப வேண்டுமென்று அன்று யூதர்களுக்கு போதிக்கப்பட்டது. அவர்கள் இயேசுவே மேசியா என்று விசுவாசித்து ஏற்றுக் கொண்டு ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ள வேண்டுமென்று போதிக்கப்பட்டது. மனந்திரும்புதலுக்கு போதகர்களும், கிறிஸ்தவர்களும் துணைக் காரணங்களாக இருக்கிறார்கள் (1 கொரி. 4:15; யாக். 5:19,20).

6. மனந்திரும்புகிறவர்கள் உடனே சாட்சி கொடுக்கிறவர்களாய், கிறிஸ்துவின் மேல் அன்பும், விசுவாசமும் உடையவர்களாய், பிறருக்கு கிறிஸ்துவை அறிவிக்கிறவர்களாக அவர்கள் காணப்படுவார்கள். இரகசியமான மனந்திரும்புதலும் இல்லை, இரகசிய கிறிஸ்தவமும் கிடையாது. ஒருவன் கிறிஸ்தவனாயிருக்கிறானென்றால் அவன் வெளிப்படையாய்க் கிறிஸ்துவைக் குறித்து சாட்சி சொல்ல வேண்டும். அறிக்கை செய்ய வேண்டும்.

என்னைக் குறித்து மனுஷர் மத்தியிலே அறிக்கை செய்கிறவனை நானும் பரலோகத்தில் பிதாவின் முன்பாகவும், தேவதூதர்கள் முன்பாகவும் அறிக்கை செய்வேன். என்னை அறிக்கை செய்ய வெட்கப்படுகிறவனை நானும் பரலோகத்தில் அறிக்கை செய்ய வெட்கப்படுவேன், மறுதலிப்பேன் (மத். 10:32,33) என்று இயேசுவானவர் திருவுளம் பற்றியிருக்கிறார்.

சிலர் இரகசியமாக இயேசுவை விசுவாசிக்கிறோம், மனந் திரும்புகிறோம் என்று எண்ணிக் கொள்கிறார்கள், சொல்லிக் கொள்கிறார்கள். அப்படியே அவர்கள் இரகசியமாய்ப் பின்மாறி போய், கிறிஸ்தவ விரோதிகளோடு சேர்ந்து செயல்படவும் செய்வார்கள். அப். பவுல் மனந்திரும்பின பொழுது ஞானஸ்நானம் பெற்று உடனே தாமதமின்றி கிறிஸ்து தேவனுடைய குமாரனென்று எங்கும் பிரசங்கிக்கத் தொடங்கினார் (அப். 9:17-22). நாம் வேதாகமம் முழுவதிலும் அனுபவத்திலும் பார்க்கிறதென்னவென்றால் மனந்திரும்புகிறவர்கள் அவரை சாட்சித்து ஞானஸ்நானம் பெற்று தொடர்ந்து கிறிஸ்தவ சாட்சியாக கிறிஸ்தவ சபையில் சேர்ந்து

ஆராதித்து, அவருடைய கற்பனைகளைக் கைக்கொண்டு அவருக்காக ஜீவிப்பார்கள்.

மனந்திரும்புதல் ஆரம்பத்தில் மாத்திரமல்ல, கிறிஸ்தவ வாழ்க்கையில் தினமும் பொழுதும் மனந்திரும்புதல் அவசியம். அநேகர் பின்மாறிப்போய் சாத்தானுடைய பிடியில் சிக்கிக் கொள்கிறதுண்டு. அவர்கள் மனந்திரும்பத்தக்கதாக அவர்களுக்கு போதிக்கப்பட வேண்டுமென்று பரி. ஆவியானவர் குறிப்பிட்டிருக்கிறார் (2 தீமோ. 2:25). இன்னும் அநேகர் பின்மாறி அகம்பாவத்தினால் நிரம்பி நாங்கள் சரியாய் இருக்கிறோம் என்று பிறரைக் குறை சொல்லி பரிசுத்தவான்களை தூஷித்துத் திரிவார்கள். இப்படிப்பட்டவர்களும் மனந்திரும்ப வேண்டும். தேவ தயவு நீ குணப்படும்படி உன்னை ஏவுகிறதென்று அறியாமல் இருக்கிறாயா? (ரோ. 2:4).

இன்னும் சிலர் பாவத்திலே வீழ்ந்து பாவம் செய்து கொண்டே ஊழியமும் செய்து கொண்டு இருப்பார்கள். இப்படிப்பட்டவர்களை பரிசுத்த ஆவியானவர் எச்சரிக்கிறார். நான் நேசிக்கிறவர்களெவர்களோ அவர்களைக் கடிந்து கொண்டு சிட்சிக்கிறேன் ஆகையால் நீ ஜாக்கிரதையாயிருந்து மனந்திரும்பு (வெளி. 4:19). மனந்திரும்பி ஆதியிலே செய்த கிரியைகளை செய்வாயாக (வெளி. 2:5). மனந்திரும்புதல் பாவமன்னிப்பை உண்டு பண்ணுகிறதில்லை. அது நம்முடைய பாவ மன்னிப்புக்குத் தேவையான ஒரு நிபந்தனையே. பாவத்தை அறிக்கை செய்ய வேண்டும், விட்டு விட வேண்டும் அப்பொழுது பாவ மன்னிப்பு உண்டாகும்.

7. மனந்திரும்புதல் ஒரு பெரிய தெய்வீகக் கிரியையாகும். மனந்திரும்புதல் பூவுலகில் நடைபெற வேண்டிய காரியம். அது மறுமையில் நிகழக்கூடியதல்ல. இங்கே நாம், விக்கிரகாராதனையையும், பாவத்தையும் வெறுத்து விட்டு விட்டு தெளிந்த புத்தியும், நீதியும், தேவ பக்தியும் உள்ளவர்களாய் இந்த உலகத்திலே ஜீவனம் பண்ணி சாட்சியுடைய வாழ்க்கை வாழ்ந்து, கர்த்தருக்கு ஊழியம் செய்து கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் இரண்டாம் வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும்படியாக வேதம் போதிக்கிறது. இந்த மனந்திரும்புதலை, தேவன், விரும்பி வாஞ்சித்து ஜெபித்துக் கேட்கிறவர்களுக்கு செம்மையான இருதயம் உடையவர்களுக்கு அருளுகிறார். ஜீவனுக்கேதுவான மனந்திரும்புதலை தேவன் புறஜாதியாருக்கு அருளிச் செய்தார் என்று சொல்லி ஆதி பக்தர்கள் தேவனை மகிமைப் படுத்தினார்கள் (அப். 11:18).

இந்த மனந்திரும்புதலைத் தொடர்ந்து இரட்சிப்பும், ஏராளமான ஆசீர்வாதங்களும் அவனுக்கு கடந்து வருகிறது. வெறும் விசுவாசமல்ல, மனந்திரும்பி இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கிறதே

**வாசகர் கவனத்திற்கு:-**

1994-ம் ஆண்டிலிருந்து உங்கள் சந்தா எண் மாற்றப்படவிருப்பதால், சந்தா, கடிதம் அனுப்புவோர் கவனமாக தங்கள் புதிய சந்தா எண்ணை அவைகளில் குறிப்பிடும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

உண்மையான விசுவாசம். விசுவாசம் என்று சொல்லும் பொழுது மெய் மனஸ்தாபத்தோடு மனந்திரும்பி பாவத்தை விட்டு விட்டு, தேவன்மேல், கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் மேல் விசுவாசம் வைக்க வேண்டும் (யோ. 14:1). நற்செய்தியைக் கேட்டு மனந்திரும்பி, விசுவாசித்து கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை ஏற்றுக் கொள்கிறதினால் மனிதன் மறுருபப்பட்டு எல்லாவற்றையும் புதிதாகக் காண்பான். அவனுக்கு புது வாழ்வு அளிக்கப்படும்

ஒருவன் கிறிஸ்துவுக்குள்ளிருந்தால் எல்லாம் புதிதாகும் பழையவைகளெல்லாம் ஒழிந்து போகும். எல்லாம் புதிதாகும். ஒருவன் கிறிஸ்துவுக்குள்ளிருந்தால் புதுச் சிருஷ்டியாயிருக்கிறான்; பழையவைகள் ஒழிந்து போயின, எல்லாம் புதிதாயின (2 கொரி. 5:17) என்பதாம்.

(தொடரும்.)

"நீங்கள் மனந்திரும்பாமற் போனால் எல்லாரும் அப்படியே கெட்டுப் போவீர்கள்" லூக். 13:5.

## வேத பாடம் (தொடர்ச்சி)

### எண்ணாகமம்

#### எண். 15:1-5.

கர்த்தருக்கு பலி செலுத்தும் போது ஆட்டுக்குட்டியோடு செலுத்த வேண்டிய போஜன பலிகள் இன்னதென்று குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

#### எண். 15:6-7.

ஆட்டுக்கடாவாக இருந்தால் அதோடு சேர்த்து செலுத்தப்படும் போஜன பலியைப் பற்றியது.

#### எண். 15:8-12.

அது ஒரு காளையாயிருந்தால் அதோடு சமாதான பலியாக, பொருத்தனை பலியாக செலுத்தப்படுவதாக இருந்தால் அதோடு கூட்டிச் சேர்த்து செலுத்தப்படவேண்டிய போஜன பலிகள்.

#### எண். 15:13-16

இந்தப் பலிமுறைகளுக்கடுத்த பிரமாணம் சுதேசியாக இருந்தாலும் பரதேசியாக இருந்தாலும் எல்லாருக்கும் ஒரே சட்டம் இருக்க வேண்டும். உங்களுக்கும் உங்களுக்குள் தங்கும் அந்நியனுக்கும் ஒரே பிரமாணமும் ஒரே முறையும் இருக்கக்கடவது என்று சொல் என்றார்

## எண். 15:17-21.

தேசத்தின் ஆகாரத்தைப் புசிக்கும் பொழுது முதற்பலனாக பிசைந்த மாவிலே செய்த அதிரசத்தை ஏறெடுத்துப் படைக்க வேண்டும். இப்படியே பிசைந்த மாவின் முதற்பலனை கர்த்தருக்கு, படைப்பைத் தலைமுறை தோறும் செலுத்த வேண்டும்.

## எண். 15:22-31

அறியாமையினால் செய்த பாவத்திற்கு தனிப்பட்ட ஆளாயிருக்கட்டும், சபையாயிருக்கட்டும் அவர்கள் செய்த பாவத்திற்கான பலி முறைகள். ஆசாரியன் அவர்களுக்காக பாவநிவிர்த்தி செய்யக்கடவன். தேவ சந்நிதானத்தில் வந்து இஸ்ரவேலனாயிருக்கட்டும் அந்நியனாயிருக்கட்டும் அறியாமையினால் பாவம் செய்தால் அதற்காக செலுத்த வேண்டிய பலி ஒரே விதமாக இருக்க வேண்டும். துணிகரமாய் யாதொன்றைச் செய்தால் அவன் கர்த்தருடைய நாமத்தை நிந்திக்கிறான். ஆதலால் அந்த ஆத்துமா ஜனத்திலிராதபடி அறுப்புண்டு போக வேண்டும். கர்த்தருடைய வார்த்தையை அசட்டை பண்ணி அவர் கற்பனையை மீறினபடியால் அந்த ஆத்துமா அறுப்புண்டு போக வேண்டும். அவன் அக்கிரமம் அவன் மேல் இருக்கும் என்று சொல்லன்றார்.

## எண். 15:32-36.

ஓய்வு நாளை ஒருவன் அசட்டை செய்து மீறினதற்காக அவன் கல்லெறியப்பட்டு கொலை செய்யப்பட்டான். ஓய்வு நாளை மீறுகிறது மரணத்திற்கேதுவான பாவம். கர்த்தருடைய நாளை ஒருவரும் அசட்டை செய்யக் கூடாது. அந்த நாளிலே கர்த்தருக்கு ஆராதனை செய்யவும் கர்த்தருக்கடுத்த காரியங்களிலே ஈடுபடவும் ஆத்துமாதாயம் செய்யவும் ஜெபம் பண்ணவும் அந்த நாளை நாம் உபயோகிப்போமாக.

## எண் 15:37-41.

வஸ்திரத்தின் தொங்கலில் இளநீல நாடாவைக் கட்ட வேண்டும் அதை எப்பொழுதும் பார்க்கும் வகையில் இருக்க வேண்டும். அதைப் பார்க்கும் போது கர்த்தரின் கற்பனைகளை நினைத்து அதன்படிச் செய்ய அவர்கள் கண்களின் பார்வையில் தெளிவாகக் கட்டப்பட வேண்டும். பரிசுத்தராகிய தேவனுக்கு ஏற்ற பரிசுத்தவான்களாக இஸ்ரவேல் ஜனங்கள் காணப்பட வேண்டும். அதற்காகவே அவர் மீட்டுக் கொண்டார் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது (யாத். 13:8,9). கர்த்தருடைய இரட்சிப்பை, அவர் நமக்குக் கொடுத்த விடுதலையை எப்பொழுதும் நினைத்து நாம் அதற்காக பண்டிகை கொண்டாட வேண்டும், இறைவனை மகிமைப்படுத்த வேண்டும் அதை நினைவுகூர வேண்டுமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

## எண். 16:1-3 கோராகு கூட்டத்தாரின் கலகம்.

கோராகு, ரூபனின் வம்சத்திலுள்ள எலியாபின் குமாரன் தாத்தானையும், அபிராமையும், பேலேத்தின் குமாரன் ஓனையும் கூட்டிக் கொண்டு இஸ்ரவேல் புத்திரரின் தலைவர்களும் அழைக்கப்பட்டவர்களுமாகிய 250 பேரோடு கூட மோசேக்கு விரோதமாக, ஆரோனுக்கு விரோதமாக கூட்டங்கூடி ஜனங்கள் எல்லாரும் பரிசுத்தமானவர்கள் நீங்கள் மிஞ்சிப் போகிறீர்கள், கர்த்தர் சபையின் நடுவில் இருக்கிறார், நீங்

கள் கர்த்தருக்கு மேலாக கர்த்தருடைய சபைக்கு மேலாக உங்களை உயர்த்துகிறீர்கள் என்று பொய்யான குற்றச்சாட்டுகளை சாட்டி மோசேக்கும், ஆரோனுக்கும் விரோதமாக கலகம் செய்தார்கள்.

எண். 16:4-11.

இவர்களுடைய கலகத்தின் முக்கிய நோக்கம் ஜனங்களை உயர்த்தி அவர்கள் பரிசுத்தமானவர்கள் என்று மோசேயும் ஆரோனும் மாத்திரம் மிஞ்சிப் போகிறதாக குற்றஞ்சாட்டியதினுடைய உண்மையான நோக்கம் ஆசாரியப் பட்டத்தைக் கைப்பற்றும்படியாகவே (வச. 10,11). தாங்களே ஆசாரியர்களாகிக் கொள்வதற்காக பிரயாசப்படுகிறார்கள். கர்த்தர் அபிஷேகம் பண்ணினவர்களை இவர்கள் விரோதித்து எதிர்த்து தாங்களே தங்களை அபிஷேகம் பண்ணிக் கொள்ளலாம் என்று எண்ணினார்களோ என்னவோ தெரிய வில்லை.

[தொடரும்].

இவர்களுக்கு ஐயோ! — கோரா எதிர்த்துப் பேசின பாவத்திற்குள்ளாகி, கெட்டுப் போனார்கள் யூதா 11.

# தாவீதும் கவண்கல்லும்

தாவீது இஸ்ரவேலின் இராஜாவாக அபிஷேகம் பண்ணப்பட்டிருந்தார். ஆனால் அது உலகத்துக்கு வெளிப்படையாய்த் தெரியாது. அன்று முதல் பரிசுத்த ஆவியானவர் அவர் மேல் வந்து தங்கியிருந்தார் (1 சாமு. 16:13).

பெலிஸ்தர் இஸ்ரவேலுக்கு விரோதமாய் யுத்தம் பண்ண வந்தார்கள். இஸ்ரவேலருக்கும் பெலிஸ்தர்களுக்கும் யுத்தம் உண்டாயிற்று (1 சாமு. 17:12). பெலிஸ்த வீரனான கோலியாத் (இராட்சதன்) 9 முழ உயரமுடையவனாயிருந்தான். அவன் தன் தலையின் மேல் வெண்கல சீராவைப் போட்டு போர்க் கவசம் தரித்து கால்களில் வெண்கல கவசத்தையும் தோள்களின்மேல் வெண்கல கேடகத்தையும் தரித்து பெரிய ஈட்டி ஒன்றை கையில் பிடித்து, அரையில் பட்டயத்தையும் கட்டிக் கொண்டு இரண்டு பாளயத்திற்கும் நடுவில் வந்து நின்று இஸ்ரவேலையும் இஸ்ரவேலின் தேவனையும் தூஷித்து நீங்கள் இஸ்ரவேலர்களா? நீங்கள் அணி வகுத்து நிற்கிறதென்ன? உங்களில் ஒருவனைத் தெரிந்து கொள்ளுங்கள், அவன் வந்து என்னோடு யுத்தம் செய்யட்டும். அவன் ஜெயித்தால் நாங்கள் உங்களுக்கு அடிமை; நான் அவனை ஜெயித்தால் நீங்கள் எங்களுக்கு அடிமை, இன்று நான் உங்களை நிந்திக்கிறேன் என்றான். இப்படி தினம் தினம் சொல்லி வந்தான்.

இஸ்ரவேலிலே, பெரிய பராக்கிரமசாலியாக எண்ணப்பட்ட சவுல் ராஜா உண்டு பெரிய தளபதியாகிய அப்னேர் உண்டு. பலத்த யுத்த வீரர்கள் உண்டு. ஆனால் இராட்சதனை எதிர்க்க ஆளில்லை. கோலியாத்தைக் கண்டு பயந்து நடுங்கினார்கள்.

ஆம் இந்நாட்களில் வலுசர்ப்பமாகிய சாத்தான் யுத்தத்திற்கு ஆயத்தமாகி தன் யுத்த வீரர்களை ஆயத்தப்படுத்தி கிறிஸ்தவர்களையும் தேவனையும் தூஷிக்க தன் நாவை நீட்டி சவால் விட்டு யுத்தத்திற்கு அழைக்கிறான். யுத்தத்தை நடத்த வேண்டிய ராஜாக்களும் யுத்த அணியும் (அத்தியட்சர்கள், பாதிரிகள், கிறிஸ்தவர்கள்) பயந்து பயந்து நிற்கிறார்கள்.

தன் சகோதரர்களை காண பாளயத்துக்கு வந்த தாவீது, இராட்சதன் இஸ்ரவேலின் சேனையையும் தேவனையும் தூஷித்ததைக் கேட்டதும் கோபமுற்று என்ன இவனைக் கொல்ல, இராட்சதனை எதிர்க்க ஒருவருமில்லையா? நான் போகிறேன் என தாவீது, சவுல் இராஜா முன் கொண்டு வரப்படுகிறார். சவுல் இராஜா தாவீதைப பார்த்து நீ சிறுவன் அவன் சிறுவயது முதல் யுத்த வீரன் உன்னால் இராட்சதனை எதிர்க்க முடியாது என்றான். தாவீதோ தன் திறமையைச் சொல்லி ஒரு விசை சிங்கத்தையும் ஒரு கரடியையும் என் கையில் ஒப்புக் கொடுத்த தேவன் இந்த பெலிஸ்தனையும் என் கையில் ஒப்புக் கொடுப்பார் என தைரியம் சொன்னார். விசுவாசத்தை வெளிப்படுத்தினார்.

அப்பொழுது சவுல் இராஜா தன் வஸ்திரங்களைத் தாவீதுக்கு அணிந்து தன் யுத்த தளவாடங்களையும் பட்டயத்தையும் கூட கொடுத்து யுத்தத்துக்கு அனுப்பினான். தாவீது ஆயுதமணிந்து நடந்து பார்த்து தனக்கு அதில் பழக்கமில்லாததினால் அது ஒத்துவராது என்று கண்டு அவைகளையெல்லாம் கழற்றி வைத்து விட்டு தன் தடியையும் கவணையும் 5 கூழாங்கற்களை மாத்திரம் எடுத்துக் கொண்டு புறப்பட்டார்.

இப்போது காரியம் சாத்தானை எதிர்ப்பதே அதற்கு முறையான பட்டம் படித்து வேதாகமக் கல்லூரிக்குப் போய் வேத சாஸ்திரம் படித்து பட்டம்தான் பெற்றிருக்க வேண்டுமென்பதில்லை, சாத்தானையும் அவன் சேனைகளையும் முறியடிப்பதும் அவனை விரட்டி விட்டு அவன் கையில் இருக்கிற ஆத்துமாக்களை மீட்பதுமே காரியம். அதற்கு தன் முயற்சியும்தேவன் மேலுள்ள விசுவாசமுமே ஆயுதம். தேவனால் அபிஷேகம் பண்ணப் பட்டிருக்க வேண்டும்.

பிள்ளை பிறந்தால் பெயர் சூட்ட, வளர்ந்தால் விவாகம் முடித்து வைக்க இறந்தால் அடக்கம் பண்ண B.A, M.A. பட்டம் தேவையில்லை. பாவியான ஒரு ஆத்துமாவை மறுபடியும் பிறக்க வைக்க (Born again) இரட்சிப்புக்குள் வழி நடத்த அறியாத B.A. M.A பட்டங்களினாலும் வேத சாஸ்திர பயிற்சிகளினாலும் என்ன பிரயோஜனம் இப்போ சாத்தானை எதிர்க்க திராணியில்லாமல் பயந்து ஓடிப்போகிறார்கள்.

ஆனால், அபிஷேகம் பெற்ற தாவீது சாஸ்திரபடிப்பில்லா விட்டாலும் ஆடு மேய்த்த தாவீது சிங்கத்தையும் கரடியையும் கொன்று ஆடுகளைக் காப்பாற்றிய தாவீது தேவனை தேவ ஜனங்களை இராட்சதன் நிந்திக்கிறதைக் கண்டு பொங்கி எழுந்தார் இராட்சதனைக் கொல்ல. தேவன் மேலுள்ள விசுவாசத்தால் அவனுக்கு எதிர் கொண்டு ஓடி வீசினார் கல்லை கவணில் வைத்து திறந்திருந்த எதிரியின் நெற்றியில்பட. தேவன் வீழ்த்தினார் கோலியாத்தை. ஒரே கல் கோலியாத்தின் நெற்றியில் பதிய அவன் வீழ்ந்தான் குப்புற மண்ணைக் கவ்வி. ஓடிய தாவீது கோலியாத்தின் மேலேறி மிதித்து அவனுடைய பட்டயத்தை உருவி அவன் தலையை வெட்டி தூக்கி விட்டார். ஓடினார்கள் வம்புக்கு வந்த பெலிஸ்தியர் புறமுதுகிட்டு. வெற்றி வெற்றி இஸ்ரவேலின் சேனைக்கு வெற்றி!

இந்நாட்களில் தேவை பெருங் கூட்டமாய் நிற்கிற மாம்சமான சேனையல்ல.

தள்ளப்பட்ட ராஜாக்களுமல்ல தேவனால் அபிஷேகம் பெற்று தேவாவியினால் நிரப்பப்பட்ட தாவீதே.

காகங்கள் ஆயிரம் கூடினாலென்ன கல்லொன்று போதுமே.

தேவை மெய்யான தாவீதுகளே.

தாவீது: என்னை சிங்கத்தின் கைக்கும் கரடியின் கைக்கும் தப்புவித்த கர்த்தர் இந்தப் பெலிஸ்தனுடைய கைக்கும் தப்புவிப்பார் என்றான். 1 சாமு. 17:37.

## கிறிஸ்து பிறப்பு

இந்து தேச இறை மக்களே இனிதாய் பாடி மகிழ்ந்திடுவோம்
விந்தை புரிந்திட இறைமகனே சுந்தர வடிவில் பிறந்தாரே
அதிசய தேவன் மனிதனுக்காய் அவனியிலே மானிடனாய்
ஆயர் குல பாலகனாய் அன்பின் தேவன் பிறந்தாரே
இயேசு என்ற நாமத்திலே இரட்சகராக பூமியிலே
பாவத்தை போக்க பிறந்தாரே பரிசுத்த தேவ மைந்தனரே
ஈசாவென்னும் அடிமரத் கிளையாக இம்மானுவேலென்னும் பொருளாக

மோசே சொன்னவர் பிறந்தாரே முன்னணையிலே சாட்சியாக
உன்னதத்து அருணோதயம் யூதர்களின் பெரும் உபாயம்
ஊனுடல் எடுத்து மனிதனாக உலகிலே வந்து பிறந்தாரே.
எங்கும் அமைதி ஏற்படுத்த ஏழை மடியில் தான் உறங்க
கன்னி மரியாள் பாலகனாய் கர்த்தர் இயேசு பிறந்தாரே
விண்ணவர் போற்றும் வேந்தனவர் வேத முதல் நாயகனாய்
மண்ணில் வந்து பிறந்தாரே மனிதன் மகிமை அடைந்திடவே.

ஐந்து கண்ட மக்களுக்காய் ஆதி மூல காரணரே
வந்து பிறந்தார் வான் மகனாய் வையகம் வாழ்வு அடைந்திடவே
சத்தியத்திற்கு சாட்சியாக சகல ஜனங்களும் மகிழ்ச்சியாக
நித்திய நாதன் பிறந்தாரே வேத வசனம் நிறைவேறிடவே
துதிகள் ஏற்றிடும் தூயவரே துன்பங்கள் போக்கும் துணைவராக
தூதர்கள் போற்றிட பிறந்தாரே துயரங்கள் போக்கும் மனிதரிலே
தன்னோடு மனிதனை சேர்த்திடவே மனிதன் தாகம் தீர்த்திடவே

முன்னோர் சொன்ன வாக்கின்படி தேவ மூதற்பேறாய் பிறந்தாரே
மனித துவேஷ ஜாதிகளை ஒழித்திடவே மாறு அன்பு காட்டிடவே
மரண பயத்தை போக்கிடவே மாறு தேவன் பிறந்தாரே
தேவன் அனுப்பிய திருவிளக்கு தீமை போக்கிடும் ஒளிவிளக்கு
கோமான் பிறந்தார் குடிசையிலே கோடி தேவர் துதித்திடவே
ஆதி முதலாய் இருந்தவரே ஆபிரகாமின் தேவனவரே
ஆதாமின் பாவம் போக்கிடவே அவனியில் வந்து பிறந்தாரே
இம்மானுவேலனை வணங்கிடுவோம் நாமே.

# வேதாகமத்தில் பெண்கள்.

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே! நாம் வாழும் உலகமானது சோதோம் கொமோராவைப் போல் சீர்கெட்டதாகி நித்திய அக்கினியின் ஆக்கினையை அடைந்து கொள்ள விரைந்து செல்கிறது. நாகரீகம் என்ற பெயரால் ஆண்களும் பெண்களும் அவலட்சணமான உடை உடுத்தி அருவருப்பாய் வாழுகிறதை நாம் காணுகிறோம்.

ஆதி உலகத்தில் நோவாவின் காலத்து மக்களும் இப்படியே அவலட்சணமாய் வாழ்ந்தார்கள். "மனுஷனுடைய அக்கிரமம் பூமியிலே பெருகினது என்றும், அவன் இருதயத்து நினைவுகளின் தோற்றமெல்லாம் நித்தமும் பொல்லாததே என்றும் கர்த்தர் கண்டு, தாம் பூமியிலே மனுஷனை உண்டாக்கினதற்காக மனஸ்தாபப்பட்டார்; அது அவர் இருதயத்துக்கு விசனமாயிருந்தது. அப்பொழுது கர்த்தர், நான் சிருஷ்டித்த மனுஷனைப் பூமியின் மேல் வைக்காமல், மனுஷன் முதற்கொண்டு, மிருகங்கள் ஊரும் பிராணிகள் ஆகாயத்துப் பறவைகள் பரியந்தமும் உண்டாயிருக்கிறவைகளை நிக்கிரகம் பண்ணுவேன்; நான் அவர்களை உண்டாக்கினது எனக்கு மனஸ்தாபமாயிருக்கிறது என்றார் (ஆதி. 6:5-7).

இவ்விதமாகவே கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாட்களிலும் (மனுஷ குமாரனுடைய நாட்களிலும் நடக்கும் (லூக். 17:26-30) என்று வேதம் கூறுகிறபடியால் தேவனுடைய ஜனங்கள் எவ்விதமாக வாழ வேண்டும், ஆண்கள் பெண்கள் ஆகியோர் எவ்வாறு வாழ வேண்டும் என்று வேதம் கூறுகிறது என்பதை கவனித்து அவரவர் தங்களுடைய வாழ்க்கைகளைச் சீர்படுத்திக் கொள்வது நல்லது (2 தீமோ. 3:16,17) சீர் கெட்ட பிள்ளைகளே திரும்புங்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார் (எரே. 3:14,15).

<u>பெண்களைக் குறித்து வேதம் கூறுவதை இங்கே கவனிப்போம்:</u>

ஆணுக்கு ஏற்ற துணையாய் இருப்பதற்காகவே தேவன் பெண்ணைப் படைத்தார் என்று (ஆதி 2:18) வேதம் கூறுகிறது. அப்படியே புதிய ஏற்பாட்டிலும் ஸ்திரீயானவள் எல்லாவற்றிலும் அடக்கமுள்ளவளாய் இருந்து அமைதலோடு கற்றுக் கொள்ளக்கடவள். உபதேசம் பண்ணவும் புருஷன் மேல் அதிகாரம் செலுத்தவும் ஸ்திரீயானவளுக்கு நான் உத்தரவு கொடுக்கிறதில்லை. அவள் அமைதலாயிருக்க வேண்டும் (1 தீமோ. 2:11,12) என்றும், தேவ வசனம் தூஷிக்கப்படாதபடிக்குப் பாலிய ஸ்திரீகள் தங்கள் புருஷரிடத்திலும் தங்கள் பிள்ளைகளிடத்திலும் அன்புள்ளவர்களும், தெளிந்த புத்தியுள்ளவர்களும், கற்புள்ளவர்களும் வீட்டில் தரித்திருக்கிறவர்களும் நல்லவர்களும் தங்கள் புருஷர்களுக்கு கீழ்ப்படிகிறவர்களுமாய் இருக்க வேண்டும் (தீத்து 2:4,5) என்றும் அப்போஸ்தலனாகிய பவுல் கூறுகிறார்.

மேலும் கிறிஸ்தவ பெண்களுடைய அலங்காரங்களைக் குறித்து: "மயிரைப் பின்னி, பொன்னாபரணங்களை அணிந்து உயர்ந்த வஸ்திரங்களை உடுத்திக் கொள்ளுதலாகிய புறம்பான அலங்கரிப்பு உங்களுக்கு அலங்காரமாயிராமல், அழியாத அலங்கரிப்பாயிருக்கிற சாந்தமும் அமைதலுமுள்ள ஆவியாகிய இருதயத்தில் மறைந்திருக்கிற குணமே உங்களுக்கு அலங்காரமாய் இருக்கக்கடவது; அதுவே தேவனுடைய பார்வையில் விலையேறப் பெற்றது. இப்படியே பூர்வத்தில் தேவனிடத்தில் நம்பிக்கையாயிருந்த பரிசுத்த ஸ்திரீகளும் தங்களுடைய புருஷர்களுக்கு கீழ்ப்படிந்து தங்களை அலங்கரித்தார்கள்" (1 பேது. 3:3-5; 1 தீமோ. 2:9,10) என்று கர்த்தருடைய வேதம் கூறுகிறது.

(தொடரும்).

---

ஸ்திரீயானவள் எல்லாவற்றிலும் அடக்கமுடையவளாயிருந்து, அமைதலோடு கற்றுக் கொள்ளக்கடவள் 1 தீமோ. 2:11.

---

"தேவனைத் தேடு"

**"SEEK GOD"**

Regd. No. 040088/84
Postal Regd. No. MH BY NE-94/83
Tamil Monthly Magazine

## வம்ச அட்டவணை Genealogy, generation.

யூதர்கள் உத்தியோகம், சுதந்தரம், விவாக முதலிய சம்பந்தங்களுக்காகவும், மேசியாவின் பிறப்பைக் குறிக்கிறதற்காகவும், தங்கள் வம்ச வரிசையை மிகவும் கிரமமாய்க் கவனித்து பத்திரமாய்க் காப்பாற்றினார்கள். வம்ச அட்டவணையைக் காண்பிக்கக் கூடாதவர்கள் தகுதியானவர்களல்ல (எஸ்றா 2:62). யூதர்கள் 3500 வருஷகாலத்து வம்ச அட்டவணையை வைத்திருக்கிறார்கள் (1 நாளா. 1,3,4 அதிகாரங்கள்). யூதர்கள் இந்த வம்ச அட்டவணையை ஒரு சாஸ்திரமாகக் கற்றுக் கொண்டு அதில் பெருமை பாராட்டி வாதாடினபடியால் அப்படிச் செய்வது வீண் என்று பவுல் அப்போஸ்தலன் கண்டிப்பாய் சொல்லியிருக்கிறார் (தீத். 3:9; 1 தீமோ. 1:3). இந்த காலத்து யூதர்கள் தங்கள் வம்ச வரிசையைக் காட்டிக் கொள்ள மாட்டார்கள்.

மத்தேயு ஆபிரகாம் முதல் கிறிஸ்து வரைக்கும் 2000 வருஷ வம்ச அட்டவணையையும், லூக்கா ஆதாம் முதல் கிறிஸ்து வரைக்கும் 4000 வருஷ வம்ச வரிசையின் அட்டவணையையும் கணித்திருக்கிறார்கள். மத்தேயு யோசேப்பின் அட்டவணையையும் எழுதியிருக்கிறார்கள். இரண்டு அட்டவணைகளிலும் வித்தியாசமாய்த் தோன்றுகிறவைகள் வித்தியாசங்களல்ல, ஒருவருக்குப் பல பேர்கள் இருந்தன. பலருக்கு ஒரு பெயர் இருந்தது. மத்தேயு இயேசு யூதர்களுடைய இராஜா என்று காட்ட தாவீது இராஜாவின் குமாரன் சாலொமோன் வழி வந்த அட்டவணையைக் காட்டுகிறார். லூக்கா இயேசு உலக இரட்சகர் என்று காண்பிக்க ஆதாமிலிருந்து ஆரம்பித்து தாவீதின் குமாரனாகிய நாத்தான் வழி வந்த அட்டவணையைக் காண்பிக்கிறார். யூதர்களின் வழக்கம் மருமகனையும் மகனே என்றழைத்தலாகும். மற்ற எந்த ஜாதிக்கும் வம்ச அட்டவணை கிடையாது. அப்படியே அட்டவணை இருந்தாலும் அதில் பெருமை பாராட்ட ஒன்றுமில்லை. கிறிஸ்தவர்களில் போலிக் கிறிஸ்தவர்களும் கள்ளப் போதகர்களும் தங்கள் ஜாதி வம்ச அட்டவணையைச் சொல்லி பிரயாசப்படுவதிலிருந்து அடையாளம் கண்டு கொள்ளப்படுவார்கள். நீ அவர்களை விட்டு விலகு (யோ. 8:33, 39,44; தீத். 3:9; 1 தீமோ. 1:3; 2 தீமோ. 2:23).

### அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்
   27 [வியாழன்] ஜனவரி 1994
   25 [வெள்ளி] பிப்ரவரி 1994
   25 [திங்கள்] மார்ச் 1994
2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
   ஆண்டு சந்தா Rs 15-00
   வெளிநாடு Rs. 100-00

   அனுப்ப வேண்டிய முகவரி :
   CHIEF PASTOR N. LAZAR
   "NEW JERUSALEM CHURCH"
   CHURCH LANE, TILAK NAGAR,
   DARGA ROAD, BHANDUP,
   BOMBAY–400 078 INDIA.
3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.
4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.
5. 'புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரூ. 15-(பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் [Capital Letter] எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by: Chief Pastor N. LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078 Printed at: New Jerusalem Press, Tilak Nagar, Bhandup, Bombay-400 078.

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 117 - FEB. '94

"புதிய எருசலேம் சபை"

" வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ரோ)ன் என்று நீங்கள் அறியீர்கள்... விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள் "

— மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தேயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக ; இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப் 1 · 1: 10:40-43).

CHIEF PASTOR N. LAZAR

## இதழின் உள்ளே...

# ஆசிரியர் உரை

மதம் (Religion) என்னும் தகுதியை கிறிஸ்தவம் ஒன்றே பெற்றுள்ளது. உண்மையான மதம் மனிதனை மேன்மைப்படுத்துகிறது. கிறிஸ்தவத்தை தவிர மற்ற மதங்கள் உலக ஆதாய நோக்குடைய அரசியல் (Political) கட்சிகளாகும். இவ்வுலகில் அரசாட்சியைக் கைப்பற்றுவதே அவைகளின் நோக்கம். பாருங்கள் அவைகள் தங்களை ஓட்டு வங்கிகள் என்று அழைத்து வருகின்றன. கிறிஸ்தவ மார்க்கம் ஒன்றே ஆத்மீகமானதாகும். மனிதனை மனந்திரும்புதலுக்குள்ளாய் வழி நடத்தி தெய்வீகப் பார்வையை அவனுக்கு உண்டாக்கி தற்குடி மகனாயும் அவனை வாழச் செய்கிறது. புறமதஸ்தர்கள் என்றாலே பொய் சொல்லுகிறவர்களும், திருடர்களும், கெட்ட காரியங்களைச் செய்கிறவர்களும் என்று எல்லோரும் அறிவர் (இதன் மத்தியில் அத்திப் பூத்தாற் போல் சில சன்மார்க்கவாதிகளும் உண்டு). ஆனால் கிறிஸ்தவன் ஒருவன் தப்பு செய்தால் உலகமே என்னப்பா நீ கிறிஸ்தவனாயிருந்தும் இப்படிச் செய்யலாமா? எனக் கேட்பார்கள். இதன் மூலம் நாம் அறிகிறதென்னவென்றால், கிறிஸ்தவர்கள் என்றால் நல்லவர்கள் என்றும், அவர்கள் நன்மையே செய்வார்கள் என்றும் உலகம் எதிர் பார்க்கிறது. ஆனபடியால் கிறிஸ்தவ மார்க்கமே உலகமுழுவதுமுள்ள மனிதர்களுக்கு இறைவனால் கொடுத்த ஆத்மீக மார்க்கமாகும். இதுவே ராஜபாட்டை. இதன் வழி செல்வோர் மிக விரைவில் இறைவனிடம் ஐக்கியமாகி உலகெய்துவார்கள். தேவன் மனிதனுக்கு நியமித்த இப்போது வழியை விட்டு புது வழிச் செல்பவன் திருடனும் கொள்ளைக்காரனுமாகும். அவனுக்கு இங்கேயும் சமாதானமில்லை; அங்கேயும் சமாதானமில்லை. "நானே வழியும் சத்தியமும் ஜீவனுமாயிருக்கிறேன்" என்று இயேசு சொல்கிறார். "என்னைப் பின்பற்றுகிறவன் இருளிலே நடவாமல் ஜீவ ஒளியை அடைந்திருப்பான்." கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவே வாரும்!

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

(CHIEF PASTOR N. LAZAR)

[தொடர்ச்சி]

# சத்திய வேதம்

1. வேதாகமம் பரிசுத்த ஆவியினால் போதிக்கப்பட்டு முழுவதும் தீர்ந்தது. நம்மை பாவத்தினின்று நீக்கி இரட்சிக்கிறதற்கு வேண்டியதை சத்திய வேதாகமம் போதிக்கிறபடியால் அது பூரணமுள்ளதாயிருக்கிறது. வேத வாக்கியங்களெல்லாம் தேவ ஆவியினால் அருளப்பட்டிருக்கிறது. தேவனுடைய மனுஷன் தேறினவனாகவும் எந்த நற்கிரியையும் செய்யத் தகுதியுள்ளவனாகவும் இருக்கும்படியாக அவைகள் உபதேசத்துக்கும் கடிந்து கொள்ளுதலுக்கும் சீர்திருத்தலுக்கும் நீதியைப் படிப்பிக்குதலுக்கும் பிரயோஜனமுள்ளவைகளாயிருக்கிறது (2 தீமோ. 3:16,17). இதில் ஒன்றையும் கூட்டவும், குறைக்கவும் கூடாது (உபா. 4:2; வெளி. 22:18,19).

இரட்சிக்கப்படுவதற்கேற்ற உபதேசங்கள் சத்திய வேதத்தில் பரிபூரணமாயும் தெளிவாயும் அடங்கியிருக்கிறபடியால் வேதமே விசுவாசத்திற்கும் சன்மார்க்கத்திற்கும் தகுதியான பிரமாணம் என்று பெரும்பாலும் சுவிசேஷ சபையார் ஒத்துக் கொள்கிறார்கள்.

மனிதர்களுடைய யோசனை எப்பொழுதும் வேற்றுமைக்கேதுவாய் இருக்கிறது. வேதமோ அப்படியல்ல. புத்தியும் கல்வியும் சாஸ்திரிகள் செய்த வியாக்கியானங்களும் விசுவாசத்துக்கு உதவியாயிருந்தாலும் அவைகள் விசுவாசத்துக்குப் பிரமாணமல்ல. நாம் மனுஷருடைய சாட்சியை ஏற்றுக் கொண்டால் அதைப் பார்க்கிலும் தேவனுடைய சாட்சி அதிகமாயிருக்கிறது [1 யோ. 5:9].

ஆதலால் தேவனே உண்மையுள்ளவர், எந்த மனிதனும் பொய்யன் என்போமாக [ரோ. 3:4]. வேதம் தானே திருவுளம் பற்றுகிறபடி வேதமே விசுவாசத்துக்கும் சன்மார்க்கத்துக்கும் தகுதியான பிரமாணமாய் இருக்கிறது.

Divine faith is an assent into something as credible upon testimony of God-Peerson ஏசா. 8:20 வேதாகமத்தைக் கைவிடாமல் பொது வழியிட்டு புது வழியே போகிறவன் கள்ளன் என்று கிறிஸ்தோதம் என்பவர் சொல்கிறார். [1 தெச. 5:21; 1 யோ. 4:1; 1 கொரி. 10:15].

**The Bible. The Bible one is the religions of protestants.**

2 பூரணமாயிருக்கிற வேதம் தெளிவாயிருக்கிறது [உபா. 30:11-15. சங். 119:105; 2 பேது 1:19]. வேதம் அவசியமானவைகளில் தெளிவுள்ளதாயிருந்தாலும் அதில் மறைபொருளான சில காரியங்களுமுண்டு. ஒரு சாஸ்திரி சொல்லுகிறபடி வேதம் சிற்றறிவாளருக்கு திருப்தியுண்டாக்கத்தக்கவைகளை வெளிப்படையாகவும், பேரறிவாளர்கள் ஆராய்ச்சி செய்யத்தக்கவைகளை குறிப்பாகவும் அடக்கிக் காட்டுகிறது.

அது சில இடங்களில் ஆழமாயும் சில இடங்களில் ஆழமின்றியுமிருக்கிற ஆற்றுக்கொப்பாய் இருக்கிறது. ஆழமில்லாத இடத்திலே ஆட்டுக்குட்டியும் நடந்து போகும். ஆழமான இடத்திலே யானையும் மிதந்து போகும். மற்ற கல்விகளில் உண்டாயிருக்கிறது போல வேதத்திலும் சில விசேஷங்கள் யாவருக்கும் தெளிவாயிருக்கிறது. சில விசேஷங்கள் கல்விமான்களுக்கு மாத்திரம் தெரியும். சில விசேஷங்கள் கல்விமான்களுக்கும் நன்றாய்த் தெரியாது.

வேத வாக்கியங்களின் கருத்தை அறிய வேண்டிய முறையாவது [Interpretation of scripture]:

வேத வாக்கியங்களின் கருத்து பல வகையாயிராமல் ஒரே வகையாயிருக்கி

றது. ஒரே வகையாயிராவிட்டால் வேதம் நிச்சயமற்றதாயிருக்கும் கருத்து ஒன்றாயிருந்தும் அது சில இடங்களில் இரண்டு மூன்று காரியங்களைக் குறிக்கும்.

திருஷ்டாந்தமாக, ஆட்டுக்குட்டியினுடைய எலும்புகளை முறிக்கக் கூடாது என்று சொல்லப்பட்ட கட்டளையின் கருத்து முதலாவது பஸ்காவுக்கேற்ற ஆட்டுக்குட்டியையும் இரண்டாவது அந்த ஆட்டுக்குட்டியினால் குறிக்கப்பட்ட இயேசுவையும் குறிக்கும் [யாத். 12-ம் அதி; யோ. 19:36]. அனாதியும் அபிரகாமுக்கு வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட சந்ததி முதலாவது ஈசாக்கையும், இரண்டாவது கிறிஸ்துவையும் குறிக்கும். இவை இரண்டு கருத்தல்ல. ஒரே கருத்தின் இரண்டு பங்குகளாக இருக்கிறது.

3. ஒரு வாக்கியத்தின் கருத்தை அறிய வேண்டுமானால்,

a] தேவ ஆவியானவரின் போதனையை உண்மையாய் அடிக்கடி கேட்க வேண்டும். அவர் வேதத்தை போதித்தபடியினால் அதை அறியும்படி அவருடைய ஒத்தாசையைத் தேடுவது நியாயம். தேவ ஆவியானவர் உணர்த்தி வெளிப்படுத்தல் கொடுத்து உண்மையான அர்த்தத்தைக் காண்பிப்பார்.

b] மனமானது வழக்கத்தினாலே அடைந்த எண்ணத்தை விட்டு சத்தியமானதை மாத்திரம் விரும்பி மெய் தேவபக்தியை முயற்சி பண்ண வேண்டும்.

c] வேதத்தின் மூல பாஷைகளை அறிய வேண்டும். எல்லாரும் அப்படிச் செய்ய வேண்டுவதில்லை. போதகர்களாயிருக்கிறவர்களுக்கு விசேஷமாய் அது வேண்டும். சின்ன தோணியிலே ஒரு சிறு நதியைக் கடந்து போகிறவர்களிலும் பெரிய சமுத்திரத்தைக் கடந்து போகிறவன் அதிக அறிவுடையவனாய் இருக்க வேண்டுமல்லவா! எல்லாரும் மூல பாஷையை அறிந்து கொள்ள முடியாவிட்டாலும் மூல பாஷையிலிருந்து திருப்பப் பெற்ற வேதாகமத்தையும் மூல பாஷையினுடைய அர்த்தத்தை தெளிவாகக் காண்பிக்கிற வேத உரைகளையும் படித்தால் மலைவுள்ள வாக்கியங்களை தெளிவுள்ள வாக்கியங்களினாலே அறியவும், விசுவாச முறைமைக்குரிமையை நன்றாய் எண்ணிக் கொள்ளவும் வேண்டும். நிமித்தமில்லாமல் இயல்பான கருத்து விசுவாசமுறைமைக்கு ஒத்து வராமல் நியாயமானதைக் காட்டாமலும் இருந்தால் மாத்திரம் இயல்பான கருத்தைப் பற்றிக் கொள்ள வேண்டும்.

வேதத்துக்கு அநேகர் பல பாஷைகளிலும் ஏராளமான உரைகள் எழுதியிருக்கிறார்கள். ஆங்கில பாஷையிலே இவ்வித உரைகள் ஏராளமாயிருக்கிறது. அவ்விதமாக ஜெர்மன் பாஷையிலும் அருமையான புஸ்தகங்கள், உரைகள் உண்டு. தமிழிலேயும், வெளிநாட்டில் உள்ள குருக்கள் தமிழ் படித்து இயற்றின உரைகளும் சாஸ்திரங்களும் உண்டு. ஆனபடியினால், வேதாகமத்தை விளங்கிக் கொள்ள உபநூல்களையும் படிப்பது அவசியமே.

(தொடரும்)

"வேத வாக்கியங்களை ஆராய்ந்து பாருங்கள்; அவைகளால் உங்களுக்கு நித்திய ஜீவன் உண்டென்று எண்ணுகிறீர்களே." யோ. 5:39.

# கிறிஸ்தவ மார்க்கம் (தொடர்ச்சி)

மனந்திரும்புதலுக்கு அடுத்தபடி, உண்மையான மனந்திரும்புதலை அடுத்து ஆண்டவரை அறிக்கையிட உறுதியும் விருப்பமும் இயல்பாய் உண்டாகும்.

மனிதன் முன்பாக என்னை அறிக்கை செய்கிறவன் எவனோ அவனை நானும் பரலோகத்தில் என் பிதாவின் முன்பாக அறிக்கை பண்ணுவேன்; மனிதன் முன்பாக என்னை மறுதலிக்கிறவன் எவனோ அவனை நானும் பரலோகத்திலிருக்கிற என் பிதாவின் முன்பாக மறுதலிப்பேன் என்று மத். 10:32,33 – வசனங்களில் கர்த்தராகிய இயேசு சொல்லியிருக்கிறார்.

சிலர் இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து, ஆங்காங்கிருந்து நீங்கள் மனந்திரும்பி, பாவ அறிக்கை செய்து இறைவனை நோக்கி ஜெபம் பண்ணுங்கள் இரட்சிக்கப்படுவீர் என்று தவறாக மக்களுக்குப் போதிக்கிறார்கள். இவை வசனத்துக்கு மாறான உபதேசங்கள். எல்லா பிரசங்கிகளும் இப்படியே பிரசங்கிக்கிறதினால் மக்களும் அந்தபடி நம்பியிருக்கிறார்கள். எல்லா மக்களும் இப்படி விரும்புகிறபடியினால் நாங்களும் இப்படி பிரசங்கிக்கிறோம் என்று சொல்லுகிறார்கள்.

ஆனால் வேதாகமம் சொல்லுகிறதாவது: நீதியுண்டாக இருதயத்திலே விசுவாசிக்கப்படும், இரட்சிப்புண்டாக வாயினாலே அறிக்கைப் பண்ணப்படும் [ரோ. 10:10]. அறிக்கை செய்தல் என்று சொல்லும்போது இயேசு கிறிஸ்துவை நான் விசுவாசிக்கிறேன், சொந்த இரட்சகராக ஏற்றுக் கொள்ளுகிறேன், இயேசு கிறிஸ்துவை தேவனுடைய குமாரனென்று நான் விசுவாசிக்கிறேன், ஏற்றுக் கொள்ளுகிறேன் என்று ஒரு தேவ ஊழியக்காரன் முன்பாக சபையின் மத்தியிலோ அல்லது ஞானஸ்நானம் எடுக்கும் முன்போ ஒரு மனிதன் அறிக்கை செய்ய வேண்டும்.

மனிதர் முன்பாக அறிக்கை பண்ணுகிறதை குறித்தே இப்பொழுது சொல்லுகிறேன். அறிக்கை செய்தல் என்று சொல்லுகிறபொழுது கர்த்தருடைய நாமத்தை அறிக்கை செய்து மகிமைப் படுத்துகிறதை குறித்தும் வேதாகமத்தில் கூறப்பட்டுள்ளது. 1 இராஜா. 8:33,35 வசனங்களில் "உமது நாமத்தை அறிக்கை பண்ணி" என்று எழுதப்பட்டுள்ளது. கடவுளுடைய நாமம் என்பது கடவுள் தாமே தம்மை வெளிப்படுத்திய அவருடைய சுபாவமாகும். ஒரு பக்தன் விசுவாசித்து அந்த நாமத்தை அறிக்கையிட வேண்டும்.

மனிதன் அப்படி அறிக்கை செய்கையில் கடவுளுடைய மேன்மையையும், இரக்கத்தையும் நினைவு கூர்ந்தவனாய் தான் குற்றவாளியாகவும், கடவுள் சந்நிதானத்தில் தான் ஒரு அசுத்தன் என உணர்ந்து தன் பாவங்களை அவரிடத்தில் அறிக்கை செய்வான். இந்த சந்தர்ப்பங்களில் ஒரே விதமான வார்த்தைகள்தான் மூலமொழியில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன [சங். 32:5; நெகே. 1:6; மாற். 1:5].

சுருக்கச் சொன்னால் நாம் மனிதரையல்ல கடவுளையே பார்த்து அறிக்கை செய்கிறோம் என்றாகிறது. விசுவாசமே நம்மை அறிக்கையிட ஏவுகிறது.

இரகசிய கிறிஸ்தவம் என்று ஒன்று கிடையாது. ஒருவன் கிறிஸ்து இயேசுவை விசுவாசித்து ஏற்றுக் கொள்கிறான் என்றால் அவன் அவருடைய சந்நிதானத்திலே அறிக்கையிட வேண்டும். அவரைக் குறித்து மனிதர்கள் மத்தியிலே வாயினாலே அறிக்கையிட வேண்டும். அவன் வெளிப்படைக் கிறிஸ்தவனாக சாட்சி சொல்ல வேண்டும்.

இயேசு கிறிஸ்துவை ஆண்டவர் என்று அறிக்கையிடுகிறது புதிய ஏற்பாட்டிலே முக்கியமான கருத்துடையதாயிருக்கிறது.

இயேசுவை ஆண்டவர், இரட்சகர் என்று அறிக்கை செய்வது [ரோ. 10:9; பிலி. 2:10; 1 யோ. 4:13-15]. இயேசுவே இரட்சகர் என்று அறிக்கையிடுகிறதற்கும், தங்களுடைய பாவங்களை அறிக்கையிடுகி றதற்கும் ஒரு தொடர்பு உண்டு. இதற்கு காரணம் கிறிஸ்து பாவங்களை மன்னித்து அவற்றை முற்றிலுமாக அகற்ற வல்லவர் என்பதே.

ஆகையால் விசுவாசி தன் விசுவாசத்தை அறிக்கையிடுவதோடு மறைவான தன் பாவங்களையும் அறிக்கையிடுவான். அறிக்கையிடுதல் பரிசுத்த ஆவியின் ஏவுதலினாலே ஆகும் [மத். 10:20; 1 கொரி. 12:1; 1 யோ. 4:2,3]. ஆகையினால் எவ்வகை அறிக்கை என்றால் சபையில் தனி உறுப்பினருடைய நம்பிக்கைக்கு ஆவியானவர் காரணர் என்பது மாத்திரமல்ல, திருச்சபையின் பொதுவான நம்பிக்கைக்கும், கூட்டுறவிற்கும் ஆவியானவரே காரணர் என்பதும் ஆகும்.

அறிக்கையிடுதல் என்று சொல்லப்படுகிறது: புதிதாக ஞானஸ்நானம் பெறுகிறவனாவது, கிறிஸ்துவை விசுவாசித்து பக்குவமடைந்த ஒருவனாவது இவ்விதமாய் அறிக்கை செய்தால் அவனுடைய அறிக்கை முக்கியமாக கடவுளை நோக்கி செய்யும் அறிக்கையே. எனினும் அந்த அறிக்கை ஏனைய மக்களுக்கும் சாட்சியாக அமையும்.

மேலும் சபையார் திருச்சபையின் நடுவில் மட்டுமின்றி ஏனைய மக்கள் முன்னிலையிலும் பகிரங்கமாக அறிக்கை செய்ய அழைக்கப்பட்டு வந்துள்ளனர். இப்படி அறிக்கை செய்யும் போது கேட்போர் மனதைக் கவர்ந்து கிறிஸ்துவை விசுவாசித்து அவர்கள் ஒப்புக் கொள்ளும்படி செய்யலாம். அல்லது கேட்கிற மக்களின் இருதயத்தில் விசுவாசத்திற்கு விரோதமான தூண்டுதல் ஏற்பட்டு (யோ. 9:22) எதிர்ப்பினிமித்தம் இப்படி அறிக்கை செய்ய பயந்து சிலர் அறிக்கை செய்யாமல் விட்டு விடலாம். ஆனால் இயேசுவை தைரியமாக அறிக்கை செய்ய வேண்டும். இப்படி அறிக்கை செய்ததினாலே சிலர் இரத்த சாட்சிகளாய் இறக்க நேரிட்டது. அப்படி நேரிடலாம்.

உத்தம பக்தனோ மக்கள் தனது விசுவாச அறிக்கைக்கு இசைந்து வந்தாலும், மறுவிட்டாலும் இயேசுவை தேவனுடைய குமாரன் என்று அறிக்கை செய்து, அவரை நான் விசுவாசிக்கிறேன் என்று அறிக்கை செய்யத்தான் வேண்டும்.

அவனது அறிக்கைக்கும், இரட்சிப்புக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. நியாயத்தீர்ப்பு நாளில் தன்னை விசுவாசத்தோடு அறிக்கை பண்ணினவனை கிறிஸ்துவும் அறிக்கை செய்வார் [1 யோ. 4:15; மத். 10:32; வெளி. 3:5].

ஆனபடியினால் இரட்சிப்புக்கு மனம் பொருந்தி விசுவாசித்தல் மட்டுமல்ல, அறிக்கை செய்தலும் அவசியம். "நீதியுண்டாக இருதயத்திலே விசுவாசிக்கப்படும், இரட்சிப்புண்டாக வாயினாலே அறிக்கை பண்ணப்படும். இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கிறேன்; அவரை கர்த்தரென்றும், இரட்சகர் என்றும், ஆண்டவர் என்றும் விசுவாசிக்கிறேன் என்று சொல்லி அறிக்கை செய்ய வேண்டும். இது இரட்சிப்புக்கு அவசியம்.

அப். பவுல் தீமோத்தேயுவுக்கு எழுதும் பொழுது விசுவாசத்தின் நல்ல போராட்டத்தை போராடு, நித்திய ஜீவனைப் பற்றிக் கொள், அதற்காகவே நீ அழைக்கப்பட்டாய், அநேக சாட்சிகளுக்கு முன்பாக நல்ல அறிக்கை பண்ணினவனுமாயிருக்கிறாய் என்றும், எல்லாவற்றையும் உயிரோடிருக்கச் செய்கிற

தேவனுடைய சந்நிதானத்திலேயும், பொந்தியு பிலாத்துவின் முன்னின்று நல்ல அறிக்கையைச் சாட்சியாக விளங்கப்பண்ணின கிறிஸ்து இயேசுவினுடைய சந்நிதானத்திலேயும் உனக்கு கட்டளையிடுகிறேன் (1 தீமோ. 6:12–14) என்றும் எழுதியிருக்கிறார். பிலாத்துக்கு முன்னர் அருளிய வாக்கை பவுல் இங்கே நல்ல அறிக்கை என்று அழைக்கிறார். பிலாத்து கர்த்தரிடத்தில் நீ யூதருடைய ராஜாவா என்று கேட்டான். அதற்கு இயேசு நீர் சொன்னபடிதான் என்றார்.

நல்ல அறிக்கை: தீமோத்தேயு அறிக்கை செய்ததை, அநேக சாட்சிகளுக்கு முன்பாக நீ நல்ல அறிக்கை பண்ணினாய் என்று சொல்கிறார். அதை நல்ல அறிக்கை என்று சொல்கிறார். அப். பேதுருவும் நீர் ஜீவனுள்ள தேவனுடைய குமாரனாகிய கிறிஸ்து என்று அறிக்கை செய்தார் (மத். 16:16). நீங்களும் இப்பொழுது கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை அறிக்கை செய்யுங்கள்.

(தொடரும்)

"நம்முடைய பாவங்களை நாம் அறிக்கையிட்டால், பாவங்களை நமக்கு மன்னித்து எல்லா அநியாயத்தையும் நீக்கி நம்மை சுத்திகரிப்பதற்கு அவர் உண்மையும் நீதியும் உள்ளவராயிருக்கிறார்"

1 யோ. 1:9.

## வேதாகமத்தில் பெண்கள். [தொடர்ச்சி]

தேவனுடைய பிள்ளைகள் (பெண்கள்) தேவன் விரும்புகின்றபடி தங்களை அலங்கரிக்க வேண்டும் (சங். 45:11). உலகத்தாரைப்போல் தங்களுடைய அழகைப் பிறர் பார்க்க வேண்டும் என்று விரும்பி கவர்ச்சிகரமான ஆடை அணிவதும் தங்களுடைய உடல் அழகு வெளியே தெரியும்படி ஆடைகள் அணிவதும் அவலட்சணமானதாகும். இது பெண்களின் கற்புக்கு அபத்தமாகும் (ஆதி. 34:1,2). எனவே கிறிஸ்தவப் பெண்கள் தகுதியான வஸ்திரத்தினாலும் நாணத்தினாலும் தங்களை அலங்கரித்தல் நல்லது என்று கர்த்தருடைய வேதம் கூறுகிறது (1 தீமோ. 2:10).

விதவைகள்: இவர்கள் கணவனோடுவாழ்ந்து கணவனை இழந்தவர்கள். இவர்களுக்கு பிள்ளைகள் பேரன் பேத்திகள் இருந்தால் அவர்களை வளர்ப்பதும் தங்கள் குடும்பத்தை தேவ பக்தியான குடும்பமாக காத்துக் கொள்வதும் இவர்களுடைய கடமையாகும். இப்படி செய்வது தேவனுக்குப் பிரியமாய் இருக்கும் (1 தீமோ. 5:4).

இவர்களில் அறுபது வயதுக்கு குறையாதவளும் ஒரே புருஷனுக்கு மனைவியாயிருந்தவளுமாகி, பிள்ளைகளை வளர்த்து அந்நியரை உபசரித்துப் பரிசுத்தவான்களுடைய கால்களை கழுவி, உபத்திரவப்படுகிறவர்களுக்கு உதவி செய்து, சகலவித நற்கிரியைகளையும் ஜாக்கிரதையாய் நடப்பித்து இவ்விதமாய் நற்கிரியைகளைக் குறித்து நற்சாட்சிப் பெற்றவளுமாயிருந்தால், அப்படிப்பட்ட விதவைகளையே விதவைகள் கூட்டத்தில் சேர்த்துக் கொள்ள வேண்டும் (1 தீமோ. 5:9–10). இவர்களை ஆதரிக்க (குடும்பத்தில்) யாரும் இல்லாதிருக்க

வேண்டும் என்றும் (1 தீமோ. 5:5) வேதம் கூறுகிறது. ஆதிசபையில் இப்படிப்பட்ட பெண்களின் கூட்டம் ஒன்று இருந்ததாக வேதத்தில் நாம் வாசிக்கிறோம் (அப். 6:1).

இந்த விதவைகள் கூட்டத்தில்: இளவயதுள்ள விதவைகளை சேர்த்துக் கொள்ளாதே; ஏனெனில் அவர்கள் கிறிஸ்துவுக்கு விரோதமாய் காமவிகாரங் கொள்ளும்போது விவாகம் பண்ண மனதாகி முதலில் கொண்டிருந்த விசுவாசத்தை விடுவதினாலே ஆக்கினைக்குட்படுவார்கள், அதுவுமல்லாமல் அவர்கள் சோம்பலுள்ளவர்களாய் மாத்திரமல்ல, அலப்புகிறவர்களாயும், வீணலுவற்காரிகளாயும், தகாத காரியங்களைப் பேசுகிறவர்களாயும் இருப்பார்கள்.

ஆகையால் இளவயதுள்ள விதவைகள் விவாகம் பண்ணவும் பிள்ளைகளைப் பெறவும் வீட்டை நடத்தவும், விரோதியானவன் (சாத்தான்) நிந்திக்கிறதற்கு இடமுண்டாக்காமலிருக்கவும் வேண்டுமென்றிருக்கிறேன். ஏனெனில் இதற்கு முன்னே சிலர் சாத்தானைப் பின்பற்றி விலகிப் போனார்கள் (1 தீமோ. 5:11-15) என்று பரிசுத்த பவுல் கூறுகிறார்.

மனைவியானவள் தன் புருஷன் உயிரோடிருக்கும் காலமளவும் பிரமாணத்தினால் கட்டப்பட்டிருக்கிறாள்; தன் புருஷன் மரித்த பின்பு தனக்கு இஷ்டமானவனும் கர்த்தருக்குட்பட்டவனும் இருக்கிற எவனையாகிலும் விவாகம் பண்ணிக்கொள்ள விடுதலையாயிருக்கிறாள் (1 கொரி. 7:39) என்றும் வேதம் கூறுவதால் இளம் வயதுள்ள விதவைகள் விவாகம் செய்து கொள்வது தவறல்ல.

**விவாகம் ஆகாத கன்னிகைகள்:**

கன்னிகைகளைக் குறித்து கர்த்தரால் எனக்கு கட்டளையில்லை (1 கொரி. 7:25) என்று பரிசுத்த பவுல் கூறுகிறார். ஒரு கன்னிகையை விவாகம் செய்து கொடுப்பதும், விவாகம் செய்து கொடாமல் இருப்பதும் அவளுடைய தகப்பனின் கடமையாகும்.

அவளை விவாகம் செய்து கொடுப்பதும் பாவமல்ல; விவாகம் செய்து கொடாமலிருப்பதும் பாவமல்ல. அதற்கான அவசியத்தை அறிந்து அவன் அப்படி செய்து கொள்ளலாம் என்று (1 கொரி. 7: 36-35) அப்போஸ்தலனாகிய பவுல் கூறுகிறார். வேத வாக்கியங்கள் இவ்வாறிருக்க,

இந்நாட்களில் வாலிப பெண்களையும், இளம்வயதுள்ள விதவைகளையும் கூட்டிச் சேர்த்து அவர்களைக் கர்த்தருடைய ஊழியம் செய்வதற்குப் பயன்படுத்துகிறார்கள். இது வேதத்தின் ஒழுங்கல்ல. இவர்கள் தாங்கள் செய்கிற தவறுக்கு ஆதாரமாக: கெங்கிரேயா ஊர் சபைக்கு ஊழியக்காரியாகிய நம்முடைய சகோதரி பெபேயாள் [ரோ. 16:1] என்றும், "ஊழியக்காரர் மேலும் ஊழியக்காரிகள் மேலும் அந்நாட்களில் என் ஆவியை ஊற்றுவேன்" (யோவே. 2:29) என்றும் எழுதியிருக்கிறதே என்று கூறுவார்கள்.

கெங்கிரேயா ஊர் சபைக்கு ஊழியக்காரியாகிய பெபேயாளை அழைத்து வந்து கன்வென்ஷன் நடத்துங்கள், காத்திருப்பு கூட்டத்தை அவள் நடத்துவாள் என்று அப்போஸ்தலனாகிய பவுல் கூறவில்லை. நீங்கள் கர்த்தருக்குள் பரிசுத்தவான்களுக்கு ஏற்றபடி ஏற்றுக் கொண்டு எந்த காரியத்தில் உங்கள் உதவி அவளுக்குத் தேவைப்படுகிறதோ அதிலே நீங்கள் அவளுக்கு உதவி செய்ய வேண்டுமென்று அவளை உங்களிடத்தில் ஒப்புவிக்கிறேன். அவள் அநேகருக்கும் எனக்குங்கூட ஆதரவாயிருந்தாள் (ரோ. 16:1] என்று எழுதியிருப்பதால் இந்த பெபேயாள் ஒரு ஊழியக்காரனுடைய மனைவியாகக் காணப்படுகிறாள். இவள் மேற்கூறிய விதவைகள் கூட்டத்தில்

சேர்த்துக் கொள்ளத் தகுதியானவள். எனவே அவளை பரிசுத்தவான்களுக்கேற்றபடி ஏற்றுக் கொண்டு உதவி செய்யுங்கள் என்று பவுல் எழுதுகிறார்.

இன்னும் சிலர் பெண்களை ஊழியத்தில் சேர்க்க: அந்தப்படியே ஸ்திரீகளும் நல்லொழுக்கமுள்ளவர்களும், அவதூறு பண்ணாதவர்களும், தெளிந்த புத்தியுள்ளவர்களுமாயிருக்க வேண்டும் (1 தீமோ. 3:11) என்று அப்போஸ்தலனாகிய பவுல் எழுதியிருப்பதைக் காட்டி விவாகம் ஆகாத கன்னிகைகளையும், இளம் வயதுள்ள விதவைகளையும் தங்கள் ஊழியங்களில் சேர்த்துக் கொள்கிறார்கள். இது மகா தவறாகும்.

1 தீமோ. 3:11-ன் விளக்கமாவது 1 தீமோ. 3:5-ல் கூறியுள்ள உதவி ஊழியக்காரர்களுடைய மனைவிகளாகும். ஆங்கில வேதாகமத்தில்: "Even so must their wives be grave, not slanderers, sober, faithful in all things" என்று எழுதியிருப்பதைக் காணலாம். ஆகையால் கன்னிகைகளையோ, இளவயதுள்ள விதவைகளையோ சபையில் தங்கவைத்து கர்த்தருடைய ஊழியத்துக்காக வீடுவீடாக அனுப்புவது தேவனுடைய ஒழுங்கல்ல. இப்படிப்பட்ட ஒழுங்கீனங்கள் மாற்றப்பட வேண்டும்.

"நீ குறைவாய் இருக்கிறவைகளை ஒழுங்கு படுத்தும் படிக்கு நான் உனக்கு கட்டளையிட்டபடியே பட்டணங்கள் தோறும் மூப்பரை ஏற்படுத்தும்படிக்கும் உன்னைக் கிரேத்தா தீவிலே விட்டு வந்தேனே (தீத். 1:5) என்று பவுல் தீத்துவுக்கு எழுதுகிறார். இவர் மூப்பர்களை ஏற்படுத்தும்படி தீத்துவுக்கு கடிதம் எழுதியிருக்கிறார். ஆனால் இந்நாட்களில் சில பெரியவர்கள் தாங்கள் பவுலின் மினிஸ்ட்ரீ என்று கூறிக்கொண்டு தேவனுடைய சபையை ஒழுங்கு படுத்த மூப்பர்களை ஏற்படுத்துகிறார்கள். என்னே பரிதாபம்!

இவர்கள் தங்கள் கொள்கை சரியென்று நிரூபிக்க ஊழியக்காரர் மேலும், ஊழியக்காரிகள் மேலும் அந்நாட்களில் என் ஆவியை ஊற்றுவேன் (யோவே. 2:29) என்று எழுதியிருக்கிறதல்லவா? ஆகையால் ஊழியக்காரிகள் இருப்பது சரியே என்று சாதிக்கிறார்கள். அப்படி சாதிக்கிறவர்கள் யோவே. 2:28-29 வசனங்களைக் கொஞ்சம் தெளிவாகப் படித்தால் உண்மை விளங்கும்.

அதற்கு பின்பு நான் மாம்சமான யாவர் மேலும் என் ஆவியை ஊற்றுவேன். அப்பொழுது உங்கள் குமாரரும், உங்கள் குமாரத்திகளும் தீர்க்கதரிசனம் சொல்லுவார்கள்; உங்கள் மூப்பர் சொப்பனங்களையும், உங்கள் வாலிபர் தரிசனங்களையும் காண்பார்கள். அதோடு உங்களிடம் வேலை செய்கிற உங்கள் அடிமைகள் மேலும் அதாவது உங்களிடம் வேலை பார்க்கும் உங்கள் வேலைக்காரர்கள் மேலும், வேலைக்காரிகள் மேலும் என் ஆவியை ஊற்றுவேன் (யோவே. 2:29) என்பது அதன் விளக்கமாகும்.

ஆங்கில வேதாகமத்தில்: And also upon the servants and upon the handmaids in those days will I pour out my spirit என்றும் எழுதியிருப்பதால் இங்கே servants என்று எழுதியிருப்பதைக் கர்த்தருடைய ஊழியக்காரர்கள் என்று எடுத்துக் கொண்டார்கள். அது அப்படியல்ல. இஸ்ரவேலர்கள் புறஜாதிகளை அடிமைகளாக, வேலைக்காரர்களாக, வேலைக்காரிகளாக வைத்திருந்தார்கள். அவர்கள் மேலும்கூட என் ஆவியை ஊற்றுவேன் என்பதாகும் (லேவி. 25:44).

இன்னும் சிலர் பெண்களைத் தங்கள் ஊழியத்தில் சேர்த்துக் கொள்வதற்காக இப்படியும் விளக்கம் கூறுவார்கள்: பிலேயாம் தேவ சித்தம் செய்யத் தவறின பொழுது பிலேயாமைச் சுமந்து சென்ற

கழுதையின் வாயைத் திறந்து கர்த்தர் பேசி பிலேயாமை எச்சரித்தது போல் (எண். 22:30-31; 2 பேது. 2:16) இந்நாட்களிலும் கர்த்தர் இந்தப் பெண் ஊழியக்காரிகளைப் பிலேயாமின் கழுதைகளைப் போல் பயன்படுத்தலாமே என்றும் கூறுவதுண்டு.

தாவீது ராஜா பாவம் செய்து தேவ கோபத்துக்கு ஆளான போது தாவீதின் வீட்டிலுள்ள எந்த மிருகத்தின் மூலமும் கர்த்தர் பேசி தாவீது ராஜாவின் மதிகேட்டை உணர்த்துவிக்காதபடி தேவனாகிய கர்த்தர் நாத்தான் தீர்க்கதரிசியைக் கொண்டே தாவீது ராஜாவை எச்சரித்து உணர்த்திப் பாவ மன்னிப்பைக் கூறினதாக வேதம் கூறுகிறது [2 சாமு. 12: 10-13).

அப்படியே புதிய ஏற்பாட்டு சபையிலும் வழி தவறிப் போகிறவர்களை எச்சரிக்க தேவனாகிய கர்த்தர் தம்முடைய அப்போஸ்தலர்களையும் தீர்க்கதரிசிகளையும் ஏற்படுத்தியிருக்கிறார் [ஏரே. 3:14-15].

ஆதிசபையில் பந்தி விசாரிப்பு ஊழியத்தைச் செய்வதற்காக [விதவைகளை விசாரிப்பதற்காக] விசுவாசமும், பரிசுத்தாவியும் நிறைந்தவர்களாகிய ஏழுபேர்களைத் தெரிந்து கொண்டார்கள் [அப். 6:1-7] என்று வாசிக்கிறோம். இவர்களிலும் ஒரு விவாகம் ஆகாத கன்னிகையையோ, இளம் வயதுள்ள விதவைகளையோ காணவில்லை. ஆகையால் இளவயதுள்ள [கன்னிகைகள்] பெண்கள் தங்கள் வீடுகளில் அடங்கியிருந்து கர்த்தருக்கு சித்தமானால் விவாகம் செய்து கொண்டு குடும்பமாய் தேவ சித்தம் செய்வது நல்லது. சத்திய வேதம் அவ்வாறே கூறுகிறது.

இளவயதுள்ள விதவைகளும் ஊழியம் என்ற பெயரால் வீடு வீடாய் திரிந்து சாட்சியைக் கெடுத்துக் கொள்ளாதபடி தேவனுக்கு சித்தமானால் தேவ பக்தியுள்ள ஒரு ஆடவனை விவாகம் செய்து கொண்டு சாட்சியாய் வாழ்வது நல்லது. முதிர்வயதுள்ள விதவைகளுக்குப் பிள்ளைகள் பேரப் பிள்ளைகள் இருந்தால் அவர்களைத் தேவ பக்தியில் வளர்த்துக் குடும்பத்தோடு சாட்சியாய் வாழ வேண்டும் (1 தீமோ. 5:4).

உத்தம விதவைகள் அறுபது வயதுக்கு குறையாதவர்கள், நற்சாட்சி பெற்றவர்கள், ஆதரிக்க ஆட்கள் இல்லாதவர்கள் இப்படிப்பட்டவர்களை விதவை கூட்டத்தில் சேர்த்துக் கொள்ளலாம் (1 தீமோ. 5: 9-10) என்றும் வேதம் கூறுகிறது. இதுவே பெண்களைப் பற்றிய வேதாகம [தேவனுடைய] முறை. இதற்கு மாறானது தீமையினால் உண்டாயிருக்கும்.

இதற்கு மாறாக, தேவனுடைய சத்தியத்துக்கு மாறாக பெண் இனத்தை நடக்

## பரிசுத்தவிவாகம்

| மணமகன் | மணமகள் | இடம் | காலம் |
|---|---|---|---|
| Eld Bro. பவுல் | Sis. ஜூலியட் | பொன்மலைப்பட்டி | 18-1-94 |
| Bro. தமிழ்ச் செல்வன் | Sis. பியூலா | இராசபாளையம் | 19-1-94 |

கச் செய்து சத்திய மார்க்கத்தை தூஷிக்கச் செய்வதற்கு சாத்தான் திட்டமிட்டுச் செயல்படுகிற காலமாய் இது இருக்கிறது. ஏதேன் முதல் சாத்தான் இதைச் செய்து வருகிறான். எனவே கிறிஸ்தவப் பெண்கள் கர்த்தருடைய வேதத்தில் எழுதியிருக்கின்றபடி தங்களுடைய வாழ்வைக் காத்துக்கொண்டு தேவாசீர்வாதம் பெற்றுக் கொள்வீர்களாக.

"ஸ்திரீயானவள் எல்லாவற்றிலும் அடக்கமுடையவளாயிருந்து, அமைதலோடு கற்றுக் கொள்ளக்கடவள். உபதேசம் பண்ணவும், புருஷன் மேல் அதிகாரஞ் செலுத்தவும் நான் உத்தரவு கொடுக்கிறதில்லை." 1 தீமோ. 2:11,12.

# தேவ ராஜ்ய பிரவேசம்.

தேவ கிருபையால் ஒரு முறை இமயமலை உச்சிக்கு செல்லும் வாய்ப்புக் கிடைத்தது. டெல்லியில் இருந்து பஸ் மூலமாக சென்றோம். டெல்லியில் இருந்து பஸ் புறப்பட்டு ஹரியானா, பஞ்சாப் போன்ற மாநிலங்கள் வழியாக ஹிமாச்சல பிரதேசத்தில் நுழைந்தது.

பஸ் பிரயாணம் மிகவும் கஷ்டமாக இருந்தது. உயர போகப் போக கீழே பள்ளத்தாக்கைப் பார்க்கையில் மிகவும் பயமாக இருந்தது. ரோடு மிகவும் குறுகலாக இருந்தபடியால் எதிராக வண்டிகள் வரும்போது. நீண்ட நேரம் ஒரே இடத்தில் காத்திருக்க வேண்டியதாக இருந்தது.

இப்படி பல வித கஷ்டங்களையும், வருத்தங்களையும் கடந்து மேலே செல்லச் செல்ல, இயற்கையின் அழகு பரவசமுண்டாக்கிற்று. வெகு பாடுகளுக்குப் பின் உயர்ந்த சிகரத்தைப் போய் அடைந்தோம். அங்கே இறைவனுடைய மகத்துவத்தையும், அவருடைய கையின் கிரியைகளையும் கண்டு களிகூர்ந்தோம். There is no gain without pain. கஷ்டமில்லாமல் எந்த ஒரு ஆதாயமும் கிடையாது.

இதே போல் தான் தேவனுடைய இராஜ்யத்திற்குட்பட்டு, நித்திய ஜீவனுக்குப் போகிற பாதையில் செல்கிற தேவ ஜனங்கள் பல பாடுகளின் வழியாகவே செல்ல வேண்டும். அதைக் கண்டு பிரயாணத்தை நிறுத்தி விடக் கூடாது.

சில சமயங்களில் துன்பத்தை அடைய வேண்டியதாக இருக்கும். பாருங்கள், மோசேயானவர் அரண்மனையில் இராஜ அரமனையில் சுகபோக வாழ்வை வெறுத்து தேவ ஜனங்களோடே துன்பத்தை அநுபவித்தார் [எபி. 11:24,25]. இராஜ அரமனையில் உயர்தர ஆகாரம் கிடைக்கும், படுத்துக் கொள்ள பட்டோப படுக்கை இருக்கும். எல்லா களியாட்டு அம்சங்களுமுண்டு. நினைத்ததெல்லாம் கிடைக்கும் இருதயத்தை மகிழ்ச்சியாக்கும் சகல காரியமும் அங்கே உண்டாயிருக்கும்.

தேவ ஜனங்களோடே சேர்ந்து தேவ பக்தியாக நடக்க மனதாக இருக்க விரும்புகிற யாவரும் துன்பப்படுவார்கள் (2 தீமோ. 3:12) பற்றுக்குறை இருக்க முடியும்; நாம் எல்லா இடத்திலும்

எல்லா சமயங்களிலும், சுய இஷ்டமாக நடக்க முடியாது. நாமே குறிக்கப்பட்ட வேளையில், குறிக்கப்பட்ட விதமாக நடக்க வேண்டியது இருக்கும். அது கஷ்டமாகவும், துன்பமாகவும் இருக்கலாம். நீதிமானுக்கு வரும் துன்பங்கள் அநேகமாகத்தான் இருக்கும்; ஆனாலும் அவை எல்லாவற்றினின்றும் கர்த்தர் அவனை விடுவிப்பார் [சங். 34:19].

சில சமயங்களில் அவமானங்களை அடைய நேரிடும். ஐசுவரியம் அதிகமாக உள்ள ஒரு சகோதரி, வெளியே செல்லும் போதெல்லாம், நகைகளினால் தன்னை சிங்காரித்து, பட்டாடை உடுத்தி தைலம் பூசி படாடோபமாக செல்வது வழக்கம். அந்த சகோதரி கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து, திருவசனத்திற்கு கீழ்படிந்து. இந்த மாயையான வாழ்க்கை வேண்டாம், அழியாத அலங்கரிப்பாயிருக்கிற சாந்தமும், இருதயத்தில் மறைந்திருக்கிற குணமே போதுமென்று தன் வாழ்வை எளிமையாக்கிக் கொண்டது [1 பேது. 3:3,4].

ஒரு நாள் உறவினர் வீட்டுத் திருமணத்திற்கு செல்ல நேர்ந்தது. இந்த சகோதரியை எல்லாரும் முறைத்துப் பார்த்தார்கள். உன் கணவன் இறந்து போய் விட்டானா என்று சிலர் முகத்தில் அறைந்தாற் போல் கேட்டார்கள். எல்லாவற்றையும் விற்று தின்றிருப்பார்கள் ஆகையால் பக்தி வேஷம் போடுகிறார்கள் என்று பேசிய பேச்சும் காதில் விழுந்தது. இந்த மார்க்கத்தில் போனால் ஏராளமாய் பணம் கொடுப்பார்கள் போலும் என்று இப்படி பலவாறு பேசிக் கொள்கிற வார்த்தைகளையும் அவர்களது பரியாசப் பார்வைகளையும் கவனித்த இந்த சகோதரிக்கு அவமானத்தை சகிக்க முடியவில்லை.

ஆனாலும் இயேசுவின் நாமத்திற்காய் [அப்போஸ்தலர்] தாங்கள் அவமானமடைவதற்கு பாத்திரராக எண்ணப்பட்டபடியினால், சந்தோஷமாய் ஆலோசனை சங்கத்தை விட்டு வந்தார்கள் [அப். 5:41] என்ற வார்த்தையை நினைத்து தன்னைத் தேற்றிக் கொண்டு, கூட்டத்தை விட்டு வெளியேறி வந்து விட்டார்கள்.

நம்முடைய கர்த்தரும் தமக்கு முன் வைத்திருந்த சந்தோஷத்தின் பொருட்டு அவமானத்தை எண்ணாமல் சிலுவையை சகித்து தேவனுடைய சிங்காசனத்தின் வலது பாரிசத்தில் வீற்றிருக்கிறாரே (எபி. 12:2). தேவ ஜனமே, அவமானங்கள், தூஷணங்கள், நிந்தைகள் வரும் போது, கர்த்தர் நமக்கு துணை செய்வார், நாம் வெட்கப்பட்டுப் போவதில்லை என்று அறிந்து, நமது முகத்தை கற்பாறையை போலாக்க வேண்டியதுதான். பின்னர் நமக்காக கர்த்தர் வழக்காடுவார். நம்மை அவமானப்படுத்தினவர்கள், அவமானமடைந்து, வெட்கிப் போவது நிச்சயம் [ஏசா. 50:6].

இந்த நித்திய ஜீவ பாதை இருக்கிறதே. இது போராட்டம் நிறைந்த பாதை. போராடி ஜெயித்துதான் கடந்து செல்ல வேண்டும். பொன்னைக் காட்டிலும் விலை மதிப்பான நம்மிடத்திலுள்ள விசுவாசத்தை (ஆம் பொன்னினால் எல்லாவற்றையும் பெறமுடியாது, ஆனால் விசுவாசத்தால் எதையும் சாதிக்கலாம்) நம்மிடமிருந்து எடுத்துக் கொள்ள பல விதப் போராட்டங்கள் உண்டாகும். ஆசை வார்த்தை பேசி மோசம் போக்கும் மனிதர்கள் பலர் குறுக்கிடுவார்கள்.

கிறிஸ்து எனக்கு ஜீவன் சாவு எனக்கு ஆதாயம் [பிலி. 1:21] என்ற திருவசனமாகிய பட்டயத்தால் போராட வேண்டும். எங்கும் பாவம் காற்று போல் நிறைந்திருப்பதால், அதற்கு தப்பும்படி போராட வேண்டும். நான் கிறிஸ்தவன் நான் இரட்சிக்கப்பட்டவன், தேவன் என்னை கவனிக்கிறார், தேவனுக்குப் பயப்படுகிற நான் பாவம் செய்வது எப்படி என்று முழங்கிக் கொண்டே பாவத்தை எதிர்த்து

இரத்தம் சிந்தத்தக்க அளவு போராட வேண்டும் [எபி. 12:4].

இது பயம் நிறைந்த பாதை. நாம் தரிசித்து நடக்கிறவர்கள் அல்ல; விசுவாசித்து நடக்கிறவர்கள். இந்த விசுவாச வாழ்வுக்குள் வந்து விட்டோம். எதிர்காலம் என்ன ஆகுமோ? என்ற பயமுண்டாக முடியும். கர்த்தர் எனக்கு சகாயர்; நான் பயப்படேன், நான் உன்னை விட்டு விலகுவதுமில்லை, உன்னை கைவிடுவதுமில்லை என்று கர்த்தர் சொல்லியிருக்கிறாரே [எபி. 13:5,6].

திடன் கொள்ளுங்கள் நான் உலகத்தை ஜெயித்தேன் என்று கர்த்தர் சொன்னாரே (யோ. 16:33). நாம் கொஞ்ச ஜனமாக இருப்பதால், பக்தியற்ற திரள் கூட்டம் நம்மோடே மோதினால் நாம் என்ன ஆவோம் என்கிற பயம்கூட உண்டாகலாம் (2 கொரி. 7:5). என்ன தான் ஆகிறது பார்ப்போமே. மிஞ்சினால் சரீரத்தை மட்டும் தானே இவர்களால் கொல்ல முடியும். நம் ஜீவன் கிறிஸ்துவோடே வாழத்தானே செய்யும். போராடப்பயந்து, எதிரிக்கு பயந்து எதிரிக்கு இணங்கி விட்டால் ஆத்துமாவும், சரீரமும் சேர்ந்து நரகத்தில் தள்ளப்படுமல்லவா [லூக். 12:4] என்று செத்தாலும் பரவாயில்லை என்று துணிவுடன் தேவ ஜனம் பயமின்றி நிற்க வேண்டும்.

நீங்கள் துணிந்தால் எதிரி துவள்வான், நீங்கள் துவண்டால் எதிரி துணிவான். நாம் கொஞ்ச பலமுடையவர்களாக இருந்தாலும் நமக்குள் இருக்கிறவர் அவர்கள் எல்லாரைக் காட்டிலும் பெரியவர் என்கிற அறிவோடே போராடுவோமாக. அதாவது துணிந்து, செய்ய வேண்டிய நற்கிரியைகளைத் தொடர்ந்து செய்வோமாக.

நம்மை சோர்வடையச் செய்யும் சோதனைகள் பல இந்தப் பாதையில் உண்டு. ஒரு நற்காரியம் வர தேவனை நோக்கி காத்திருக்கையில், அது வர தாமதப்படும். இன்னும் காத்திருப்போம் வராது. பூவின் மேல் வெயிலின் உஷ்ணம் தொடர்ந்து ஏற ஏற அது வாடி, வதங்கி, காய்ந்து சரிந்து போகுமல்லவா? அதேப் போல் நம்முடைய விசுவாசத்தைக் காய்ந்து போகச் செய்யும்படி சோதிக்கப்பட நேரிடும். இந்த சோதனையை சகிக்கிற மனுஷன் பாக்கியவான் (யாக். 1:11,12).

இப்படிப்பட்ட சோதனையிலும் விசுவாசத்தில் ஆபிரகாமைப் போல் நிற்பவர்கள் பாக்கியவான்கள். அவர்கள் வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட ஜீவ கிரீடத்தைப் பெறுவார்கள். சகிக்காதவர்களின் ஆத்மீக வாழ்வு, பூ போல் காய்ந்து போகும். சில சமயம் நமக்கு மேன்மையான ஆசீர்வாதம் கொடுக்க தேவன் சோதிப்பார் (ஆதி. 22:1). சில வேளை நமது விசுவாசத்தை ஒழியப்பண்ண சாத்தான் சோதிப்பான் (மத். 4:1-10). நாமோ சோதனையை தாங்க தேவ பெலன் பெற்று, தப்பும் வழியைக் கற்று தேர்ச்சி அடைய வேண்டும்.

நாம் தொடர்ந்து முன்னேற முடியாதபடி உபத்திரவத்துக்குள்ளாக தள்ளப்படவும் நேரிடும். நாம் செய்ய வேண்டிய காரியத்தை சரியாய் செய்ய முடியாதபடி பல வித உபத்திரவம் வரும். We will be pushed into abnormal situation. கிறிஸ்தவனிமித்தம், பொய்யான வழக்கை நம் மீது போட்டு விடுவான் எதிராளி. வேலையை கவனிக்காமல் அதை கவனிக்க வேண்டியது இருக்கும்.

ஓ நீங்கள் வேறு தெய்வத்தை பின்பற்றியா போகிறீர்கள்? உங்களுக்கு எங்கள் ஊரில் பங்கில்லை, உங்களிடம் நாங்கள் பேச மாட்டோம், உங்களை விலக்கி வைப்போம் என்று சொந்த ஜனங்களால் உபத்திரவங்கள் வர முடியும் (1 தெச. 1:9; 2:14; 3:3). இப்படிப்பட்ட உபத்திரவங்களை கண்டு சோர்ந்து போகக் கூடாது.

ஒரு கம்பனி நிர்வாகியிடம், நிர்வாகம் எப்படி இருக்கிறதென்று கேட்டேன். அவர் சொன்னார்: இந்த ஆண்டில் நான் 33 முறை தொழிலாளர்களின் வேலை நிறுத்த போராட்டத்தை சந்தித்தேன் என்றார். எப்படி தாங்க முடிந்தது என்றேன். அவர் சிரித்துக் கொண்டே, ஓ இது தான் என்னுடைய வேலை, இதற்காகத்தான் எனக்கு சம்பளம் கொடுக்கப்படுகிறது என்றார்.

தேவனுடைய பிள்ளைகளே, இந்தப்படி "நாம் அநேக உபத்திரவங்களின் வழியாய் தேவனுடைய இராஜ்யத்தில் பிரவேசிக்க வேண்டும்" (அப். 14:22). என்பதை மறந்து உபத்திரவங்களைக் கண்டு பாதையை மாற்றி அகால பாதாளத்தில் இறங்கி விடக்கூடாது.

இப்படி பல துன்பங்கள் பட்டு, அவமானமடைந்து, போராடி ஜெயித்து, சோதனையை சகித்து, பயத்தினின்று விடுதலையாகி, உபத்திரவத்தை சமாளித்து செல்கையில் சரி கரை சேர்ந்தோம் என்று சொல்ல முடியாதபடி நெருக்கத்திலும் சிக்க நேரிடும். நெருக்கம் என்றால் எதுவுமே செய்ய இயலாத நிலை, அதாவது என்ன செய்வதென்று தெரியாமலிருக்கும்.

உதாரணமாக பஸ்சில் நெரிசல் அதிகமாகி விட்டால் முன்னாலேயும் போக முடியாது, பின்னாலேயும் நகர முடியாது, மூச்சு விடவும் கஷ்டமாக இருக்கும். அதற்காக ஜன்னல் வழியாக பஸ்சிலிருந்து குதிக்கவா முடியும்.

"என் கன்னிகைகளும் என் வாலிபரும் சிறைபட்டுப் போனார்கள், என்னை சிநேகித்தவர்களைக் கூப்பிட்டேன், அவர்களோ மோசம் போக்கினார்கள், என் ஆசாரியர்களும், என் மூப்பர்களும் தங்கள் உயிரைக் காப்பாற்ற அப்பந் தேடுகையில் நகரத்தில் மூச்சொடுங்கி மாண்டு போனார்கள். கர்த்தாவே பாரும் நான் நெருக்கப்படுகிறேன்" (புலம். 1:18,19) இப்படி எந்த கிரியையும் செய்ய முடியாது நெருக்கத்தினால் புலம்பவும் நேரிடும்.

இந்த ஜீவ பாதையில், எப்பக்கத்திலும் நெருக்கமுண்டாகையில், செத்துப் போவோமா என்று எண்ணுவது மடமை. விசுவாசத்தை விட்டு எதிராளி கையில் விழுவது அதிலும் மடமை. நாம் எவ்வளவு காணிக்கை கொடுத்திருக்கிறோம், எவ்வளவு ஜெபம் பண்ணியிருக்கிறோம், எத்தனை தரம் உபவாசித்து ஒடுக்கி இருக்கிறோம், எவ்வளவு தியாகம் பண்ணியிருக்கிறோம். எவ்வளவு பிரயாசப் பட்டிருக்கிறோம். இதன் பலனை அடையாமல் உண்டான நெருக்கத்தால் இடறி பாதை விட்டு விலகலாமா?

பிரியமானவர்களே! உங்களுடைய எல்லா நெருக்கத்திலும் அவரும் (கர்த்தரும்) உங்களோடே நெருக்கப்படுகிறார் என்பதை நினைக்க வேண்டும் (ஏசா. 63:9). யோனா மீன் வயிற்றுக்குள் மாட்டிக் கொண்டார், மூன்று நாள் இராப்பகல் மீன் வயிற்றில் வாசம். என்னத்தை சாப்பிட முடியும், என்னத்தைப் பார்க்க முடியும், யாரைக் கூப்பிட முடியும், எப்படி வெளியே வர முடியும். யோனா தன்னுடைய இந்த பயங்கர நெருக்கத்தில் தொய்ந்து போகையில் கர்த்தரை நினைத்தார் (யோனா. 2:7). கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டார் (யோனா 2:2). விண்ணப்பம் பண்ணினார் (யோனா 2:7). பொருத்தனைகளை செலுத்தினார் (யோனா 2:7). கர்த்தர் அவரை கைவிடவில்லை, நெருக்கத்தினின்று இரட்சித்தார் (யோனா. 2:9,10).

நெருக்கப்படுகிறவர்களே! நீங்களும் அப்படியே செய்யுங்கள். விடுவிக்கப்படுவீர்கள்.

நாம் தேவ இராஜ்யம் சேர்வோம், அங்கே துன்பமில்லை துதி உண்டு, அங்கே அவமானமில்லை ஆனந்தமுண்டு.

அங்கே போராட்டமில்லை பாராட்டுண்டு. அங்கே சோதனையில்லை சொகுசு உண்டு. அங்கே பயமில்லை பரவசமுண்டு. அங்கே உபத்திரவமில்லை உல்லாசமுண்டு. அங்கே நெருக்கமில்லை நிம்மதி உண்டு.

அல்லேலூயா! அல்லேலூயா!!

"நீதியினிமித்தம் துன்பப்படுகிறவர்கள் பாக்கியவான்கள்; பரலோக ராஜ்யம் அவர்களுடையது" மத். 5:10.

சுவிசேஷம்

# கண்களின் ஒளி இருதயத்தைப் பூரிப்பாக்கும்.

காணாதவர்கள் காணும்படியாக இயேசு கிறிஸ்து உலகத்தில் வந்தார் என்று வேதம் சொல்கிறது [யோ. 9:39]. இலவச கண் சிகிச்சை முகாம் இன்று நமதூரில் நடைபெறுமானால் கண் பார்வை இல்லாதவர்கள் கடந்து சென்று, தங்கள் குறைவுகள் நீக்கப்பட்டு, 'கண்களில் ஒளி' பெற்று மகிழ்ச்சியுடன் திரும்பி வருவார்கள்.

பரிசுத்த வேதமும், கண்களின் ஒளி இருதயத்தைப் பூரிப்பாக்கும் என்றே அறிவிக்கிறது. ஆனால், இங்கு வேதம் குறிப்பிடுவது புறக்கண்களைப்பற்றியல்ல; அகக் கண்களை அல்லது மனக் கண்களைப் பற்றியே. ஞானிகளின் கண்களைப் பார்க்கிறவர்களுக்கும் இருதயத்தில் பூரிப்பு உண்டாகும். ஆதலால் ஆத்மீக பார்வைகுறைந்தவர்கள் திருச்சபையில் வந்து அப்பார்வை பெற்றுச் செல்லும்படியாக அன்புடன் அழைக்கிறோம். உலகத்தில் அநேக பக்திமான்கள் கூட இறைவனைப் பார்க்கக் கூடாதவர்களாகக் காணப்படுகிறார்கள்.

ஏனென்றால், அவர்களுடைய மனக் கண்கள் பிசாசினால் குருடாக்கப்பட்டுவிட்டன (2 கொரி. 4:4). குருட்டாட்டத்தினால் தடவித்திரிகிறார்கள். தாங்கள் செல்லும் வழியை அறியார்கள். என்றாலும், தாங்கள் இறைவனை நோக்கிச் செல்லுவதாக கூறிக் கொள்கிறார்கள். அவர்களுக்கு வழிகாட்டியவர்களும் அவர்களைப் போன்ற குருடர்களே. குருடனுக்கு வழிகாட்டி மற்றொரு குருடனா? அவர்கள் எப்படி பாதையில் நடந்து நேர் சென்று அடைவார்கள்.

மேற்கே செல்ல வேண்டும் என்று நினைத்துக் கொண்டு கிழக்கே செல்வார்கள். மேலே செல்ல வேண்டும் என்று முயற்சித்து கீழே போவார்கள். இறுதியில் மேலுலகம் செல்வதற்குப் பதிலாக கீழுலகம் போய்ச் சேர்வார்கள். குருடனுக்கு குருடன் வழிகாட்டினால் இருவரும் குழியில் [பாதாளத்தில்] தான் விழுவார்கள் என்று பரிசுத்த வேதம் எச்சரிக்கிறது.

அவ்வாறு உங்களுக்கு நேரிடாதபடிக்கு நீங்கள் செய்ய வேண்டியது இதுதான். எல்லோரும் இறைவனாகிய இயேசு கிறிஸ்துவிடம் கடந்து வாருங்கள். அவர் உங்கள் [மனக்] கண்களைத் திறப்பார். இயேசு கிறிஸ்து தாமே ஜீவ ஒளியாக இருக்கிறபடியால் உங்கள் பாவ இருளை உங்களை விட்டு அகற்றிடுவார். கண்ணானது சரீரத்தின் விளக்காயிருக்கிறபடியால்

[லூக். 11:34]. ஒரு விளக்கு தன் பிரகாசத்தினால் உனக்கு வெளிச்சம் கொடுக்கிறது போல, உன் சரீரம் முழுவதும் வெளிச்சமாயிருக்கும். அப்பொழுது அக்கண்களின் ஒளி உங்கள் இருதயத்தைப் பூரிப்பாக்கும். பரிசுத்த வாழ்க்கையானது உங்களது உள்ளத்தை மகிழ்வடையச் செய்யும்.

அன்று, குருடர் இருவர் இயேசு நாதரை நோக்கி, ஆண்டவரே! எங்கள் கண்களைத் திறக்க வேண்டும் என்று வேண்டிக் கொண்டார்கள். இயேசு மனதுருகி, அவர்கள் கண்களைத் தொட்டார். உடனே அவர்கள் பார்வையடைந்தார்கள். அவர்களுடைய அகக்கண்களும் கூட திறக்கப்பட்டபடியால், அவர்கள் இயேசுவைப் பின்பற்றிச் சென்றார்கள் என்று வேதத்தில் நாம் வாசிக்கிறோம்.

ஆகவே, ஆத்மீக பார்வை குறைவுள்ளோர்கள் அனைவரும் இறைவன் இயேசுவண்டை வாருங்கள். வந்து உங்கள் கண்களில் ஒளிபெற்றுச் செல்லுங்கள். இது இலவசம்! இரட்சிப்பு இலவசம்!

"கண்களின் ஒளி இருதயத்தைப் பூரிப்பாக்கும்." நீதி. 15:30.

## சாட்சி.

கர்த்தருடைய பரிசுத்த நாமத்திற்கு மகிமை உண்டாவதாக. நான் ஒரு ரோமன் கத்தோலிக்க, பக்தியுள்ள குடும்பத்தில் கடைசி மகளாக பிறந்தேன். நான் எந்த சபைக்காரர்களை சந்தித்தாலும் எங்கள் சபைதான் மேலான சபை, நாங்கள் வழிபடுவதுதான் சரியான முறை என்று சொல்லுகிறார்கள். ஆனால் இப்பொழுது புதிய எருசலேம் சபைதான் மேலான சபை என்று என்னால் நிரூபித்துக் காட்ட முடியும் எப்படியெனில்:

எங்களுக்கு திருமணம் நடந்து 26 வருடங்கள் ஆகிறது. திருமணம் நடந்து ஒன்றிரண்டு வருடங்கள் கடந்ததும் ஒருவர் மாறி ஒருவருக்கு வியாதி வந்து மிகவும் கஷ்டப்பட்டோம். இப்படியே காலங்கள் உருண்டு ஓடின. நிம்மதி இல்லா வாழ்க்கை. முதலில் காலில் ஒரு கட்டி வந்தது அந்த கட்டி வருடந்தோறும் வந்து விடும். இதனால் இருக்க, படுக்க முடியாத மரண வேதனை அடைந்தேன்.

அப்புறம் தலைக்கு கோளாறு. சிந்திக்க யோசிக்க முடியாது. இது பைத்தியத்திற்கு ஆரம்பம் என்று அறிந்து பக்கத்து வீட்டு முஸ்லீம் அம்மா மூலமாக ஒரு தாயத்து வாங்கி கழுத்தில் கட்டிக்கொண்டேன். விடுதலை கிடைக்க வில்லை. அப்புறம் கறுப்புக் கோழி வாங்கி கடு காட்டில் கொண்டு விட்டு விட்டு திரும்பிப் பார்க்காமல் வந்து விட வேண்டும் என்றார்கள் செய்து பார்த்தோம். அதிலும் சுகம் கிடைக்க வில்லை.

அதன்பின் C. S. I. பாஸ்டர் ஒருவர் ஜெபம் செய்து இப்படிப்பட்ட நோய்களிலிருந்து சுகம் கிடைக்கிறது என்று அறிந்து போனோம். அங்கே மேளம் அடித்து பாடும் போது பேய் பிடித்தவர்கள் ஆடினார்கள். பேய்பிடிக்காதவர்களை

பாஸ்டர் வந்து தலையை பிடித்து ஆட்டுவார். பாஸ்டர் பக்கத்தில் வருகிறார் என்று பார்த்ததும் நானே ஆட்டம் வந்த மாதிரி தலையை ஆட்டிக் கொள்வேன். பக்கத்தில் வந்து உன் பெயர் என்ன என்பார். சுய நினைவில் இருப்பதால் என் பெயரைச் சொல்லுவேன். போய் விடுவார். ஆனால் நோய் தீர்ந்தபாடில்லை.

கத்தோலிக்க மதத்தில்தான் நோயை சுகப்படுத்தக் கூடியவர்கள் இருக்கிறார்கள் என்று கேள்விப்பட்டு பரிசுத்த ஆவியின் அபிஷேகம் பெற்றவர்கள் என்று சொல்லக்கூடிய கன்னியாகுமரி முதல் சென்னை வரை உள்ள பலரிடம் ஜெபம் செய்தோம் ஒரு பலனும் இல்லை. அப்புறமாக அணைக்கரை பக்கத்திலுள்ள ஆத்தங்கரை என்ற இடத்திலுள்ள அந்தோணியார் கோவிலுக்குப் போனோம். அங்கே 13 நாட்கள் தங்கியிருக்க வேண்டும் என்றார்கள். ஒரு பேய் பிடித்தவர்கள் 13 கூடை மண் கொடி மரம் கட்ட சுமக்க வேண்டும் என்றார்கள். எனக்குள் 3 பேய்கள் இருப்பதாக அறிவிக்கப்பட்டபடியால் 39 கூடை மண் சுமந்தேன். நோய் தீரவில்லை.

அதன் பிறகு போரூரில் உள்ள பெந்தெகொஸ்தே சபை ஒன்றிற்கு போனோம். அங்கே ஒன்றிரண்டு பாட்டுப் பாடுவார்கள். உடனே பாஸ்டர் ஒவ்வொரு ஆட்களிடமும் வந்து தாடையை இரண்டு விரலால் அமுக்கி போறியா என்று கேட்பார். என்னிடமும் அப்படி கேட்டார். நான் சுய நிலையில் இருந்தேன். ஆனால் வலி தாங்க முடியாமல் போகிறேன், போகிறேன் என்றேன். உடனே கீழே தள்ளிவிட்டு பேய் போய் விட்டது என்றார். ஆனால் நோய் குணமாகவில்லை.

புதிய நோய்கள் எனக்கு உண்டாகியது. ஒரு பிடி சாதம் சாப்பிட்டதும் படபடப்பாக இருக்கும் சாப்பிட முடியாது. வாய் பேச முடியாது. கண் திறக்க முடியாது. மூளை சிந்திக்காது. சைகை காட்ட கை அசைக்க கூட முடியாது. அப்போது என் கணவர் விசுவாசத்தோடு கடவுளை நோக்கி ஜெபம் செய்வார்கள். அந்த அந்த நேரம் சுகம் கிடைக்கும். ஆனால் நிரந்தர விடுதலை இல்லை.

இப்படி இருக்கும் போது திருவொற்றியூரில் உள்ள ஒரு பெந்தெகொஸ்தே ஊழியக்காரி அம்மாளை போய் சந்தித்தோம். எங்கள் வாழ்க்கையில் நடந்ததை எல்லாம் சொல்லி விட்டார்கள். எங்களுக்கு நம்பிக்கை பிறந்தது. தினமும் ஒரு வேளை மட்டும் சாப்பிட்டு 41 நாட்கள் உபவாசம் இருக்க வேண்டும் என்று சொன்னார்கள். 41 நாட்கள் முடிந்த பிறகு தரையில் போடக்கூடிய விரிப்பு ஒன்று 450 ரூபாய்க்கு வாங்கிக் கொடுக்க வேண்டும் என்றார்கள். வாங்கிக் கொடுத்தோம். ஆனாலும் நோய் தீர வில்லை.

பின்பு சென்னை ராயப்பேட்டையிலுள்ள பிரபலமான பெந்தெகொஸ்தே ஊழியர் ஒருவரை சந்தித்தோம். நோய்க்கான காரணத்தை சொன்னார். ஜெபித்து விட்டு தலையைப் பிடித்து தள்ளுவார். ஒரு தடவை கீழே விழுந்தால் ஒரு கட்டு உடைந்தது என்பார். 3 தடவை கீழே விழுந்தால் 3 கட்டு உடைந்தது என்பார். உனக்கு ஊழியத்துக்கு அழைப்பு இருக்கிறது. தினமும் வேதத்தில் 10 அதிகாரம் படி. சரியாகி விடும் என்று அனுப்பி விட்டார். சரியாக வில்லை.

அதன் பின் கொடுங்கையூரில் ஒரு ஊழியக்காரியிடம் ஜெபிக்க சென்றோம். அவர்கள் ஜெபித்து விட்டு, உங்களுக்கு சுகம் கிடைக்க வேண்டுமானால் காலையில் ஆவிக்குரிய சபைக்கு போங்கள், மாலையில் உங்கள் கோவிலுக்கு போங்கள் என்றார்கள். அதன்படி எருக்கமாநகரில் உள்ள பெந்தெகொஸ்தே திருச்சபைக்கு போனோம் அங்குள்ள போதனைக்கும், வேத புத்தகத்துக்கும் அநேக வேறுபாடு

இருந்தபடியால் தொடர்ந்து போகவில்லை. முழுக்கு ஞானஸ்நானம் எடுத்தால் சரியாகிவிடும் என்று அசம்பளி ஆப் காட் சபையில் முழுக்கு ஞானஸ்நானம் எடுத்தோம். அப்படியும் சரியாக வில்லை.

இனி ஒரு இடத்துக்கும் போகக் கூடாது என்று முடிவு செய்தோம். எது மேலான சபை என்று காட்டும்படி கடவுளிடமே ஜெபித்துக் கேட்போம்; அங்கு போனால்தான் விடுதலை கிடைக்கும் என்று அறிந்து உருக்கமாக ஜெபித்து வந்தோம். மேலும் நாங்கள் வீடுகட்ட அஸ்திபாரம் போட்டு 20 ஆண்டுகள் ஆகியும் கட்ட முடியாமல் இருந்தது. அதற்காகவும் ஜெபித்து வந்தோம்.

ஒரு நாள் இரவு சொப்பனத்தில் "புதிய எருசலேம் சபை" பாஸ்டர்கள் இரண்டு பேர் என்னிடம் வந்து வீடு கட்ட வேண்டும் என்று உதவி கேட்டிருந்தீர்கள்; கொடுத்து விட்டுப் போகலாம் என்று வந்தோம் என்றார்கள். அதில் 290 ரூபாய் இருந்தது. தந்து விட்டு நாங்கள் போகிறோம் என்று போய் விட்டார்கள். என்னுடைய சகோதரியின் மகன் சார்லஸ் இந்த சபையில் அங்கத்தினராக இருக்கிறபடியால் 4 வருடங்களுக்கு முன் ஒரு முறை இந்த புதிய எருசலேம் சபைக்கு போயிருக்கிறேன். அங்கே போனால் நகைப் போடக் கூடாது என்று அறிந்து தொடர்ந்து போகாமல் இருந்து விட்டேன். ஆனால் 4 வருடம் கழித்து அதே பாஸ்டர் வந்து சொப்பனத்தில் ரூபாய் கொடுத்தது சிந்திக்க வைத்தது. அன்று காலை 9 மணிக்கு தபால்காரன் "புதிய எருசலேம் சபை" பத்திரிகையை கொண்டு கொடுத்தான். மிக ஆச்சரியமாக இருந்தது.

கர்த்தர் சொப்பனத்தில் காண்பித்த "புதிய எருசலேம் சபைக்கு" அடுத்த வாரம் போக வேண்டுமென முடிவு செய்து நந்தனம் Y.M.C.A கல்லூரியிலுள்ள அந்த சபைக்குப் போனோம். அங்கே பாஸ்டரிடம் விபரங்களைச் சொன்னோம். அதற்கு அவர் நீங்கள் சரியான இடத்துக்குத்தான் வந்திருக்கிறீர்கள். ரூபாயாக நீங்கள் கண்டது கடவுளுடைய கிருபைகள் தொடர்ந்து வாருங்கள் எல்லாம் நன்மையாக முடியும் என்றார்.

மேலும், நோய் சுகம் ஆக வேண்டுமென்றால் வசனத்துக்கு கீழ்ப்படிங்கள் என்றார். மாற்கு 1:5-ன் படி பாவ அறிக்கை செய்தோம். பரிசுத்த ஆவியின் அபிஷேகமும் பெற்றோம். சென்னையில் நடந்த கன்வென்ஷன் முடிவில் என் கணவர் ஞானஸ்நானம் பெற்றார். நான் நகைகளை கழற்ற விரும்பாதபடியால் ஞானஸ்நானம் பெற காலதாமதம் செய்தேன்.

அதன்பின் கழுத்தை பிடித்து அழுத்துகிற மாதிரி மூச்சு விட முடியாதபடி ஒரு புது நோய் ஒரு நாளைக்கு மூன்று நான்கு முறை வந்து விடும். நகை கழற்றி ஞானஸ்நானம் எடுக்க மறுத்ததற்கு வந்த தண்டனை என்று புரிந்து கொண்டேன். மூன்று மாதத்துக்குள் தலைமை மேய்ப்பர் ஐயா அவர்கள் வந்து ஞானஸ்நானம் கொடுத்தார்கள். அன்றிலிருந்து சாத்தானால் உண்டான எல்லா நோய்களும் மாறி விட்டது. அதன் பின் 20 வருடமாக கட்ட முடியாமல் இருந்த வீட்டை கட்டி முடிக்க கடவுள் உதவி புரிந்தார்.

நாங்கள் இவ்வளவு கஷ்டம் அனுபவித்ததால்தான் புதிய எருசலேம் சபையில் வந்து சேர முடிந்தது. கடவுள் அவருக்கு விருப்பமான பிள்ளைகளை சிட்சித்து திருத்துவார் என்ற வேத வார்த்தையின்படி எங்களை சிட்சித்ததினால் மெய்யான திருச்சபைக்கு வந்து சேர முடிந்தது (எபி. 12:6).

இதை வாசிக்கிற நீங்களும் இறைவனுடைய அன்பை, அவரது திருச்சபையின் மூலம் கிடைக்கிறதான விடுதலையை,

# புதிய எருசலேம் செய்தி

## PUDHIYA YERUSALEM CHEIDHI

**எக்காளசத்தம் 118 - MAR. '94**



"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவாரோ என்று நீங்கள் அறியீர்கள்... விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்."

-மாற்கு 13 35-37

**EDITOR : CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY, INDIA

### பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கேற்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

### புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்:

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10:40-43).

CHIEF PASTOR N. LAZAR

### இதழின் உள்ளே...

# ஆசிரியர் உரை

தேசத்தில் இருள் பரவி வருகிறது. மக்கள் கற்காலத்துக்குத் திரும்பிக் கொண்டிருக்கிறார்கள்; அதாவது கற்களை எடுத்து எறிய பழகிக் கொண்டிருக்கிறார்கள். மத துவேசத்தைக் கிளப்பி விட்டு மக்களை மடமைக்குள்ளாக்கி ஒரு வர்க்கம் தன்னை உயர்த்திக் கொள்ள ஒரே தேசியம், ஒரே மொழி, ஒரே கலாச்சாரம் என்று கூப்பாடு போடுகிறார்கள். இது ஒரு போதும் ஆகப் போகிறதில்லை. இந்தியா ஒரே ஜாதியாய், ஒரே நாடாய், ஒரே மதமாய், ஒரே மொழியாய் ஒரு போதும் இருந்ததில்லை, இருக்கப் போகிறதுமில்லை. பல மொழிகள், பல ஜாதியாய் பல வித மதங்களாய் பல நாடாய் இருந்தது.

பாரதிய ஜனதா, R.S.S. -ன் பிராமண தலைவர்கள் (உயர்மட்ட தலைவர்கள்) தங்கள் ஜனத்தை உயர்த்த மதவெறி, மததுவேசத்தை தூண்டி கலகம் விளைத்து மத்தியிலும், மாநிலவாரியாகவும் ஆட்சியைப் பிடிக்கவும் உருவாக்கப்பட்ட ஜன சங்கம் தான் பெயரை மாற்றிக் கொண்டு பாரதிய ஜனதா, இந்து முன்னணி என்ற போர்வையில் உலாவருகின்றனர். இதன் துணை இயக்கங்கள் தான் R.S.S., பஜ்ரங் தளம், விஷ்வ இந்து பரிஷித் போன்ற பல அமைப்புகளாகும். இவர்கள் இந்துத்துவ கொள்கையை சரியாக விளக்கவோ சாதிக்கவோ முடியாது. இந்து என்ற வார்த்தையினைல் இவர்கள் எதை நிரூபிக்கப் போகிறார்கள்.

14 வருஷம் இராவணனால் சிறை பிடிக்கப்பட்டிருந்த சீதை தீக்குளித்து தனது பதிவிரதா தனத்தை நிரூபிக்க வேண்டியதானது போல் தங்கள் பெண்களை தீக்குளிக்க வைத்து நிரூபிக்கப்போகிறார்களோ! இவர்கள் இஸ்லாம் மசூதியை உடைத்தது இந்தியாவின் கருப்பு நாள். அயோத்தி என்று சொல்வது வால்மீகி சொல்லும் அயோத்தியல்ல. இப்பொழுது இருக்கும் அயோத்தி அப்பொழுது இல்லை. இப்பொழுது இருக்கிற அயோத்தி கி.பி. 7,8-ம் நூற்றாண்டில் மக்கள் குடியேறி புதிதாய்க் கட்டப்பட்ட நகரமாகும். ராமாயணத்தில் வரும் அயோத்தி கி.மு. 3100 ஆண்டில் உள்ளதாகும். இப்பொழுது இருக்கும் அயோத்தியில் இராமர் பிறந்ததாகவோ, அங்கே இந்து கோவில் இருந்ததாகவோ, அதை இடித்து விட்டு பாபர் மசூதி கட்டினதாகவோ எந்த ஆதாரமோ சரித்திர சான்றோ கிடையாது என்று சரித்திர வல்லுனர்கள் கூறுகின்றனர். அக்காலத்தில் வாழ்ந்த துளசி தாசரோ; பாபர் நாமா, அயினி அக்பரி போன்ற நூல்களிலோ கோயில் இடிக்கப்பட்டதாகவோ, பாபரால் அந்த மசூதி கட்டப்பட்டதாகவோ எங்கும் குறிப்பிடப்படவில்லை.

சரித்திர ஆதாரமில்லாத
மத துவேஷத்தை மக்கள் மத்தியில் தூண்டிவிட்டு ஆரம்பித்து
ராமர் கோயில் பிரச்சனையை மக்கள் நம்பிக்கை என்றப் பெயரில் பாரதிய
மக்களை மடையர்களாக்கி அதன் மூலம் அரசியல் ஆதாயம் காண்பதே ஆனபடி
ஜனதாவின் கொள்கை. இப்பொழுது பாண்டிச்சேரியில் ஆரம்பித்துள்ளனர். ஜெபிக்கவும்.
யால் கிறிஸ்தவர்கள் பொய் மதச்சார்புடையவர்களுக்கு விரோதமாய் விரோதமாய்
துன்மார்க்கர்களாகிய சில இந்துக்கள் திட்டமிட்டு கிறிஸ்தவர்களுக்கு காவல்
நடத்தும் மிரட்டல்களை, தாக்குதல்களை காவல் துறையில் பதிவு செய்யவும். சரி.
துறையினர் நியாயமாய் நடவடிக்கை எடுத்தாலும் சரி, எடுக்காவிட்டாலும் இறை
சமய சார்பற்ற இந்தியாவின் சுதந்தரத்தினை காப்பாற்ற கவனமாயிருக்கவும். கண்களைத்
வசனை இருள் நிறைந்த இடங்களிலும் பிரசித்தப்படுத்தவும், மக்களின்
திறக்கவும் தீவிரமாய் செயல் படுவீர்களாக.

கைபர், போலன் கணா
நாம் இந்திய மக்கள் வெளிநாட்டுக்காரர்களல்ல. இனவர்க்
வாய் வழியாய் இந்தியாவில் ஊடுருவிய ஒரு இனம் தன் மடை
கத்தை உயர்த்தியே வைக்கவும் ஆட்சியைப் பிடிக்க கீழ்ஜாதிக்காரர்களை அவசியமாகும்
யர்களாக்கி செய்யும் சதியோசனை முறியடிக்க ஜெபிக்கவும். அரசியல்
போது நாம் சில ஆதாரங்களைக் கொடுப்போம். என்ன, பாஸ்டர் அரசிய
எழுதவாரம்பித்து விட்டார்களே என்று சிலர் நினைக்கலாம். மதத்தை விழிப்படைய
லில் கலக்கிறார்கள். கிறிஸ்தவர்களும் அப்பாவி இந்துக்களும் நம்மோடி
இதை எழுதுகிறோம். தெய்வீகம் நம்மிடமே உள்ளது. கடவுள்
ருக்கிறார்.

கிறிஸ்துவுக்குள்,

(CHIEF PASTOR N. LAZAR)

# சத்திய வேதம் [தொடர்ச்சி]

சத்திய வேதாகமம் எவ்வளவோ அருமையான தெய்வீக வாக்கியங்களாய் இருக்கின்றன. ஆனால் அவைகளை மனனம் செய்ய போதுமான ஞாபக சக்தி இல்லையென்று சிலர் சொல்லுகிறார்கள். வேதாகமத்தில், "நீதியை அறிந்தவர்களே, வேதத்தை இருதயத்தில் பதித்திருக்கிற என் ஜனங்களே எனக்குச் செவிகொடுங்கள்" (ஏசா. 51:7) என்று இறைவன் சொல்லியிருக்கிறார்.

வேதாகமத்தை நாம் மனனம் செய்ய வேண்டும். வேதாகமத்தை மனனம் செய்ய எனக்கு ஞாபக சக்தி இல்லையென்று நீங்கள் சொல்லிக் கொண்டிருக்கும் வரை அதை உங்களால் மனனம் செய்ய முடியாது. உங்களுக்கு ஞாபக சக்தி குறைவாக இருக்கிறதாக நீங்கள் எண்ணுகிறீர்கள். அப்படியில்லை, நீங்கள் சம்பளம் வாங்கும் நாளையாவது நேரத்தையாவது நீங்கள் மறப்பதில்லை. உங்களுக்கு முக்கியமான காரியமென்றால் அதை ஞாபகத்தில் வைத்திருக்கிறீர்கள். ஆனபடியினால், எல்லோருக்கும் ஞாபக சக்தியுண்டு. நாம் அந்த தத்துவத்தை பின் வருமாறு அப்பியாசம் செய்வோமாகில் அது அதிசயவண்ணமாய் நம்மில் பலப்படும்.

1. சிரத்தை அவசியம்.

சத்திய வேதத்தை சிரத்தையோடு ஆராய்ச்சி செய்கிறோமா? அந்த ஆராய்ச்சி நமது முழுக் கவனத்தையும் கவர்ந்து கொள்கிறதா. நாம் கடவுளை நேசிக்கிறது போல் அவரது திருவார்த்தைகளிலும் பிரியப்படுகிறோமா? ஆம் என்றால் வேத மொழிகளை மனனம் செய்வது நமக்கு கஷ்டமாயிராது.

2. உற்றுக் கவனித்தல் அவசியம்.

மனப்பாடம் செய்வதில் ஒன்றையே உற்றுக் கவனிப்பதுதான் முக்கியமான அம்சம். நாம் வேறொரு அலுவலில் ஈடுபட்டு இதிலும் கவனம் செலுத்தினால் ஒரு வாக்கியத்தையும் மனதில் வைக்க முடியாது. மனனம் செய்ய வேண்டிய பாகத்தின் பேரில் முழுக் கவனத்தையும் செலுத்துவதற்கேதுவாக நாம் நமக்கு அதிக பிரியமான ஒரு பாகத்தைத் தெரிந்து கொண்டு அல்லது ஒரு வசனத்தைத் தெரிந்து கொண்டு திரும்பத் திரும்ப வாசித்து அதையே கவனித்துக் கொள்ள வேண்டும். அப்புறம் நமது கண்களை மூடி வாசித்த பாகத்தை ஆழ்ந்து சிந்தித்து நான் இதை ஞாபகத்தில் வைப்பேன் என்று உறுதியாய் தீர்மானிப்பது நலம்.

3. விளங்கிக் கொள்ளல் அவசியம்.

சிறு பிள்ளைகள் தங்களுக்கு விளங்காத செய்யுள், கவிகள் முதலியவைகளை மனப்பாடம் செய்யக் கூடும். பெரியவர்களோ வசனங்களை மனனம் செய்ய வேண்டுமாயின் அவைகளின் அர்த்தம் இன்னதென அறிவது பிரயோஜனமாயிருக்கும்.

4. பல வழிகளை கையாடுவது அவசியம்.

முதலாவது வசனத்தை கண்களால் படித்து, இரண்டாவது கையால் எழுதி, மூன்றாவது நாவால் அதை உச்சரித்து, நான்காவது செவியால் அதைக் கேட்க வேண்டும். இவ்வாறு ஒரு பாகத்தை நான்கு விதமாக மனதில் படச் செய்தால் அது ஞாபகத்தில் தங்குவது சுலபம்.

5. வசனத்திற்கிணையான ஒரு படத்தை மனதில் வைப்பது அவசியம்.

நாம் ஞாபகம் பண்ணிக் கொள்ள விரும்பும் ஒரு விஷயத்திற்கு சம்பந்தமான படக்காட்சியை மனதில் வைத்துக் கொள்வது நமக்கு உதவியாயிருக்கும்.

மனிதனுக்குத் தோன்றுகிற சிந்தனைகளெல்லாம் படரூபமாக அவனுடைய மனதிலே முதலாவது படக் காட்சி உண்டாகிறது. பின்புதான் அதை அவன் சொற்களால் அல்லது எழுத்துகளினால் விவரிக்கிறான். ஆனபடியினால் ஏதாவது ஒரு படக்காட்சியை மனதில் வைத்துக் கொள்வது அந்த வேத பாகத்தை ஞாபகப்படுத்திக் கொள்ள பிரயோஜனமாயிருக்கும்.

உதாரணமாக, நீதி. 6:6 வசனத்தை மனனம் செய்வதற்கு வசதியாக எறும்புக் கூட்டம் ஒன்று அதிசயமான சுறுசுறுப்போடு தங்களுக்குத் தேவையான ஆகாரத்தைத் தூக்கிக் கொண்டு வரிசையாகப் போகும் படத்தை மனதில் வைத்துக் கொள்ளுங்கள்.

6. நாம் படிக்கும் பாகத்தின் மொத்த பொருளை ஞாபகத்தில் கொண்டு வரும்படி ஒரு படத்தைக் கண்டு கொள்வது அதிக உதவியாயிருக்கும். எடுத்துக்காட்டாக, யோவான் சுவிசேஷத்தின் பொருளை மனதில் வைப்பதற்கு உதவியாக அவ்வாகமத்தின் ஒவ்வொரு அதிகாரத்திற்கும் ஏற்ற தலைப்புகளை கீழ்க் காணுமாறு வைத்துக் கொள்ளலாம்.

1-ம் அதி. தேவாட்டுக் குட்டி

2-ம் அதி. கானாவூர் கலியாணம்.

3-ம் அதி. நிக்கொதேமுவும் இயேசுவும்

4-ம் அதி. சமாரிய ஸ்திரீ

5-ம் அதி. பெதஸ்தா குளம்

6-ம் அதி. ஐந்து அப்பங்களும், இரண்டு மீன்களும்; இயேசுவின் இரத்தத்தையும் மாம்சத்தையும் பானம் பண்ணுதல்.

7-ம் அதி. என்னை விசுவாசிக்கிறவனுடைய உள்ளத்திலிருந்து ஜீவத் தண்ணீருள்ள நதிகள் ஓடும்.

8-ம் அதி. நீ போ, இனிமேல் பாவஞ் செய்யாதே; உலகத்திற்கு நான் ஒளியாயிருக்கிறேன்.

9-ம் அதி. பிறவிக் குருடன் சுகமானது.

10-ம் அதி. நானே நல்ல மேய்ப்பன்.

இவ்விதமாக, ஒவ்வொரு அதிகாரத்திற்கும் ஒரு முக்கிய படத்தை மனதில் வைத்துக் கொள்வோமென்றால் அந்த புஸ்தகம் முழுவதும் நமக்கு விளங்க வரும்.

7. அடிக்கடி திரும்ப சொல்வது அவசியம்.

இதற்கு அநுசரணையாக பல ஏதுக்களை பிரயோகிக்கலாம். திருஷ்டாந்தமாக, தினமும் காலையில் ஒரு வசனத்தைத் தெரிந்து கொண்டு அவ்வாக்கியத்தை ஒரு சிறு தாளில் எழுதி வைத்து அந்த தாளின் பின் புறத்தில் அதில் காணப்படும் ஆகமம், அதிகாரம், வசனம் குறிப்பிடலாம். அதைப் பாராமல் சொல்ல பிரயாசப்பட வேண்டும். முடியாமற் போனால் தாளைப் பார்த்து ஞாபகம் பண்ணிக் கொள்ளலாம். அது ஞாபகத்தில் பதிந்த பின், அந்தத் தாளைக் கிழிக்காமல் வழியில் போட்டு விடலாம். அதை எடுத்துப் பார்த்து யாராவது இயேசுவை அறிந்து கொள்ள வாய்ப்புண்டு.

கடைசியாக இன்னும் இரண்டு முறைகளைக் கூறுவோம்.

1. உமக்கு விசேஷித்த ஆசீர்வாதமாயிருந்த ஒரு வாக்கியத்தை ஒரு தாளில் எழுதி வைத்து நீர் அதைக் கேட்ட சமயத்தையும், பிரசங்கித்த போதகரின் பெயரையும், அவ்வசனம் உமக்கு எப்படி பிரயோஜனமாயிற்று என்பதையும் நினைத்துக் கொள்ள முயல்வீரானால் அது உம்முடைய ஞாபகத்தில் நெடுநாள் தங்கும்.

இரண்டாவது நல்ல முறை யாதெனில், நீர் மனனம் செய்யும் வசனத்தை மற்றவரோடு சொல்லுதலாகும். "இறைத்த கிணறு ஊறும்" என்பது போல நாம் மற்றவர்களிடத்தில் சத்தியத்தைச் சொல்ல ஆவ

நமது மனதில் உறுதியாய்த் தங்கும். சுவிசேஷ ஊழியம் செய்கிறவர்களுக்கு இந்த அப்பியாசம் மிகவும் இலகுவாகவரும். ஏனென்றால், அவர்கள் அநேகரிடம் கர்த்தருடைய வசனத்தைச் சொல்கிறபடியினால் அவர்களுக்கு மனனமாக மனதில் பதிந்து விடும். ஆனபடியினால் தேவ ஜனங்கள் எல்லாரும் வேதாகமத்தை மனனம் செய்து உங்கள் இருதயத்தில் பதிப்பீர்களாக.

(தொடரும்)

"கிறிஸ்து இயேசுவைப்பற்றும் விசுவாசத்தினாலே உன்னை இரட்சிப்புக்கேற்ற ஞானமுள்ளவனாக்கத்தக்க பரிசுத்த வேத எழுத்துக்களை, நீ சிறு வயது முதல் அறிந்தவனென்றும் உனக்குத் தெரியும்"
2 தீமோ. 3:15

# இயேசுவின் மரணத்தால் ...

அவர் சிலுவையில் சிந்தின இரத்தத்தால் சமாதானத்தை உண்டு பண்ணி இப்படி சமாதானம் பண்ணி இருதிறத்தாரையும் ஒரே புதிய மனிதனாக சிருஷ்டித்து ஒரு சபையாய் பிதாவினிடத்தில் சேரும் சிலாக்கியத்தை உண்டு பண்ணினார் (எபே. 2:14-18).

பாவத்தினால் உலகத்தில் மனிதர்களுக்குள் பகை உண்டாயிருக்கிறது. ஜாதிப்பிரிவினையினாலும், பாஷை பிரிவினையினாலும் மனுமக்களில் பிரிவினையும், பகையும் உள்ளத்தில் இருக்கிறது. ஒரு இந்து கோவில் இருக்கிறதென்றால் அதை சுற்றியிருக்கிறவர்களுக்குவேதனைதான். ஒவ்வொரு மனிதனும் எப்போதும் யாராவது வந்து மணி அடித்துக்கொண்டிருப்பான். கிறிஸ்தவர்கள் கூடி வந்து சமயத்தில் ஜெபிப்பார்கள். இந்துதிருவிழா என்றாலும் ஜாதி வாரியாய்ப் பிரிந்து நிற்பார்கள். அடிதடி சண்டைக்கும் குறைச்சலிருக்காது. ஒரு ராமன் கோவிலைக் கட்ட ஆயிரக்கணக்கானவர்களை பலியிடுவான். தேசமெல்லாம் கலவரம், பகை; இருக்கிற ராமன் கோவிலில் கும்பிட்டால் போதாதோ? புதிதாய் ராமன் கோவிலைக் கட்டி ஆகப்போவதென்ன?

பழைய நரகத்துக்கே மக்கள் போகப் போகிறார்கள். அவர்கள் கலகம் செய்வார்களாம்; தேச சட்டத்திற்கு அதாவது கோர்ட் தீர்ப்புக்கு கட்டுப்படமாட்டார்களாம் (திருப்பதியில் இந்து மத தலைவர்கள் கூடி எடுத்த முடிவு). ஆம் பகை, மதத் துவேசம், ஜாதி துவேசம் இது தான் 20-ம் நூற்றாண்டிலும் இந்தியாவின் நிலை.

சமாதான கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை இந்தியா ஏற்றுக் கொள்ளாத வரை பகையும், பிரிவினையும், கலகமும் தொடர்ந்து தீவிரப்படும். மக்கள் இறைவனண்டை சேரப் போவதில்லை. பாவங்களால் பிசாசண்டையே சேர்வர். துன்மார்க்கருக்கு சமாதானமில்லை என்று வேதமும் சொல்லுகிறது (ஏசா. 57:21).

கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் கல்வாரி மரணம், மனிதனின் பாவத்தை நீக்கி, மனிதனின் பிரிவினையை நீக்கி மனிதனில் காணப்படும் பகைமையை சிலுவையில் கொன்று, அவருடைய இரத்தமானது மனிதரில் சமாதானத்தை உண்டாக்கி, மனிதனை தேவனோடும், பிற மனிதரோடுங்கூட ஒப்பு

நோக்கி ஒரே தெய்வீக சபையாய் [சரீரமாய்] தேவனிடம் ஒரு புதிய மனிதனாய் [ஒரே சபையாய்] இறைவனண்டைச் சேர்க்கிறது. ஆதலால் மெய்யான கிறிஸ்தவத்தில் சமத்துவமும், சமாதானமும், அன்பும், ஐக்கியமும் காணப்படுகிறது. ஆனபடியால் மனிதர்கள் கிறிஸ்தவத்தில் சேர்கிறார்கள்.

உடனே துன்மார்க்கர்கள் ஆ! மத மாற்றம், இந்தியா கொள்ளை போகிறது என்று கூக்குரலிடுகிறார்கள். காரணமென்னவென்றால், ஆ! ஜாதியை அல்லவா ஒழிக்கிறார்கள், ஒற்றுமை, சமாதானத்தை, சமத்துவத்தையல்லவா கொண்டு வருகிறார்கள்; நம் பிழைப்புக்கல்லவா ஆபத்து என்று மத துவேஷத்தை தூண்டி விடுகின்றனர்.

1992-ம் ஆண்டு ஜனவரி 26-ம் தேதி இந்து எழுச்சி மாநாடு என்று பம்பாயில் மிகப் பிரமாதப்படுத்தி, பம்பாய் திலக் நகர் மைதானத்தில் (செம்பூர்) பொதுக் கூட்டம் போட்டார்கள். விஷ்வ இந்து பரிஷத் செயலாளர் திருவாளர் அசோக் சிங்கால், சேலம் பிரசித்திப் பெற்ற சாமிகள் இன்னும் யார் யாரோ பேசினார்கள். நம் மதத்தில் ஜாதி இருக்கத்தான் செய்யும்; நாம் எல்லாம் இந்துக்கள் என்ற நிலையில் ஒற்றுமையாயிருப்போம் என்று பேசினதை மூன்று கிறிஸ்தவ சகோதரர்கள் மைதானத்தின் ஓரத்தில் பெஞ்சிலிருந்து கேட்டார்கள். நம்ம குட்டு வெளிப்பட்டு விடுமே என்று பயந்த இந்துக்கள் மூன்று பேரையும் மிருகங்கள் போல் பாய்ந்து தாக்கி விரட்டி போலீஸிடம் புகார் செய்தார்கள். என்னவென்றால்: இவர்கள் கிறிஸ்தவர்கள் குறிப்பெடுக்கிறார்கள் என்று சொல்ல, நீ எங்கள் கூட்டத்திற்கு வந்து குறிப்பு எடு நாங்கள் உன்னை கண்டிக்க மாட்டோம் என்றார்கள். மராட்டிய போலீஸார் பொதுக் கூட்டம் என்றால் யாரும் வரலாமே. எதற்கு மாடுகள் போல் அடிக்கிறீர்கள் என்று சொல்லி, நம் கிறிஸ்தவ சகோதரர்களுக்கு ஆறுதல் சொல்லி, பாதுகாப்பாக கடைசி மட்டும் போலீஸ் வண்டியில் வைத்து, அவர்கள் பிரசங்கத்தை கேட்க வைத்து, சகோதரர்கள் போய் சேர வேண்டிய இடத்தில் விட்டு சென்றனர். போலீஸில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

கிறிஸ்தவ சகோதரர்களை விரட்டி விட்டு இந்து மதத்தை குறை சொல்ல யாராவது ஆள் உண்டா வரலாம் என்று திரு. அசோக் சிங்கால் சவால் விடுகிறார். என்னே கோழைத்தனம். 3 கிறிஸ்தவர்களை அடிக்க 300 இந்துக்கள்.

1990-ம் ஆண்டு ஜனவரியில் தமிழ்நாடு இந்து முன்னணி தலைவர் ராமகோபாலன் பம்பாய் தாராவி R.S.S. கூட்டத்தில் நமது தமிழ் இந்து தொண்டர் ஒருவர் கேட்கிறார்: ஐயா, நம் கோயில்களுக்கு சொத்து நிறைய இருக்கிறதே பள்ளிகள், காலேஜுகள் திறந்து மக்களுக்கு படிப்பறிவைப் போதிக்கலாமே என்றார். அதற்கு திரு. ராமகோபாலன்: அது அரசாங்கம் செய்யும், நாம் நம் மதத்தை வளர்ப்போம். எப்படி இருக்கிறது இந்துமதம். உலகில் நன்மை செய்ய ஆரம்பித்ததே கிறிஸ்தவம்தான். தரமான கல்வியும் அங்கேயே உண்டு.

R.S.S., இந்து முன்னணி, பாரதிய ஜனதா, விஷ்வ இந்து பரிஷத், விவேகானந்தர் இயக்கம் எல்லாம் ஒரே குட்டையில் ஊறிய மட்டைகள் தான். இவர்களின் உண்மையான நோக்கத்தை கீழ் ஜாதி மக்கள் (பிராமணரல்லாதோர்) அறியார். ஆரியர்களின் ஆளுகையை ஸ்தாபிக்க ஒரு இனவர்க்கத்தை உயர்த்த இந்து மதம், இந்து மதம் என்ற கோஷத்தை எழுப்பி கீழ்ஜாதிகாரர்களை வேலைக்காரனாய் அடிபிடி சண்டை போட தூண்டி தங்கள் ஜாதியைக் காப்பாற்ற பிராமணர்கள் செய்யும் சதியே இன்றைய இந்து எழுச்சி என்பது. இன்னும் நிறைய உண்டு. வரும் உண்மையைச் சொல்ல அஞ்சிடோம்.

கிறிஸ்தவம்: கல்வாரி பலியினால் மனிதனுடைய பாவம் போய், நோய் போய், சமாதானமும் சமத்துவமும் உண்டாகி மக்கள் தேவ மக்களாய் மாற அறிவுள்ளவர்களாய் மாற, இறை இயேசு சிலுவையில் இரத்தம் சிந்தி மரித்தார்; அடக்கம் பண்ணப்பட்டார்; மூன்றாம் நாள் உயிர்த்தெழுந்தார். அவருடைய பலி அங்கீகரிக்கப்பட்டது. பலியினாலன்றி மனிதன் தேவனண்டை சேர முடியாது. இயேசுவின் மரணம் நித்திய பலியாகும். இனி பலி வேண்டாம். இவராலே உங்களுக்கு சமாதானம் உண்டாகும்.

இயேசு கிறிஸ்து உனக்காக மரித்தார். விசுவாசித்தால் பிழைப்பாய். இயேசுவை விசுவாசி.

"அவர் சிலுவையில் சிந்தின இரத்தத்தினாலே சமாதானத்தை உண்டாக்கி, -- அவருடைய மாம்ச சரீரத்திலே அடைந்த மரணத்தினாலே இப்பொழுது ஒப்புரவாக்கினார்" கொலோ. 1:20,21.

## கிறிஸ்தவ மார்க்கம் (தொடர்ச்சி)

### 4. ஞானஸ்நானம்.

கிறிஸ்தவ உபதேசங்களில் சர்ச்சைக்குரிய உபதேசங்களில் ஞானஸ்நானமும் ஒன்று. ஆனால் எல்லாக் கிறிஸ்தவர்களும், ஒருவன் திருச்சபையில் சேர அல்லது திருச்சபையின் அங்கமாவது ஞானஸ்நானத்தின் மூலமே என்பதை ஒத்துக் கொள்வர். யூதர்கள் விருத்தசேதன சடங்காச்சாரத்தினால் ஒருவனைத் தங்கள் மதத்தில் சேர்த்துக் கொள்வது போல், கிறிஸ்தவ மார்க்கத்தில் ஒருவனை சேர்க்க ஞானஸ்நானமின்றி வேறொரு வெளிப்படையான சடங்கு இல்லை.

ஞானஸ்நானம்: 'பாப்டிஸ்மா' என்ற கிரேக்க சொல்லுக்கு முழுகுதல் என்று அர்த்தமாகும். ஞானஸ்நானத்தில் ஏழு வகைகள் உண்டு:

1. யூதர்கள் மரித்தோரின் உயிர்த்தெழுதலின் மேலுள்ள நம்பிக்கையினால் மரித்த ஒருவருக்காக வேறொருவரை முழுக்கி ஞானஸ்நானம் கொடுத்து வந்தனர் (1 கொரி. 15:29). இந்த வசனத்தைக் குறித்து சில தர்க்கங்கள் உண்டு.

2. இஸ்ரவேலர்கள் எகிப்திலிருந்து வரும்பொழுது செங்கடலைத் தாண்டி வந்த சம்பவத்தை மோசேக்குள்ளாக ஜலத்தினாலும் மேகத்தினாலும் ஞானஸ்நானம் பண்ணப்பட்டார்கள் என்று எழுதியிருக்கிறது. இருபுறமும் குவித்த தண்ணீர், மேலே தண்ணீரினால் நிறைந்த மேகம் (1 கொரி. 10:2).

3. யோவான் ஸ்நானன் கொடுத்த ஞானஸ்நானம்: அது மனந்திரும்புதலுக்கென்று மனந்திரும்புதலுக்கேற்ற ஞானஸ்நானம். மனந்திரும்பி பாவங்களை அறிக்கை செய்பவர்களுக்கு பாவமன்னிப்புக்கென்று கொடுக்கப்பட்ட ஞானஸ்நானம் (மாற். 1:4,5; மத். 3:5,6).

4. இயேசுவானவரும் அவருடைய சீஷர்களும் கொடுத்து வந்த ஞானஸ்நானம். இவைகளில் எந்தப் பெயரும் உப

யோகிக்கப்படவில்லை. யோவானின் இந்த ஞானஸ்நானத்தை இயேசு கிறிஸ்துவும், அப்போஸ்தலரும் பெற்றிருந்தனர். இயேசுவானவர் தாமே ஞானஸ்நானத்தைக் கொடுக்க வில்லை. தம்முடைய சீஷர்களை கொண்டு கொடுத்து வந்தார் (யோ. 3:22; 4:1-3).

5. இயேசுவானவர் தாம் அடையப் போகிற பாடுகள், கஸ்திகளை நான் முழுக வேண்டிய ஸ்நானம் ஒன்று உண்டு என்று சொல்கிறார் (மத். 20:22,23).

6. கிறிஸ்தவ சபையின் ஞானஸ்நானம். இதில் இரண்டு பகுதிகள் உண்டு. 1. தண்ணீர் ஸ்நானம் ஆகும்.

7. பரிசுத்த ஆவியின் அபிஷேகம் அல்லது பரிசுத்த ஆவியினால் உண்டாகும் ஞானஸ்நானம்.

ஞானஸ்நானம் என்றாலே முழுக்குதல் என்றர்த்தமாம். தண்ணீர் ஸ்நானம்: இதற்கு கருவியாக உபயோகிக்கப்படுகிறது தண்ணீர். மிகுதியான தண்ணீர் அயினோன் என்னுமிடத்தில் இருந்தபடியினால் யோவான் ஸ்நானனும் அங்கே ஞானஸ்நானம் கொடுத்து வந்தார்.

மனிதன் பாவமன்னிப்பைப் பெறவும் இரட்சிக்கப்படவும் தேவன் தம்மண்டை மனுமக்களைத் திருப்பவும், வரப்போகிற இரட்சகருக்கு ஆயத்தப்பட்ட ஒரு பரிசுத்த ஜனத்தை உருவாக்கவும் தேவன் யோவான் ஸ்நானனை அனுப்பினார். யோவான் ஸ்நானனுக்கு ஞானஸ்நானம் கொடுத்து ஜனங்களை சுத்திகரிக்கும்படியாகக் கட்டளையிட்டார்.

ஞானஸ்நானம் யோவானே புகுத்தியது அல்ல, தேவனால் ஏற்படுத்தப்பட்டது (மத். 21:25). அதைத் தள்ளிப் போடுகிறவன், அதனால் வரும் ஆன்மீக தன்மையைத் தள்ளிப்போட்டு தங்களுக்கு தாங்களே ஆக்கினையை அடைவார்கள் அவர்களது ஆத்துமாக்களுக்கு கேடு வரும் (லூக். 7:29-31; மத். 21:28-32). அப்போஸ்தலனாயிருக்கத் தகுதி ஒருவனுக்கு வேண்டுமானால் அவர் யோவானின் ஸ்நானத்தை நன்றாய் அறிந்தவராய் இருக்க வேண்டும் (அப். 1:21,22) என்பதினால் ஞானஸ்நானத்தின் மேன்மையையும் அவசியத்தையும் நாம் அதிகமாய் அறிந்து கொள்கிறோம்.

ஞானஸ்நானம்: இது இரட்சகராகிய இயேசு கிறிஸ்துவின் கட்டளையாகும் (மத். 28:18,19). கிறிஸ்தவ உபதேசங்களில் இது நாலாவது இடத்தை வகிக்கிறது. நம்முடைய இரட்சகரும் கர்த்தருமாகிய இயேசு கிறிஸ்து. கிறிஸ்துவின் சுவிசேஷத்தை விசுவாசித்து சீஷர்களாகிறவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுக்கும்படி கட்டளையிட்டுள்ளார் (மத். 28:18,19).

ஆனபடியால் ஞானஸ்நானத்தைப் பிரசங்கிக்க வேண்டும். கிறிஸ்துவை விசுவாசிப்பது, ஞானஸ்நானத்தை விசுவாசித்து ஞானஸ்நானம் எடுப்பதில் அடங்கும். யோவான் வனாந்தரத்தில் ஞானஸ்நானம் கொடுத்து, பாவமன்னிப்புக்கென்று மனந்திரும்புதலுக்கேற்ற ஞானஸ்நானத்தைக் குறித்துப் பிரசங்கம் பண்ணிக் கொண்டிருந்தான் (மாற். 1:4).

பிலிப்பு கிறிஸ்துவைக் குறித்துச் சொல்லியபோது ஞானஸ்நானத்தைக் குறித்துப் போதித்தபடியால் தண்ணீருள்ள ஒரு இடம் வந்ததும் கந்தாகே என்பவருடைய மந்திரி இதோ தண்ணீர் இருக்கிறதே நான் ஞானஸ்நானம் பெற தடை என்ன என்று கேட்டான். இரதத்தில் குடிக்க செம்பில் தண்ணீர் நிச்சயமாக இருக்கும். அவர்களுடனே கூட இருந்த படைபட்டாளங்களும் தங்களுடனே தண்ணீர் வைத்திருப்பார்கள். இந்தத் தண்ணீரினால் தெளித்து ஞானஸ்நானம் கொடுங்கள் என்று மந்திரி கேட்க வில்லை. பிலிப்பும் அப்படிக் கொடுக்கவில்லை. தண்ணீர் மிகுதியான

ஒரு இடத்தை அடைந்த போது மந்திரி கேட்டார்: இதோ, தண்ணீர் இருக்கிறதே நான் ஞானஸ்நானம் பெற தடை என்ன என்று. அப்பொழுது பிலிப்பு நீர் முழு இருதயத்துடனே விசுவாசித்தால் தடையில்லை என்று அறிக்கை செய்ய வைத்து இயேசுவை அவர் அறிக்கை செய்த பொழுது முறையாக தண்ணீரில் இறங்கி முழுக்கு ஞானஸ்நானம் கொடுத்தார் பின்பு தண்ணீரிலிருந்து இருவரும் கரையேறினார்கள் (அப். 8:38,39).

ஞானஸ்நானத்தைக் குறித்து பிலிப்பு பிரசங்கித்தார் (அப். 8:35); பேதுரு பிரசங்கித்தார் (அப். 2:38;10:47,48); அனனியா பிரசங்கித்தார் (அப். 9:17,18;22:16); அப். பவுல் பிரசங்கித்தார் (அப். 16:13-15; 31-33). அவர்கள் சுவிசேஷத்தை சொன்ன போது அதை ஏற்றுக்கொண்ட மக்கள் ஞானஸ்நானம் பெற்றார்கள்.

ஆனால், இந்நாட்களில் சிலர் மேடையில் வாய்கிழிய பிரசங்கிப்பார்கள். பூரண சுவிசேஷத்தை பிரசங்கிக்கிறோம் என்பார்கள். ஞானஸ்நானத்தைப் பற்றி வாய் திறக்கமாட்டார்கள். வாருங்கள், எங்கள் சபையில் ஞானஸ்நானம் பெறுங்கள், இரட்சிக்கப்படுங்கள் என்று சொல்ல பயப்படுகிறார்கள். நீர் எங்கேயிருந்தாலும் சரி, இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து உங்கள் வீட்டில் இருந்தாலும் சரி. மனந்திரும்பி அவரை நோக்கி பாவ அறிக்கை செய்து ஜெபம் பண்ணுங்கள், இரட்சிக்கப்படுவீர் என்று வேதத்தில் இல்லாத இரட்சிப்பைப் பிரசங்கிக்கிறார்கள்.

நீங்களும் உங்கள் இரட்சிப்பின் சுவிசேஷமாகிய சத்திய வசனத்தைக் கேட்டு விசுவாசிகளானபோது (ஞானஸ்நானம் பெற்றபோது) வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட பரிசுத்த ஆவியால் அவருக்குள் முத்திரை போடப்பட்டீர்கள் (எபே. 1:13). விசுவாசிகளான போது (அப். 19:1-6) அப்படியானால் எந்த ஞானஸ்நானத்தைப் பெற்றீர்கள் என்றே பவுல் கேள்வி கேட்டார்.

ஆகையால் ஒருவன் விசுவாசியாவதே ஞானஸ்நானத்தின் மூலமே. ஞானஸ்நானத்தை மாத்திரம் பிரசங்கித்துக் கொண்டிருக்க வேண்டும் என்று நாம் சொல்லவில்லை. இரட்சிப்பின் சுவிசேஷத்தில் ஞானஸ்நானத்தையும் பிரசங்கிக்க வேண்டும். இரட்சிப்பின் சுவிசேஷத்தில் ஞானஸ்நானமும் அடங்கும். பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தையும் பிரசங்கிக்க வேண்டும். இதுவே பூரணமான சுவிசேஷம்.

புதிய எருசலேம் சபையில் பூரண சுவிசேஷம் பிரசங்கிக்கப்படுகிறது.

(தொடரும்)

"விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான் விசுவாசியாதவனோ ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படுவான்" மாற். 16:16.

## பரிசுத்தவிவாகம்

| மணமகன் | மணமகள் | இடம் | காலம் |
|---|---|---|---|
| Bro. கிதியோன் | Sis. பிரிஸ்கில்லாள் | கொமாரபாளையம் | 19-1-94 |
| Bro. ஆபிரகாம் | Sis. கெத்ஸி | இராஜபாளையம் | 3-3-94 |

# வேத பாடம் (தொடர்ச்சி)

## எண்ணாகமம்

### எண். 16:12-14.

எலியாபின் குமாரராகிய தாத்தான், அபிராம் என்பவர்களை மோசே அழைத்தனுப்பினார். ஆனால் அவர்கள் கீழ்ப்படியாமை காட்டி நாங்கள் வருவதில்லை, எங்களை பாலும் தேனும் ஓடுகிற தேசத்திலிருந்து கொண்டு வந்தது அற்பகாரியமோ? எங்கள் மேல் துரைத்தனம் பண்ணப் பார்க்கிறுயோ? மேலும் நீ எங்களை பாலும் தேனும் ஓடுகிற தேசத்திற்கு கொண்டு வந்ததுமில்லை; எங்களுக்கு வயல்களையும், திராட்சத் தோட்டங்களையும் சுதந்தரமாகக் கொடுத்ததுமில்லை. இந்த மனிதருடைய கண்களை பிடுங்கப் பார்க்கிறுயோ நாங்கள் வருவதில்லை என்றார்கள். இது மிகவும் அயோக்கியத்தனமான எதிர்நிலையாகும். சபையின் தலைவர்கள் அழைத்தனுப்பினுல் உடனே வரவேண்டியது ஒருவனுடைய கடமை. அப்படி வராதபடி தங்களை அகம்பாவத்துக்குள்ளாக நிரப்பி எதிர் நின்றாலும் அல்லது பயத்தினுல் நாங்கள் வரவில்லை என்று சொன்னாலும் அது குற்றமே. எந்த ஒரு காரியமும் கூடி பேசி அந்தக் காரியத்திற்கு முடிவு எடுப்பது தேவனுடைய சித்தம். அதற்கு மாருக இவ்விதமான சம்பவங்கள் எவ்விதமான முடிவடையுமோ என்பதை நாம் தொடர்ந்து பார்க்கப் போகிறோம்.

### எண். 16:15.

இதினிமித்தம் மோசே மிகவும் கடும் கோபம் கொண்டதாகப் பார்க்கிறோம். ஆனால் அவர் இறைவனை நோக்கி ஜெபிக்கிறர். "ஆண்டவரே, அவர்கள் செலுத்தும் காணிக்கையை அங்கீகரியாதிருப்பீராக என்று சொல்லுகிறர். அவருடைய வாழ்க்கை மிகவும் சரியாகயிருந்தது.

1. நான் ஒருவனிடத்திலும் ஒரு கழுதை முதலாகிலும் எடுத்ததில்லை. அதாவது ஒருவனிடத்திலும் நான் அநியாயமாய் ஒன்றும் வஞ்சித்து வாங்கினதில்லை.

2. அவர்களில் ஒருவனுக்கும் நான் யாதொரு பொல்லாப்பும் செய்யவில்லை என்று சொன்னதாக நாம் பார்க்கிறோம். மோசேயினுடைய கோபம், அது இறைவனுல் உண்டான கோபமாயிருக்கிறது.

### எண். 16:16-19.

அப்பொழுது மோசே கோராகை நோக்கி நீயும் உன் கூட்டத்தாரும் நாளைக்கு கர்த்தருடைய சந்நிதியில் வாருங்கள். நீயும், உன் கூட்டத்தாரும், ஆரோனும் வந்து நின்று உங்களில் ஒவ்வொருவனும் தங்கள் தங்கள் தூப கலசங்களை எடுத்து அவைகளில் தூபங்களைப் போட்டு, தங்கள் தூபகலசங்களாகிய 250 தூபகலசங்களையும் கர்த்தருடைய சந்நிதியில் கொண்டு வர வேண்டும். நீயும், ஆரோனும் தன் தன் தூபகலசத்தைக் கொண்டு வாருங்கள் என்றார். அப்படியே அவரவர்கள் தங்கள் தங்கள் தூபகலசத்தை எடுத்து அதில் அக்கினியையும், தூபவர்க்கத்தையும் போட்டு

ஆசரிப்பு கூடாரத்துக்கு முன்பாக வந்து நின்றார்கள். மோசேக்கும், ஆரோனுக்கும் விரோதமாக கோராகு சபையாரெல்லாரையும் ஆசரிப்பு கூடாரத்திற்கு முன்பாக கூடி வரச் செய்திருந்தான். அப்பொழுது கர்த்தருடைய மகிமை காணப்பட்டது.

இதன் மூலமாக நாம் அறிகிறது என்னவென்றால் சில வேளைகளில் சாத்தானுடைய தந்திரத்தினால் சில புதிதான, நூதன சீஷர்கள் எழும்புவார்கள். தவறு செய்கிறவர்களுக்கு சார்பாக ஜனங்களும் கூடி வரலாம் என்று நாம் அறிகிறோம். அது சாபத்திற்கான ஒரு காரியமாகும். கர்த்தருடைய மகிமை ஆசரிப்புக் கூடாரத்திற்கு முன்னால் இறங்கிற்று. கர்த்தருடைய மகிமை வனாந்தரத்திலே ஏழு தடவை வெளிப்பட்டதாகப் பார்க்கிறோம். அவைகளில் இதுவும் ஒரு சம்பவமாகும்.

எண். 16:20-21.

மூன்றாவது தடவையாக மோசே ஆரோனிடத்தில், "நீங்கள் ஜனங்களை விட்டு விலகி நில்லுங்கள் நான் இந்த ஜனங்களை ஒரு நிமிஷத்திலே அழித்துப் போடுவேன்" என்று தேவன் சொன்னார். 15-வது வசனத்தில் மோசேயினுடைய கோபத்தைப் பார்க்கிறோம். இங்கே இறைவன் கோபங்கொண்டு கோராகு, தாத்தான், அபிராம் என்பவர்களோடு கூட்டங்கூடி வந்த சபை முழுவதையும் அழிக்க தீர்மானித்ததாக அறிகிறோம். இவ்விதமாகவே பாவஞ் செய்கிற ஊழியர்களுக்கு துணை போகிறவர்கள் மேலும் தேவ கோபம் இறங்கும் என்று அறியலாம்.

[தொடரும்]

"இவர்கள் துணிகரக்காரர், அகங்காரிகள், மகத்துவங்களைத் தூஷிக்க அஞ்சாதவர்கள்."
2 பேது. 2:10.

## சாட்சி.

கர்த்தருடைய மகா பெரிய பரிசுத்த நாமத்திற்கு ஸ்தோத்திரமுண்டாவதாக!

பிறப்பால் இந்து குடும்பத்தில் பிறந்த நான், என் தாயின் கர்ப்பத்திலே என் ஆண்டவர் இயேசுவால் தெரிந்து கொள்ளப்பட்டேன். சிறுவயது முதல் துன்பங்களும், துக்கங்களும் என்னில் காணப்பட்டது. தேவகோட்டையில் De Britto High school என்ற R.C. பள்ளியில் படித்தேன். அங்கு போய் சேர்ந்த பின் இயேசு யாரென்று அறிந்தேன். அது முதல் நான் வணங்கிய தெய்வங்களின் பெயரோடு சேர்த்து இயேசுவையும் வணங்கி வந்தேன்.

இறைவனின் அளவில்லாத கிருபையால் சேலம் பொறியியற் கல்லூரியில் 1974-ஆம் ஆண்டு சேர்ந்தேன். அங்கு என் நண்பர் திரு. ஜெபின் பாக்கியராஜ் (தற்பொழுது நமது சபையின் ஊழியக்காரர்). அவருடன் சேர்ந்து படிக்க இறை

வன் கிருபை செய்தார். அவரும், அப்பொழுது ஆசிரியராகவும் இப்பொழுது நம்முடைய சபையில் பாஸ்டராக இருக்கும் திரு. கந்தசாமி சாம் இஸ்ரவேல் அவர்களும் சேர்ந்து புதிய எருசலேம் சபையாய் வாழ்ந்தனர்.

என் நண்பர் என்னிடம் பழைய ஏற்பாடும் புதிய ஏற்பாடும் அடங்கிய புனித வேதாகமத்தை கொடுத்து படிக்கச் சொன்னார். நான் புனித வேதாகமத்தை வாசித்து வரும் நாளில் எனக்கு வேதாகமம் விளங்கவில்லை. அதனால் அதை நான் திருப்பிக் கொடுத்துவிட்டேன். ஆனால் என் நண்பர் ராபின் விடவில்லை. புதிய ஏற்பாட்டைக் கொடுத்து அதைப் படிக்க அன்பு வேண்டுகோள் விடுத்தார். ஆனால் நான் மேற்கொண்டு அதைப்பற்றி அக்கறை கொள்ளவில்லை.

நான் கல்லூரியில் படிக்கும் போதே ஐயப்பன் கோவிலுக்கு செல்ல ஆரம்பித்தேன். இப்படியிருக்கும் நிலையில் நான் வணங்கிய எல்லா விக்கிரகங்களுடனும் சேர்த்து இயேசுவையும் வணங்கி வந்தேன். நான் 1950-ல் நெய்வேலியில் Graduate Engineer ஆகச் சேர்ந்தேன். 1982-ஆம் ஆண்டு எனக்கு திருமண ஏற்பாடு செய்தார்கள். ஒரு கிறிஸ்தவ (R C.) குடும்பத்தில் பெண் பார்த்தார்கள். சென்னை, சின்னமலையில் கிறிஸ்தவ மதம் மாறி (உண்மையான மனதளவில் அல்ல) திருமணம் செய்து கொண்டேன்.

கல்யாணமானதிலிருந்து பழைய படியே விக்கிரக ஆராதனைகளையும், தொடர்ந்து ஐயப்பன் கோவில்களுக்குச் செல்வதுமாக இருந்தேன். 1990-ஆம் வருடத்தில் ஒரு வார்த்தை என்னுடைய காதில் விழுந்தது. என்னுடைய தகப்பனார் மூலமாக என் மாமனார் சொல்லிய வார்த்தை இது "இனிமேல் இந்த குடும்பத்தைச் சேர்ந்தவர்களுக்கு பெண் கொடுக்கக் கூடாது. ஏனென்றால் அவர்கள் சபைக்கு கூட்டிச் செல்ல மறுக்கிறார்கள்" இந்த வார்த்தை கேட்ட மாத்திரத்தில் என் மனதில் ஒரு இடறல் உண்டானது. என்னவென்றால் இதுவரையில் நாம் குடும்பத்தை அன்பாக வைத்திருக்கிறோம். நாம் ஏன் குற்றப்படுத்தப்பட்டோம்? நம்மிடம் அன்பில் குறையில்லையே என்று தியானிக்க ஆரம்பித்தேன்.

அப்பொழுது எங்கள் கம்பெனியிலிருந்து என்னை சந்திரபூர் (நாக்பூர் அருகில் உள்ளது) என்னும் ஊருக்கு ஒன்றரை ஆண்டு கீழ்ச்சரங்க பயிற்சிக்காக அனுப்பியிருந்தார்கள். 15 ஆண்டுகளுக்கு முன்பு ராபின் சகோதரரால் கொடுக்கப்பட்ட வேதாகமப் பகுதி அப்பொழுதும் என் கையில் பத்திரமாக இருந்தது. வேதாகமத்தை படிக்க ஆரம்பித்தேன். ஆவியானவரின் வார்த்தைகளை நான் படிக்க படிக்க எனக்கு மிகுந்த சந்தோஷமும், சமாதானமும் உண்டானது. அதன் முழு அளவையும் அதிக ஆர்வத்துடன் படித்து வரலானேன். திரும்பத் திரும்ப படித்துக் கொண்டேயிருந்தேன். மற்ற பத்திரிகைகள் படிப்பதை நிறுத்தினேன். முழு வேதாகமத்தை அறிந்த பிறகுதான் தெரிந்தது இன்றைய கிறிஸ்தவர்களின் நிலை. ஐயோ! பரிதாபமான காட்சி!

இதன் பிறகு நான் நெய்வேலி வந்த போது சிலைகளையும் சொரூபங்களையும் வீட்டிலிருந்து அகற்றிவிட்டேன். முதலில் எனக்கு கஷ்டமாய் இருந்தாலும் மன தைரியம் அதிகரித்து பரிசுத்த ஆவியானவரின் தூண்டுதலால் நடந்தது. இந்த கால கட்டங்களில் யெகோவா சாட்சியினர் என்னுடைய வீடு தேடி வர ஆரம்பித்தனர். ஆரம்பத்தில் அவர்கள் சொன்ன காரணம் எனக்கு பிடித்தமாகத் தோன்றியது. ஆனால் அவர்களிடம் பழக பழக அவர்கள் கொள்கையில் தவறை வைத்துக் கொண்டு பிரசங்கித்து வருவதை உணர்ந்தேன். அவர்கள் இயேசுவை மகிமைப் படுத்தக் கூடாது என்று என்னிடம் சொன்னார்கள். எனது மனம் சஞ்சலமாக இருந்தது.

ஏனென்றால், இயேசு தேவாலயத்திலும் பெரியவர் (மத். 12:6); மனுஷகுமாரன் ஓய்வு நாளுக்கும் ஆண்டவராயிருக்கிறார் (மத். 12:8); மெய்யாகவே நீர் தேவனுடைய குமாரன் என்று சொல்லி அவரை பணிந்து கொண்டார்கள் (மத். 14:33); நீர் ஜீவனுள்ள தேவனுடைய குமாரனாகிய கிறிஸ்து (மத் 16:16); என்னை மகிமைப்படுத்துகிறவன் பிதாவை மகிமைப்படுத்துகிறான்; பிதாவை மகிமைப்படுத்துகிறவன் என்னை மகிமைப்படுத்துகிறான்; இது போன்ற நிறைய வசனங்களை நான் அவர்களிடம் கேட்க ஆரம்பித்தேன். அவர்கள் என் வீட்டுக்கு வருவதை நிறுத்தி விட்டார்கள். அவர்கள் ஆதாமையும் இயேசுவையும் ஒரே தராசின் இரு தட்டிலும் போட்டு, இறைவன் அவர்களை ஒரே சமமாகப் படைத்தார் என்று பிரசங்கித்து வருகின்றனர். ஆகவே அங்கு செல்வதை நிறுத்தினேன்.

என்னுடைய மனைவியின் சகோதரர் ஆரோக்கிய ராஜ் மூலமாக ஞானஸ்நானம் முக்கியம் என்பது பற்றிய கருத்துக்களை ஆராய்ந்து அறிந்து அவர் போய்க் கொண்டிருக்கிற சென்னையிலுள்ள அசம்பளி ஆப் காட் சபைக்கு சென்று அங்குள்ள பாஸ்டர் மோகனிடம் ஞானஸ்நானம் பெற்றுக் கொண்டேன். தேவனுடன் எனக்கு உடன்பாடு உண்டாயிற்று. நான் அநுதினமும் தீவிரமாய் ஜெபிக்க ஆரம்பித்தேன்.

என்னுடன் பணிபுரிகிற நண்பர் ஒருவர் மூலமாக பிரதரன் சபைக்கு (Brothern Church) இரண்டு முறை சென்றேன். எனக்கு அவர்களுடைய காரியங்களைப் பார்த்தால் வெறுப்பாக இருந்தது. ஏனென்றால் ஒரு முறை அவர்கள் எல்லோரையும் என்னுடைய வீட்டிற்கு அழைத்தேன். அப்பொழுது அந்த சபையின் மூப்பர் ஒருவர் எழுந்து வேதாகமத்தில் உள்ளதை விளக்கி பேசிக் கொண்டு இருக்கும் போதே அவர் கையில் உள்ள வேதாகமத்தை ஓங்கி ஓங்கி அடித்து, சத்தம் எழுப்பி, தன்னுடைய சந்தோஷத்தை பெருமையை பேசினார். தேவனுடைய சாயலாயிருக்கிற சுவிசேஷத்தின் ஒளியை அவர் கையாண்ட முறையை பார்த்து மனம் கசந்தது. மேலும் அவர்கள் பந்தி ஆசரிப்பு செய்யும் பொழுது அவரவர் தங்கள் இஷ்டம் போல் ஒவ்வொருவரும் ஒவ்வொரு வாரம் முதன்மையேற்று இஷ்டம் போல் செய்தனர். ஆவியானவரின் கிருபையினால் அவர்கள் என்னை வற்புறுத்தியும் அவர்களுடைய பந்தியில் நான் சேரவில்லை. ஆவியானவர் உள்ளிருந்து வேண்டாம் என்று வற்புறுத்தினார். அவருடைய சத்தத்திற்கு நான் செவி கொடுத்ததால் பிழைத்தேன். அங்கு போவதை நிறுத்தினேன்.

ஒரு முறை சென்னை சென்றிருந்த போது அசம்பளி ஆப் காட் சபைக்குச் சென்றேன். வெளிநாட்டிலிருந்து வந்த ஒரு பெரியவர் பரிசுத்த ஆவி பெற எல்லோர் மேலும் கைவைத்து ஜெபித்தார். நானும் போய் நின்று கொண்டேன். ஒரு சிலரைத் தவிர மற்றவர்கள் பெற்றுக் கொண்டதாக கூறிச் சென்றனர். அவர் மறுபடியும் எங்களுக்காக ஜெபித்தார். உதடுகளை ஆண்டவருக்கு கொடுக்கச் சொன்னார். நானும் உதடுகளை மட்டுமா உள்ளத்தையே கொடுத்து பார்த்தேன். ஒன்றும் நடந்ததாகத் தெரியவில்லை.

இப்பொழுது நாங்கள் வீட்டில் உட்கார்ந்து தொடர்ந்து ஜெபித்துக் கொண்டு வந்தோம். I.E.M. என்ற அமைப்பிலிருந்து வீட்டிற்கு வர ஆரம்பித்தார்கள். இந்த அமைப்பு ஜெபக் குழுக்களை ஆரம்பித்து சுவிசேஷ மிஷனரிகளுக்காக வீடுகளில் ஜெபித்து வருகின்றனர். நாங்களும் அவர்களுடன் சேர்ந்து ஜெபித்து வந்தோம். அவர்கள் சொன்ன தகவல் நாங்கள் பொதுவான அமைப்பு என்றும் எல்லா சபைகளிலும் இருந்து வருவார்கள் என்றும் சொன்னார்கள். ஆனால் வந்தவர்களோ

அனைவரும் A.L.C. ஐச் சேர்ந்தவர்கள். குடும்பம் அனைவரிடமும் எழுந்த தாகம், நாங்கள் இறைவனை சென்று வழிபட நல்ல சபையைக் காண்பிக்க இறைவனை அநுதினமும் வேண்டினோம். இந்த வேளையில் "புதிய எருசலேம் சபையின்" நெய்வேலி ஊழியக்காரர் திரு. தங்கவேல் இஸ்ரவேல் ஐயாவை சந்திக்க இறைவன் ஏற்பாடு செய்தார். அவர் என்னுடன் தொடர்பு கொண்டு சத்திய வேதாகமத்தில் எனக்கிருந்த சந்தேகங்களை நீக்கினார். தொடர்ந்து வீட்டிற்கு வந்து சந்தித்து உபதேசங்களை சொல்லிச் சென்றார். கடைசியாக ஆவியானவர் அவரிடம் ஒரு விளக்கம் கேட்குமாறு சொன்னார். வேதாகமத்தை திறந்து யோவான் 13-ம் அதிகாரத்தில் உள்ள கால்களைக் கழுவுதல் பற்றி கேட்க சொன்னார். அவ்விதமே கேட்டேன். ஊழியக்காரரின் பதில்: "வந்து பாருங்கள்" என்று. சென்று பார்த்தேன் உண்மை சபை; தாய் சபை; ஆதி சபை, இயேசுவின் சரீரம் தெரிந்தது. திருச்சபையோடு சேர்ந்து கொண்டேன். மகா மேன்மையுள்ள ஆண்டவருக்கு ஸ்தோத்திரமுண்டாவதாக!

திருச்சபையில் சேர்ந்த ஓரிரு மாதங்களுக்குள் நெய்வேலி ஊழியர் ஐயா அவர்கள் என்னுடைய வீட்டில் ஜெபித்தபோது பரிசுத்த ஆவியானவரின் அபிஷேகத்தால் நிறைந்து அன்னிய பாஷை பேசினேன். என்னுடைய மனைவி என்னைப் பார்த்து ஏன் கத்தினீர்கள் என்றாள். அக்கம் பக்கம் உள்ளவர்களுக்கும் கேட்டிருக்கும். ஏனென்றால் எல்லாரும் ஒரு மாதிரியாக பார்க்க ஆரம்பித்தார்கள். அதைப் பற்றி நாம் ஏன் கவலைப்பட வேண்டும் ஆதியில் கூட அப்படிதானே நடந்தது! அதன் பின்பு சென்னையில் நண்பர் ராபின் ஊழியருடனும், பாஸ்டர் சாம் இஸ்ரேல் ஐயா அவர்களுடனும் பேசிக் கொண்டு இருக்கும் பொழுது நான் இன்னும் திருவிருந்தில் பங்கு பெறாது இருப்பதற்காக வருத்தப்பட்டேன். உடனே அவர்கள் தலைமை ஐயாவுடன் (பம்பாய்) தொடர்பு கொண்டு, அடுத்த நாள் ஆராதனையில் இயேசுவின் இரத்தத்தோடும், சரீரத்தோடும் ஐக்கியப்படுத்தினர். அல்லேலூயா! ஆண்டவருக்கே ஸ்தோத்திரம்.

அதிவிரைவிலேயே அபிஷேகிக்கப்பட்ட தலைமை ஐயா அவர்களை சந்திக்கும் வாய்ப்பு ஏற்பட்டது. முதன்முறையாக தலைமை ஐயா அவர்களை குமாரபாளையத்தில் ஆலயத் திறப்பு விழாவன்று சந்திக்கும் பாக்கியத்தை இறைவனின் அருளால் பெற்றேன். அடை மழை பெய்து கொண்டு இருந்தது. நெய்வேலி ஊழியக்காரர் மற்றும் சகோதரருடன் ஒருமித்து சென்றோம். அடாது மழை பெய்தாலும் விடாது சென்று தரிசித்தோம். ஆசீர்வதித்தார். இறைவன் அவரோடு இருந்து கிரியை செய்கிறார் என்பதை கண்டு கொண்டோம்.

ஆண்டவரின் பேரருளால் தலைமை ஐயா அவர்கள் நெய்வேலி வந்தார்கள். அது சமயம் குடும்பத்துடன் சென்று சந்தித்தோம். தாலியையும் நகைகளையும் கழற்ற மாட்டேன் என்று சொல்லி வந்த மனைவியின் மனதை கர்த்தர் மாற்றினார். அடுத்த நாளிலே ஐயாவிடம் ஞானஸ்நானம் பெற்றுக் கொண்டு இயேசுவோடு உடன்படிக்கை செய்து கொண்டாள். குடும்பம் முழுவதுமாக கர்த்தரின் செட்டைக்குள் சேர்த்த கர்த்தருக்கு ஸ்தோத்திரம்! கர்த்தர் தாமே எங்களை ஆசீர்வதித்து காப்பாராக. இயேசுவின் நாமத்திலே பிதாவிற்கு நன்றி கூறிக் கொள்கிறேன். ஆமென். வாழ்க புதிய எருசலேம் சபை!

சகோ. மங்கச்சாமி,
புதிய எருசலேம் சபை,
நெய்வேலி-கிளை.

---

"ஒருவன் கிறிஸ்துவுக்குள்ளிருந்தால் புதுச் சிருஷ்டியாயிருக்கிறான்: பழையவைகள் ஒழிந்து போயின, எல்லாம் புதிதாயின" 2 கொரி. 5:17.

---

சிறுவர் பகுதி

# எலியாவின் தேவன்

(உண்மை சம்பவம், பெயர்கள் மாற்றப்பட்டுள்ளது)

ஏழை ஜான்சன், மேரி குடும்பத்தில், எஸ்தர், ரூத் என்ற பிள்ளைகள் இருந்தார்கள். ஒழுங்காக ஆராதனையில் கலந்து கொள்ளும் விசுவாச குடும்பம் அது. பெற்றோர்களின் விசுவாச பாதையை பின்பற்றி பிள்ளைகள் தாய், தந்தையரை விட விசுவாசத்தில் வல்லவர்களாயிருந்தனர்.

ஞாயிறு பள்ளியில் ஆசிரியர் சொல்லிக் கொடுக்கும் கதைகளை வீட்டிலும் ஞாபகப்படுத்திக் கொள்ளும் பழக்கம் இருவருக்கும் உண்டு. ஞாயிறு பள்ளியில் ஆசிரியர் எலியாவைப் பற்றியும், எலியாவிற்கு ஆகாரம் கொடுத்த காகத்தைப் பற்றியும் சொன்னக் கதையை பேசிக் கொண்டிருந்தனர்.

ரூத் தனது அக்காள் எஸ்தரிடம்: அக்கா, எலியா தாத்தாவிற்கு காகங்கள் அப்பமும், இறைச்சியும் கொடுத்ததாக சார் சொன்னார்களே, அது எப்படி அக்கா கொடுத்தது! என சந்தேகத்துடன் கேட்டாள். அதற்கு எஸ்தர்: தங்காய், எலியா தாத்தா ஒரு சாதாரண ஆள் அல்ல. அவர் நமது ஆண்டவரின் பக்தர். கர்த்தர் சொன்னபடியெல்லாம் நடந்தவர் என்றாள். யார், யாரெல்லாம் நம் இயேசு சுவாமி சொன்னபடி நடக்கிறார்களோ, அவர்களின் ஜெபத்தை நமது ஆண்டவர் கேட்பார். அது மட்டுமல்ல ரூத், இயேசு அப்பா பிள்ளைகளுக்கு என்ன தேவை என்பதை இயேசு அறிந்து சரியான நேரத்தில் தவறாது கொடுப்பவரும் நமது ஆண்டவர் என்றாள்.

அன்றைய தினம் எஸ்தரின் அப்பாவும், அம்மாவும் வேலைக்குச் சென்று விட்டனர். பிள்ளைகள் மட்டும் வீட்டில் தனியாக பேசிக்கொண்டிருந்தனர். ரூத் எஸ்தரிடம், அக்கா, அக்கா எனக்கு பசியாக இருக்கின்றது. நாம் ஆண்டவரிடம் ஜெபம் பண்ணுவோமா? இயேசு அப்பா நமக்கு ஏதேனும் சாப்பிட கொடுப்பார் இல்லையா என்றாள். எஸ்தருக்கோ கஷ்டமாகப் போய் விட்டது. ஆனாலும் ஆண்டவர் தமது பிள்ளைகள் கேட்பதை கொடுப்பார் என வேதாகமத்தின் மூலம் அறிந்தபடியால் ரூத்திடம் நாம் இப்பொழுது கண்மூடி முழங்கால்படியிட்டு ஜெபம் செய்வோம். கர்த்தர் நமக்கு ஏதேனும் சாப்பிடக் கொடுப்பார் என்றாள்.

இருவரும் உடனே முழங்கால்படியிட்டு ஜெபித்தனர். ரூத்: இயேசு சுவாமி நீர் எலியா தாத்தாவிற்கு அப்பம் கொடுத்தீரே எங்களுக்கும் ஏதேனும் சாப்பிடத் தாரும். உண்மையாய் உம் வார்த்தையின்படி நடப்பவர்களின் ஜெபத்தை நீர் கேட்பீரென்று எல்லோரும் சொல்லுகிறார்கள். நாங்கள் உமக்கு பிரியமாய் நடக்கிறோம், இனியும் நடப்போம் எங்களுக்கு உதவி செய்யும். இயேசுவின் நாமத்தில் பிதாவே, என்று ஜெபம் செய்து முடித்தாள்.

ரூத் ஜெபித்து முடிக்கவும் ஒரு காகம் தனது வாயில் சில பஜ்ஜிகளை கொண்டு வந்து அவர்கள் முன்னர் போட்டு விட்டு பறந்து போய்விட்டது. பிள்ளைகளுக்கு ஒரே ஆச்சரியம். இயேசு சுவாமி நமது ஜெபத்திற்கு உடனே பதில் கொடுத்து விட்டாரே என மிகுந்த சந்தோஷப்பட்டு அந்த பஜ்ஜிகளை எடுத்து, கர்த்தருக்கு ஸ்தோத்திரம் ஸ்தோத்திரம் என்று சொல்லி சாப்பிட்டு விட்டு மீதி கொஞ்சம் தங்கள் பெற்றோருக்குக் காண்பிப்பதற்காக வைத்திருந்தனர்.

மாலையில் வீடு திரும்பிய அப்பாவிடமும், அம்மாவிடமும் பிள்ளைகள் நடந்த

சம்பவத்தைக் கூறி சந்தோஷப்பட்டனர். அன்றைய மாலை வீட்டு ஜெபத்தின்போது குடும்பமாய் சேர்ந்து, கர்த்தர் எஸ்தர்.ருத்தின் ஜெபத்தைக் கேட்டு இயேசு சுவாமி அளித்த ஆகாரத்திற்காய் நன்றி செலுத்தினார்கள். பெற்றோர்களும் அவர்கள் பிள்ளைகள் இறைவன் இயேசு கிறிஸ்துவின் மீது வைத்திருந்த விசுவாசத்திற்காய் கர்த்தருக்கு நன்றி செலுத்தினார்கள். ஞாயிறு பள்ளியிலும் நடந்த சம்பவங்களை சாட்சியாக அறிவித்து, யாவரும் கர்த்தரை மகிமைப்படுத்தினார்கள்.

பிள்ளைகளே, நாமும் கர்த்தரிடத்தில் கேட்டு பெற்றுக் கொள்வோமாக. கர்த்தர் நமது ஜெபத்தையும் கேட்பார்.

"மேலும் நீங்கள் விசுவாசமுள்ளவர்களாய் ஜெபத்திலே எவைகளைக் கேட்பீர்களோ அவைகளையெல்லாம் பெறுவீர்கள் என்றார்" மத். 21:22.

## பரலோக பிரவேசம்.

### கர்த்தருக்குள் நித்திரையடைந்தார்கள்.

★ 5.12.1992 சனிக் கிழமையன்று திருமதி. செல்லம்மாள் அவர்கள் (வயது 89) பாஸ்டர் D. ஜோசப் (பங்களா தோட்டம், கொடை ரோடு) அவர்களின் தாயாருமாகிய அம்மா அவர்கள் முடிவு பரியந்தம் நிலை நின்று தன்னுடைய இவ்வுலக வாழ்க்கையை விசுவாசத்தோடும், வெற்றியோடும் முடித்தார்கள். அன்னருடைய பிரிவால் வருந்துகிற பிள்ளைகள், பேரப்பிள்ளைகள், உற்றார், உறவினர் யாவர்களுக்கும் இறைவனாகிய இயேசு ஆறுதல் அளிப்பாராக.

★ 8.9.1993 புதனன்று திருமதி. பிபி மரகதம் அம்மாள் (மலையடிப்பட்டி, சங்கரன் கோவில்) கிறிஸ்துவுக்குள் நித்திரையடைந்தார்கள் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம். திரு. ஞானையா சாமுவேல் (Retd. Teacher) அவர்களின் துணைவியாகிய அம்மையார் மலையடிப்பட்டி மூத்த விசுவாசியாகும். அவர்களுடைய விசுவாசம் பெரிது. அவர்களுடைய பிரிவால் வருந்துகின்ற துணைவர், பிள்ளைகளுக்கும், உற்றார் உறவினர்களுக்கும் தேவன் ஆறுதல் அளிப்பாராக. உயிர்த்தெழுதலிலே நாம் அவர்களை சந்திப்போமாக.

★ 17.12.1993 வெள்ளியன்று பாஸ்டர் S. சுந்தர்ராஜ், பாஸ்டர் S. ஏகதாசன், பாஸ்டர் S. யோசுவா அவர்களின் தகப்பனாரும், மகிழ்ச்சிபுரம் சபையின் மூத்த விசுவாசியும், விசுவாச வீரருமான திரு. சுவாமி நாதன் அவர்கள் நாமது இரட்சகரின் அழைப்பின் பேரில் தமது புத உடலைத் துறந்து கர்த்தருக்குள் நித்திரையடைந்தார். தமது அந்திய வேளையிலும் என்னை ஜெபம் பண்ணி ஊருக்கு அனுப்பி வையுங்கள் என்று வழியனுப்பி விட்டு சென்ற விசுவாச பக்தராகும். மகிமையின் உடலை அவருக்குக் கொடுக்க இயேசு பிரியமாயிருக்கிறார் (1 கொரி. 15:35). அன்னாரின் பிரிவால் வருந்துகின்ற பரிசுத்தவான்களை, பிள்ளைகளுக்கு தேவன் சமாதானமருள்வாராக.

# தகுதியான ஜெபம்.

பக்தன் ஒருவர் முழங்கால் படியிட்டு பரிசுத்த ஆவிக்குள் ஜெபம் பண்ணினார். அவர் தன்னுடைய சரீரப்பிரகாரமான தேவைகளை ஜெபத்தில் தெரியப்படுத்த வேண்டும் என்ற எண்ணத்தில் ஜெபத்தை ஆரம்பித்து, ஆண்டவரே, என்னுடைய வாகனங்கள் நல்ல நிலையில் இல்லை, அவைகளை சரிபண்ண ஏற்பாடு பண்ண வேண்டும் என்றார். உடனே பரிசுத்த ஆவியானவர், போதுமென்ற மனதுடனே கூடிய தேவ பக்தியே மிகுந்த ஆதாயம் என்றார். பக்தனும் விளங்கிக் கொண்டு சரீரத் தேவைகளை தெரிவிக்கும் எண்ணத்தை விட்டு, சரி வேறு எதை கேட்கலாம்?

கிருபை வரங்களை கேட்கலாம். கிருபை வரங்கள் அதிகம் இருந்தால் பற்பல விதத்தில் மேல் நிலை அடையலாம் என்று எண்ணினார். ஆனால், அவர் உள் மனம் சொல்லிற்று: கிருபை வரங்கள் அதிகம் இருந்தால் சபையார், மற்றவர்கள் அதிக பிரயோஜனம் அடைவர், உனக்கு என்ன பிரயோஜனம்?

ஒரு போஸ்ட் மேன், நூறு ரூபாய் மணி ஆர்டர் கொண்டுபோய் ஒருவரிடம் கொடுத்தால் என்ன? ஆயிரம் ரூபாய் கொண்டு போய் கொடுத்தால் என்ன?

தொடர்ச்சி அடுத்த பக்கம் —


## FORM IV

(See Rule 8)

| | | | |
|---|---|---|---|
| 1. | Place of Publication | : | Bombay |
| 2. | Periodicity of its publication | : | Monthly |
| 3. | Printer's Name | : | Chief Pastor N. LAZAR |
| | (Whether citizen of India? | : | YES. |
| | (if foreigner, state the country of origin) | | |
| | Address | : | Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078. |
| 4. | Publisher's Name | : | Chief Pastor N. LAZAR |
| | (Whether citizen of India?) | : | YES |
| | (if foreigner, state the country of origin) | | |
| | Address | : | Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078. |
| 5. | Editor's Name | : | Chief Pastor N. LAZAR |
| | (Whether citizen of India? | : | YES |
| | (if foreigner state the country of origin) | | |
| | Address | : | Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078. |
| 6. | Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total capital | : | New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078. |

I, Chief Pastor N. LAZAR hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Sd.
Chief Pastor N. Lazar.
Signature of Publisher.

Dated: 27-2-94

"தேவனைத் தேடு"
**"SEEK GOD"**

Regd. No. 040088/84
Postal Regd. No. MH BY NE-94/93
Tamil Monthly Magazine

போனால் பேறுக்கு என்ன லாபம்? பணத்தைப் பெற்றவருக்குத்தான் லாபம். இவர் கடமையைச் செய்தார் அவ்வளவுதான்.

ஐந்து தாலந்தை கொண்டு எஜமானுக்கு ஐந்து தாலந்து லாபம் கொண்டு வந்தான் ஒரு ஊழியன். இரண்டு தாலந்தைக் கொண்டு எஜமானுக்கு இரண்டு தாலந்து கொண்டு வந்தான் இன்னொரு ஊழியன். "நல்லது, உத்தமும் உண்மையுமுள்ள ஊழியக்காரனே, கொஞ்சத்தில் உண்மையாயிருந்தாய் அநேகத்தின் மேல் உன்னை அதிகாரியாக வைப்பேன், உன் எஜமானுடைய சந்தோஷத்திற்குள் பிரவேசி" (மத். 25:22, 23) என்று இரண்டு பேருக்கும் ஒரே வித பாராட்டையும் பரிசையும் கொடுத்தான் எஜமான்.

ஆகவே கிருபை வரங்கள் பல பெறும் தனக்கு மேன்மை ஒன்றுமில்லை என உணர்ந்த பக்தன், அப்படியானால் நான் ஆண்டவரிடம் வேறு எதைக் கேட்கலாம், என யோசித்து, எனக்கு பிரயோஜனமானதும், மேன்மையைக் கொண்டுவரக் கூடியதும், ஒழியாமல் நிலைநிற்கக் கூடியதுமான எதையோக் கேட்பேன் என தீர்மானித்து, ஆண்டவரே, உமது திவ்ய குணாதிசயங்களை எனக்குத் தாரும், உம்மைப் போல் நான் அன்பாக இருக்க வேண்டும், உம்மைப் போல் சாந்த குணம் வேண்டும், உம்மைப் போல் பரிசுத்தமாயிருக்க வேண்டும், உம்மைப் போல் நீதியாக இருக்க வேண்டும் என்று ஜெபித்தார். பரிசுத்த ஆவியானவர் மிகவும் ஒத்தாசை செய்ய அந்த ஜெபம் வலுவுள்ளதாக இருந்தது. இதுவே ஏறெடுக்கத்தக்க தகுதியான ஜெபம் என்று பக்தன் அறிந்தார்.

"அவருடைய திவ்விய சுபாவத்திற்கு பங்குள்ளவர்களாகும் பொருட்டு மகா மேன்மையும் அருமையுமான வாக்குத்தத்தங்களும் அவைகளினால் நமக்கு அருளப்பட்டிருக்கிறதே" (2 பேது. 1:4).

### அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்
   28 [திங்கள்] மார்ச் 1994
   25 [திங்கள்] ஏப்ரல் 1994
   25 [புதன்] மே 1994
2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
   ஆண்டு சந்தா Rs. 15-00
   வெளிநாடு Rs. 100-00

   அனுப்ப வேண்டிய முகவரி :
   CHIEF PASTOR N. LAZAR
   "NEW JERUSALEM CHURCH"
   CHURCH LANE, TILAK NAGAR,
   DARGA ROAD, BHANDUP,
   BOMBAY-400 078 INDIA.
3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.
4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.
5. 'புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரூ. 15-(பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக பெரிய எழுத்துக்களில் [Capital Letter] எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by: Chief Pastor N. LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078. Printed at: New Jerusalem Press, Tilak Nagar, Bhandup, Bombay-400 078.

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தேயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10:40-43).

CHIEF PASTOR N. LAZAR

## இதழின் உள்ளே . . .

# ஆசிரியர் உரை

இந்நாட்களில் கிறிஸ்தவன் என்றும் ஏமாளியாக இருக்கவேண்டும் என்று உலகம் எண்ணுகிறது. ஏமாந்தால் நல்ல கிறிஸ்தவன், நீதியாய் வாழ்ந்தால் மோசமான கிறிஸ்தவன் என்று அது சொல்லுகிறது. முற்காலத்தில் நாம் ஏமாறுகிறவர்களும் ஏமாற்றுகிறவர்களுமாய் இருந்தோம். இப்பொழுது அப்படி இருக்கக்கூடாது என்று வேதம் சொல்லுகிறது. கிறிஸ்தவன் ஏமாளியல்ல, கிறிஸ்தவன் நல்லவன். கோழைகளிடத்தில் தேவன் பிரியமாக இருப்பது இல்லை. நீதிக்காக வாயை திற. ஏழை எளியவர்களுக்காக நியாயத்திலே வாயை திறக்க வேண்டும். நீதிக்காக நிற்க வேண்டும். தீயவர்கள் திரளானவர்களாய் இருக்கிறார்களென்று தீங்கு செய்ய திரளானவர்களைச் சேராதே. பின்பற்றாதே என்று திருவசனம் எச்சரிக்கிறது (யாத். 23:2). நீதியுள்ளவர்கள் நான்கு பேராயிருந்தாலும் நீதியின் பக்கமே, நியாயத்தின் பக்கமே நாம நிற்க வேண்டும். அநீதியை எதிர்த்து போராடவேண்டும். நீதியை கடைபிடிக்க விடாமல் அநீதிக்காரர்கள் பெலவீனமான வார்த்தைகளைச் சொல்லி கிறிஸ்தவர்களை மட்டம் தட்ட எண்ணுகிறார்கள். அவைகளை நாம் அல்லத் தட்டி விட வேண்டும். நீதிக்காக காவல் துறையை நாடினாலும் சில கையாலாகாத இன்ஸ்பெக்டர்கள்: என்ன, கிறிஸ்தவர்கள் ஒரு கன்னத்தில் அடித்தால் மறு கன்னத்தில் பட்டு கொள்ளவேண்டுமே. நீங்கள் இப்படிச் செய்கிறீர்கள் என்று சட்டத்துக்குப் புறம்பாக வேதம் போதிக்க ஆரம்பிக்கின்றனர். இப்படிப்பட்ட கள்ள போதகர்களாக நடிக்கும் காவல் துறையினர்களைக் குறித்து நாம் எச்சரிக்கையாக இருந்து அவர்கள் எந்த உபதேசத்தை கடைபிடிக்கிறார்கள் என்பதைக் குறித்து மனு செய்ய வேண்டும். நீதியை கடைபிடிக்க, நீதிக்காக நிற்கவிடாமல் தேவ ஜனங்களை மட்டம் தட்ட சாத்தான் இந்நாட்களில் துன்மார்க்கரோடு சேர்ந்து கிரியை செய்கிறான். ஆனபடியினால் அதற்கு தேவஜனங்கள் இடங்கொடுக்க கூடாது. துன்பம் அனுபவிக்க, அநியாயத்தை சகிக்க கர்த்தருடைய ஆவியானவர் நமக்கு நடத்துதல் கொடுத்தால் நாம் ஏற்றுக் கொள்ளலாம். அநீதியை தடுக்கும்படி தேவ ஆவியானவர் தூண்டினால் அநீதியை எதிர்க்க வேண்டும். அதற்கு விரோதமாய் ஜெபிக்க வேண்டும். திருச்சபை என்று சொல்லப்படுவது, மெய்யான சபையானது, இந்த உலகத்தில் போராடுகிற சபையாக இருக்கின்றது (எபே. 6:10-18; 1பேது. 5:8,9). மறுமையிலே அது ஜெயங்கொண்டாடுகிற சபையாக இருக்கும். இங்கே போராடாதவர்கள், தீமைக்கு எதிர்த்து நின்று சோதனைக் காலங்களிலேயும் தவறான அதிகாரங்களையும் எதிர்க்காதவர்கள் மறுமையிலே ஜெயங்கொண்டாடப்போவது இல்லை. ஆனபடியினால் அநீதிக்கும், தீயவனுக்கும் விரோதமாக எதிர்த்து நிற்போமாக! விசுவாசத்தில் உறுதியாயிருந்து சாத்தானை எதிர்ப்போம். அவன் நம்மைக் கண்டு ஓடிப்போவான்.

இப்படிக்கு,

(CHIEF PASTOR N. LAZAR)

# சத்திய வேதம் [தொடர்ச்சி]

வேதாகம புத்தகங்களின் பொருளை விளக்கும் திறவுகோல் வசனங்கள் :

**ஆதியாகமம்**

பொருள் : ஆரம்பம்

தங்கவசனம் : 1:1

பூலோகம், மனுக்குலம், விவாகம், குடும்ப வாழ்க்கை, ஜன சமூகம், பல ஜாதிகள், நாகரீகம், அரசியல், ஓய்வு நாள், பாவம், யாகங்கள், தேவ தொழுகை, இரட்சணியம், தீர்க்க தரிசனம், பல தொழில்கள், பல வித்தைகள், செய்யுள் போன்ற ஏராளமானவைகளின் உற்பத்தியையும் ஆரம்பத்தையும் குறித்து இவ்வாகமத்தில் எழுதி இருக்கின்றது.

**யாத்திராகமம்**

பொருள் : விடுதலை

தங்க வசனங்கள் : 12:17, 51

இவ்வாகமத்தில் யூதஜனமே விசேஷமாக காணப்படுகிறது. அந்த ஜாதியார் கடவுள் தெரிந்து கொண்ட ஜனம் என பார்க்கிறோம். 12-ம் அத்தியாயமே முக்கியமான பாகம். கடவுள் சங்காரத் தூதனை அனுப்பி எகிப்தியரை சங்கரிக்கும் போது இரத்தம் தெளிக்கப்பட்ட எபிரேயர்களின் வீடுகளைக் கடந்துபோய் அவர்களை காப்பாற்றின செய்தி இவ்வதிகாரத்தின் சாரம்சமாகும்.

**லேவியராகமம்**

பொருள் : பாவ நிவிர்த்தி

தங்க வசனம் : 16:34

இப்புத்தகத்தின் போதனை கருகலாயினும் இதில் வாக்கியங்களும் விஷயங்களும் அடங்கியிருக்கின்றன. இங்கு உபயோகித்துள்ள மார்க்க அனுசாரங்கள் பாவ நிவிர்த்திக்கு முன்னடையாளமும், உவமானமுமானவைகள்.

**எண்ணாகமம்**

பொருள் : எண்ணிக்கையும் பிரயாணமும்

தங்க வசனம் : 33:1

இந்நூலின் விசேஷப் பொருள் இரண்டாகும். இஸ்ரவேலர்களின் எண்ணிக்கையும், யாத்திரையும் பணிவிடையும் என்பவைகளே.

**உபாகமம்**

பொருள் : கீழ்படிதல்

தங்க வசனங்கள் : 10:12,13

இவ்வாகமம் இரண்டாம் நியாயப்பிரமாணம் என சொல்லப்படுவதுண்டு. இதன் முக்கிய சாராம்சம் 26-ம் அதிகாரத்தில் அடங்கியிருக்கின்றது.

**யோசுவாவின் புஸ்தகம்**

பொருள் : சுதந்திரம்

தங்க வசனம் : 1:3

யோசுவா என்பவர் இஸ்ரவேலின் தளகர்த்தர். இஸ்ரவேல் ஜனங்களை நடத்தி அந்த ஜாதியார் கானான் தேசத்தை யுத்தம் செய்து மேற்கொண்டு அதில் குடியேறிய விபரம் இந்நூலின் பொருளாகும்.

**நியாயாதிபதிகள்**

பொருள் : அரசியல் உண்மை

தங்க வசனம் : 21:25

யோசுவாவின் காலத்திற்கும், சவுல் அரசனுடைய காலத்திற்கும் இடையிலுள்ள சரித்திரம் இதில் விவரித்துள்ளது. இக்காலம் பல தலைவர்கள் இஸ்ரவேலரை ஆண்டனர். பகைஞரான ஆறு ஜாதிகள் அவ்வப்போது இஸ்ரவேலரை மேற்கொண்டு அவர்களை இம்சை செய்தனர்.

**ரூத்தின் சரித்திரம்**

பொருள் : மீட்பரான இனத்தான்

தங்கவசனம் : 2:1; 3:9; 4:4

இது மிக நேர்த்தியும் உத்தமமுமான ஒரு காதல் கதை. உண்மையாக சம்பவித்த சரித்திரமாகவும் இது இருக்கின்றது.

I சாமுவேல், II சாமுவேல்
பொருள் : ராஜ்யம்
தங்க வசனம் : 1சாமு. 10:25

இவ்விரண்டு புஸ்தகங்களும் எபிரெய வேத நூலில் ஒரே புஸ்தகமாக அமைந்துள்ளன. இவைகளில் எழுதியிருக்கும் சரித்திரம் சாமுவேல், சவுல், தாவீது ஆகிய மூவரின் காலத்தின் 120 ஆண்டுகளின் சரிதையாகும். இஸ்ரவேல் ராஜ்யத்தை ஸ்தாபித்து நிலை நாட்டுவது இந்நூலின் முக்கிய பொருள்.

I இராஜாக்கள், II இராஜாக்கள்
பொருள் : ராஜ்யபாரம்
தங்கவசனங்கள் : I இரா. 1:12 ;
II இரா. 13:12

இஸ்ரவேலின் சாம்ராஜ்யம் மாமேன்மை பெற்றுவந்து. அதன்பின் இரண்டாய்ப் பிரிந்து வரவர மேன்மை இழந்து கடைசியில் அற்றே போனது. இவ்விரண்டு ஆகமங்களிலுள்ள சரித்திரம், மூல நூலில் ஒரே புத்தகமாகவுள்ளது.

I நாளாகமம், II நாளாகமம்
பொருள் : தெய்வீக அரசியல்
தங்கவசனம் : 2 நாளா. 15:2

எபிரெய (பழைய ஏற்பாடு) ஆகமத்தில் இந்த இரண்டு ஆகமங்களும் கடைசி ஆகமங்களாகும். ஆதியாகமம் முதற்கொண்டு இவ்வாகமங்கள் வரைக்கும் மனுஜாதியாரின் வாழ்க்கையை கொஞ்சம் கொஞ்சமாக படித்து பார்க்கிறோம். மனிதர் கடவுளையே தங்களை ஆளும் அரசராக ஏற்றுகொண்டு நடந்தால் வாழ்வும், அவ்வாறு செய்யாவிடில் தாழ்வடைவார்கள் என்பதை இந்த சரித்திர நூல்கள் மூலம் கற்றறியலாம்.

எஸ்றா, நெகேமியா
பொருள் : திரும்பக் கட்டுதல்
தங்கவசனங்கள் : எஸ்றா 1:5; நெகே. 2:5

எபிரெய வேதத்தில் இவ்விரண்டு நூல்களும் ஒன்றாக சேர்க்கப்பட்டுள்ளன. யூதர் பாபிலோனை விட்டு யூதேயாவுக்குத் திரும்பி தங்கள் தலைநகரியை எடுப்பித்து கட்டிய வரலாறு இவைகளில் எழுதியிருக்கிறது.

எஸ்தர்
பொருள் : கடவுளது திவ்விய பராமரிப்பு
தங்கவசனம் : 4:14

கடவுள் தம்முடைய மக்களை அநியாய வண்ணம் துஷ்டருடைய கையினின்று காப்பாற்றுதலுக்கு சிறந்த உதாரணம் இதில் காணப்படுகிறது.

யோபு
பொருள் : புடமிடுதல்
தங்கவசனம் : 13:15

யோபு பக்தன் அனுபவித்த உபத்திரவம் கடவுள் மேல் வைத்த நம்பிக்கையை பரிசோதனை செய்வது.

சங்கீத புஸ்தகம்
பொருள் : தேவ வணக்கம்
தங்கவசனம் : 29:2

சதா காலத்திற்கும், சர்வ மக்களும் தேவ தொழுகைக்கு உபயோகிக்கும் சங்கீதங்கள் இப்புஸ்தகம்.

நீதி மொழிகள்
பொருள் : ஞானம்
தங்கவசனம் : 9:10

பிரசங்கி
பொருள் : மாயை
தங்கவசனம் : 1:2

கடவுளோடு ஐக்கியப்படாதவர்களின் வாழ்க்கை இங்கு விவரித்து இருக்க காணலாம். அவ்வாழ்க்கை மாயையே.

உன்னத பாட்டு
பொருள் : நேசர்
தங்கவசனம் : 6:3

ஒரு விவாகக் கீதம். இதன் போதனை 45-ம் சங்கீதத்திலும், எபே. 5:25-30-லும் காணப்படுகிறது.

**ஏசாயா**
பொருள் : இரட்சணியம்
தங்கவசனம் : 53:5

பலர் ஏசாயா தீர்க்கதரிசிக்கு சுவிசேஷகனான தீர்க்கன் என பெயரிடுகின்றனர். மற்ற எல்லா தீர்க்கதரிசியைக் காட்டிலும் இந்த தீர்க்கனே வரப்போகும் மேசியாவை குறித்தும் அவரது திவ்விய ஆற்றலைக் குறித்தும் அதிகம் விளம்பியிருக்கிறார்.

**எரேமியா**
பொருள் : எச்சரிக்கை
தங்கவசனம் : 7:25;46:1

இவர் மிகவும் தைரியமாய் யூதேயா நாட்டாரின் பாவத்தை கண்டித்து, சில புற ஜாதிகளையும் கடவுள் தண்டிப்பதாக முன்னறிவித்தார்.

**புலம்பல்**
பொருள் : அழிவு
தங்கவசனம் : 2:11

தம் வாழ் நாளெல்லாம் இம்சை அனுபவித்த இத்தீர்க்கதரிசி தமது நாட்டாரின் பரிதாபகரமான நிலையையும், பரிசுத்த நகர் பாழாய்க் கிடக்கிறதையும் நினைத்து பிரலாபப் பாடலைப் பாடினார்.

**எசேக்கியேல்**
பொருள் : தரிசனங்கள்
தங்கவசனம் : 1:1

யூதர் பாபிலோனில் சிறைகளாயிருந்த காலத்தில் இந்த தீர்க்கதரிசி தமது ஊழியத்தை நிறைவேற்றினார்.
பல தீர்க்கதரிசிகளுள் இவரே ஏராளமான தரிசனங்களைக் கண்டு எழுதிவைத்துள்ளார்.

**தானியேல்**
பொருள் : வெளிப்பட்ட இரகசியங்கள்
தங்கவசனம் : 2:22

இவ்வாகமத்தில் தரிசனம், தீர்க்கதரிசனம் ஆகிய இரு பொருள்கள் அடங்கியுள்ளன. முடிவு காலமட்டுமுள்ள வெளிப்படுத்தல்கள் இதில் உண்டு.

**ஓசியா**
பொருள் : திரும்புங்கள்.
தங்கவசனம் : 14:9

பாலஸ்தீனாவின் வட புறத்தில் உள்ள நாட்டார் சிறைப்படக் கூடிய காலத்தில் ஓசியா அவர்களுக்கு எழுதிய தூது இது.

**யோவேல்**
பொருள் : நியாயத் தீர்ப்பு, தேவ தீர்மானம்
தங்கவசனம் : 2:13

இத்தீர்க்கதரிசி யூதேயா தேசத்தில் வசித்த அந்நாட்டாரிடம் தேவ தூது பகர்ந்தார்.

**ஆமோஸ்**
பொருள் . ஆக்கினை
தங்கவசனம் 4:12

ஓசியாவைபோல இவரும் இஸ்ரவேல் நாட்டில் உழைத்தவர்.

**ஒபதியா**
பொருள் : ஏதோம்
தங்கவசனம் : 21

சகல தீர்க்கதரிசன நூல்களிலும் இதுவே மிகச் சுருக்கமானது. ஏசாவின் வழி வந்த ஏதோமியரின் கொடுமைகளையும், கடவுள் அவர்களை அழிப்பதையும் பற்றியது.

**யோனா**
பொருள் : தேவ இரக்கம்
தங்கவசனம் : 3:9, 10

சுய தேசத்தை விட்டு தூர தேசம் சென்று தேவத் தொண்டு புரிந்த முதல் இஸ்ரவேலன் யோனா. நினிவே நகரத்தார் குணப்பட்ட அற்புதம் உட்பட நான்கு அற்புத செயல்களை குறித்து இதில் படிக்கிறோம்.

**மீகா**
பொருள் : வழக்கு
தங்கவசனம் : 6:2

இவர் இஸ்ரவேல் நாட்டாரிடம் சற்று போதித்தும், யூதேயா நாட்டாரிடம் அதிகம்

எழுதினர். கடவுளுக்கும், ஜனத்துக்கும் வழக்குண்டு. இருப்பினும் அவர் அவர்களை நேசித்துக் கொண்டே வருகிறார் என்பது இவர் விளம்பிய தாதாகும்.

நாகூம்

பொருள் : சர்வ சங்காரம்

தங்கவசனம் : 1:8,9

இந்நூல் யோனாவின் ஆகமத்திற்கு தொடர்ச்சி நூலாகும். முற்காலம் மனந்திரும்பிய நினிவே நகரத்தார் திரும்ப சீர்கெட்ட படியால் முற்றும் அழிவார்கள் என்கிறார் நாகூம்.

ஆபகூக்

பொருள் : விசுவாசம்

தங்கவசனம் : 2:4

தமது நாட்டாருக்கு உண்டாகும் தேவ தண்டனை மகா பயங்கரமானது என இவர் அறிந்தும் பின்னும் கடவுள் பேரில் முழு நம்பிக்கை கொண்டார்

செப்பனியா

பொருள் : மீதியானவர்கள்

தங்கவசனங்கள் : 1:4; 3:13

இத்தீர்க்கன் மீந்திருக்கும் இரு வகுப்பாரை குறித்து எழுதினர். யேகோவா சர்வ லோகத்தையும் ஆண்டு வருகிறார் என்கிற சத்தியம் வற்புறுத்தி போதிக்கப்பட்டிருக்கிறது.

ஆகாய்

பொருள் : கட்டுங்கள்

தங்கவசனம் : 1:8

அசமந்தமாயிருக்கும் யூதர் இடிந்து கிடக்கும் தேவாலயத்தை எழுப்பி கட்டும்படி ஆகாய் தீர்க்கன் எடுத்த விசேஷத் தொண்டு இதில் குறிப்பிடப்பட்டுள்ளது.

சகரியா

பொருள் : எரிச்சலுள்ள தேவன்

தங்கவசனம் : 8:2

மேசியா வருவதைக் குறித்து தெளிவுற போதிக்கும் ஆகமம் இது. பரிசுத்த நகரமும் தேவாலயமும் கட்டப் படுவதையும் அவைகளில் மேசியா தோன்றுவதையும் குறித்து சகரியா எட்டு அரிய தரிசனங்களைக் குறித்து இவ்வாகமத்தில் எழுதி வைத்துள்ளார். யேகோவா தமது ஜனத்தின் விஷயமாய் மகா வைராக்கியமும் எரிச்சலும் உடையவர் என்கிறார்.

மல்கியா

பொருள் : வஞ்சனை

தங்கவசனம் : 3:8

நெகேமியா காலத்தில் யூதர் மத்தியில் நேரிட்டுக் கொண்ட பாவங்களின் நிமித்தம் அவர்களைக் கண்டித்தார் மல்கியா. அதுவுமின்றி இவர் விசேஷமாய்க் கூறுவது யாதெனில் மேசியாவுக்கு முன்னோடியான இன்னொரு தீர்க்கதரிசி எழும்பப் போகிறார் என்பதேயாம். அதோடுகூட தசமபாகம் காணிக்கைகளில் தேவஜனங்கள் வஞ்சனை செய்கிறார்கள். அவர்கள் திருடர்கள் என்று சொல்கிறார்.

(தொடரும்)

"வேத வாக்கியங்களை ஆராய்ந்து பாருங்கள்; அவைகளால் உங்களுக்கு நித்திய ஜீவன் உண்டென்று எண்ணுகிறீர்களே, என்னைக் குறித்துச் சாட்சி கொடுக்கிறவைகளும் அவைகளே". யோ. 5:39.

(தொடர்ச்சி)

# கிறிஸ்தவ மார்க்கம்

## ஞானஸ்நானம்.

### ஞானஸ்நானத்தின் பொருள்.

**1. ஞானஸ்நானம் மறுபிறப்புக்கு அடையாளம்.**

ஒரு மனிதன் உள்ளான மனந்திரும்புதலை அடையும் பொழுது அந்த உள்ளான மனந்திரும்புதலுக்கு ஞானஸ்நானம் வெளிப்படையான அடையாளமாகும். கிறிஸ்துவை அவன் விசுவாசித்து ஏற்றுக் கொண்டவுடனே அவனுக்குள் புதுவாழ்வு, புதிய ஜீவன் கிரியை செய்யவாரம்பிக்கிறது. அவன் கிறிஸ்தவனாக விரும்புகிறான். ஞானஸ்நானம் பெற்று கிறிஸ்தவன் என்று சாட்சியிட தூண்டப்படுகிறான். இந்த உள்ளான அகத்தூண்டலே அவன் கிறிஸ்துவை முற்றிலுமாக ஏற்றுக் கொள்ளவும் தன்னை முற்றிலும் ஒப்புக் கொடுக்கவும் அவனை நடத்துகிறது. அவன் எல்லோருக்கும் முன்பாக முழுகி ஞானஸ்நானம் பெற்று இயேசுவை தன்னரசினால் அறிக்கை செய்கிறான். ஞானஸ்நானத்தின் மூலமாக அவன் மறுபிறப்பு அடைகிறான். ஒருவன் ஜலத்தினாலும், ஆவியினாலும் மறுபடியும் பிறவாவிட்டால் தேவனுடைய ராஜ்யத்தை காண மாட்டான் அதற்குள் பிரவேசிக்க மாட்டான் என்று இயேசு சொன்னார் (யோ. 3:3,5). ஆனபடியினால், ஞானஸ்நானமும், பரிசுத்த ஆவியின் அபிஷேகமும் ஒருவன் மறு பிறப்படையச் செய்கிறது. உள்ளான பிறப்புக்கு ஞானஸ்நானம் வெளிப்படையான அடையாளமாகும்.

**2. ஞானஸ்நானம் கர்த்தரின் கட்டளை:**

அது சுத்திகரணமாகும். விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான். விசுவாசியாதவனோ ஆக்கினைக்குள்ளாக தீர்க்கப்படுவான். விசுவாசித்து ஞானஸ்நானம் பெறாதவன் ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படுவான் என்று இறைவனாகிய இயேசு சொன்னார். இது கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் கட்டளை. அவர் சீஷர்களுக்கு கடைசியாக தாம் இந்த உலகத்தை விட்டு பரலோகத்திற்கு எழுந்தருளிப் போகும்போது அவர்களை அழைத்து அவர்களுக்கு கொடுத்த கட்டளை. நீங்கள் உலகமெங்கும் புறப்பட்டு போய் சகல ஜாதிகளையும் சீஷராக்கி பிதா, குமாரன், பரிசுத்த ஆவியின் நாமத்தினாலே அவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுத்து நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவற்றையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள். இதோ உலகத்தின் முடிவு பரியந்தம் சகல நாட்களிலும் நான் உங்களுடன்கூட இருக்கிறேன் (மத். 28:18)

ஞானஸ்நானம் யோவானால் ஆரம்பிக்கப்பட்டது. இயேசு கிறிஸ்துவும் யோவானிடமே ஞானஸ்நானம் பெற்றுக்கொண்டார். இயேசு கிறிஸ்துவினுடைய ஆரம்ப சீஷர்கள் எல்லோருமே யோவானின் ஞானஸ்நானத்தை பெற்றவர்களாகும். கர்த்தராகிய இயேசு கிறிஸ்து தம் சீஷர்களைக் கொண்டு ஞானஸ்நானம் கொடுத்து வந்தார். (யோ. 3:22;4:13).

மனந்திரும்பி, தேவனை விசுவாசித்து பாவங்களை அறிக்கை செய்து ஞானஸ்நானம் பெற்றுக்கொள்ள வேண்டும். அப்படி பெற்றுக் கொள்கிறவர்களுக்கு பாவ மன்னிப்பு உண்டாகும். அவர்கள் தேவனுடைய ராஜ்யத்தில் பிரவேசிக்கிறார்கள் (மத். 3:5,6; மாற். 1:4,5; மத். 21:28-35). ஞானஸ்நானத்தைத் தள்ளிப் போடுகிறவர்கள் தங்கள் ஆத்துமாவுக்குக் கேடு உண்டாக்குகிறார்கள்.

இப்படி எல்லா நீதியையும் நிறைவேற்றுவது நமக்கு அவசியம், ஏற்றது என்று இயேசுவே சொல்லியுள்ளார் என்றால்

நமக்கு அது எவ்வளவோ அவசியமாகும் (மத். 3:15). கிறிஸ்துவை விசுவாசித்து சீஷர்களாவதற்கு ஞானஸ்நானம் அவசியம். மேலும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்து சீஷர்களுக்கு ஞானஸ்நானம் கொடுக்க கட்டளையிட்டுள்ளார் (மத். 28:18,19).

3. ஞானஸ்நானம் அடக்கமாகும்.

ஞானஸ்நானம் பழைய மனிதனை அடக்கம் பண்ணுதலாகும். மரித்து போன மனிதனை அடக்கம் பண்ணுகிறோம். அப்படியே மனந்திரும்பிய மனிதனுக்கு ஞானஸ்நானம் கொடுக்கப்படுகிறது. மதம் மாற்றமல்ல, மன மாற்றம் அவசியம். மதம் மாற்ற மனிதன் தடைச் சட்டம் கொண்டு வரலாம். அரசாங்கத்தை தாண்டி மத மாற்ற தடைச் சட்டத்தை இயற்றலாம். பலவிதத்திலும் எதிர்க்கலாம். அதனால் யாரும் கிறிஸ்தவர்களாக மாட்டார்கள் என்று சிலர் நினைக்கிறார்கள் அது மிகவும் தவறு. ஞானஸ்நானமானது மத மாற்றமல்ல, மன மாற்றமே. மனம் புதிதாகிறதை தொடர்ந்து ஞானஸ்நானம் அருளப்படுகிறது. ஒரு மனிதன் மனமாறுகிறதற்கு அல்லது மனந்திரும்பி பாவத்தை விடுகிறதை யாரும் தடை செய்ய முடியாது.

இறைவனுடைய வார்த்தை ஒருவனிடம் போகும்போது தேவன் அவனில் மனந்திரும்புதலை அருளுகிறார். அதை ஒரு சட்டம் கொண்டோ, பயமுறுத்தியோ யாரும் தடுக்க முடியாது. ஒவ்வொரு மனிதனுக்கும் மனம் உண்டு. அந்த மனம் அவனுக்கே சொந்தம். அதற்கு அவனே ராஜா, வேறொருவரோ, அரசாங்கமோ, சட்டத்தால் மனதை அடக்கி வைக்க முடியாது இப்படியே பாவத்தை விட்டு மனந்திரும்புகிற மனிதன் ஞானஸ்நானம் பெற்றுக் கொள்கிறான். இது தெய்வீக செயலாகும். பழைய மனிதன் தண்ணீரில் அடக்கம் பண்ணப்படுகிறான். இப்பொழுது அவன் புதிய மனிதன் ஆகிறான். பழைய மனிதனை அடக்கம் பண்ணுவதே ஞானஸ்நானம். இவ்விதமாய் பழைய மனிதன் ஒழிந்துபோனான்.

பாவத்துக்கு மரித்தலே ஞானஸ்நானம். பாவத்துக்கு மரித்த நாம் அதிலே எப்படி பிழைப்போம் (ரோ. 6:1). சிலர், சரியாக மரிக்காதவர்களை அடக்கம் பண்ணுகிறார்கள். சில பெயர்க் கிறிஸ்தவ ஸ்தாபனங்களில் இருக்கிற மக்கள் தெய்வீகசெய்தியை கேட்டதும் மனந்திரும்பி, அவர்கள் மகிழ்ச்சியடைகிறார்கள். ஆனால், அவர்கள் உடனே ஞானஸ்நானம் பெற்றுக் கொண்டு வேறுபாடு ஜீவியம் உடையவர்களாய் மாறவேண்டும்.

அப்படியில்லாமல் நாங்கள் இங்கே இருந்து இங்கே உள்ளவர்களை இரட்சிக்கப் போகிறோம் என்று இவ்விதமான பெயர்க் கிறிஸ்தவ ஸ்தாபனங்களில் இருந்து கொண்டு ஊழியம் என்றும், பலர் கவிசேஷ ஊழியம் என்றும் செய்ய ஆரம்பிக்கிறார்கள். கொஞ்ச நாளிலே இவர்கள் நாற ஆரம்பித்துவிடுவார்கள்.

மனந்திரும்பின மனிதனை அல்லது மரித்த மனிதனை உடனே அடக்கம் பண்ண வேண்டும். அவன் ஞானஸ்நானம் பெற வேண்டும். இல்லையென்றால் அவன் நாற்றமடைவான். மறுபடியும் அவன் பழைய பாவத்திலே விழுந்து போவான். பெயர்க் கிறிஸ்தவ ஸ்தாபனங்களில் இருக்கிற மக்கள் உடனே வேறுபட்டு தேவனை ஆராதித்து சேவிக்காதபடியினால் விழுந்து போன அநேகர் உண்டு. அவர்களுடைய வாழ்க்கை மறுபடியும் நாறும்.

4. ஞானஸ்நானம் கிறிஸ்துவோடு கூட ஐக்கியப்படுத்துகிறது.

நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து நம்முடைய பாவங்களுக்காக, நமக்காக 1900 வருஷங்களுக்கு முன் இவ்வுலகத்தில் வந்து மரித்து அடக்கம் பண்

ணப்பட்டு உயிர்த்தெழுந்தார். அதை இப்பொழுது விசுவாசிக்கிற நமக்கு அது எவ்விதமாக பலிதமாகிறது என்றால் அது ஞானஸ்நானத்தினாலே. ஞானஸ்நானம் என்பது ஒரு மனிதனை கிறிஸ்துவுக்குள்ளாக்குவதாகும். சபைக்கு சபை ஒரு ஞானஸ்நானமல்ல. ஒருவன் இயேசு கிறிஸ்துவை விசுவாசிப்பதில் மூன்று படிகளுண்டு.

1. இயேசு கிறிஸ்து எனக்காக என்னுடைய பாவங்களுக்காக, மரித்தார் அடக்கம் பண்ணப்பட்டார் உயிர்த்தெழுந்தார் என்று விசுவாசிப்பதாகும்.

2. எனக்காக அவர் மரித்த பொழுது நானும் மரித்தேன், அடக்கம் பண்ணப்பட்டேன், உயிர்த்தெழுந்தேன் என்று பிதாவானவர் ஏற்றுக்கொண்டார். அதை நானும் விசுவாசிக்கிறேன், ஏற்றுக்கொள்கிறேன். அவரோடுகூட மரித்தேன் அடக்கம் பண்ணப் பட்டேன், உயிர்த்தெழுந்தேன் என்பதற்கு அடையாளமாக முழுகி ஞானஸ்நானம் எடுத்துக் கொள்கிறேன் என்று ஞானஸ்நானம் பெற்றுக் கொள்வது.

3. இனி நானல்ல, கிறிஸ்துவே என்னில் ஜீவிக்கிறார். மரித்தேன், இப்பொழுது பிழைத்திருக்கிறேன். கிறிஸ்துவுக்காக, எனக்காக மரித்து உயிர்த்தெழுந்தவருக்காக பிழைத்திருக்கிறேன் என்பதற்கு அடையாளமாக தண்ணீரிலிருந்து நான் வெளியே வந்துள்ளேன் என்று தன்னுடைய ஜீவியக்காலம் முழுவதும் சுவிசேஷத்தைக் கைக்கொள்வதாகும் (1 கொரி. 15:1-2). இதுவே பூரண சுவிசேஷமாகும்.

சுவிசேஷத்தை விசுவாசிப்பது மாத்திரமல்ல, அதில் நிலைத்திருக்க வேண்டும். அதைக் கைக்கொள்ள வேண்டும். அப்படியில்லாவிட்டால் இரட்சிக்கப்பட மாட்டார்கள். சிலர் இயேசு கிறிஸ்துவை விசுவாசிப்பார்கள், இரண்டாவது படியைக் கைக் கொள்ளமாட்டார்கள் (ஞானஸ்நானம் எடுக்கமாட்டார்கள்). சிலர் இரண்டாவது படியைக் கைக்கொள்வார்கள், மூன்றாவது படியைக் கைக்கொள்ளமாட்டார்கள், அதாவது ஞானஸ்நானம் எடுப்பார்கள். ஆனால் கர்த்தருக்கென்று, அவருடைய வார்த்தையின்படியான ஜீவியத்தை செய்யமாட்டார்கள். அப்படியென்றால், அவர்கள் சுவிசேஷத்தைக் கைக்கொள்ளவில்லை என்றர்த்தம்.

ஞானஸ்நானம் எடுத்து விட்டோம், இனி நமக்குக் கவலையில்லை, நான் எப்படியும் ஜீவிப்பேன், நான் தடுக்கி விழுந்தாலும் பரலோகத்தில்தான் விழுவேன் என்பதுபோல தங்கள் மனம் போல ஞானஸ்நானம் பெற்ற பலர் ஜீவிக்கிறார்கள் அது தவறு. அவர்கள் சுவிசேஷத்தை கைக்கொள்ள வேண்டும், இல்லையென்றால் இரட்சிக்கப்படமாட்டார்கள் (பூரண இரட்சிப்பு, சரீர மீட்பு அடையமாட்டார்கள்) (1 கொரி. 15:1.2).

5. ஞானஸ்நானம் - சுத்திகரணமாகும்.

பரிசேயருக்கும், யோவானின் சீஷருக்கும் சுத்திகரிப்பைக் குறித்து வாக்குவாதம் உண்டாயிற்று (யோ. 3:23). மனந்திரும்பி, கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை தெய்வமாகவும் ஆண்டவராகவும் ஏற்றுக் கொள்கிறவர்களுக்கே புதிய ஏற்பாட்டின் ஞானஸ்நானம் கொடுக்கப்படுகிறது. அது பாவமன்னிப்புக்கென்று கொடுக்கப்படுகிறது (அப். 2:38). நீங்கள் ஒவ்வொருவரும் மனந்திரும்பி பாவமன்னிப்புக்கென்று இயேசு கிறிஸ்துவின் நாமத்தினால் ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ளுங்கள். ஒரு மனிதன் இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து எவ்வளவுதான் ஜெபம் பண்ணினாலும் அவனுக்கு பாவ மன்னிப்பு உண்டாவது ஞானஸ்நானத்தின் போதே. அப்பொழுதுதான் அவன்(ள்) தன் பாவங்களை முறையாக அறிக்கை பண்ணி தன்னை சுத்திகரித்துக் கொண்டு ஆத்துமாவையும், சரீரத்தையும் பரிசுத்தப் படுத்துகிறான்(ள்). ஆத்துமாவை மனந்திரும்புதல், விசுவாசம், விசுவாச

அறிக்கை, பாவ அறிக்கை மூலமும், சரீரத்தை தங்கம், வெள்ளி, பொன், செம்பு, இரும்பு, முத்து, இரத்தினங்கள் ஆகிய கை விலங்கு, கால் விலங்கு, விரல் விலங்கு, மூக்கு விலங்கு, காது விலங்கு, கழுத்து விலங்கு, பூநால், தாயத்துகள், கருப்பு, சிவப்பு வெள்ளைக் கயிறுகள், பொட்டு, பூ, லிப்ஸ்டிக் இவைகளைப் போன்ற பழைய மனிதனுக்குரியவைகளை களைந்து தன்னை சுத்திகரித்துக் கொள்கிறான்(ள்). அதற்கு முன்னால் அவன்(ள்), கடவுளிடம் தன்னை ஒப்புக் கொடுத்து கடவுளிடம் எவ்வளவுதான் ஜெபம் பண்ணினாலும் அது பாவத்தை ஒத்துக் கொள்வதேயாகும். அந்த ஜெபத்தை கேட்டு கர்த்தர் ஓரளவு சமாதானத்தை கொடுப்பார். ஆனால் பாவ மன்னிப்பு உண்டாகாது. மனந்திரும்புதலின் கனி வேண்டும். அப். பவுல் சவுலாயிருக்கும்போதே தமஸ்குவுக்கு போகும் வழியில் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை வழியிலே தரிசித்து, மனந்திரும்பி அவரை விசுவாசித்து தன்னை சுயமாய் இறைவனுக்கு ஒப்புக்கொடுத்தார். ஆண்டவரே நான் என்ன செய்ய சித்தமாயிருக்கிறீர்? என்று அவர் தன்னை சமர்ப்பித்ததின் மூலமாக இதை நாம் அறிகிறோம். அவருக்கு தேவாலோசனை உண்டாயிற்று. அவர் பட்டணத்தில் போய் மூன்று நாள் உபவாசித்து ஜெபித்தார் (நன்றாய் பாவ அறிக்கை செய்து). அதையும் பக்தனாகிய அனனியா வந்து, தலையில் கைவைத்து குணப்படுத்தி சகோதரனாகிய சவுலே, இப்பொழுது நீ தாமதிக்கிறதென்ன? நீ எழுந்து ஞானஸ்நானம் பெற்று உன் பாவங்கள் போகக் கழுவப்படு என்றார். உடனே அவன் எழுந்து ஞானஸ்நானம் பெற்றான் என்று எழுதப்பட்டுள்ளது (அப். 22:16; 9:17,18).

ஆதலால், ஒரு மனிதனுடைய பாவங்கள் முதலாவது மன்னிக்கப்பட்டு கழுவப்படுவது ஞானஸ்நானத்தின் போதே (அப். 2:38; 22:16; மாற். 1:5; மத். 3:5,6).

**6. ஞானஸ்நானம் ஒருவனை கிறிஸ்துவின் சபையின்(சரீரத்தின்) அங்கமாக்குகிறது.**

ஏனெனில், உங்களில் கிறிஸ்துவுக்குள்ளாக ஞானஸ்நானம் பெற்றுக்கொண்டவர்கள் 'எத்தனை பேரோ அத்தனை பேரும் கிறிஸ்துவை தரித்திருக்கிறீர்களே. அப்படியென்றால், ஞானஸ்நானம் பெற்றவர்கள் எத்தனைபேரோ அத்தனை[பேர்கள் மாத்திரம் கிறிஸ்தவர்கள் (கலா. 3:27). ஞானஸ்நானம் கிறிஸ்துவுக்குள்ளான ஒரே சரீரமாக்குகிறது (1கொரி. 12:13). ஆம், ஞானஸ்நானத்தின் மூலமே திருச்சபையின் அங்கமாகிறான். தண்ணீர் ஸ்நானத்தினால் காணப்படுகிற சபையின் அங்கமாகிறான். பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தினால் காணப்படாத மறை உடலாகிய (Invisible body of Christ) கிறிஸ்துவின் சரீரத்தின் அங்கமாகிறான். ஞானஸ்நானம் பெறாதவன் கிறிஸ்தவனல்ல (கலா. 3:27; யோ. 1:12).

நீங்கள் விசுவாசிகளான போது எந்த ஞானஸ்நானத்தைப் பெற்றீர்கள்? என்றே அப். பவுல் கேட்டார். இதோ, தண்ணீர் இருக்கிறதே ஞானஸ்நானம் பெறத் தடை என்ன என்று கந்தாகே என்பவனது மந்திரி கேட்டார் (அப். 19:17; 8:36-38). நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவும் யோவான் கொடுத்த ஞானஸ்நானம் மனுஷரால் உண்டாயிற்றோ. தேவனால் உண்டாயிற்றோ என்று கேள்வி கேட்டார். தேவனால் உண்டாயிற்று என்று பரிசேயரும் அறிந்திருந்தபடியினால் (மத். 21:25,26) ஞானஸ்நானம் எவ்வளவு முக்கியமானது என்று நாம் அறிகிறோம்.

**7. ஞானஸ்நானம் உடன்படிக்கையாகும் (ஒப்பந்தம்)**

உலகத்தில் பல ஒப்பந்தங்கள்: வியாபார ஒப்பந்தம், வீடு, மனை, நிலம் வாங்குகிறதிலும், விற்பதிலும், விவாக ஒப்பந்தங்களையும் பார்க்கிறோம். அவ்விதமாகவே ஒரு விசுவாசி இயேசுவுடன் ஞான

ஸ்நான உடன்படிக்கையினால் இணைக்கப்படுகிறான். இந்த ஒப்பந்தம் மரண பரியந்தம் (விவாக ஒப்பந்தம் போல்) செல்லும். இந்த உடன்படிக்கை நல்மனச்சாட்சியோடு தண்ணீரில் மூழ்கி செய்யப்படுகிறது. அதை நடப்பிக்கிறவரும் ஒரு ஆசாரியனே (1 பேது. 3:21). அது முதற்கொண்டு இவன் ஞான மணவாட்டியாகவும், கிறிஸ்து ஞான மணவாளனாகவும் மாறுகிறார்கள். இது ஆசாரியன் முன் வாக்குக் கொடுத்து ஞானஸ்நானம் பெறுவதாகும். ஞானஸ்நானம் யார் கொடுக்க வேண்டும், யாருக்குக் கொடுக்கப்பட வேண்டும், எப்படி? என்பதை பார்ப்போம்.

(தொடரும்)

"ஞானஸ்நானத்திலே — — அவரோடேகூட எழுந்தவர்களாகவும் இருக்கிறீர்கள்" கொலோ. 2:12.

# வேத பாடம்

*(தொடர்ச்சி)*

### எண்ணாகமம்

### எண். 16:23,24.

கோராகு, தாத்தான், அபிராம் கூட்டத்தை விட்டு விலகி நிற்கும்படி ஜனங்களுக்குச் சொல்ல கர்த்தர் கட்டளையிட்டார். ஆம், துஷ்ட மனுஷர்களின் பாவங்களின் பங்கை அவர்கள் அனுபவிக்க துஷ்டர்களை விட்டு தேவ ஜனங்கள் விலகி இருக்க வேண்டும்.

### எண். 16:25-31.

கோராகு, தாத்தான், அபிராம் குடும்பத்தை விட்டு விலகும்படி மோசே சொன்னவுடன் ஜனங்கள் விலகிக் கொண்டார்கள். மேலும் மோசே சொன்னார்: "கடவுள் என்னை அனுப்பியிருக்கிறார், நான் என் சுய இஷ்டத்தின்படி இவைகளைச் செய்யவில்லை என்பதை தேவன் இப்பொழுது நிரூபிக்கப் போகிறார். எல்லா மனிதரும் சாவது போல் இவர்கள் சாவதில்லை. விசித்திர பயங்கரமாயிருக்கும் இவர்களுடைய சாவு. இதன் மூலம், துஷ்ட மனிதர்கள் இறைவனை அவமதித்தார்கள் என்பதை ஜனங்கள் எல்லாரும் அறிந்து கொள்வீர்கள். தேவன் ஒரு புதிய காரியத்தை செய்வார்" என்றார். மற்றவர்கள் எல்லாரும் கோராகு, தாத்தான், அபிராம் கூட்டத்தை விட்டு விலகிக்கொண்டார்கள். இப்படி மோசே சொன்னவுடனே கோராகு, தாத்தான், அபிராம் ஆகியோரும், அவர்கள் கூடாரத்தோடு அவர்கள் குடும்பங்களும், பொருட்களும் கூட பூமியால் விழுங்கப்பட்டது. பூமி திடீரென்று பிளந்து அவர்களையும், அவர்கள் கூடாரங்களின் பொருட்களையும், அவர்களோடு சேர்த்து எல்லா வற்றையும் பூமியானது விழுங்கிப் போட்டது. இவ்விதமாய் அவர்கள் சபையின் நடுவிலிருந்து அழிந்தார்கள்.

### எண். 16:35.

தூபங்காட்டும் 250 பேரையும் கர்த்தருடைய சமூகத்திலிருந்து அக்கினி புறப்பட்டு வந்து பட்சித்துப் போட்டது. இப்படி சபை கூப்பிட்டு விடும்போது

வராதவர்களும், தள்ளப்பட்டவர்களும், துணிந்து தேவ ஊழியம் செய்கிறோம் என்கிறவர்களும், சுய ஆவியால் தூண்டப்பட்டு ஊழியம் பண்ணுகிற எல்லாருக்கும் இவ்விதமாகவே சம்பவிக்கும். இவர்களுடைய மரணங்கள் இயற்கை மரணமாக இல்லாமல் சாபகரமான மரணத்தை அடைகிறார்கள். இவர்கள் துணிகரக்காரரும், மகத்துவங்களைத் தூஷிக்க அஞ்சாதவர்களும், பிடிக்கப்பட்டு அழிக்கப்படப் போகிற மிருகங்களுக்கு ஒப்பாய் இருக்கிறார்கள். மனிதனுக்கு தேவ பயம் இயற்கையாகக் கிடையாது. தேவ பயம் படிப்பிக்கப்பட வேண்டும். தேவனைப் பற்றிய பயம், பெரியோரைப் பற்றிய பயம் மனிதனுக்கு வேண்டும். அப்படி தேவ பயம் இல்லாதவர்களை விட்டு ஜனங்கள் விலகிவிட வேண்டும் (34).

எண். *16:36-40.*

இவ்விதமாக, துன்மார்க்கர் தண்டிக்கப்பட்ட பொழுது அவர்கள் கலகம் செய்து தேவனால் நியாயத் தீர்ப்படைந்தார்கள் என்பதை ஜனங்கள் நினைவு கூர்ந்து கொள்ளும்படியாக, தூபங்காட்ட வந்தவர்களுடைய தூபகலசங்களை எடுத்து தகடுகளாக அடித்து, அந்தத் தகடுகளை வெண்கல பலிபீடத்தின் மேல் அடிக்கச் சொன்னார். தேவனால் அழைக்கப்படாத தள்ளப்பட்டவர்கள் ஊழியம் செய்யக் கூடாது. ஊழியம் செய்ய தெய்வீக அழைப்பு வேண்டும் என்பதை பலிபீடத்தின் மேல் அடிக்கப்பட்ட தகடு எப்பொழுதும் இஸ்ரவேலர்களுக்கு ஞாபகார்த்தமாயிருந்தது. ஆரோனுடைய குமாரனாகிய எலெயாசார் அந்த வெண்கல தூப கலசங்களை எடுத்து தகடுகளாக அடித்து பலிபீடத்தின் மேல் தகடாக அடித்தார்.

எண். *16:41-43.*

மறுபடியும் இஸ்ரவேலர்கள் முறுமுறுத்து கர்த்தருடைய ஜனங்களை மோசேயும் ஆரோனும் கொன்று போட்டதாக எதிர்ப்பு தெரிவித்தார்கள். துன்மார்க்கர்களை கொன்றுபோட்டது கடவுளாகும். ஆனாலும் தெய்வீகக் கிரியைகளை உணராத பின்மாற்றக்காரர்கள் தேவனுடைய மனிதர்களை தூஷிப்பார்கள் என்பதற்கு இது சரியான அடையாளம். உடனே கர்த்தருடைய மகிமை ஆசரிப்பு கூடாரத்தை மூடிற்று. மோசேயும், ஆரோனும் கூடாரத்திற்கு போனார்கள். அப்பொழுது இறைவன் மோசேயிடம்

## பரிசுத்தவிவாகம்

| மணமகன் | மணமகள் | இடம் | காலம் |
|---|---|---|---|
| Bro. சகரியா | Sis. ரோசி | கொடைக்கானல் | 9-3-94 |
| Bro. செல்வின் ஐசக் | Sis. ஜோதி | கோயமுத்தூர் | 23-3-94 |
| Bro. ரூப சிங் | Sis. ஜெபரூபி | வள்ளியூர் | 14-4-94 |
| Bro. நெகேமியா | Sis. நகோமி | முத்துசாமிபுரம் | 20-4-94 |

இந்த கீழ்ப் படியாதவர்களை நான் அழித்துப் போட்டு உன்னைப் பெரிய ஜாதியாக்குவேன் என்றார். ஆனால் மோசே தேவனை நோக்கி ஜெபம் பண்ணினார். இப்படி ஒரு மனிதன் பாவஞ் செய்திருக்க எல்லோரையும் அழிப்பீரோ என்று.

**எண். 16:44**

கர்த்தருடைய சந்நிதானத்திலிருந்து வாதை புறப்பட்டது. அந்த வாதையினால் 14,700 பேர் செத்தார்கள். உடனே மோசே ஆரோனை நோக்கி, கர்த்தருடைய சந்நிதானத்தில் இருந்து வாதை புறப்பட்டது, நீ தூப கலசத்தை நிரப்பிக் கொண்டு ஜனங்களுக்காக பாவ நிவிர்த்தி செய் என்று கட்டளையிட்டார். உடனே ஆரோன் தூப கலசத்தில் தூபத்தை ஏற்றி ஜனங்கள் மத்தியில் ஓடி செத்தவர்களுக்கும் உயிருள்ளவர்களுக்கும் நடுவே நின்று தூபமிட்டார். தேவனை நோக்கி வேண்டிக் கொண்டார். அப்பொழுது தேவன் ஜெபத்தைக் கேட்டு வாதையை நிறுத்தினார். பரிசுத்தவான்களின் ஜெபத்தினால் சிலர் பிழைத்திருக்கிறார்கள். சில துன்மார்க்கரான பாவிகள் துணிகரமாக நடக்கிறார்கள். தன் அக்கிரமத்தில் துணிந்து நடக்கிறவனுடைய மயிருள்ள உச்சந்தலையை தேவன் உடைப்பார். அவர்களுடைய முடிவு சீக்கிரம் வரும், நான் பாவம் செய்திருந்தால் கடவுள் என்னை கொல்லட்டுமே என்று சொன்னவர்கள் பரிதாபமாக செத்ததை நாம் பார்த்திருக்கிறோம்.

இவ்வித இடும்பு பேசுகிறவர்களும், இறைவனை தூஷிக்கிறவர்களும் பரிதாபமாக சாகிறார்கள். இவர்களுடைய முடிவைப் போலவே மறுமையில் இவர்கள் பங்கும் இருக்கும். பரிசுத்தவான்களுக்கு விரோதமாக தூஷித்தவர்கள் வாதையினால் கொல்லப் பட்டார்கள். அந்த வாதையினால் செத்தவர்கள் 14,700 பேர் என்று நாம் பார்க்கிறோம். கிட்டதட்ட 15,000 பேர்கள் மொத்தத்தில் இறந்திருக்கிறார்கள். ஆனபடியால் தேவஜனங்கள் கீழ்படியாதவர்களுடன், தள்ளபட்டவர்களுடன், ஓடிப்போனவர்களுடன் துஷ்டர்களோடு ஐக்கியம் வைக்கக்கூடாது, அவர்களை விட்டு விலக வேண்டும். துஷ்டர்களோடு ஐக்கியம் தொடர்பு வைத்துக் கொள்ளக்கூடாது என்று இறைவன் கட்டளையிட்டிருக்கிறார். (எண். 16:45; 20:24; 14:5-12; யாத். 32-33-35)

[தொடரும்]

"இவர்கள் காயீனுடைய வழியில் நடந்து, பிலேயாம் கூலிக்காகச் செய்த வஞ்சகத்திலே விரைந்தோடி, கோரா எதிர்த்துப் பேசின பாவத்திற்குள்ளாகி, கெட்டுப் போனார்கள்". யூதா 11.

# ஆதியிலே தேவன்

பரிசுத்த வேதாகமம் இறைவனை மனுஷனுக்கு வெளிப்படுத்துகிறது. மனுஷன் நடக்க வேண்டிய இறைவனுடைய வழிகளைப் போதிக்கிறது. வேதாகமத்தின் ஆரம்பமே, ஆதியிலே தேவன் (ஆதி. 1:1) என்று துவங்குகிறது. அதாவது முதலாவது தேவன். மனிதன் சுகித்திருக்க, செழித்திருக்க, முதலாவது தேவன் என்று மனிதன் தேவனை முதன்மையாக்க வேண்டும்.

இஸ்ரவேலருக்கு இறைவன் கொடுத்த 10 கற்பனைகளில் முதலாம் கற்பனை சிருஷ்டி கர்த்தாவாகிய என்னையன்றி உனக்கு வேறே தேவர்கள் உண்டாயிருக்க வேண்டாம் என்பதே (யாத். 20:3). உலகத்தில் கர்த்தாக்கள், தேவர்கள் பலர் உண்டு. எல்லாரிலும் முதலானவர் தெய்வமே. அவர் சர்வவல்ல தேவன் (Almighty God). அதன் அர்த்தம் எல்லாவற்றிற்கும் போதுமானவர் என்பது. இவரை விடுகிறவன் ஜீவ தண்ணீரூற்றை விடுகிறான். யாருக்கு வேதனை, யாருக்கு துன்பம், யாருக்கு பாதுகாப்பில்லை, யாருக்கு அழிவு. அந்நிய தேவனை நாடி பின்பற்றுகிறவர்களுக்குத்தானே (சங். 16:4). மனிதனுடைய வேதனைகள் நீங்க முதலாவது தேவன்—மற்றபடி அந்நிய தெய்வங்களை நீ போ! என்று அருவருக்க வேண்டும்.

இயேசு காண்பித்த முதலாவது பிரதான கற்பனை உன் தேவனாகிய கர்த்தரிடத்தில் உன் முழு இருதயத்தோடும், உன் முழு மனதோடும், உன் முழு ஆத்துமாவோடும் அன்பு கூர வேண்டும் என்பதே (மத். 22:36,37). அநேக குடும்பங்களில் சமாதானம் கிடையாது. என் மனைவி என்னில் அன்பாக இல்லையே என்று புருஷன் ஏங்குகிறான், என் கணவன் என்னை நேசிக்கவில்லை என்பது மனைவியின் குறைபாடு. என் பிள்ளை என்னை வெறுக்கிறான் என்பது பெற்றோரின் வேதனை. முதலாவது இறைவனில் அன்பு கூர வேண்டும். அன்பு கொடுத்தால் அன்பு கிடைக்கும். இறையன்பு இருந்தால், சத்துருக்கள் கூட அவனிடம் அன்பாக இருப்பார்கள். முதலாவது தேவன்—என்று யார் அவரில் அன்பு கூருகிறார்களோ, அவர்கள் வீடு அன்பும் சமாதானமும் நிறைவுமாக இருக்கும்.

பலருக்கு கவலை, கவலை மேல் கவலை, ஒரே கவலை, நான் என்னத்தை உண்பேன், என்னத்தை உடுப்பேன், பிற்காலம் என்னவாகுமோ என்று பெருங்கவலை கொண்டு, தேடுகிறார்கள், ஓடுகிறார்கள். ஆனாலும்,

அவர்களின் கவலை போகவே இல்லை. கழுதையின் வாலில் சிறுவன் ஒருவன் பனை ஓலையைக் கட்டி, அதை தட்டி விட்டான். சத்தம் உண்டானதும் கழுதை ஓடிற்று. சத்தம் இன்னும் கூடினது. ஐயோ எதிரி பக்கத்தில் வந்து விட்டான் என்று இன்னும் வேகமாக ஓடினது. இன்னும் சத்தம் அதிகமானது. வேகம் கூடக் கூட ஓசையும் அதிகமாயிற்று இதற்கோர் முடிவுண்டா? ஓட்டம் நின்றால் ஒழிய முடிவில்லை. இதைப் போலவே கவலை கொண்டு செல்வத்தைத் தேடினால் கவலையும் பெருகிறது. ஓட்டத்தை நிறுத்து, முதலாவது தேவனுடைய ராஜ்யத்தை தேடு. இவையெல்லாம் உனக்குக் கூடக் கொடுக்கப்படும் (மத். 6:33).

வெளிச்சத்திற்கு முதுகைக் காட்டி நிழலை பிடிக்க முயன்றால் முடியுமா? முன்னே போனால் அதுவும் முன்னே போகும். ஓடினால் அதுவும் ஓடும், அதை விட்டு ஒளியை நோக்கி நடந்தால்; நிழல் தானாய் பின் தொடரும். தேவராஜ்யத்தை நோக்கி ஓடினால், இம்மைக்குரியதும் உன் பின்னே ஓடிவரும். நீ அதைப் பிடிக்கப் போனால் அது உன்னை விட்டு ஓடும். நீ தேவனை பிடிக்க போனால் செல்வம் உன்னை தொடர்ந்து வரும். தேவனுடைய ராஜ்யத்தை தேடு என்று இயேசு சொல்லாமல், முதலாவது தேவனுடைய ராஜ்யத்தைத் தேடு என்றார் இயேசு. நாடு செழித்தால் வீடும் செழிக்கும்.

வாரத்திற்கு ஏழு நாள் உண்டு. அதில் முதல் நாள் ஞாயிற்றுக் கிழமை (ஆதிவாரமு). உனக்கு முதலாவது தேவன் என்றால், வாரத்தின் முதல் நாளில் தேவாலயம்போ (அப். 20:3). சிலருக்கு வயிறுதான் முதலாவது. ஆகையால் விடுமுறையான அந்நாளில் கொழுக்க சாப்பிட நினைத்து, கறிக்கடையில் போய் கியூவில் நிற்பார்கள். ஆறு நாள் வேலை செய்யப் போகிறோமே ஆகையால் முதலாவது நாள் ஓய்வு எடுப்போம், என்று ஓய்ந்து போவர் சிலர். முதலாவது சுகத்தைத் தேடினால் வியாதி வரும். சிலர் அந்த நாளில் அதிக லாபம் வரும் என்றெண்ணி ஆராதனையை, அசட்டை பண்ணி தொழிலுக்கு செல்வர். அப்படிப்பட்டவர்கள் பெருநஷ்டமடைவார்கள். அந்த இடத்திற்குப் போய் விட்டு கோயிலுக்கு போகலாம் என்று சொல்லாதே முதலாவது கோயிலுக்குப் போ.

முதலாவது தேவ சந்நிதானம் போய் வந்தால் அந்த வாரம் முழுவதும் ஆசீர்வாதமாக இருக்கும். செய்கிறது வாய்க்கும்.

முதலாவது தேவன் என்றால், விளைவின் முதற்பலனை தேவனுக்கு கொடுக்க வேண்டும். அதை அவர் ஆத்துமா தேசிக்கிறது. பக்தி உள்ளவன் முதல் அறுப்பின் கனியினால் கர்த்தரை திருப்தியாக்குகிறான் (மீகா. 7:1,2). முதற்பலனை முதலாவது தேவனுக்கு செலுத்துகிறவன், அவரை கனம் பண்ணுகிறான், அவனை அவர் கனம் பண்ணுவார் (நீதி. 3:9).

எனக்கே பற்றாது அப்புறம் எப்படி கொடுக்க என்று அநேகர் தங்கள் குறைச்சலின் நாட்களில் காணிக்கை கொடுப்பதை நிறுத்திக் கொள்வதுண்டு. இவர்கள் ஒருபோதும் நிறைவடைவதில்லை. அப்படிப்பட்டவர்களுக்கு, இன்றைக்கு ரொக்கம் நாளைக்கு கடன் என்று கடையின் வாசலில் தொங்கும் போர்டை போல், இன்னும் தேவை என்கிற பல்லவி எந்நாளிலும் இவர்கள் வாயில், இருக்கும். முதலாவது தேவன் என்றால், முதலாவது தேவ மனிதனை நிறைவு படுத்து, உனக்கு நிறைவு உண்டாகும், தேவைகள் சந்திக்கப்படும் (1 இரா. 17:13).

நம் வாழ்வில் எப்பொழுதும், எல்லாவற்றிலும் முதலாவது தேவனாக இருக்கட்டும். காலையில் எழுந்ததும் முதலாவது தேவனைத் துதி, ஜெபம் பண்ணு. ஒரு காரி

யத்தை செய்யும்முன் முதலாவது ஜெபம் பண்ணு. தேவ தயவை நாடு. ஒரு ஆசீர்வாதம் உண்டானால் முதலாவது தேவனை நினை, அவரை மகிமைப்படுத்து. தேவனுக்கு ஒரு ஸ்தோத்திரகூட்டம் ஏற்பாடு செய். தேவனுக்கு முதலிடம் கொடு.

"என் ஆத்துமாவே, கர்த்தரை ஸ்தோத்திரி; அவர் செய்த சகல உபகாரங்களையும் மறவாதே". சங். 103:2

கவிசேகரம்

# எது அறிவு?

"கனம் பொருந்தியவனாயிருந்தும் அறிவில்லாத மனுஷன் அழிந்து போகும் மிருகங்களுக்கு ஒப்பாயிருக்கிறான்." சங். 49:20

மனிதன் மிருகமல்ல, பறவையல்ல, பாம்பல்ல, பிராணியல்ல, புழுவுமல்ல; மனிதன் இறைவனின் மகோன்னத சிருஷ்டி. மிருகங்கள், பறவைகள், பிராணிகள் கூடவே தன்மையுடன் பிறக்கின்றன. அவைகளுக்கு யாரும் கற்று கொடுக்க தேவையில்லை. அவைகள் தாமாகவும் தாய் பாஷை பேசும், புசிப்புக்கும், குடிப்புக்கும். இனவிர்த்தி செய்ய ஒழுங்கு செய்தால், நிம்மதியாக வாழ்ந்து, இனவிர்த்தி செய்யும் படிந்து போகும். கன்று குட்டி மா என்று கூப்பிடும், ஆட்டுக் குட்டி மே என்று கூப்பிடும், நாய்க்குட்டி லொள் லொள் என்று குரைக்கும், யானை பிளிறும், குதிரை கனைக்கும், பிறந்ததும் தன் ஆகாரம் இன்னதென்று அறிந்து தானாக பால் குடிக்கவும் செய்யும். பறவைகளும், அப்படியே தன் தன் இன குரல் கொடுக்கும். பறவைகள் தன் தன் காலத்தில் பறக்கும், மீன் நீந்தும் ஒருவரும் அவைகளுக்கு கற்றுக் கொடுக்க தேவையில்லை. மனிதனுக்குத் தானாய் முடியாது.

ஆனால் மனிதனைப்பாருங்கள் தன் தன் பாஷையை தானாய் பேசமுடியாது. கற்று கொடுக்கப்பட வேண்டும். படிக்க வேண்டும். நடக்க கைப்பிடித்து பழக்க வேண்டும் ஒரு தமிழ்க் குழந்தையை கன்னடர் வீட்டில் வளர்க்க விட்டால் அதற்கு கன்னடம்தான் வரும் தமிழ்வராது. அப்படியே ஒரு இந்திக் குடும்பத்தில் கொண்டு போய்விட்டால் அக்குழந்தை இந்திதான் பேசும் கன்னடம் வராது மனிதனுக்கு கற்பதினால் மாத்திரமே பாஷையும் எந்தக் கலையுமே வரும். அப்படியே அறிவும். (கற்றுக் கொள்வதினால் வரும்.)

ஆனாலும் மனிதன் விசேஷித்தவன் அவன் கூடவேத்தன்மையுடன் கற்றுத் தேர்ச்சியடையும் விசேஷித்த ஆத்மாவுடையவன். அவன் நாள்தோறும் கடைறக் கற்கவேண்டும். அப்பொழுது தேர்ச்சியடைவான் நன்மை தீமையை பகுத்தறியும் அறிவு ஓரளவு அவனுக்குண்டு. அதனால் நன்மையோ, தீமையோ அவன் செய்யும் போது அவனே பொறுப்பாளி. மனிதர்களில் அநேகர் பெற்றோர் மூலமும், சந்தர்ப்ப சூழ்நிலைகளாலும் முயற்சி பயிற்சியாலும் விசேஷித்தவர்களாக விளங்குகின்றனர் பற்பல துறைகளில் அறிவடைகின்றனர், ஐசுவரியவான்களாகின்றனர், கனமும் மதிப்பும் உயர்வையும் அடைகின்றனர். பெரும்பாலோனோர் ஏழைகளாகவே வசதியின்மை, முயற்சியின்மைகளினால் கனம் பெற பலம் படைக்க முடியாதவர்களாகி விடுகின்றனர். ஆனாலும் அதிலும்

சிலர் அறிவுடையவர்களாக விளங்கு கின்றனர்

உலகில் எவ்வளவோ அறிவு இருக் கிறது. பற்பல துறைகளில் உலகம் அறிவு வளர்ச்சியடைந்துள்ளது. இவைகளெல்லாம் பொதுவான அறிவே. ஆனால் ஒரு மெய்ய றிவு உண்டு. அது இறைவனை பற்றிய அறிவே! கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவைப ற்றிய அறிவே மெய்யறிவு (Revelation). மற்றவையெல்லாம் பொது அறிவு. அது இருக்கலாம் இல்லாவிட்டாலும் தவறொன் றுமில்லை எதெதெல்லாவற்றையும் பற்றிய அறிவும் செல்வமும் கனமும் உடைய மனித னயிருந்தும் அறிவில்லாத மனிதன், தன்னை இரட்சிக்கிறதற்கேற்ற பாவத்திலிருந்து விடுதலையாவதற்குரிய அறிவில்லாதவனுக் கும் மிருகத்துக்கும் வேறுபாடில்லை, வித்தி யாசமில்லை என்கிறார் ஞானி.

ஆனபடியால் மனுமக்களே உங்களை பாவத்திலிருந்தும், கர்ண பாரம்பரியங்க ளிலிருந்தும், சாபத்திலிருந்தும் விடுதலை யாக்கக் கூடிய மெய்யறிவை (ஞானத்தை) உண்டாக்கும் சத்திய வார்த்தைக்கு செவி கொடுங்கள் அந்த ஞானத்தைப் பெற் றுக் கொள்ளுங்கள் என்கிறது சத்திய வேதம் (BIBLE).

இயேசு கிறிஸ்து: இவரே மனுமக்களை பாவத்திலிருந்தும், துன்பதுக்கங்களிலிருந் தும், வியாதியிலிருந்தும், நித்திய அழிவு, தண்டனை (நரகம்) யிலிருந்தும் தப்புவிக்க வல்லவர். "வருத்தப்பட்டு பாரம் (பாவம்) சுமக்கிறவர்களே நீங்கள் எல்லாரும் என் னிடத்தில் வாருங்கள், நான் உங்களுக்கு சமாதானம் தருவேன், இளைப்பாறுதல் தருவேன்" என்கிறார் இயேசு. எனக்கு செவி கொடுக்கிறவனுக்கு மெய்ஞான முண்டு, மெய்ப்பொருளை சுதர்சிப்பார் கள், என்னைக் கண்டடைகிறவன் ஜீவ னைக் கண்டடைகிறான் என்றும் இறை இயேசு சொல்லுகிறார்.

மரித்து பாதாளத்துக்குப் போகும் மிரு கங்களைப் போலிராதேயுங்கள் அதின் பேர் அழிந்து போகிறது. பிடிக்கப்பட்டு அழிக் கப்படுகிற மிருக ஜீவனைப் போலிராதே யுங்கள் (2 பேது. 2:12). புசித்துக் குடித்து இன விர்த்தி செய்து இறந்து போகிற மிருகங்களைப் போல நீங்களும் செத்துப் போவீர்களானால் என்ன பிரயோஜன முண்டு?

இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து மெய் ஞானமடையுங்கள். அப்பொழுது இங்கே கனமுள்ளவர்களாயிருக்கிறதுபோல அங்கும் (மறுமையில்) கனம் பெற்றவர்களா யிருப்பீர்கள். இல்லையென்றால் இம்மையில் மாத்திரம் உங்கள் பங்கைப் பெற்று (சங். 17:14) ஒரு நிமிஷத்திலே அகப்பிலே அழிந்து போய் (சங். 73:18-20) நித்திய அக்கினி [நரகம்] அடைவீர்கள் [2 பேது. 2:9,10].

"கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசி அப்பொழுது நீயும் உன் வீட் டாரும் இரட்சிக்கப்படுவீர்கள்"

அப். 16:31.

## சாட்சி.

கர்த்தருடைய மகத்தான நாமத்திற்கு மகிமை உண்டாவதாக. இந்த சாட்சி நம் தலைமை போதகர் லாசர் ஐயா அவர்களாலே வழிபடுத்தப்பட்டு, நம் புதிய எருசலேம் சபையால் உருப்படுத் தப்பட்டு நம் தேவனாகிய கர்த்தரால்

உண்டானது. "கர்த்தாவே என் அக்கிரமம் பெரிது; உம்முடைய நாமத்தினிமித்தம் அதை மன்னித்தருளும்" (சங். 25:11) என்று ஓலமிடும் வழியையும் சக்தியையும் தந்தது நமது "புதிய எருசலேம் சபை". கர்த்தர் அதைக் கேட்டார், ஜீவன் பிழைத்தது. மாம்சமான அனைவருக்கும் தேவனாகிய கர்த்தருக்கு ஸ்தோத்திரம்.

**பூர்வீகம்:** என் பெயர் சின்னசாமி (இப்போது சாலமோன்) தமிழ் நாட்டில், திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள, கைலாசபுரம் என்ற சிறு கிராமம். விவசாயம், வியாபாரம் என்று வசதியான குடும்பம். உடன் பிறந்தவர்கள் இரண்டு சகோதரர்கள், ஐந்து சகோதரிகள். பூர்வீக இந்துக்கள். தகப்பனாரின் விசுவாசம் புனித அந்தோனியார் கோவிலில் இருந்ததால், பிள்ளைகள் பெயர் அளவில் கத்தோலிக்க மதத்தை தழுவினோம். "பிள்ளைகளே, நீங்கள் விக்கிரகங்களுக்கு விலகி, உங்களைக் காத்துக் கொள்வீர்களாக" (1 யோவா. 5:21) என்ற வேத வாக்கியத்தை அறியாத எல்லா கத்தோலிக்க ஆத்துமாக்களைப் போல் நானும் இருந்தேன்.

**இரண்டு பேரசு:** 1974- ல் கிறிஸ்டி என்ற Protestant குணசாலியான பெண்ணை மாதா கோவிலில் மணமுடித்தேன். இரண்டு ஆண் பிள்ளைகளை தேவன் அருளினார். நான் கத்தோலிக்க சபை. மனைவி Protestant, அவள் தாய் C.P.M. 1978-ல் கோவாவில் Goa Shipyard Company-யில் Purchase officer- ஆக சேர்ந்த பின் இங்கு குடியேறினோம். இங்குள்ள C.P.M. சபையில் தேவனைத் தொழுது கொண்டிருந்தோம்.

**கோவாவில் கொடூரம்:** 1982 - ஆம் வருடம் என் மனைவி மூன்றாவதாக கர்ப்பம் தரித்து இங்கிருந்து ஊருக்கு பிரசவத்திற்காக நண்பரின் காரில் போகும்போது கார் விபத்தில் என் மனைவி 5 மாத நிறை கர்ப்பிணியாக அடிபட்டு, என் கண் முன்னே ஆவியை விட்டாள்.

**பிசாசுகளின் உபத்திரவம்:** சில நாட்கள் சென்று தந்தை இறந்தார். தம்பியின் உடல் நிலை சீர் கெட்டது. பின்பு தான் தெரிந்தது இது செய்வினை கோளாறு என்று. ஊரில், வீட்டில் பேய்கள் நடமாட்டம் அதிகமாயிற்று. என் தம்பி வேளாங்கண்ணியில் மொட்டைப் போட்டான் (நானும் முன்னாளில் மொட்டைப் போட்டேன்) மாந்திரீகம் செய்து பல ஆயிரங்களை செலவு செய்தான். எந்நேரமும் மாதா கோவில்தான் அவன் படுக்கை. இவை ஒரு நாள், இரண்டு நாட்கள் அல்ல, பத்து வருடங்களாக. தன்னுடைய பலவீனத்தினால் மதுவைக் குடித்து அவன் இளவயது வாழ்க்கை பாழானது. கடைசி மூன்று தங்கைகள் நல்ல இடத்தில் திருமணமானது. ஆனால், ஒரு குடும்பமும் பிசாசு பிடிக்கு தப்பவில்லை. எல்லாரும் ஏதாவது ஒரு கிறிஸ்தவ சபையில் இருந்தார்கள்.

**மறுமணம்:** 1992 டிசம்பரில் ஜமிமாசலா என்ற பெண்ணை மறுமணம் செய்தேன். Protestant மார்க்கத்தை சேர்ந்தவள், தன் இளவயதில் கர்த்தரை இறுகப் பற்றிக் கொண்டவள். பரிசுத்தவான்களின் பாதுகாப்பும், புனிதமான சபையின் ஐக்கியமும் இல்லாத போது, பிசாசுகளின் பிடி இறுகிப் போக வாய்ப்புண்டு என்பதற்கு இவள் எடுத்துக்காட்டு.

இளைப்பு, காக்கா வலிப்பு என்று எத்தனையோ நோய்கள் அவளை என்னோடு திருமணமான நாளிலிருந்து பற்றிக் கொண்டது. எதையும் சாப்பிட பயம், என் முதல் மனைவியின் பிள்ளைகளுடன் தினம் போராட்டம், நல்ல வேலை, வீடு வசதியிருந்தும் ஒரு நாள் கூட நிம்மதியாயிருந்ததில்லை. பிசாசு பிடியில் சிக்கி ஒரு நாள் "நிரந்தரமாக போகிறேன்" என்று எழுதி வைத்து விட்டு மதுரைக்கு தன் சகோதரன் வீட்டுக்கு போய் விட்டாள்.

'தேவனைத் தேடு'

# "SEEK GOD"

Regd. No 040088/84
Postal Regd. No. MH BY NE-94/93
Tamil Monthly Magazine

என் மனைவி திரும்ப வந்தாள். திரும்பி வந்து ஒரு பெண் குழந்தையை பெற்று மகிழ்ச்சியாயிருந்தும், அவளுடைய உடல் நிலையிலோ, தினம் உண்டாகும் சண்டை போராட்டத்திலோ ஒரு மாற்றமும் இல்லை. எத்தனையோ முறை "சாகப் போகிறேன்" என்று இரவிலே ரோட்டுக்கு போய் விடுவாள். அழுதுகொண்டு அழைத்துவருவேன். அரிவாள் எடுத்து தன் கையை வெட்ட முயன்றதுண்டு. உடல் நிலையில் முன்னேற்றமில்லாமல், மருந்துகளை மாற்றி மாற்றி தொடர்ந்து சாப்பிட்டுக் கொண்டு வந்தாள். மாத்திரைகள் இல்லாமல் ஒரு நாளும் கூட தாண்டாது.

ஆண்டவரைத் தேடுவதில் அவள் முந்திக் கொண்டாள். C.P.M. சபையிலிருந்து மாதா மாதம் Brothers & Sisters வந்து ஜெபிப்பார்கள். பத்து ஆண்டுகளாக வந்து ஜெபித்துக் கொண்டு செல்லுர்கள். எங்களை பிசாசு பிடியிலிருந்து விலக்குவாரில்லை. 'எனக்கு உண்டான நெருக்கத்திலே கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டு என் தேவனை நோக்கி அபயமிட்டேன், தமது ஆலயத்திலிருந்து என் சத்தத்தை கேட்டார்." சங். 18:6. அது "புதிய எருசலேம் சபையில்" ஆலயமாயிருந்தது.

(தொடரும்)

"அவர் (இயேசு) நன்மை செய்கிறவராகவும் பிசாசின் வல்லமையில் அகப்பட்ட யாவரையும் குணமாக்குகிறவராயும் சுற்றித் திரிந்தார்" அப். 10:38.

## அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்
   25 [புதன்] மே 1994
   23 [வியாழன்] ஜூன் 1994
   22 [வெள்ளி] ஜூலை 1994
2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
   ஆண்டு சந்தா Rs. 15-00
   வெளிநாடு Rs. 100-00

   அனுப்ப வேண்டிய முகவரி:
   CHIEF PASTOR N. LAZAR
   "NEW JERUSALEM CHURCH"
   CHURCH LANE, TILAK NAGAR,
   DARGA ROAD, BHANDUP,
   BOMBAY-400 078. INDIA.
3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.
4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.
5. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை வேண்டுவோர் ரூ. 15-(பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் [Capital Letter] எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by: Chief Pastor N. LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078. Printed at: New Jerusalem Press, Tilak Nagar, Bhandup, Bombay-400 078.

# புதிய எருசலேம் செய்தி

## PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 120 - JUNE '94



"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ரெ)ன்று நீங்கள் அறியீர்கள்... விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்."

- மாற்கு 13 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தேயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்)
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப. 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10:40-43).

CHIEF PASTOR N LAZAR

## இதழின் உள்ளே . . .

# ஆசிரியர் உரை

"எப்படியாவது கிறிஸ்து அறிவிக்கப்படுகிறார் அதினால் சந்தோஷப்படுகிறேன்" என்று அப். பவுல் சொன்னது போல் ஊழியங்கள் நடைபெறுகின்றன. தேவனுடைய சித்தம் என்று ஒன்றுண்டு. தேவனுடைய அனுமதி என்று சில உண்டு; அனுமதி தேவனுடைய பரிபூரண சித்தமல்ல. பிலேயாமுக்கு தேவ சித்தம் வெளிப்பட்டது. ஆனால், அவன் பொருளாசையில் விழுந்து மறுபடியும் மறுபடியும் கேட்டதால் அனுமதி கிடைத்தது. அவனுடைய ஆசையைப் பூர்த்தி செய்யவே அவன் தீவிரமாக இருந்தான். அவனுடைய முடிவு அழிவு. அப்படிப்போல இந்நாட்களில் சிலர் ஊழியம் செய்கிறார்கள். இவர்களில் அநேகர் குற்றவாளிகளும், பொய்யர்களும், திருடினவர்களும், ஓடிப்போனவர்களும் தாங்கள் முன்னிருந்த ஐக்கியத்தில் ஒப்புரவாகாதவர்களும், மன்னிப்பு கேட்காதவர்களுமாகும். அவர்களும் ஊழியம் என்று ஏதோ செய்கிறார்கள். இதெல்லாம் பரிசோதனையின் நாளிலே நிலைநிற்காது. தேவனுடைய சித்தத்தின்படியான ஆசரிய ஊழியமே செழித்து கனி தரும், பலன் கொடுக்கும், நிலைக்கும். இந்நாட்களில் சில துஷ்ட மனிதர்கள், ஸ்திரீகள் சாத்தானால் தூண்டப்பட்டு மக்களைப் பார்த்து நரகத்துக்குப் போங்கள்; புதிய எருசலேமுக்குப் போகாதிருங்கள் என்று சொல்லுகிறார்கள். புதிய எருசலேமுக்குப் போனால் சினிமா பார்க்க முடியாது, பூ பொட்டு வைக்க முடியாது, நகை போட முடியாது, ஜாதியை விட வேண்டியதிருக்கும்; இங்கே நீங்கள் தாராளமாய் நடக்கலாம். புதிய எருசலேமுக்குப் போனால் ஜனங்கள் முற்றும் இரட்சிக்கப்பட்டு விடுவார்கள் என்பதை சாத்தான் அறிந்து சாத்தான் வேதம் ஓதுகிறான். தேவனுடைய திட்டம் தீர்மானம் புதிய எருசலேமே. எல்லா ஜாதிகளும் அதற்குள் ஓடி வருவார்கள், ஓடி வருகிறார்கள். ஏனெனில் இது கர்த்தருடைய பர்வதம். யாக்கோபின் தேவனுடைய ஆலயம். இங்கு கர்த்தரின் வழி போதிக்கப் படுகிறது. மக்கள் அவர் பாதைகளில் நடக்கிறார்கள். ஏனெனில் தேவன் இங்கே இருக்கிறார். வேதமும் கர்த்தரின் வசனமும் வெளிப்படுவதே அதன் இரகசியம். இதுவே திருச்சபை; தேவனால் ஆரம்பிக்கப்பட்டு அங்கீகரிக்கப்பட்ட ஊழியம். இது நிறைவடையும். எல்லோரும் வந்து சேருங்கள்.

கிறிஸ்துவுக்குள்,

(CHIEF PASTOR N. LAZAR)

# சத்திய வேதம்

[தொடர்ச்சி]

**மத்தேயு எழுதின சுவிசேஷம்**
பொருள் : பரலோக ராஜ்யம்
தங்க வசனம் : 27:37

மத்தேயு அப்போஸ்தலர்களில் ஒருவர். இவர் யூத ஜாதியாருக்கென இந்த ஆகமத்தை எழுதியுள்ளார். இது பழைய ஏற்பாட்டிற்கு தகுந்த தொடர்ச்சியே. யூதர் எதிர்பார்த்த மேசியா இயேசு கிறிஸ்துவே என மத்தேயு நிரூபிக்கிறார்.

**மாற்கு சுவிசேஷம்**
பொருள் : பணி விடை
தங்க வசனம் : 10:45

இந்நூல் ரோம சாம்ராஜ்யத்திற்கென இயற்றப்பட்டது. இயேசு நாதர் சர்வ வல்லமை உடையவரென்றும், அற்புதக் கிரியைகளை நடப்பிக்கிறவரென்றும் இந்த சுவிசேஷகர் எழுதியுள்ளார்.

**லூக்கா சுவிசேஷம்**
பொருள் : மனுஷகுமாரன்
தங்கவசனம் 19:10

இவர் அதிக நாகரீகமுள்ளவர்களான கிரேக்கருக்கென தமது நூலை எழுதினர். இயேசு கிறிஸ்துவே மகா ஞானமும் புண்ணியமும் வாய்ந்தவரென போதிக்கிறார் லூக்கா.

**யோவான் சுவிசேஷம்**
பொருள் ஜீவன்
தங்க வசனம் 20:31

ஆதி திருச்சபையாருக்கென இயற்றிய இச்சுவிசேஷத்தின் மூலம் கிறிஸ்துநாதர் தேவாதி தேவன் என்கிற சத்தியம் ஐயமின்றி ருபகாரமாகிறது. வாசிப்போர் அவரை விசுவாசித்து அவர் மூலம் நித்திய ஜீவனை அடைவதே இந்த சுவிசேஷத்தின் பிரதான நோக்கமாகும். (யோவா. 1:4;20:31)

**அப்போஸ்தலர் நடபடிகள்**
பொருள் : சாட்சி பகருதல்
தங்க வசனம் : 1:8

ஆதித் திருச்சபையின் சரித்திர நூல் இது. இவ்வாகமம் சுவிசேஷ நூல்களுக்கு தொடர்ச்சியாய் இருக்கிறது. அப்போஸ்தலர்கள் கொடுத்த சாட்சி ஊழியம் இதில் விவரிக்கப்பட்டுள்ளது.

**ரோமருக்கு எழுதின நிருபம்**
பொருள் : நீதி
தங்க வசனம் : 1:17

கிறிஸ்தவ சுவிசேஷத்தின் சாரம்சமே இந்நூலின் பொருள். ஒரு யூதனோடு சம்பாஷணை செய்யுமாப் போல அப். பவுல் இதை எழுதினர்.

**கொரிந்தியருக்கு எழுதின முதலாம் நிருபம்**
பொருள் : ஞானம்
தங்க வசனம் : 2:7,8

கிரேக்கரது ஞானத்தின் குறைபாடை எடுத்துக்காட்டி கிறிஸ்து நாதரை தேவ ஞானம் என நிரூபிப்பது இந்நூலின் நோக்கமாகும்.

**கொரிந்தியருக்கு எழுதின இரண்டாம் நிருபம்**
பொருள் : ஆறுதல்
தங்கவசனம் : 7:6,7

சில விசனகரமானவையும், சில சந்தோஷகரமானவையும் இதில் காணப்படுகிறது.

கலாத்தியருக்கு எழுதின நிருபம்

பொருள் : விசுவாசம்

தங்க வசனம் : 3:11

இந்நிருபத்தின் பொருளும் ரோமருக்கு எழுதின நிருபத்தின் பொருளும் ஒன்றிற்கொன்று நெருங்கிய சம்மந்தம் உடையவைகளாகும். நற்கிரியைகளல்ல கிறிஸ்துவின் பேரிலுள்ள விசுவாசமே இரட்சண்யத்தின் ஆதாரமென இதில் எழுதப்பட்டுள்ளது.

எபேசியருக்கு எழுதின நிருபம்

பொருள் : கிறிஸ்துவுக்குட்படுதல்

தங்க வசனம் : 3:10

விசுவாசிகள் கிறிஸ்துவோடு இசைந்திருக்கிறார்கள் என்பது இந்நிருபத்தில் விசேஷித்த போதனையாகும்.

பிலிப்பியருக்கு எழுதின நிருபம்

பொருள் : இலாபம்

தங்க வசனம் : 2:10

கிறிஸ்துவுக்கு சீஷராவதினால் உண்டாகும் இலாப நஷ்டங்கள் இன்னின்னதென இங்கு காட்டப்பட்டுள்ளது.

கொலோசேயருக்கு எழுதின நிருபம்

பொருள் : கிறிஸ்துவுக்குள் பரிபூரணமடைதல்

தங்க வசனம் : 2:10

இந்நிருபத்தில் கிறிஸ்துவின் தெய்வீகத் தன்மையை வற்புறுத்திப் போதிக்கிறார். அவருக்குள் எந்த விசுவாசியும் பரிபூரணமடைகிறார்கள் என்கிறார்.

தெசலோனிக்கருக்கு எழுதிய இரண்டு நிருபங்கள்

பொருள் : காத்திருத்தல்

தங்க வசனம் : I தெச. 1:10
II தெச. 3:5

கிறிஸ்து திரும்ப இவ்வுலகத்திற்கு வருதல் பற்றி இவ்விரண்டு ஆகமங்களிலும் அதிகம் எழுதப்பட்டுள்ளது.

தீமோத்தேயுவுக்கு எழுதிய இரண்டு நிருபங்கள்

பொருள் : போதனை

தங்க வசனம் : I தீமோ. 3:9
II தீமோ. 1:13

திருச்சபை போதகர்களில் ஒருவரிடம் எழுதிய நிருபங்கள் இவை. இவைகளில் திருச்சபையாருக்கு தேவத் தொண்டர்கள் அளித்த சில புத்தி போதனைகளும் எச்சரிப்பான வசனங்களும் அடங்கியுள்ளன.

தீத்துவுக்கு எழுதிய நிருபம்

பொருள் : பிரயோசனம்

தங்க வசனம் : 3:8,9

திருச்சபைக்குரிய ஏற்பாடுகளும் ஒழுங்குகளும், போதகன்மாரை நியமித்து அபிஷேகம் பண்ணுதலும் இந்நிருபத்தில் விவரித்திருக்கின்றது.

பிலேமோனுக்கு எழுதிய நிருபம்

பொருள் : ஏற்றுக்கொள்

தங்க வசனம் : 17

பவுல் அப்போஸ்தலன் ஒரு கிறிஸ்தவ சகோதரனிடம் எழுதியனுப்பிய கடிதம் இது.

எபிரெயருக்கு எழுதிய நிருபம்

பொருள் : மேலானவர்

தங்க வசனம் : 11:40

கிறிஸ்துவே எல்லாரிலும் மேலானவர் என நிரூபித்துக் காட்டி, எபிரெய கிறிஸ்தவர்கள் அவரைவிட்டு பின் வாங்காதபடி ஆக்கியோன் அவர்களை ஸ்திரப்படுத்த இதில் பிரயாசப்பட்டுள்ளார்.

**யாக்கோபின் நிருபம்**

பொருள் : கிரியைகள்

தங்க வசனம் : 2:26

உத்தம கிறிஸ்தவ வாழ்க்கைக்குரிய நிருபம் இது.

**பேதுருவின் இரண்டு நிருபங்கள்**

பொருள் : அருமையானவர்

தங்க வசனம் : I பேது. 2:7

உபத்திரவப்படுகிற விசுவாசிகளை திடப்படுத்தும் பொருட்டு எழுதிய நிருபங்கள் இவை.

**யோவானின் முதலாம் நிருபம்**

பொருள் : ஐக்கியம்

தங்க வசனம் : 1:3

கடவுளோடும் விசுவாசியோடும் ஐக்கியப்பட்டவர்களே கடவுளுடைய மக்களென யோவான் அப்போஸ்தலன் இத்திருபத்தின் மூலம் சாதிக்கிறார்.

**யோவானின் இரண்டாம் நிருபம்**

பொருள் : சத்தியத்திற்கேற்ற நடக்கை

தங்க வசனம் : 6

விசுவாசிகள் தேவபக்தியாகவும், பரிசுத்தம் நல்லொழுக்கமாகவும் நடக்க வேண்டுமென கிறிஸ்தவ மாது ஒருவருக்கு இதை எழுதினார்.

**யோவானின் மூன்றும் நிருபம்**

பொருள் : உடன் வேலையாள்

தங்க வசனம் : 5

மற்றோருக்கு உதவி புரியவும் கிறிஸ்துவை சேவிக்கவும் வேண்டுமாய் ஒரு கிறிஸ்தவ சகோதரனை ஏவுகிறார்.

**யூதாவின் நிருபம்**

பொருள் : காத்துக் கொள்ளல்

தங்க வசனம் : 21,24

விசுவாச துரோகிகளாகாதபடி கிறிஸ்தவர்களை எச்சரிப்பதோடு ஆண்டவரின் சகோதரராகிய இவர் விசுவாசிகளை சகலத் தீமைக்கும் விலக்கிக் காக்க கடவுள் வல்லவரென போதிக்கிறார்.

**வெளிப்படுத்தின விசேஷம்**

பொருள் : வெளிப்படுத்தல்

தங்க வசனம் : 1:1

இவ்வாகமத்தின் பொருளும் தானியேல் புத்தகத்தின் பொருளும் ஒன்றே. யோவான் அப்போஸ்தலன் இந்த யுகத்தின் முடிவில் சம்பவிப்பவைகளையும், அப்பொழுது உண்டாகும் புதிய வானத்தையும், புதிய பூமியையும் தரிசனமாகக் கண்டு எழுதினார் என்பதே.

**தேவன் வேத நூலை அருளின விதமும் காரணமும்**

அப்போஸ்தலனாகிய பவுல் தீமோத்தேயுவுக்கு எழுதின போது வேத வாக்கியங்களெல்லாம் தேவ ஆவியினால் அருளப்பட்டுள்ளது என்று சாதித்தார் (II தீமோ. 3:16). மேற்படி வசனத்தில் தேவ ஆவியினால் அருளப்பட்டிருக்கிறது என்று மொழி பெயர்க்கப்பட்டிருக்கும் மூலபாஷை பதங்களில் அதாவது தேவனால் ஊதப்பட்டிருக்கிறது என்பதே. ஆதலால் வேத வாக்கியங்களெல்லாம் தேவனால் ஊதப்பட்டிருக்கிறது எனத் தீருப்பலாம். இதற்கிசைய பேதுரு அப்போஸ்தலன் தேவனுடைய பரிசுத்த மனுஷர்கள் பரிசுத்த ஆவியினால் ஏவப்பட்டு பேசினார்கள் என உரைத்தார் (II பேது. 1:21). இவைகளினாலும் வேறு அநேக வேத வாக்கியங்களினாலும் சத்திய வேதமே இவ்வுலகிலுள்ள சகல நூல்களிலும் மேலான நூல் என அறிந்து கொள்கிறோம். வேதாகமத்தை அருள கடவுள் தம் திருவுளத்தில் நிர்ணயித்து, தாம் தெரிந்து கொண்ட பக்தர்கள் மூலம் எழுதுவித்தபடியால் அது அவரது திரு

எனலாம். இந்த திரு
வார்த்தை எழுதினவர்களை அவர் ஆட்
மொழியை நடத்தினதோடு அவர்கள்
கொண்டு இயற்றிய வேத பாகங்கள் ஒன்றாய் திரட்
டப்பட்டு இந்நாள் வரைக்கும் அழியா
மலே நிலைத்திருக்கவும் செய்திருக்கிறார்.

வேதம் கடவுளால் அருளப்படுவதின்
அவசியம் என்னவெனில் இப்புத்தகம்
மானிடரின் இம்மை மறுமைக்குரிய வாழ்வு
தாழ்வைப் பற்றிப் போதிக்கிறது. இத்தாது
தேவதூதாகவே இல்லாவிடின் மற்றெல்லா
நூல்களைப் பார்க்கிலும் இது தவறானது
என்று சொல்லலாம். ஆனால் அப்படியல்
லவே. உண்டாகப்போகும் ஜலப்பிரளயத்
தைக் குறித்து முன்னதாக தேவன் தம்மை
எச்சரித்ததாக நோவா போதித்தார். பத்து
கற்பனைகள் தேவ விரலினால் எழுதப்பட்
டதாக மோசே சாதித்தார். தீர்க்கதரிசிகள்
பலமுறை கர்த்தர் சொல்லுகிறதாவது என
விளம்பினர். தாம் கடவுளிடம் பெற்ற
வார்த்தைகளை பேசுவதாக கிறிஸ்து
இயேசு மொழிந்தார் (யோ. 14:24).

தேவஆவி தங்களை ஏவினபடியே
வேதபங்குகளை தாங்கள் இயற்றினதாக
அப்போஸ்தலர்கள் சாதித்தனர். இப்படி
சாதித்தவைகள் உண்மையாகவே இருக்க
வேண்டியது. மற்றபடி மனிதர்களை மோசம்
போக்கும் பயங்கரமான பொய் மொழிகள்
என தீர்க்க வேண்டியது. இப்படியிருக்க
வேதநூலுக்கு அதிகாரனர் யாவர் என்பது
மிக முக்கியமான கேள்வி. வேதநூல்
கடவுளின் திவ்விய ஏவுதலால் உண்டாக
வில்லையெனில், நாம் அதில் எழுதியிருக்
கிறவைகளை நம்புவது எப்படி?

அதில் கூறியிருக்கும் சரித்திரம்
பொய்யாகும். தீர்க்கதரிசனம் வீண்
கனவு போலவும், சொப்பனங்கள் உலகத்
திற்குரிய மற்ற செய்யுளை போன்றும்,
அற்புதங்கள் யதார்த்தமற்றும் இருக்கு
மாயின் அவ்வேதம் வெளிப்படுத்தும்
கடவுளையாவது. இரட்சகரையாவது விசு
வாசிக்க இடமில்லை அல்லவா? கடவுள்
வேதத்தை இயற்ற தம் பக்தருக்கு எப்
படி திவ்விய ஏவுதலை அருளினார்? அவர்
சொல்லச் சொல்ல அவர்கள் எழுதினார்
களா? இல்லையே. அவர்கள் வெறும்
எழுத்துக்காரர்களாய் இராமல் வேத பங்
குகளை இயற்றிய நூலாசிரியர்கள்தான்.
அவர்கள் திவ்விய ஏவுதலை எப்படி
பெற்று எழுதினார்களோ நாம் அறியோம்.
ஆண்டவர் அவர்களுக்கு பூர்வகாலங்க
ளில் பங்கு பங்காகவும், வகைவகையா
கவும் திருவுளம் பற்றினார் என்பதே வேத
மொழியாகும் (எபி. 1:1).

திருஷ்டாந்தமாக ஒரு சமயத்தில்
கடவுள் தாமே தமது திருவிரலினால்
கற்பலகைகளில் எழுதினார். வேறொரு
சமயத்தில் அவர் மோசேயிடம் பேச
மோசே அவருடைய வார்த்தைகளை
எழுதி வைத்தார் (யாத். 24:4). சிலவேளை
தீர்க்கதரிசிகள் கர்த்தர் சொல்லுகிறதாவது
என தம்முடைய தூதை ஆரம்பித்தனர்.
நூலாசிரியர்கள் சாதாரண சரித்திரம் எழு
துகையில் எந்தெந்த சம்பவங்களை எழுத
வேண்டும் என தேவன் தெரிவித்தார்.
பின்னும் சில வேளைகளில் ஆகமங்களின்
ஆக்கியோன்கள் தாங்கள் எழுதும் விஷயங்
களை கடவுள் வெளிப்படுத்தின புது
பொருளாக எழுதாமல் வாஸ்தவத்தில்
சம்பவித்தவைகளாக மட்டும் எழுதலானார்
கள். உதாரணமாக, சாத்தான் கிறிஸ்துவு
டன் பேசின வார்த்தைகளை கடவுளின் சத்
தியம் என எண்ணலாகாது. அவன்
மொழிந்தவைகளை சுவிசேஷகர்கள் பிழை
யின்றி எழுதி வைக்கத்தக்கதாக மட்டும்
கடவுள் அவர்களுக்கு ஒத்தாசை செய்
தார்.

(தொடரும்)

---

"சத்திய எழுத்திலே கண்டிருக்கிறதை
நான் உனக்குத் தெரிவிப்பேன்"
(தானி. 10:21)

---

# கிறிஸ்தவ மார்க்கம் (தொடர்ச்சி)

## ஞானஸ்நானம்

### ஞானஸ்நானம் யார் எடுக்கலாம்?

1. சுவிசேஷத்தைக் கேட்டு தெய்வீக உணர்வடைந்து, இரட்சிக்கப் பட நாங்கள் என்ன செய்ய வேண்டும் (அப். 16:30-33). சகோதரரே நாங்கள் என்ன செய்ய வேண்டும் (அப். 2:37) என்று கேட்ட மக்களுக்கு ஞானஸ்நானம் கொடுக்கப்பட்டது. கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவைப் பற்றிய பிரசங்கம் கேட்டு அல்லது சுவிசேஷத்தை அறிந்து மனம்திரும்பி விசுவாசிக்கும் மக்களே ஞானஸ்நானம் பெற தகுதியுள்ளவர்கள். குழந்தைகள் விசுவாசிக்க முடியாது. மனந்திரும்பாத மக்கள் ஞானஸ்நானம் பெற தகுதியில்லாதவர்கள், சில கெட்ட நோக்கங்களோடு சபையில் சேர விரும்புகிற மக்கள், கல்யாணத்திற்காக, சலுகைக்காக ஞானஸ்நானம் எடுக்க விரும்பும் மக்களுக்கு ஞானஸ்நானம் கொடுக்கக் கூடாது. நன்றாய் சோதித்தறிந்து உண்மையிலே இவர்கள் இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கிறார்களா என்று கண்டு ஞானஸ்நானத்திற்கு தகுதியுள்ளவர்கள் என்று அறிந்தால் ஞானஸ்நானம் கொடுக்கலாம். யோவான் ஸ்நானகனும் தன்னிடத்தில் வந்து ஞானஸ்நானம் பெற விரும்பின மக்களுக்கு, மனந்திரும்புதலுக்கேற்ற கனி கொடுங்கள் என்று பிரசங்கித்தார் (மத். 3:7-12). ஞானஸ்நானம் என்றால் என்ன, எதற்காக கொடுக்கப்படுகிறது, ஏன் ஞானஸ்நானம் பெறுகிறோம் என்ற தெளிவுடையவர்களே ஞானஸ்நானம் எடுக்கலாம்.

2. பாவத்தை அறிக்கை செய்து விட்டு விட ஆயத்தமாக இருக்கிறவர்களே ஞானஸ்நானம் பெறலாம். ஒப்புரவாக வேண்டியவர்களிடம் ஒப்புரவாக வேண்டும். மன்னிப்பு கேட்க வேண்டியவர்களிடத்தில் மன்னிப்பு கேட்க வேண்டும். திருடினதை, வஞ்சித்து எடுத்துக்கொண்டதை, இரவல் வாங்கி ஞாபகமறதியாய் வைத்திருக்கிறவைகளை திருப்பிக்கொடுக்க வேண்டும். அல்லது சம்பந்தப்பட்டவர்களிடத்தில் மன்னிப்பு கேட்டு ஒரு காலத்தை குறித்து. அந்த காலத்தில் அந்த தொகையை தந்து விடுகிறேன் என்று சொல்ல வேண்டும். விசேஷமாய் இவைகள் எல்லாவற்றையும் ஞானஸ்நானம் கொடுப்பவருக்கு முன்னால், அல்லது அதிகாரம் பெற்ற ஊழியருக்கு முன்பாக பாவ அறிக்கை செய்து விட்டு விட்டே ஞானஸ்நானம் பெற வேண்டும்.

3. ஞானஸ்நானம் பெறுகிறவர்கள் தங்களை, தங்களுடைய வாழ்க்கையை இறைவனுக்கு அர்ப்பணிக்க வேண்டும். கிறிஸ்துவுக்காக வாழ முன் வர வேண்டும். ஞானஸ்நானம் புது வாழ்வாகும். அது இறைவனுக்காக தன்னை ஒப்புக்கொடுப்பது. "ஒருவன் கிறிஸ்துவுக்குள்ளிருந்தால் புது சிருஷ்டியாயிருக்கிறான், பழையவைகளெல்லாம் ஒழிந்து போயின, எல்லாம் புதிதாயின" (II கொரி. 5:17).

4. ஞானஸ்நானம் பெறுகிறவர்கள் தங்கள் ஆத்துமத்தையும், சரீரத்தையும் சுத்திகரித்துக்கொள்ள வேண்டும். தாயத்துகள், மந்திர தந்திர தாயத்துகள், கறுப்பு கயிறுகள், அனாவசியமான ஆடை ஆபரணங்கள், அலங்காரங்கள் முதலியவைகளை அவர்கள் களைந்து, இனி அவைகளை அணிய மாட்டோம் என்று வாக்கு கொடுத்து தங்களை சுத்திகரித்துக் கொள்ள வேண்டும் (II கொரி. 7:1). ஞானஸ்நானம் அடக்கமாகும். பழைய மனிதனுடைய செய்கைகளை களைந்து விட வேண்டும். ஆள்சேர்ப்பதற்காக

நகை போட்டு ஞானஸ்நானம் கொடுக்கிறவர்கள் உண்டு. சில சபைகளில் மூப்பர்கள் நகையை கழற்றிவிட்டு ஞானஸ்நானம் கொடுத்து விட்டு பின் நகையை மாட்டி விடுவது உண்டு. கட்டுக்குள் இருக்கிறவர்களுக்கென்று ஒரு கள்ள உபதேசமும் உபதேசிக்கிறது உண்டு. ஆள் கண்டு அந்தஸ்து கண்டு உபதேசம் கொடுக்கிற கள்ள அப்போஸ்தல சபைகளும் உண்டு. அதாவது செத்துப் போகாதவர்களுக்கு, பாவத்தை கர்ண பாரம்பரியங்களை, கெட்ட பழக்க வழக்கங்களை விட்டுவிடாதவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுக்கப்படுகிறது. இவ்விதமாக செய்யக் கூடாது. ஞானஸ்நானம் அடக்கமாகும். கள்ளப் போதகர்களும், சபைகளும் ஒரு காலத்தில் முழுக்கு ஞானஸ்நானத்தையும், பரிசுத்த ஆவியானவரின் அபிஷேகத்தையும் தூஷித்து, தெளிப்பு ஞானஸ்நானமே சரியென்று பேசியும், எழுதியும் வந்தனர். மக்கள் முழுகி ஞானஸ்நானத்தை பெற்றுக் கொள்ளவும், பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தைப் பெறவும் பெந்தெகோஸ்து சபைகளுக்கு போகிறார்கள். வேறு சபைகளுக்கு போகிறார்கள் என்று கண்டு, நாங்களே முழுக்கு ஞானஸ்நானம் கொடுக்கிறோம். இங்கேயே காத்திருப்புக் கூட்டங்கள் நடத்தி ஆவியை வாங்கித்தருகிறோம் என்று சொல்லி காத்திருப்புக் கூட்டங்கள் நடத்தி ஏதோ ஆவியை பெற்றுக்கொள்கிறார்கள். ஜீவியத்தில் எந்த மாற்றமும் இல்லை மரம் இன்னதென்று கனியினால் அறியப்படும். 1971-ம் வருஷம் மே மாதத்தில் தமிழ் நாட்டில் மதுரை பக்கமுள்ள பள்ளப்பட்டியில் புதிய எருசலேம் சபை கான்வென்ஷன் நடத்தப்பட்டது. மறுநாள் பக்கத்திலுள்ள சாண்ட்லர் புரம் என்ற ஊரில் C. S. I கோயிலுக்கு முன்னால் பந்தல் போட்டு வாலிபர்கள் ஒரு கூட்டத்திற்கு ஒழுங்கு படுத்தியிருந்தார்கள். அங்கே போய் கர்த்தருடைய செய்தியை நான் கொடுக்கும் போது தீர்க்கதரிசனமாய் இவ்விதமாய் பிரசங்கித்தேன். இந்த நாட்களில் பெந்தெகொஸ்தே சபைகளுக்கும் ரோமன் புரட்டஸ்டண்ட் சபைகளுக்கும் அஸ்திபாரம் இல்லை. அஸ்திபார உபதேசங்கள் அவைகளுக்குக் கிடையாது. இவர்கள் தங்கள் உபதேசங்களை காலத்திற்கு காலம், நாட்களுக்கு நாள் மாற்றிக் கொள்ளப் போகிறார்கள். இவர்களுக்கு தலை கிடையாது. இந்நாட்களில் முழுக்கு ஞானஸ்நானத்தையும், அபிஷேகத்தையும் பெற மக்கள் பெந்தெகோஸ்தே சபையை நாடிப் போகிறார்கள். அது ஒரு நாள் குறைந்து விடப்போகிறது. ஏனென்றால் இன்று முழுக்கு ஞானஸ்நானத்தை தூஷித்து, பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தைப் பெற்றுப் அந்நிய பாஷை பேசுகிறவர்களை பேய் பிடித்தவர்கள் என்று தூஷித்து, ஜெபப்பிறைகளை தீக்கொளுத்தி பெந்தெகோஸ்து மக்களை தூஷித்துத்திரிகிற C. S. I R. C-காரர்கள் ஒரு நாள் தாங்களே முழுக்கி ஞானஸ்நானம் கொடுக்கப் போகிறார்கள். ஆவி பெற்றுக் கொள்ள காத்திருப்புக் கூட்டங்கள் நடத்தப் போகிறார்கள். அப்பொழுது பெந்தெகோஸ்து சபைகளுக்கு ஆட்கள் சேர்வது குறையப் போகிறது பெந்தெகோஸ்து சபைகள் சிதறப்போகிறது. ஏனென்றால் அவைகளுக்கு அஸ்திபாரமோ, தலையோ கிடையாது. C. S. I காரர்களும், மெதடிஸ்ட் காரர்களும் அலைகிற பெந்தெகோஸ்து ஊழியர்களை பிடித்துக் கொண்டு வந்து தங்கள் சபைகளிலே காத்திருப்புக் கூட்டம் என்று வைக்கப் போகிறார்கள். அநேகர் எழும்பி சுவிசேஷத்தை வியாபார நோக்கமாய், சுவிசேஷக் கூட்டங்கள் என்று எழும்பப் போகிறார்கள். ஆனபடியினால் புதிய எருசலேம் சபை ஒன்றுக்கே அஸ்திபார நிலையான உபதேசமுண்டு. தலை உண்டு. வெளியே தலை இல்லை. பேருக்கு வெளியே சில தலைவர்கள் இருந்தாலும் அவர்கள் கட்டுப்பாட்டில் உபதேசமோ போதனையோ இருக்காது. தலைக்கு தலை சாமசாமிகளாய் இருப்பார்கள். தடியெடுத்தவனெல்லாம் தண்டல்காரன் போல், ஒவ்வொருவரும் தங்கள் இஷ்டப்

பிரகாரம் உபதேசத்தில் குழப்பம், போதனையில் குழப்பம், நடத்தியில் குழப்பம் செய்வார்கள் என்று பிரசங்கித்தேன். கேள்வி கேட்கும் படி வந்திருந்த சிலர் ஐயா எங்கள் கேள்விகளுக்கெல்லாம் பதில் கொடுத்து விட்டீர்கள். எங்களுக்கு சந்தேகம் தீர்ந்தது என்றார்கள். அது இந் நாட்களில் நடந்தேறுகிறதை எல்லோரும் காணலாம்.

ஞானஸ்நானம் யார் கொடுக்கலாம்

1. *திருச்சபையின் ஊழியர்களே ஞானஸ்நானம் கொடுக்கலாம்.* ஏனெனில் கர்த்தர் இந்த உலகத்தை விட்டு பரலோகத்திற்கு எழுந்தருளிப் போகும் வேளை வந்த போது கடைசி நாளில் தம்முடைய அப் போஸ்தலர்களை ஒலிவ மலைக்கு அழைத்து அங்கே இதோ : "அப்பொழுது இயேசு சமீபத்தில் வந்து அவர்களை நோக்கி வானத்திலும், பூமியிலும் சகல அதிகாரமும் எனக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் நீங்கள் புறப்பட்டுப் போய், சகல ஜாதிகளையும் சீஷராக்கி, பிதா குமாரன் பரிசுத்த ஆவியின் நாமத்திலே அவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுத்து, நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள். இதோ உலகத்தின் முடிவு பரியந்தம் சகல நாட்களிலும் நான் உங்களுடனே கூட இருக்கிறேன் என்றார்" ஆமென் (மத் 28:18-20). அப்போஸ்தலர்கள் சீஷர்கள். அப்போஸ்தலர்களால் அதிகாரம் பெற்ற ஊழியர்கள் ஞானஸ்நானம் கொடுக்கலாம். ஒரு திருச்சபையென்றால் இறைவனாகிய இயேசுவின் கட்டளையின் படி சாக்கிரமந்துகளை அதிகாரம் பெற்ற ஊழியர்கள் மூலமாகவே நடப்பிக்கும். ஞானஸ்நானம், நற்கருணை, அபிஷேகித்தல் (கைகளை வைத்து ஊழியர்களை அதிகாரப் படுத்துதல்) போன்றவைகளை அதிகாரம் பெற்ற ஊழியர்களைக் கொண்டே நடத்தும். சத்தியம் அறியாத கூட்டங்கள் மெய்யான கிறிஸ்தவ சபையல்ல. இந்நாட்களில் ஸ்திரீகளை போதகர்களாக ஆக்குகிறார்கள். ஏன் அத்தியட்சர்களாக, போப்பத்திகளாக கூட ஆக்கலாம். இவர்கள் எப்படி முழுக்கி ஞானஸ்நானம் கொடுப்பார்கள்?

திருவிருந்து கொடுக்கிறார்கள், மாதவிடாய் நாட்களில் என்ன செய்வார்கள். இவர்கள் ஆண்களை எப்படி அபிஷேகிப்பார்கள். சில ஸ்திரீகள் தாங்கள் சபைத்தலைவர்கள் போல நடித்துக்கொண்டு பிற ஆண்களைக் கொண்டு ஞானஸ்நானம் கொடுக்கிறதும், சாக்கிரமந்துகளாகிய காரியங்களை நடப்பிக்கவும் செய்கிறார்கள். அப்படியென்றால் பெண்களுக்கு இங்கே வேலை என்ன? வேதத்தைத் தள்ளிப்போட்டு சத்தியத்தைத் தரையிலே மிதித்துப் போடுகிற கூட்டத்தார் இவ்விதமான தாறுமாறுகளை செய்வார்கள். இவ்விதமாக நடக்குமென்று வேதத்திலே எழுதப்பட்டுள்ளது (தானி. 8:12). இவ்விதமாக தவறான முறையில் நடப்பிக்கப் படுகிற ஞானஸ்நானங்கள் தேவனால் அங்கீகரிக்கப்படாது. தேவன் தம்முடைய வசனத்தின் படியே நியாயத்தீர்ப்பு செய்வார் (யோ. 12:48).

2. ஒருவருக்கொருவர் பாவ அறிக்கை செய்யவும் கூடாது. யாக். 5:14-18-ல் மூப்பர்களை வரவழைப்பாயாக, அறிக்கை செய்யக்கடவர்கள் என்று எழுதி அங்கு ஒரு ஊழியருடைய பெயரும் எழுதப்பட்டுள்ளது. வேதாகமத்தில் ஒரு விசுவாசி இன்னொரு விசுவாசிக்கு ஞானஸ்நானம் கொடுத்ததாக வாசிக்கிறதில்லை. யோவான் ஸ்நானகனால் ஞானஸ்நானம் ஆரம்பிக்கப் பட்டது (மாற். 1:2-5; யோவா. 3:22-24). அதைத் தொடர்ந்து, கர்த்தராகிய இயேசு கிறிஸ்து தம்முடைய சீஷர்களைக் கொண்டு ஞானஸ்நானம் கொடுத்து வந்தார் (யோவா. 3:25-28;4:1-3). புதிய ஏற்பாட்டு சபையில் அப்போஸ்தலர்கள் ஞானஸ்நானம் கொடுத்தார்கள் (அப். 2:38-41). இங்கே 12 அப்போஸ்தலர்களும் சீஷர்

களும் இருந்தார்கள். சுவிசேஷகனாகிய பிலிப்பு சமாரியா பட்டணத்தாருக்கும் கந்தாகே என்பவளுடைய மந்திரிக்கும் ஞானஸ்நானம் கொடுத்தார் (அப். 8:12,13, 35–38). தமஸ்குவிலுள்ள தேவபக்தனாகிய அனனியா என்னும் சீஷன் சவுலுக்கு ஞானஸ்நானம் கொடுத்தார் (அப். 9:17–19). பேதுருவோடு சென்றிருந்த ஆறு ஊழியர்கள் ஞானஸ்நானம் கொடுத்தார்கள் (அப். 10:40–45;11:12) அப்போஸ்தலனாகிய பவுல் ஞானஸ்நானம் கொடுத்தார் (அப். 16:15, 30–33). அப். பவுல் ஏற்கனவே கொடுக்கப்பட்ட ஞானஸ்நானம் சரியில்லை என்று அறிந்துதிருப்பி ஞானஸ்நானம் கொடுத்தார் (அப். 19:1-6). சபை வேண்டாம், சபை இரட்சிக்காது என்று ஏசுகிற நாமக் கூட்டத்தாரிடம் ஒரு முறை வேதத்தைக் குறித்து தர்க்கம் உண்டாயிற்று. நான் அவர்களிடம் கேள்வி கேட்டேன்: நீங்கள் கூடி வருவீர்களா? ஆம். அப்போ கூடிவருவது சபைதானே, ஆதலால் நீங்களும் இரட்சிக்கப்படமாட்டீர்கள். சபை இரட்சிக்காது என்று வேதத்தில் எங்கு எழுதியிருக்கிறது என்று கேட்டேன். ஞானஸ்நானம் கொடுக்கிறீர்களா என்று கேட்டேன். இதுவரை இல்லை, திருநெல்வேலியில் கொடுக்கப்போகிறோம் என்றார்கள். நீங்கள் Brother தானே, ஊழியக்காரன் அல்லவே. நீர் எப்படி ஞானஸ்நானம் கொடுக்கலாம்? ஞானஸ்நானம் கொடுக்கக் கூடாது. ஒரு விசுவாசி இன்னொரு விசுவாசிக்கு ஞானஸ்நானம் கொடுத்ததாக வேதத்தில் இல்லையே என்றேன். அப்படியென்றால் ஊழியர்தான் ஞானஸ்நானம் கொடுக்க வேண்டுமா என்று கேட்டார்கள். அவர்களுக்கு மேற்கண்ட வசனங்களை எடுத்து விளக்கினேன். பதில் சொல்ல முடியாமல் மவுனமானார்கள்.

இப்பொழுது இந்தக் கூட்டத்தார் ஒரு புது கண்டுபிடிப்பு கண்டு பிடித்திருக்கிறதாகத் தெரிகிறது. திருவிருந்து நடத்தி விட்டு வெளியே வந்து ஒருவருடைய கால்களை ஒருவர் கழுவிக் கொள்கிறார்களாம். நம் சகோதரர் ஒருவர் இது என்னவென்று கேட்டதற்கு யோ. 13:4,5-ல் அப்படித்தானே எழுதியிருக்கிறது என்றாராம் கனம் போதகர் அவர்கள். எந்த ஒழுங்கும், கொள்கையும், கட்டுப்பாடும் இல்லாதக் கூட்டம். இப்போது இவர்கள் ஆணும், பெண்ணும் கை கொடுத்துக் கொள்கிறார்கள். பரிசுத்த முத்தத்தோடு ஒருவரை ஒருவர் வாழ்த்தினாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

நீ உன் மனதின்படி ஞானஸ்நானம் கொடுத்து யாரையும் ஏமாற்றாதே. அந்த ஆத்துமாவின் இரத்தப்பழி உன் மேல் சுமரும். சில ஊழியர்கள் சுவிசேஷகர்களாக தங்களைக் காட்டிக் கொள்கிறார்கள். கன்வென்ஷன் பிரசங்கிகளாயும் இருக்கிறார்கள். கேட்கிறவர்களுக்கெல்லாம் கண்ட இடத்தில் ஞானஸ்நானம் கொடுத்து விட்டுப் போய் விடுகிறார்கள். அந்த ஆத்துமாக்களைப் பற்றிய பொறுப்பு (Responsibility) இல்லாதவர்களாக இவர்கள் காணப்படுகிறார்கள்.

நீ யாருக்காவது ஞானஸ்நானம் கொடுக்கிறாயென்றால் அந்த ஆத்துமாவுடைய உத்திரவாதம் உன் மேல் சுமரும் (எபி. 13:17). ஆனபடியால் சபையை நடத்தும் ஊழியக்காரனே ஞானஸ்நானம் கொடுக்கலாம்.

J. அதிகாரம் பெற்ற ஊழியக்காரனே ஞானஸ்நானம் கொடுக்க வேண்டும். சாக்கிரமந்துகளை அதிகாரம் பெறாதோர் கையாளக் கூடாது. இப்படி துணிகரமாய் சாக்கிரமந்துகளை கையாடி அதனால் தண்டிக்கப்பட்டவர்கள் உண்டு. இவர்களால் ஞானஸ்நானம் பெற்றுக் கொண்டவர்களும் நிலையற்றவர்களாய் அலைந்து பின்பு வெவ்வேறு இடங்களிலே மறுபடியும் ஞானஸ்நானம் பெற்றுக் கொள்கிறார்கள். அவர்களில் அநேகருடைய வாழ்க்கை சிதறிப் போகிறது.

ஞானஸ்நானம் யார் எடுக்கலாம் யார் கொடுக்கலாம் என்பதை சத்திய வேத வெளிச்சத்தில் எழுதியுள்ளோம். இனி ஞானஸ்நானம் எந்த நாமத்தில், எப்படி கொடுக்க வேண்டும் என்பதைப் பார்ப்போம்

(தொடரும்)

"அதற்கு ஒப்பனையான ஞானஸ்நான மானது, மாம்ச அழுக்கை நீக்குதலா யிராமல், தேவனைப் பற்றும் நல்மனச்சாட்சியின் உடன்படிக்கையாயிருந்து, இப்பொழுது நம்மையும் இயேசுகிறிஸ்துவினுடைய உயிர்த்தெழுதலினால் இரட்சிக்கிறது" (1 பேது. 3:21).

# வேத பாடம் (தொடர்ச்சி)

## எண்ணாகமம்

### எண் 17-ம் அதிகாரம்

இஸ்ரவேலர்கள் பாரான் வனாந்தரத்திற்கு வந்த போது ஆசாரியப் பட்டத்தைப் பற்றி அவர்களுக்குள் கலகம் உண்டாயிற்று. குழப்பம் உண்டானது. தான் ஆசாரியனாக வேண்டும் என்று சிலர் கலகம் செய்ததினால் அவர்கள் ஆக்கினையும் அடைந்தார்கள் (எண். 16-ம் அதிகாரம்). இங்கே இறைவன் மோசேக்குச் சொன்னார்: இஸ்ரவேலின் பன்னிரண்டு கோத்திரத்தாருக்கும் பன்னிரண்டு கோல்களை அவர்கள் கொண்டு வரச் சொல்லி அதிலே அந்தந்த கோத்திரத்தினுடைய பிரபுவின் பெயரை எழுதி, லேவி கோத்திரத்தாரின் கோலில் ஆரோனுடைய பெயரையும் எழுதி கர்த்தருடைய சந்நிதானத்தில் வை. தேவன் யாரை ஆசாரியனாக இருக்கும்படி தெரிந்து கொள்ளுகிறாரோ அவனுடைய கோல் துளிர்க்கும். மறுநாளிலே அந்த கோல்களை வெளியே கொண்டு வந்து அவர்களுக்கு காண்பி என்று கர்த்தர் கட்டளையிட்டார்.

### எண் 17:1-3.

அந்தப் பிரகாரமாக இஸ்ரவேலர்கள் ஆசாரியப் பட்டத்தைக் குறித்து ஆரோனுக்கு விரோதமான முறுமுறுப்பை ஒழியப்பண்ண தேவன் பன்னிரண்டு கோல்களை அவர்களிடத்திலே வாங்கி சாட்சி பெட்டிக்கு முன்பாக வைக்கும்படியாக கட்டளையிட்டார். அப்படியே இஸ்ரவேலின் பன்னிரண்டு கோத்திரத்தார்களும் பன்னிரண்டு கோல்களை கொண்டு வந்தார்கள். லேவிக் கோத்திரத்தாரின் கோலின் மேல் ஆரோனின் பெயர் எழுதப்பட்டிருந்தது. அந்த கோல்களை கர்த்தருடைய சந்நிதானத்தில் வைத்திருந்து விட்டு மறுநாள் மோசே சாட்சியின் கூடாரத்தினுள் பிரவேசித்த போது இதோ லேவிக் கோத்திரத்தாருக்கிருந்த ஆரோனின் கோல் துளிர்த்து இருந்தது. அது துளிர் விட்டு பூ பூத்து, வாதுமை பழங்களை கொடுத்தது. அப்பொழுது மோசே கர்த்தருடைய சமுகத்திலிருந்து அந்த கோல்களையெல்லாம் எடுத்து இஸ்ரவேல் புத்திரர் எல்லாரும் காண வெளியே கொண்டு வந்தான். அவர்கள் கண்டு அவரவர் தங்

கள் தங்கள் கோல்களை வாங்கிக் கொண்டார்கள். அப்பொழுது கர்த்தர் மோசேயை நோக்கி: ஆரோனின் கோல் அந்த கலகக்காரருக்கு விரோதமான அடையாளமாய் இருக்கும் பொருட்டு அதை திரும்ப சாட்சி பெட்டிக்கு முன்னே கொண்டு போய் வை. இப்படி அவர்கள் எனக்கு விரோதமாய் முறுமுறுக்கும் முறுமுறுப்பை ஒழியப் பண்ணுவாய் என்றார். அந்தப் பிரகாரம் மோசே செய்தார். மற்ற பதினொரு பேர்களும் தங்கள் கோல்களை வாங்கிக் கொண்டார்கள். ஆரோனுடைய கோல் துளிர்த்து பூ பூத்து அது வாதுமை பழங்களை கொடுத்ததாய் இருந்தது. அதைத் திரும்ப மோசே தேவனுடைய சந்நிதானத்தில் கொண்டு போய் கர்த்தருடைய பெட்டியில் வைத்ததாக அறிகிறோம் (எபி. 9:4).

ஆனால் சாலமோன் ஆலயம் கட்டும்போது கர்த்தருடைய பெட்டியில் அந்த கோல் இல்லாதிருந்தது என்று வாசிக்கிறோம் (1 இரா. 8:9). ஆசாரியனாகிய ஏலியின் காலத்தில், ஏலியின் ஆளுகை முடிவிலே கர்த்தருடைய பெட்டி பிடிபட்டுப் போய் விட்டது. பெலிஸ்தர்கள் அதைக் கொண்டு போய், திரும்ப அனுப்பினார்கள் என்று நாம் 1 சாமுவேல் 4 முதல் 7 அதிகாரங்களில் வாசிக்கிறோம். அப்பொழுது கர்த்தருடைய பெட்டியிலிருந்து ஆரோனுடைய கோல் காணாமல் (போயிருக்கலாம்) போய் விட்டது என்று தெரிகிறது.

ஆரோனுடைய கோல் துளிர்த்தது. இது ஜீவனுள்ள ஊழியத்தைக் குறிக்கிறது. ஆசாரியனாய் தெரிந்து கொள்ளுகிறவனின் கோல் துளிர்க்கும் என்று கர்த்தர் சொன்னார். அப்படியே ஆரோனின் கோல் துளிர்த்து பூ பூத்து வாதுமை பழங்களைத் தந்தது. அதனால் லேவி கோத்திரத்தாரே கர்த்தருடைய ஊழியத்திற்கென்று தெரிந்து கொள்ளப்பட்டவர்கள் என்று எல்லோரும் அறிந்து கொண்டார்கள். இந்த துளிர்த்த கோலானது ஜீவனையும் அதிகாரத்தையும் காட்டுகிறது. கர்த்தருடைய ஊழியக்காரர்கள் வல்லமையுள்ளவர்களும், சகல தீய வல்லமைகளின் மேலும் அதிகாரம் உடையவர்களுமாய் இருக்கிறார்கள் (லூக். 10:19).

ஊழியர்களுக்கு கர்த்தர் கொடுத்த அதிகாரம் எப்பொழுதும் ஊழியக்காரனுக்குள் அடங்கியிருக்கும். ஆனபடியால் ஊழியர்கள் பயமின்றி தங்கள் அதிகாரத்தை நடப்

பிக்கிறார்கள், பிசாசுக்கு எதிர்த்து நிற்கிறார்கள். அதிகாரத்தோடு வசனத்தை கூறுகின்றார்கள். ஏனென்றால் துளிர்த்த கோல் உள்ளத்தில் இருக்கின்றது. இதுவே பெட்டிக்குள் துளிர்த்த கோல் இருக்கும் காட்சி. மெய்யான ஊழியமானது அது ஆசீர்வதிக்கப்பட்டதாகவும், ஜீவனுள்ளதாயும் வளர்ந்து கனி கொடுக்கிறதாயும், பெருகிறதாயும் இருக்கும். உண்மையிலே ஊழியத்திற்காக அழைக்கப்பட்டவர்கள் மூலமாய் நடைபெறுகிற ஊழியங்கள் இவ்விதமாக செழிக்கிறதை நாம் பார்க்கிறோம். ஆசாரியப் பட்டத்தைக் குறித்து இஸ்ரவேலர்களுக்குள் இருந்த முறுமுறுப்பு இவ்விதமாக ஒழிக்கபபட்டது.

## எண். 18-ம் அதிகாரம்

கர்த்தர் ஆரோனை நோக்கி நீயும், உன்னோடு கூட உன் குமாரரும் உன் தகப்பன் வம்சத்தாரும் பரிசுத்த ஸ்தலத்தைப் பற்றிய அக்கிரமத்தை சுமக்க வேண்டும். நீயும் உன்னோடு கூட உன் குமாரரும் உங்கள் ஆசாரிய ஊழியத்தைப் பற்றிய அக்கிரமத்தை சுமக்க வேண்டும். லேவியரை உன்னோடு கூட சேர்த்துக் கொள். இஸ்ரவேல் புத்திரருக்குப் பதிலாக அவர்கள் உனக்கு உதவியாக இருப்பார்கள். அவர்கள் உன் காவலையும், ஆசரிப்புக் கூடாரத்தின் காவலையும், சபையனைத்தின் காவலையும் காக்கக்கடவர்கள். அந்நியன் ஒருவனும் தேவ சமுகத்தில், பரிசுத்த ஸ்தலத்து பணிவிடைக்கு நெருங்கக் கூடாது. அப்படி அந்நியன் உட்பிரவேசித்தால் அவன் சாகவே சாவான். அந்நியர் ஒருவரும் சேரக்கூடாது என்று கர்த்தர் கட்டளையிட்டுள்ளார். ஆரோனும் அவனுடைய குமாரராகிய ஆசாரியர்களும் ஜனங்களுடைய பாவத்தை சுமக்க வேண்டும். ஜனங்கள் செலுத்தும் காணிக்கைகளின் தோஷத்தை அவர்கள் சுமக்க வேண்டும்.

யாத். 28-ம் அதிகாரம் 35-ம் வசனத்தில் ஆசாரியனுடைய நெற்றியிலே பசும்பொன்னினால் கர்த்தருக்கு பரிசுத்தம் என்று முத்திரையாக வெட்டப்பட்ட ஒரு நெற்றிப் பட்டம் ஒன்று கட்டப்பட்டதுண்டு. இஸ்ரவேலர்கள் படைக்கும் காணிக்கையின் தோஷத்தை ஆசாரியன் சுமக்கும்படியாக அது அவன் நெற்றியிலே கட்டப்பட்டிருக்க வேண்டும் என்று கர்த்தர் கட்டளையிட்டார். பாவம் செய்த மனிதன் அந்த பாவத்தை அவன் சுமப்பான் (லேவி. 5:1,7). ஒன்று பாவத்தை அவன் சுமக்க வேண்டும் அல்லது அவனுக்காக பிறர் சுமக்க வேண்டும். இந்த பிரகாரம் எசேக்கியேலை கர்த்தர் இஸ்ரவேலருடைய பாவத்தையும், யூதாவுடைய பாவத்தையும் சுமக்கும்படி கட்டளையிட்டார் (எசே. 4:4-6).

இந்த பிரகாரமே நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து நம்முடைய பாவங்களை அவர் நமக்காக சுமந்தார். நம்முடைய பாவங்களை அவர் சுமந்தார் (ஏசா. 53:5,6; 1 பேது. 2:24). இஸ்ரவேல் புத்திரர்களின் முதற்பேறுகளுக்குப் பதிலாக தேவன் அவர்களுடைய எண்ணிக்கைக்குச் சரியாக லேவியர்களை அவர்களுக்கு பதிலாக ஊழியத்துக்கு எடுத்துக் கொண்டார். முதற்பேறானவைகளெல்லாம் கர்த்தருடையது. அவைகளெல்லாம் ஊழியம் செய்ய ஊழியத்திற்கு எடுக்கப்படலாம். அதற்கு பதிலாக லேவி கோத்திரத்தார்கள் கர்த்தருடைய சந்நிதானத்திலே ஊழியம் செய்ய அழைக்கப்பட்டார்கள் (எண். 3:5-13). லேவியர்களை சபையார்கள் தேவ சந்நிதானத்திலே அழைத்து வந்து தங்களுடைய கைகளை லேவியர்கள் மேல் வைத்து தங்களுக்கு பதிலாக ஊழியம் செய்ய அவர்களை ஒப்புக் கொடுத்தார்கள் (எண். 8:10-15).

### அக்கிரமத்தை சுமத்தல்

பாவத்திற்காக காணிக்கையும், பலியும் செலுத்தும்படியாக ஆசாரியன் நியமிக்கப்படுகிறான் (1 நாளா. 6:49; எபி. 5:1,2). லேவியர்கள் ஆசாரிய பணிவிடையில் அவர்களுக்கு உதவியாக நியமிக்கப்பட்டார்கள். இவர்களெல்லாம் பிரதான ஆசாரியனுடைய கண்காணிப்பில் அவனுடைய கட்டளையின்படி அவர்கள் அவர்களுக்குக் குறிக்கப்பட்ட ஊழியத்தை செய்ய வேண்டுமென்று எழுதப்பட்டுள்ளது. அவரவர்கள் தங்கள் இஷ்டப்பிரகாரம் ஊழியம் செய்கிறது அல்ல. பிரதான ஆசாரியன் தலைமையில் ஆசாரியர்கள் சொல்லுகிற பிரகாரம் பிரதான ஆசாரியனின் கட்டளையின் பிரகாரம் ஊழியங்கள் பகிர்ந்து கொடுக்கப் பட்டன; அவ்விதமாக செய்யப்பட்டது (எண். 3:32,9; 5:18-26).

[தொடரும்]

"அன்றியும், மனுஷரில் தெரிந்து கொள்ளப்பட்ட எந்தப் பிரதான ஆசாரியனும் பாவங்களுக்காகக் காணிக்கைகளையும் பலிகளையும் செலுத்தும்படி, மனுஷருக்காகத் தேவ காரியங்களைப் பற்றி நியமிக்கப்படுகிறான் (எபி. 5:1).

# அந்நியருடைய வீட்டில் எப்படி நடந்து கொள்வது ?

தேவன் தம்முடைய பிள்ளைகள் எல்லா இடங்களிலும் கனத்திற்குரியவர்களாக, தமது மதிப்பைப் காத்துக் கொள்ளத் தக்கவர்களாக இருக்க வேண்டும் என கர்த்தர் நமக்கு மாதிரி காண்பித்து சென்றுள்ளார். பொதுவாக மற்றவர்களுடைய வீடுகளில் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என தேவ ஜனங்கள் அறிந்து கொள்வது நல்லது.

பாதி இராத்திரியில் சிநேகிதனுடைய வீட்டில் போய் தட்டி எழுப்பி ஏதாவது உதவி கேட்பது, அவர்களை தொந்தரவு செய்வதாகும் என இயேசு குறிப்பிட்டிருக்கிறார் (லூக். 11:5,6,7). தவிர்க்க முடியாத. அப்பொழுதே தேவை என்கிற பட்சத்தில் போகலாமே தவிர மற்றபடி சிநேகிதர்களுடைய வீட்டில் போய் கதவைத் தட்டி அவர்கள் நித்திரை செய்வதை கலைத்து தொந்தரவு (disturb) பண்ணாமலிருப்பது நமக்கு மேன்மை.

யாருடைய வீட்டிலும் திடீர் என்று கதவைத் திறந்து கொண்டோ அல்லது ஸ்கிரீனை விலக்கிக் கொண்டோ போகக் கூடாது. அனுமதி பெற்றே உள்ளே நுழைய வேண்டும். திடுதிப்பென்று யாருடைய வீட்டிலாவது போய் ஒட்டிக் கொள்வதை தவிர்க்க வேண்டும். அடுத்தவர்களுடைய வீட்டில் போய் தங்குகிறேனென்றால் அது சாதாரண காரியமல்ல. முதலாவது, அந்த வீட்டாருடைய சுதந்திரம் (Privacy) பாதிக்கப்படும். பெரிய வீடுகளில் பல அறைகள் இருக்கும். விருந்

தினர்களுக்கென்று தனி அறைகள் (Guest Rooms) வைத்திருப்பார்கள். அங்கே போய் தங்கினால் அவ்வளவாக வீட்டாருக்கு தெரியாது. அது அவர்களுக்கு சாதாரணமாக இருக்கும்.

ஆனால் குடும்பத்தினர் மட்டுமே தங்க வசதி வாய்ப்புள்ள வீடுகளே நிறைய உண்டு. அங்கே போய் தங்க போனால் கஷ்டம். இரண்டாவதாக, விருந்தினர்களுக்காக விருந்து ஆகாரம் செய்ய நேரிடும். இதனிமித்தம் அவர்களுடைய வேலைப் பளு அதிகரிக்கும். மூன்றாவதாக, வீட்டாருக்கு செலவு அதிகமாகும் இதை எல்லாராலும் சமாளிக்க முடியாது. நான்காவது, அவர்களுடைய சொந்த அலுவல்கள் செய்ய முடியாதபடி தடை உண்டாகும்.

இயேசுவானவர் உயிர்த்தெழுந்து எம்மாவூருக்கு சென்று கொண்டிருந்த தம்முடைய சீஷர்களோடு ஒரு அந்நிய மனுஷன் போல் போய்க்கொண்டிருந்தார். வீடு வந்த போது அவர் தங்கும் படி உடனே வீட்டுக்குள் பிரவேசித்து விடவில்லை. அவர் அப்புறம் போகிறவர் போல் காண்பித்தார். அவர்கள் அவரை நோக்கி நீர் எங்களுடனே தங்கியிரும், சாயங்காலமாயிற்று பொழுதும் போயிற்று என்று அவரை வருந்தி கேட்டுக் கொண்டார்கள். அப்பொழுது அவர் அவர்களுடனே தங்கும் படி உள்ளே போனார், சாப்பிட்டார் (லூக். 24:28,29).

நாம் வந்து தங்க வேண்டும் என்று வருந்தி அழைக்கிறவர்களுடைய வீட்டிலே போய் தங்கலாம். அவர்கள் அதற்குரிய ஏற்பாடுகளைச் செய்திருப்பார்கள். கூடுமானவரை அடுத்தவர்களுடைய வீடுகளில் தங்குவதை தவிர்க்க வேண்டும். தங்கித்தான் ஆக வேண்டும் வேறு வழி இல்லை என்றால், முன் கூட்டியே தகவல் தெரிவிப்பது நல்லது. வந்து தங்கி அவர்களால் உபசரிக்கப்பட்டு, திரும்பிச் சென்ற பின் நன்றியை தெரிவிப்பது சாலச்சிறந்தது. தங்கியிருக்கிற நாட்களில் வீட்டாருக்கு உதவியாக இருப்பது ரொம்ப நல்லது.

இயேசு தம்முடைய சீஷர்களிடத்தில் போய் புசிக்கிறதற்கு ஏதாகிலும் உங்களிடத்தில் உண்டா என்றார் (யோவா. 21:5). இந்த பிரகாரம் மிகவும் நெருக்கமுள்ளவர்களிடத்தில் புசிப்பதற்கு கேட்டு சாப்பிடலாம். மற்றபடி எங்காவது போய் சாப்பிட உட்கார்ந்து, எனக்கு அது பிடிக்கும், இது பிடிக்காது, அது இருந்தால் நல்லது என்று வாய்க்கு ருசியானதை கேட்டு வாங்கி சாப்பிடுவது சரியாகாது. இயேசு சொன்னபடி "வீட்டார் கொடுக்கிறவைகளையே புசிக்க வேண்டும்" (லூக். 10:7).

சில வீடுகளில் நம்மை அழைத்து விசேஷித்த ஆகாரங்களை நமக்கு முன் வைப்பார்கள். கிடைத்தது என்று காய்ந்த மாடு சோளக் கொல்லையில் பாய்ந்தது போல் எல்லாவற்றையும் வாரி உள்ளே தள்ளிவிடக்கூடாது. அந்த நல்ல ஆகாரத்தை நாம் சாப்பிட்ட பின் அந்த வீட்டாரும் சாப்பிட விரும்புவார்கள் என்ற எண்ணத்தோடே, மற்றவர்கள் சாப்பிட விட்டு வைக்க வேண்டும். இது பண்பு.

கலியாண வீடுகளுக்கோ, விருந்துகளுக்கோ அழைக்கப்பட்டிருந்தால் போகலாம். அங்கே போய் நீங்களாகவே உங்களை முக்கியஸ்தர்களாய் எண்ணிக் கொண்டு கிரியை நடப்பித்தால் அவமானம்தான் வரும். அழைத்தவர்கள் உங்களை முக்கியப் படுத்த வேண்டும் (லூக். 14:8-11).

வஞ்சகன் ஒருவன் விருந்துக்கு அழைத்தால் போகக்கூடாது. வாருங்கள், உட்காருங்கள், நன்றாக சாப்பிடுங்கள், உங்களுக்காகவே இவ்வளவும் செய்யப் பட்டுள்ளது என்று சொன்னாலும் அவன்

இருதயம் உன்னோடே இராதபடியால், அவனுடைய ருசியுள்ள பதார்த்தங்களை இச்சிக்கவும் கூடாது, புசிக்கவும் கூடாது (நீதி. 23:6,7). அப்பேர்ப்பட்டவர்களுடைய அழைப்பை ஏற்காமலிருப்பது நல்லது.

விருந்துக்கு அழைக்கப்பட்டால் போய், சாப்பிடுங்கள். ஆனால் அந்த போஜனம் விக்கிரகங்களுக்கு படைக்கப்பட்டதென்று அறிந்தால் அதை புசிக்கக் கூடாது. பேய்களுக்கு படைக்கப்பட்டதை புசிக்கிறவன் பேயோடே ஐக்கியமாகிறான் (1 கொரி. 10:20-28). அழைத்தவர்கள் ரொம்ப ரொம்ப பெரியவர்கள், கோபித்து கொள்வார், வருத்தப்படுவார்களே என்று இந்த இடத்தில் பார்க்கக் கூடாது. எல்லோரையும் காட்டிலும் பெரியவர், நாம் பேயோடு ஐக்கியப்படுவதை பார்த்து வருத்தப் படுவாரே என்பதை எண்ண வேண்டும்.

ஒரு அந்நிய தேவனுடைய பண்டிகையை முன்னிட்டு, பதார்த்தங்களை செய்து நம்மிடம் கொடுத்தால் வாங்கவும் கூடாது. இது பிசாசுக்கு படைக்கப்பட்டதல்ல என்று சொன்னாலும் அதையும் ஏற்றுக்கொள்ளக் கூடாது. அவர்கள் அவர்களுடைய தேவனின் பண்டிகையைக் கொண்டாடி சந்தோஷப்படுகிறார்கள். நீங்கள் பண்டிகையை முன்னிட்டு செய்யப்பட்ட பலகாரங்களை ஏற்றுக்கொண்டால் அவர்களுடனே நீங்களும் சந்தோஷப்படுகிறீர்கள் என்று அர்த்தம். இது பாவம்.

"நாங்கள் உங்களுக்குள்ளே ஒழுங்கற்று நடவாமலும்_ நீங்கள் எங்களை பின் பற்றும் படிக்கு நாங்கள் உங்களுக்கு மாதிரியாயிருக்க வேண்டுமென்றே அப்படிச் செய்தோம்" (II தெச. 3:7-9).

## சாட்சி

[தொடர்ச்சி]

பம்பாயிலிருக்கும் புதிய எருசலேம் சபையின் பாஸ்டர் பிலிப் ஐயா அவர்களின் சகோதரி சிமிஞ ராஜேந்திரன் கோவாவில் உள்ளது. எங்களுடைய போராட்டங்களைக் கண்ட அவர்கள், எங்கள் சபைக்கு வாருங்கள், உங்களுக்கு பூரண சுகம் கிடைக்கும் என்றார்கள் முழு விசுவாசத்தோடே தங்கை ஐயா அவர்களுக்கு எழுதிப் போட்டேன். பெரிய ஐயா அவர்கள் எண்ணெய் ஜெபித்து பாஸ்டர் பிலிப் ஐயா அவர்களிடம் கொடுத்து அனுப்பி, என் மனைவிக்கு ஜெபித்து எண்ணெய் பூசினார்கள் அது தான் என் மனைவி சாப்பிட்டு வந்த மருந்து. மாத்திரைகளுக்கு கடைசி நாள். கர்த்தர் என் மனைவிக்கு அற்புத விடுதலை அருளினார். அல்லேலூயா!

பின்பு புதிய எருசலேம் சபையில் ஞானஸ்நானம் பெற்று, பரிசுத்த ஆவியின் அபிஷேகம் பெற்று, புது தன்மை பெற்று இன்று வரை என் மனைவி எந்த மருந்தும் இல்லாமல் தேவனோடு சந்தோஷமாய், குடும்பத்திலே சமாதானமாய் இருக்கிறாள். விதவிதமான ஆடை ஆபரணங்களோடு உலக பிரகாரமான இச்சைகளை உயிர்ப்பித்துக் கொண்ட சரீரத்தில் இன்று வெள்ளாடை தாங்கி, ஆபரணங்கள் அனைத்தையும் எறிந்து விட்டு, "ஆனந்தங் கொள்ளுவேன், அவரை நான் பாடுவேன், உயிருள்ள நாள்வரையில்" என்று மாற்றியது புதிய எருசலேம் சபை. கர்த்தருக்கு ஸ்தோத்திரம். "இந்த அறிவு எனக்கு மிகுந்த ஆச்சரியமும் எனக்கு எட்டாத உயரமுமாயிருக்கிறது"(சங்.139:6).

அழிவுப் பாதையில் நான்: "தன் கால் சுடாமல் எவனாவது தழலின் மீது நடக்கக் கூடுமோ"? நீதி. 6:28. நடந்தேன், சுடுபட்டேன். கிறிஸ்துவைக் காட்ட வாஞ்சை கொண்ட முதல் மனைவி கிறிஸ்டி மாயமாய் போனபின் சாத்தானின் கை ஓங்கியது. இரண்டு பிள்ளைகளுடன் நண்பரின் உதவியுடன் கோவையிலுள்ள பேரூர் இந்து கோவில் "அக்னி பூஜை" பெரிய அளவில் செய்தேன். பேய்களுக்கு பூஜை செய்தேன்.

கோவாவில் திரும்பி வந்து இரண்டு பிள்ளைகளுடன் தேவனை மறுதலித்து வாழ்க்கை தொடர்ந்தது. தேவன் நல்ல படிப்பு அறிவு தந்திருந்தார். (B.E., M.B.A. with Distinction in project work) நல்ல வேலை, பொறாமை படத்தக்க வேகமான பதவி உயர்வு (Manager Purchase). 13 1/2 வருடத்தில் 5 Promotions on merit பணத்துக்கு குறைவில்லை. ஆனால் செய்வினை கோளாறினால் உடன் பிறந்தவர்கள் எல்லோருடைய வீட்டிலும் போராட்டங்கள். என் வீட்டில் எப்போதும் எரிமலை, கலவரம், பிள்ளைகள் காரணமில்லாமல் மயக்கம் போட்டு விழுந்தார்கள். இந்த நிலையில் நான் ஒரு Scooter Accident-க்கு ஆளானேன். பின்பு என்னுடைய காரை (Car) என் Office Staffs நான்கு பேர்கள் எடுத்துக் கொண்டு போனவர்கள் மலையிலிருந்து உருண்டு 100 அடி பள்ளத்தாக்கில் அதிசயமாக அவர்கள் உயிர் பிழைத்தும் என்னுடைய கார் ஒன்றுக்கும் ஆகாமல் நொறுங்கி பண நஷ்டம் ஆனது. இந்த நிலையில் நண்பர் ஒருவர் இங்குள்ள இந்து சாமியாரிடம் ஒருவரை வீட்டிக்கு அழைத்து வந்தார். சாமியாரடியின் வார்த்தைக்கு கட்டுப்பட்டு நினைத்து பார்க்க இயலாத காரியங்களை செய்தேன். சனிக்கிழமைதோறும் அனுமான் கோயிலில் அனுமான் சிலைக்கு என்னைப் பார்த்தேன். இங்குள்ள மற்ற இந்து கோயிலுக்கு தேங்காய் வைத்தேன். அவர் சாமி ஆடும் போது மற்ற இந்துக்களோடு போட்டி போட்டுக் கொண்டு விபூதி வாங்கி அது எந்நேரமும் என்னோடு இருந்தது. பயங்கரங்கள் என் மேல் திரும்பி வந்து காற்றைப் போல் என் ஆத்துமாவை பின் தொடர்ந்தது (யோபு 30:15). அருவருப்பான அந்த விபூதிதான் என் வாழ்க்கையின் பங்காக இருந்தது.

இருதயம் நொறுங்கி மரணம் சமீபித்த போதும் : நான் தேவனாகிய கர்த்தரை மறுதலித்து "No Religion is best Religion" என்று அகங்காரமாய் கூறி "Mind your mind & mind is all Powerful" என்று அதற்கு ஆதாரம் என்று எழுதப்பட்டுள்ள அநேக புஸ்தகங்களை வாங்கினேன் படித்தேன். "Self-Development; Executive Development; Mind & personality Development" என்ற அர்த்தத்தில் Seminar & Courses" நடத்தினேன். இங்குள்ள பேப்பர்களில் பேர் வரும் போது இறுமாப்பும் அற்ப சந்தோஷமும் என்னை ஆட்கொண்டன. குடியும் புகையும் என் சரீரத்தின் ஆவியை நீக்கிக் கொண்டிருந்தது. 1990 October 7-ம் தேதி நான் பெரிய அளவில் "Self Development Seminar" நடத்த Invitation கொடுத்தாகிவிட்டது. 1990 September 15-ம் தேதி "Heart Attack" ல் 48 மணி கெடுவுடன் Hospital-ல் சேர்க்கப்பட்டேன். மூன்று மாதங்கள் Bed rest தேவன் தண்டித்தார். ஆனால் அழித்து விடவில்லை. 1983-ல் இருந்து சர்க்கரை வியாதி. 1990-லிருந்து இருதய நோய்.

தேவனுடைய இராஜ்யம் புதிய எருசலேம் சபையில் ஒரு புது ஜீவன்: "தேவனுடைய ராஜ்யம் புசிப்பும் குடிப்புமல்ல, அது நீதியும் சமாதானமும் பரிசுத்த ஆவியினாலுண்டாகும் சந்தோஷமுமாயிருக்கிறது" (ரோம 14:17). இதன்படி மனைவி எனக்கு போதித்தாள். 1992 ஆகஸ்டு மாதம் புதிய எருசலேம் தலைமை மேய்ப்பர் ஐயா அவர்கள் கோவாவில் எங்கள் வீட்டிற்கு வந்து ஆசீர்வதித்து இரண்டு மணி நேரம் எங்களோடு பேசி ஜெபம் செய்தார்கள்.

"முற்காலத்தில் நீங்கள் அந்தகாரமாயிருந்தீர்கள். இப்பொழுதோ கர்த்தருக்குள் வெளிச்சமாயிருக்கிறீர்கள். வெளிச்சத்தின் பிள்ளைகளாய் நடந்து கொள்ளுங்கள்" என்று எபே. 5:8-ல் அப்போஸ்தலனாகிய பவுல் சொல்வது போல் இருந்தது. எங்கள் வீட்டிலுள்ள பிசாசின் சாபக் கேடு நீங்க ஜலம் தெளித்து ஆசீர்வதித்தார். என்னே ஆச்சரியம்! அன்றிலிருந்து நான் குடிப் பழக்கத்தை விட்டொழித்தேன். கர்த்தருக்கு ஸ்தோத்திரம். முதன் முறையாக 17 th Dec. 1992-ல் என் மனைவியுடன் ஜெபத்தில் உட்கார்ந்தேன். இந்த நாட்களில் இருதய நோய், சர்க்கரை வியாதியின் கொடுமையாலும், வேலைப் பளுவினாலும் எண்ணிலடங்காத மருந்து மாத்திரைகள்தான் எனக்கு சாப்பாடாக இருந்தது. 1993 Easter-க்கு Bombay புதிய எருசலேம் சபைக்குப் போய் சாட்சி கூறி,

தலைமை ஐயா முன் பாவ அறிக்கை பண்ணி, இருதய நோய்க்கு உண்டான மருந்துகளை எடுப்பதில்லை என்று அறிக்கை பண்ணினேன். 1994 August 10th-ல் பெரிய ஐயா அவர்களிடம் ஞானஸ்நானம் பெற்று நான் சாலமோன் என்ற புதிய நாமத்துடன் திரும்பினேன்.

வசதி, பொறுப்பு, அதிகாரம் உள்ள நல்ல வேலை (Manager, Internal Andit-Head of the Dept. in Goa Shipyard Ltd). ஆனால் ஞானஸ்நானம் பெற்று வந்த பின்பு வேலையை விட்டு விட்டு கோயம்புத்தூரில் போய் சொந்தமாக தொழில் செய்ய, நண்பரின் வேண்டுதலினால் Voluntary retirement-க்கு மனு செய்து விட்டு தலைமை ஐயா அவர்களுக்கு விபரமாய் எழுதி கர்த்தரின் சித்தம் கேட்டு ஜெபித்து சொல்லும்படி வேண்டியிருந்தேன். Voluntary Retirement கிடைப்பதும் அரிதாயிருந்தது. 1993 October முதல் வாரம் பெரிய ஐயா அவர்கள் லட்டர் வந்தது. வேலையிலிருந்து வெளி வரலாம் என்று வார்த்தை இருந்தது. அதே நாளில் எனக்கு இங்கு Voluntary Retirement Confirm ஆன செய்தியும் வந்தது. கர்த்தருக்கு ஸ்தோத்திரம். இத்துடன் "நீங்கள் கோவை போகாமல் கோவாவில் இருக்கும்படி கர்த்தரின் கட்டளை. கோவாவில் இருந்து கர்த்தரின் கட்டளையை நிறைவேற்றுங்கள்" என்று தலைமை ஐயா எழுதியிருந்தார்கள். 1993 October 9th-ல் நான் Voluntatv Retirment பெற்று, கோவையில் தொழில் செய்யும் ஏற்பாடுகளை நிறுத்தி விட்டு இன்றுவரை கோவாவில் இருக்கின்றோம். இந்த இடைப்பட்ட நாட்களில் கர்த்தர் எங்களை அளவில்லாமல் ஆசீர்வதித்தார்.

வீட்டிலே : வேலை விட்டு வீட்டிலிருக்கும் ஆரம்ப கட்டத்தில் முகத்தில் கட்டி வந்து முகமெல்லாம் விகாரமாய் போய் பயம் பிடித்தது. தலைமை ஐயா அவர்களுக்கு Phone பண்ணி, Pastor Philip ஐயாவும், Pastor Devasunder ஐயாவும் வந்து ஜெபிக்க ஆரம்பித்தவுடன் 10 நாட்களுக்கு மேல் படுக்கையில் கிடந்து 30க்கு மேலான Pain Killer Tablets சாப்பிட்டவன் எழுந்து உற்சாகமாய் நடமாடினேன். கோவாவில் நமது புதிய எருசலேம் சபை எழுப்ப வேண்டும். அதில் நாங்கள் பலரை கிறிஸ்துவுக்குள்ளாக கொண்டு வர வேண்டும் என்று தலைமை ஐயா சொன்னார்கள். நான் இந்த நீரிழிவு நோயின் வாதை மட்டுமல்ல, நானே முழு சுகம் பெறாத விசுவாச குறைவை வைத்துக் கொண்டு மருந்து மாத்திரைகளோடு எப்படி நம் இயேசு கிறிஸ்துவை ஏந்தி செல்ல முடியும் என்ற கேள்வி என்னை இரவு பகலாக வாதித்தது. குணமடைய மருந்தே இல்லாத இந்த நோயை தீர்க்க முடியாதவரா என் தேவன். மரித்தோரை உயிர்ப்பித்த தேவனுக்கு இது எம்மாத்திரம் என்று 29-1-94 சனிக்கிழமை இரவு உபவாச ஜெபத்தில் என் விசுவாசம் முழுமை பெற்றது. கர்த்தருக்கு ஸ்தோத்திரம். 12 வருட வாதையிலிருந்து விடுதலையானேன். மருந்துகளிலிருந்து முழுவிடுதலை பெற்ற எனக்கு சரியாக இரண்டு வாரங்கள் கழித்து High Sugar வாதையால் அடக்கமுடியாத தாகமும், அடிக்கடி நீர் கழிதலும் உண்டானது. இரவில் சரியான தூக்கம் கிடையாது.

நான் சார்ந்துள்ள திருச்சபை என்னை காப்பாற்றும் என்று கலங்காமல் இருந்தேன். நம்புங்கள் என் வார்த்தையை. 23-2-94-ல் தலைமை ஐயாவிடமிருந்து 1994-க்கான புது வருட வாழ்த்து மடல் வந்தது. அந்த நாள்தான் கடைசி நாள், என் தீராத தாகப் பிசாசும் இடைவிடாத நீரிழிவும் நிரந்தரமாக நின்றது. கர்த்தருக்கு ஸ்தோத்திரம்! அல்லேலூயா!

பூரண ஒப்புக்கொடுத்தல் : நமது சபையின் மூலமாக, தலைமை ஐயா அவர்கள் வார்த்தையாக எனக்கு கர்த்தர் அளித்த கட்டளையின்படி கோவாவில் இருந்த இந்த 4 1/2 மாத காலத்தில் உலகப்பிரகாரமாக போகாமல் கர்த்தரிடமிருந்து நாங்கள் குடும்பமாக பெற்ற இரட்சிப்பு, சமாதானம், சந்தோசம், நன்மைகள் சொல்லி முடியாதவொன்று. இதை சாட்சியாக நமது திருச்சபைக்கு எழுத எண்ணியிருந்த எனக்கு என்றுமில்லாதபடி Heart Attack-க்குக்கு முன் அறிகுறியான வலி தொடங்கிற்று. உடம்பு வியர்த்தது. இதுகாறும் மருந்து எடுக்காததால் வந்த வினைதான் என்று பலவீனமுள்ள சரீரம் பயந்தது. என் மனைவியோ சர்வ சாதாரணமாக முழு விசுவாசத்துடன், "பிசாசின் கடைசி சோதனை, சபையின் தைலத்தை தடவுங்கள்" என்று கூறி விட்டு, ஜெபித்து பின் என்னிடம் 118-ம் சங்கீதத்தை வாசியுங்கள் என்றாள்.

"தேவனைத் தேடு"
"SEEK GOD"

Regd. No. 040068/84
Postal Regd. No. MH BY NE-84/93
Tamil Monthly Magazine

(15-ம் வசனம்) சாவாமல் பிழைத்திருந்து கர்த்தருடைய செய்கைகளை விவரிப்பேன் (18-ம் வசனம்) "கர்த்தர் என்னை வெகுவாய்த் தண்டித்தும் சாவுக்கு ஒப்புக்கொடுக்கவில்லை" (23-ம் வசனம்) "அது கர்த்தராலே ஆயிற்று, அது நம்முடைய கண்களுக்கு ஆச்சரியமாயிருக்கிறது." இந்த வசனங்களும் கர்த்தர் ஆத்துமாவுக்கு உயிர் தந்தது.

இன்றும் கர்த்தர் என்னிடம் எதையோ கேட்கிறார் என்று என் ஆத்துமா என்னை கேட்டது. என்னை முழுவதுமாக கர்த்தருக்கும் நம் சபைக்கும் ஒப்புக்கொடுத்தேன். நானும் என் மனைவியும் நமது சபையின் விருப்பப்படி, கர்த்தரின் சித்தம் அறிந்து, தலைமை ஐயா ஆலோசனைப்படி இங்கு நமது சபை எழுப்புவதே நாது முதல் வேலையாக வைத்து, அதற்காக உழைப்போம் என்று முடிவு எடுத்தோம். என் வேதனை எங்கேயோ ஓடிப் போயிற்று அல்லேலூயா!

[illegible] நன்மைகள் தலைமை மேய்ப்பர் [illegible] ஜெபவல்லமையாலும், சபை[illegible] [illegible]த்தவர்களின் ஜெபத்தாலும், நமது புதிய எருசலேம் சபையின் அதிகாரத்திலும் உண்டானது.

நம் கர்த்தருக்கு எண்ணிலடங்கா ஸ்தோத்திரம். நமது புதிய எருசலேம் சபைக்கு கோடானுகோடி நன்றி.

நீ விசுவாசித்தால் தேவனுடைய மகிமையைக் காண்பாய்.

சகோ. சின்னசாமி சாலமோன்
கோவா.

"அவர் (இயேசு) நன்மை செய்கிறவராகவும், பிசாசின் வல்லமையில் அகப்பட்ட யாவரையும் குணமாக்குகிறவராயும் சுற்றித் திரிந்தார்". அப். 10:38

## அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்
   23 [வியாழன்] ஜூன் 1994
   22 [வெள்ளி] ஜூலை 1994
   22 [திங்கள்] ஆகஸ்ட் 1994
2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
   ஆண்டு சந்தா Rs. 15-00
   வெளிநாடு Rs. 100-00

   அனுப்ப வேண்டிய முகவரி :
   CHIEF PASTOR N. LAZAR
   "NEW JERUSALEM CHURCH"
   CHURCH LANE, TILAK NAGAR,
   DARGA ROAD, BHANDUP,
   BOMBAY-400 078 INDIA.
3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.
4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.
5. 'புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரூ. 15-(பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் [Capital Letter] எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by: Chief Pastor N. LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078. Printed at: New Jerusalem Press, Tilak Nagar, Bhandup, Bombay-400 078.

G.S. RAJAIAH
G.S. RAJAIAH

# புதிய எருசலேம் செய்தி

## PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காள சத்தம் 121 - JULY '94



"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ரெ)ன் என்று நீங்கள் அறியீர்கள்... விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

- மாற்கு 13 : 35-37

**EDITOR : CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY, INDIA

### பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கேற்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சிரசாய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே. நான் ஆண்டவரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப் 1 : 1; 10:40-43).

CHIEF PASTOR N LAZAR

### இதழின் உள்ளே ..

# ஆசிரியர் உரை

தீமையின் காலம் இது. தேவ ஜனங்கள் தீயவனுக்கோ, தீமைக்கோ பயப்படாமல் ஜெபம் செய்து தைரியமாய் எதிர்த்து கிரியை செய்ய வேண்டும். அப்பொழுது ஜெயம் உண்டாகும். பயப்படக் கூடாது. பயப்படுகிறவன் கோழை. "தேவனுக்கு கீழ்ப்படிந்திருங்கள்; பிசாசுக்கு எதிர்த்து நில்லுங்கள், அப்பொழுது அவன் உங்களை விட்டு ஓடிப்போவான்" என்று யாக். 4:7-ல் யாக்கோபு சொல்லியிருக்கிறார். தீமைக்கு விரோதமாய் நாம் ஜெபிக்க வேண்டும், தீயக் கூட்டங்களுக்கு விரோதமாக ஜெபிக்க வேண்டும்; தீய அதிகாரங்களுக்கு விரோதமாய் ஜெபிக்க வேண்டும்; தீய அதிகாரிகளுக்கு விரோதமாய் ஜெபிக்க வேண்டும்; தீய சட்டங்களுக்கு விரோதமாய் ஜெபிக்க வேண்டும். உலகத்தை மாற்றி அமைக்கும் வல்லமை ஜெபத்திற்கு உண்டு. இந்த எல்லா தீமைகளையும் மாற்றுகிறதற்கு திருச்சபையினுடைய ஜெபம் மிகவும் அவசியமாகும். உலகத்தில் நடைபெறுகிற சகல காரியங்களும் தேவன் நமக்காகவே நடப்பிக்கிறார். அவைகளெல்லாவற்றையும் நன்மையாய் கொண்டு வந்து முடிப்பார். நாம் எவ்விதம் ஆக வேண்டுமென்று விரும்புகிறோமோ, எவ்விதமாக இருக்க வேண்டும்- மாற வேண்டும், எவ்விதமாக நடைபெற வேண்டும் என்று விரும்புகிறோமோ அவ்விதமாக நடப்பிக்கும்படி தேவனை நோக்கி வேண்டுதல் செய்வோமாக. ஜெபத்திற்கு நிகரில்லை. ஜெபம் மகா வல்லமையுள்ளது. உலகத்தில் காணப்படுகிற எந்த அணுகுண்டு; கோபால்ட், யுரேனியம் போன்ற எந்த சக்திகளுக்கும் மேலாக வல்லமையுடையதாகும் ஜெபம். ஜெபமானது வானத்தையும், பூமியையும் அசைக்கக் கூடியதாய் இருக்கிறது. நாம் ஜெபிக்கும் நமது ஜெபத்தைக் கேட்டு தேவன் கிரியை செய்கிறார். ஆனபடியால் தேவ ஜனங்கள் தைரியமாயிருந்து ஊக்கமாக ஜெபிக்கவும். தோல்வியோ, வெற்றியோ நம்முடைய ஜெபத்தின்படி எல்லாம் நன்மையாய் முடியும். "அன்றியும், அவருடைய தீர்மானத்தின்படி அழைக்கப்பட்டவர்களாய்த் தேவனிடத்தில் அன்பு கூருகிறவர்களுக்குச் சகலமும் நன்மைக்கேதுவாக நடக்கிறதென்று அறிந்திருக்கிறோம்" என்பதாம் (ரோ. 8:28).

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

(CHIEF PASTOR N. LAZAR)

# சத்திய வேதம்

[தொடர்ச்சி]

சத்திய வேத பங்குகளை ஆக்கியோன்கள் திவ்விய ஏவுதல் பெற்று எழுதினர் என்பதற்கு பல அத்தாட்சிகள் உண்டு. அவைகள் பின் வருபவைகளாவன :-

முதலாவது. வேத நூலை உற்றுப் பார்க்கும் போது அதன் 66 ஆகமங்களுக்கும் இருக்கிற அதிசய ஒற்றுமையே. சத்திய வேதம்முழுமைக்கும் ஒரே முக்கிய பொருளுண்டு. அப்பொருள் இயேசு கிறிஸ்து நாதரே.

இந்நூலின் ஒவ்வொரு புத்தகத்திலும் இரட்சகராகிய அவரைக் குறிக்கும் முன்னடையாளமாவது, தீர்க்கதரிசனமாவது, சரித்திரமாயாவது அடங்கியிருக்க காண்கிறோம். அதுவுமன்றி ஆதியாகமத்தில் வெளிப்படுகிற கடவுளும், மத்தேயு முதலிய சுவிசேஷ ஆகமங்களில் வெளிப்படுகிற கடவுளும் ஒருவரே. அது போல ஏசாயா முதலிய தீர்க்கதரிசிகள் உணர்த்தி உரைத்தவைகளும்; கிறிஸ்துவும், யோவான் அப்போஸ்தலன் உரைத்த தீர்க்கதரிசன மொழிகளும் ஒத்து வருகின்றன. ஆகவே வேதாகமம் நெடுக ஒரே தெய்வீக நோக்கமும் தூதும் வெளிப்படுவதைக் காணாமல் அந்நூலைப் படிப்பது அசாத்தியம்.

இரண்டாவது. வேதத்தின் அதிசய அமைப்பு; அதின் பங்குகள் பல நூற்றாண்டுகளில் காலகாலமாய் இயற்றப்பட்டன. அவை நாம் அறியாத பக்தர் கையில் ஒன்றாக திரட்டப்பட்டன. அந்த ஆகமங்கள் காலக்கிரமமாய் சேர்க்கப்படாமல் வேறு ஒழுங்கின்படி திரட்டப்பட்டன. இருப்பினும் வேதத்தில் அடங்கிய 66 ஆகமங்களின் முறை திவ்விய ஏவுதலினால் உண்டாயிற்றென்பது தெளிவு.

திருஷ்டாந்தமாக, பழைய ஏற்பாட்டில் முதலாவது இறந்த கால சரித்திரமுள்ள 17 ஆகமங்களும், அவைகளுக்குப்பின் நிகழ் கால மனிதர்களின் கடமைகளை விஸ்தரிக்கும் 5 ஆகமங்களும், கடைசியாக எதிர்காலத்திற்குரிய தீர்க்கதரிசனங்கள் நிறைந்த 17 ஆகமங்களும் உள்ளன. அது போலவே புதிய ஏற்பாட்டிலும் இதேபிரகாரமாக காணப்படுகிறது. எப்படியெனில் சுவிசேஷ ஆகமங்களிலும், அப்போஸ்தலர் நடபடி புஸ்தகங்களிலும் கடந்த கால சரித்திரமும், நிருபங்களில் தற்காலத்தில் நிறைவேற்ற வேண்டிய கடமைகளும், வெளிப்படுத்தின விசேஷம் என்கிற ஆகமத்தில் எதிர்காலத்திற்குரிய தீர்க்கதரிசனங்களும் அடங்கியுள்ளன

மூன்றாவது. வேத நூல் உண்மையுடையது. அதில் எழுதியுள்ள சகல சரித்திர விபரங்களும் பிழையின்றியே உண்மையானவையென ரூபகார படுத்தப்பட்டாயிற்று. அதில் காணப்படும் விஞ்ஞான குறிப்புகளும் முற்றிலும் உண்மையானவைகளென விஞ்ஞானிகள் வரவர கண்டு கொள்கின்றனர். பஞ்சாகமத்தில் விளம்பிய விதிவிலக்குகள் தற்கால வைத்தியர்களுக்கும் வியப்புண்டாகும் வகையில் எழுதியிருக்கிறது.

அது போல வேதத்திலுள்ள சன்மார்க்க போதனைகள் மிகவும் மேலானதும், அது போதிக்கும் ஆத்மீக சத்தியங்கள், மனிதரை இரட்சிக்கக் கூடியவைகளுமாய் இருக்கின்றன. அது நிற்க. சத்திய வேதத்தின் ஒவ்வொரு நூலின மூலம் உண்டாகும் அதிசய மாறுதல்கள் அது திவ்விய ஏவுதலால் அருளப்பட்ட புத்தகம் என்பதற்கு பலத்த வெளிப்படையான அத்தாட்சியாகும்.

சுமார் 1500 வருடங்களுக்கு மேலாக பற்பல காலங்களில், பற்பல இடங்களில் பற்பல நிலைகளிலுள்ள பற்பல மனிதர்க

னால் எழுதப்பட்ட வேதாகமம் ஒரே நூலாக இறைவனால் சேர்க்கப்பட்டு பாது காக்கப்பட்டு நம்முடைய கைகளில் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதற்காக நாம் இறைவனை அதிகமாய் ஸ்தோத்தரிக்க வேண்டும். இதுவே சத்திய வேதம்.

சத்திய வேதம் போதிக்கிற சத்தியத் தையாவது, ஒரு விஷயத்தையாவது ஆராய்ச்சி செய்வோர் அநுசரிக்க வேண் டிய சில சட்ட திட்டங்களுண்டு. சத்திய வேதத்தை அறிந்து கொள்ள விரும்பு வோர் திரும்ப திரும்ப அதைப் படிக்க வேண்டும். திரும்ப திரும்ப படிக்கிறதின் மூலமாக அது விளங்க ஆரம்பிக்கும்.

மேலும் தெய்வ பிரசங்கம் வேத அறி வுள்ள நல்ல பிரசங்கிகளது பிரசங்கத்தை கேட்க வேண்டும். சத்தியத்தைக் குறித்து நல்ல எழுத்தாளர்கள் தேவனுடைய மனி தர்கள் எழுதிய ஆவிக்குரிய புஸ்தகங்களை வாங்கிப் படிக்க வேண்டும். சத்திய வேதா கமத்தைக் குறித்து, சத்தியத்தைக் குறித்து உண்டாயிருக்கிற சந்தேகங்கள் பிரச்சனை கள் தெளிவு பெற ஆரம்பிக்கும். ஆன படியினால் சத்திய வேதாகமம் போதிக்கிற ஒரு சத்தியத்தை அறிந்து கொள்ள முயற் சிப்பவர்கள் கடைபிடிக்க வேண்டிய சட் டங்கள்:

1. பிரயோகிக்கப்பட்டுள்ள பதங்க ளின் உள்ளான கருத்து என்னவென்று ஆழ்ந்து சிந்தித்தல் வேண்டும். வேதத்தி லுள்ள போதனையை சரிவர அறிந்து கொள்வதற்கு அதற்குரிய பதங்களின் அர்த்தம் சரியாக விளங்கிக் கொள்வது அவசியம்.

2. ஒரு பொருளைக் குறித்து வேதம் கூறும் எல்லாவற்றையும் வாசித்தறிவது அத்தியாவசியமாகும். ஆகையால் நாம் எப்படியாவது எடுத்துக் கொண்ட பொரு ளைப்பற்றிய சகல வசனங்களையும் தேடி எடுத்து ஒழுங்கு படுத்தல் வேண்டும்.

3. சத்திய வேத நூலில் சில சத்தி யங்கள் தேவன் விஷயமாகவும், சில மனி தன் விஷயமாகவும் போதிக்கப் பட்டிருக் கிறது. இந்த வித்தியாசத்தை நன்கு கவ னித்தல் அத்தியாவசியமாகும். கவனிக்கா விடில் பல தப்பறையான எண்ணங்கள் உண்டாகக் கூடும்.

திருஷ்டாந்தமாக, நீதிமானாக்கப்படுதல் என்கிற கொள்கையை எடுத்துக் கொள் வோம். இது மகா முக்கியமான ஒரு சத் தியம். யோபு என்கிற பக்தனின் காலம் முதற் கொண்டு இந்நாள் வரைக்கும் மனிதர்: தேவனுக்கு முன்பாக மனுஷன் நீதிமானாயிருப்பது எப்படி (யோபு 9:2) எனக் கேட்டு வருகின்றனர். இதற்கு உத் தரவு ரோமர் 3:24-ல் கூறியிருக்கிறது. அதாவது இலவசமாய் அவருடைய கிருபை யினாலே கிறிஸ்து இயேசுவிலுள்ள மீட்பைக் கொண்டு நீதிமான்களாக்கப் படுகிறார்கள் என்பதே.

நீதிமானாக்கப்படல் என்னும் பதத்தின் அர்த்தம் என்ன?

கடவுள் விஷயமாய்ச் சொல்லப் போனால் ஒரு அநீதனை நீதிமான் என சாதிப்பதே அர்த்தமாகும். மனிதன் விஷ யமாய்ச் சொன்னால் அப்பதத்தின் கருத் தாவது, சட்டத்தை மீறின ஒருவன் நிமித் தம் வேறொருவர் தண்டனையை அநுபவித் தபடியால் மீறுதல் செய்தவன் சட்டப்படி குற்றம் செய்யாதவன் போல் பாவிக்கப் படுவது என்பதாம். நாம் சத்தியத்திற்கு சம்மந்தமான எல்லா வேத வசனங்களை யும் ஒருங்கே சேர்த்துப் படித்தால் பின் வரும் ஏழு முக்கிய அம்சங்கள் காணப் படும்.

1. நீதிமானாக்கப்பட:

கடவுள் அநீதரை நீதியுள்ளவராக தீர்த்தலின் ஆதிகாரணம் திவ்விய கரு ணையே உற்பத்தி என்று கூறலாம். இலவ

சமாய் அவருடைய கிருபையினால் கிறிஸ்துவிலுள்ள மீட்பைக் கொண்டு நீதிமானாக்கப்படுகிறார்கள் (ரோ. 3:24). தமது கிருபையினாலே நாம் நீதிமானாக்கப்பட்டோம் (தீத்து 3:5,6).

2. கடவுள் அநீதரை நீதியுள்ளோராக தீர்த்தலின் ஏதுகரணம்:

கிறிஸ்துவே இதன் ஏதுகரணமாம். கிறிஸ்துவுக்குள் நீதிமான்களாக்கப்படும்படி (கலா. 2:17; அப். 13:38,39; 2 கொரி. 5:18-21).

3. கடவுள் அநீதரை நீதியுள்ளோராகத் தீர்த்தலுக்கு தேவையான புண்ணியம்:

இது கிறிஸ்து நாதர் சிந்திய இரத்தத்திலேயுள்ளது. நாம் அவருடைய இரத்தத்தினாலே நீதிமான்களாக்கப்பட்டிருக்கிறோம். தமது பரிசுத்த பிரமாணத்தை மீறுகிறவனை கடவுள் தண்டிப்பார். மனிதரோ அப்பிரமாணத்தை தவறின்றி கைக்கொள்ள சக்தியற்றவர்கள். ஆகையால் அவர்கள் தண்டனைக்குப் பாத்திரராயிருக்கிறார்கள். கிறிஸ்துவோ தேவ பிரமாணத்தைக் கைக்கொண்டதோடு பாவிகளின் தண்டனையை ஏற்று தமது புனித இரத்தம் சிந்தினார். பாவிகள் புண்ணியவான்களாகத் தீர்க்கப்படுகிறதற்கு இதுவே ஆதாரம்.

4. கடவுள் அநீதரை நீதியுள்ளவராகத் தீர்த்தலின் ரூபகாரம்:

கிறிஸ்துவின் உயிர்த்தெழுதலே இதற்கு அத்தாட்சியாகும். நாம் நீதிமான்களாக்கப்படுவதற்காக அவர் எழுப்பப்பட்டும் இருக்கிறார் (ரோ. 4:25). கிறிஸ்து மரித்த பின் உயிரோடு எழும்பாவிடில் அவருடைய மரணம் மற்ற மனிதருடைய மரணத்தைப் போல் பாவத்தின் பலன் என நினைக்கத் தகும். ஆனால் அப்படியில்லாமல் அவருடைய மரணத்தின் புண்ணியத்தையும் வல்லமையையும் ரூபகாரப்படுத்திற்று.

5. அநீதரை நீதியுள்ளோராகத் தீர்த்துக் கூறுகிறவர் யார்?

தேவன் தெரிந்து கொண்டவர்கள் மேல் குற்றஞ்சாட்டுகிறவன் யார்? தேவனே அவர்களை நீதிமான்களாக்குகிறவர் (ரோ. 8:33). ஆகையால் இரட்சிப்பு பெற்றவர்களை தேவன் தாமே நீதிமான் என்று கூறுகிறார் என்பது தெளிவு.

6. கடவுள் அநீதரை நீதியுள்ளவராக தீர்த்தல் அப்பாக்கியத்தை ஏற்றுக் கொள்வது எப்படி?

இது விசுவாசத்தினால் ஆகும். நாம் விசுவாசத்தினாலே நீதிமான்களாக்கப்படுகிறோம் (ரோ. 5:1). மீட்பர் சிந்திய திருரத்தத்தின் புண்ணியத்தை விசுவாசித்துக் கொண்டு நமக்கு சொந்தமாக்குகிறோம். விசுவாசமே புண்ணியமென நினைக்கலாகாது. அது கிறிஸ்து நமக்காக செலுத்திய பாவ நிவாரண பலியின் புண்ணியத்தை ஏற்றுக் கொள்ள ஒரு கருவி மட்டுமேயாகும்.

7. கடவுள் அநீதரை நீதியுள்ளவராக தீர்த்தலின் அத்தாட்சி என்ன?

விசுவாசத்தின் பயனாக நற்கிரியைகளே அந்த அத்தாட்சியாகும். மனுஷன் விசுவாசத்தினாலே மாத்திரமல்ல. கிரியையினாலேயே நீதிமானாக்கப்படுகிறான் (யாக். 2:4; ரோ. 2:13 காண்க.) பிறமதங்களில் பக்தர்கள் ஆகிறவர்களிலே எந்த வித்தியாசமுமில்லை. எந்த சமயத்திலும், எந்த அக்கிரமத்தையும், பொய்யையும், பாவத்தையும் செய்யக்கூடியவர்களாக இருக்கிறார்கள்.

ஆனால் கிறிஸ்துவினால் நீதிமான்களாக்கப்படுகிறவர்கள் கிரியையினால் மேலும்

அவர்கள் நீதிமான்களென்று நிரூபிக்கப் படுகிறார்கள். இந்த அந்தரங்க நிலைக்கு புதிய பரிசுத்த நிலையே வெளியரங்க அத்தாட்சி. இது கீழ்க் காணும் மூவகைப் படும்.

a) ஆத்தும சமாதானம்

b) பாவக்கட்டிலிருந்து விடுதலையாகுதல்

c) பரிசுத்த நடக்கையின் மேலுள்ள வாஞ்சை.

ஒரு சத்தியத்தை வேறொரு சத்தியத் தோடுகூட ஒப்பிட்டுப் பார்ப்பது இரண்டையும் தெளிவாக்கக் கூடிய ஒரு நல்ல முறையாகும். உதாரணமாக, நீதிமானாக் கப்படுதலுக்கும், பாவ மன்னிப்புக்கும் வேற்றுமை உண்டு. யாதெனில் பாவ மன்னிப்பு பெற்றவன் அநீதனல்ல. நீதி மானாக்கப்பட்டவனோ (தன்னில் தான் பாவியாயினும்) நீதியுள்ளவன்.

மேலும் பாவ மன்னிப்பு திரும்ப திரும்ப அளிக்கப்படும். நீதிமானாக்கப்படு வதோ ஒரே ஒரு முறை மட்டும் சம்ப விக்கிறது. அதுபோலவே நீதிமானாக்கப் படுதலுக்கும், பரிசுத்தமாக்கப்படுதலுக்கும் முக்கிய வித்தியாசமுண்டு. யாதெனில், நீதிமானாக்கப்படல் விசுவாசிகளின் நிலை யையும், பரிசுத்தமாக்கப்படல் அவர்கள் நிலைமையையும் குறிக்கின்றன. இதை இன் னும் விளக்குவோம்.

விசுவாசிகளின் நிலையென்பது கர்த்த ருடைய பார்வையில் அவர்கள் நிற்கும் நிலையைக் குறிக்கும். விசுவாசிகளின் நிலை மையென்பதோ அவர்கள் அநுதின ஜீவியத் தில் விளங்க வேண்டிய நிலைமையைக் குறிக்கும். நீதிமானாக்கப்படல் நீதி ஸ்த லத்திற்குரிய ஒரு பதம்; பரிசுத்தமாக்கப் படலோ ஆவிக்குரிய அந்நியோன்யத் திற்கு சம்பந்தமானது. நீதிமானாக்கப்ப டல் ஒரு அநீதனை நீதிமானென எண் ணுதல் பரிசுத்தமாக்கப்படலோ அருளப் பட்ட நீதியுள்ள தன்மையை பெற்றுக் கொள்ளலாகும். நீதிமானாக்கப்படலோ உள்ளான சுத்தத்திற்கு. பரிசுத்த ஜீவி யத்திற்கு ஆதாரமானது.

ஆகையால் இவ்விதமாய் ஒரு சத்தி யத்தைப் பற்றி நாம் படிக்கும் போது தேவன் சார்பாகவும், மனிதர் சார்பாகவும் வெவ்வேறு பதங்கள் கையாடப்பட்டுள் ளன. அந்தப் பிரகாரம் அதைப் படித்து அறிந்தாலொழிய சத்தியத்தை சரிவர அறிய முடியாது.

வேதாகமத்தைக் கற்றுக் கொள்ளுகிற வர்கள் நீதிமான்களும், அறிவாளிகளும், புத்திசாலிகளும், பரிசுத்தவான்களும், தேவ னுக்கு பயப்படுகிறவர்களும், எந்த நற் கிரியைகளும் செய்ய தகுதியுள்ளவர்களு மாக தேவனால் உபயோகிக்கக் கூடிய பல முள்ள கருவியாக விளங்குவார்கள்.

வேதாகமம் மனிதனுடைய குணத்தி லேயும், நடத்தையிலும் மாறுதலை உண்டு பண்ணுகிறது. அதற்காக நாம் தேவனை ஸ்தோத்தரிப்போமாக. எல்லாரும் சத்தி யத்தை அறிகிற அறிவை அடையவும் இரட்சிக்கப்படவும் தேவன் விரும்புகிறார்.

சத்திய வேதம் முற்றிற்று.

"தேவனே, உமது வசனமே சத்தியம்"

(தொடர்ச்சி)

# கிறிஸ்தவ மார்க்கம்

## ஞானஸ்நானம்

ஞானஸ்நானம் எந்த நாமத்தில் கொடுக்க வேண்டும்?

ஞானஸ்நானம் பாவமன்னிப்பிற்கென்று கொடுக்கும்படி கர்த்தர் யோவான் ஸ்நானகனை அனுப்பினார். யோவான்: மனந்திரும்புங்கள், மனந்திரும்பி தேவனண்டை வாருங்கள், மனந்திரும்புதலுக்கேற்ற கனி கொடுங்கள்; நாங்கள் ஆபிரகாமின் பிள்ளைகளென்று சொல்லிக் கொண்டு இருக்காதீர்கள் என்றும், மனந்திரும்பி பாவத்தை அறிக்கை செய்து விட்டுவிட்டு ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ளுங்கள் என்றும் பிரசங்கம் பண்ணினார்.

அவருடைய பிரசங்கத்தைக் கேட்டு மனந்திரும்பின மக்கள் யோவானிடம் வந்து தங்கள் பாவங்களை அறிக்கையிட்டு யோர்தான் நதியில் யோவானால் ஞானஸ்நானம் பெற்றுக் கொண்டார்கள் (மத். 3:1-6; மாற். 1:1-5; லூக். 3:7-14; யோ. 1:31-33; 3:22,23).

இங்கே ஞானஸ்நானம் தான் முக்கியம் - பாவ மன்னிப்புதான் முக்கியம். ஞானஸ்நானத்திற்கு எந்த நாமமும் உபயோகிக்கப்படவில்லை. யோவான் ஞானஸ்நானம் கொடுத்தபடியினால் இந்த ஞானஸ்நானம் யோவானின் ஞானஸ்நானம் என்று அழைக்கப்பட்டது.

இயேசுவானவர் கொடுத்த ஞானஸ்நானம்:- இயேசு தாமே ஞானஸ்நானம் கொடுக்காமல், தம்முடைய சீஷர்களைக் கொண்டு ஞானஸ்நானம் கொடுத்து வந்தார். இதிலும் மனந்திரும்புதலும், பாவமன்னிப்புமே முக்கியம், எந்த நாமத்திலும் கொடுக்கப்படவில்லை. இப்படி ஞானஸ்நானம் பெற்றுக் கொண்ட எல்லாரும் தேவனுடைய ராஜ்யத்தில் பிரவேசிக்கிறார்கள் என்று கர்த்தராகிய இயேசு கிறிஸ்து தாமே சொன்னார் (மத். 21:31,32; லூக். 7:29,30).

இயேசுவானவர் நமக்காக பாவ நிவாரண பலியாக மரித்து, அடக்கம் பண்ணப்பட்டு உயிர்த்தெழுந்த பின் சீஷர்களைக் கூட்டி அவர்களுக்கு கட்டளையிட்டு விட்டு பரத்திற்கு அவர்களுடைய கண்களுக்கு முன்பாக எழுந்தருளிப் போகையில்: வானத்திலும், பூமியிலும் சகல அதிகாரமும் எனக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது; ஆகையால் நீங்கள் உலகமெங்கும் புறப்பட்டு போய் சகல ஜாதிகளுக்கும் சுவிசேஷத்தை பிரசங்கித்து அவர்களை சீஷராக்கி பிதா குமாரன் பரிசுத்த ஆவியின் நாமத்தில் அவர்களுக்கு 'ஞானஸ்நானம் கொடுங்கள் என்று கட்டளையிட்டார் (மத். 28:18,19; மாற். 16:15,16). இது இயேசுவானவரின் கட்டளை. அதோடு பரிசுத்த ஆவியானவர் வந்த பின்னரே தம் அதிகாரத்தை செயல்படுத்த வேண்டுமென்றும் கட்டளையிட்டார்.

அப்படியே ஐம்பதாவது நாளில் காத்திருந்த சீஷர் கூட்டத்தின் மேல் பரிசுத்த ஆவியானவர் இறங்கினார். அப்பொழுது பேதுரு தம்முடைய முதலாவது பிரசங்கத்தை 11 அப்போஸ்தலரோடு கூட எழுந்து நின்று பிரசங்கித்தார். இந்த பிரசங்கத்தை கேட்டு இருதயத்தில் குத்தப்பட்ட யூதர்கள் நாங்கள் இப்பொழுது என்ன செய்ய வேண்டுமென்று கேட்டார்கள். பேதுரு: நீங்கள் ஒவ்வொருவரும் மனந்திரும்பி கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்திலே பாவ மன்னிப்புக்கென்று ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ளுங்கள் என்று உபதேசித்தார் (அப். 2:37,38). அன்றையத் தினமே 3000 பேர் ஞானஸ்நானம் பெற்றார்கள்.

இது புதிய ஏற்பாட்டின் ஞானஸ்நானம். இங்கு இயேசு கிறிஸ்துவை விசுவாசிப்பதே முக்கியம். மனந்திரும்பி கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசிப்பதே முக்கிய இடம் பெறுகிறது.

யெகோவா வணக்கமுடைய யூதர்கள் இயேசு கிறிஸ்துவை கர்த்தராக விசுவாசித்து கிறிஸ்தவ ஞானஸ்நானத்தைப் பெற்றார்கள். சமாரியாவிலே சுவிசேஷகராகிய பிலிப்பு மூலமாய் இயேசு பிரசங்கிக்கப்பட்டார். விசுவாசித்து ஸ்திரீகளும், புருஷரும் ஞானஸ்நானம் பெற்றுக் கொண்டார்கள் (அப். 8:5-13). இங்கே இயேசுவின் நாமத்திலே ஞானஸ்நானத்தை மாத்திரம் பெற்றிருக்கிறவர்களாகக் கண்டு - என்று வாசிக்கிறோம் (அப். 18:15).

கொர்நேலியுவுக்கும், கொர்நேலியு வீட்டாருக்கும் கர்த்தருடைய நாமத்தில் ஞானஸ்நானம் கொடுக்க பேதுரு கட்டளையிட்டார் (அப். 10:48). ஆனால் இரட்சிக்கப்படுகிறவர்களை கர்த்தர் அநுதினமும் சபையிலே சேர்த்துக் கொண்டு வந்தார் (அப். 2:47). வசனத்தைக் கேட்டு விசுவாசித்தவர்களின் தொகை ஐயாயிரமாயிற்று (அப். 4:4). விசுவாசிகள் திரளான கூட்டமாயினர் (அப். 4:32); திரளான புருஷர்களும், ஸ்திரீகளும் விசுவாசமுள்ளவர்களாகி கர்த்தரிடமாய் சேர்க்கப்பட்டனர் (அப். 5:14). சீஷர்கள் பெருகினர் (அப். 6:1). ஆசாரியர்களில் அநேகரும் விசுவாசத்திற்கு கீழ்ப்படிந்தனர் (அப். 6:7).

சமாரியாவில் ஸ்திரீகளும், புருஷர்களும் ஞானஸ்நானம் பெற்றார்கள். சீமோனும் ஞானஸ்நானம் பெற்றான் (அப். 8:12,13). காந்தாகே என்பவளின் மந்திரி ஞானஸ்நானம் பெற்றார் (அப். 8:37,38). அப்போஸ்தலனாகிய பவுல் ஞானஸ்நானம் பெற்றார் (அப். 9:17,18). பக்தியுள்ள அநேகர் பவுலையும் பர்னபாவையும் பின்பற்றினார்கள் (அப். 13:43-48). சிலர் அப்போஸ்தலர்களை சேர்ந்து கொண்டார்கள் (அப். 14:4).

லீதியாள், லீதியாளின் குடும்பத்தார் ஞானஸ்நானம் பெற்றார்கள் (அப். 16:15). சிறைச்சாலை தலைவனும், அவனுடைய குடும்பத்தாரும் ஞானஸ்நானம் பெற்றார்கள் (அப். 16:33). தெசலோனிக்கேயரில் சிலரும், பக்தியுள்ள கிரேக்கரில் திரளான ஜனங்களும், கனம் பொருந்திய ஸ்திரீகளில் அநேகரும் விசுவாசித்து பவுலையும் சீலாவையும் சேர்ந்து கொண்டார்கள் (அப். 17:4). பெரேயா பட்டணத்தார் அநேகம் பேரும் கனம் பொருந்திய கிரேக்கரில் அநேக ஸ்திரீகளும், புருஷரும். விசுவாசித்தார்கள் (அப். 17:11,12).

ஏதென்சில் சிலர் பவுலைப் பற்றிக் கொண்டு விசுவாசிகளானார்கள் (அப். 17:34). கொரிந்து பட்டணத்தில் ஜெப ஆலயத்தலைவனாகிய கிறிஸ்பு என்பவன் தன் வீட்டாரோடு கர்த்தரிடத்தில் விசுவாசமுள்ளவனானான். கொரிந்தியரில் அநேகரும் விசுவாசித்து வந்து பாவ அறிக்கை செய்தார்கள் (அப். 19:16-18). இந்த இடங்களில் விசுவாசித்தார்கள், சேர்ந்து கொண்டார்கள் என்றுதான் வேதாகமத்தில் குறிப்பிடப் பட்டுள்ளது.

அப்படியென்றால் அவர்கள் ஞானஸ்நானம் பெறவில்லை, ஞானஸ்நானத்தில் எந்த நாமமும் இடம் பெறவில்லை என்று சொல்லலாமா? சில இடங்களில் விசுவாசமுள்ளவர்களாகி ஞானஸ்நானம் பெற்றார்கள் என்று மாத்திரம் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதனால் எந்த நாமமும் சொல்லப்படவில்லையென்று சொல்லலாமா? சொல்லக் கூடாதே. அவர்களெல்லாரும் மனந்திரும்பி கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டு வாயினால் அறிக்கை செய்து பிதா குமாரன் பரிசுத்த ஆவியின் நாமத்திலே ஞானஸ்நானம் பெற்றுக் கொண்டவர்கள்.

அது போல அப். 2:38-ல் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தினாலே

என்றும், அப். 5:15-ல் இயேசுவின் நாமத்தினாலே என்றும், அப். 10:48-ல் கர்த்தருடைய நாமத்தினாலே ஞானஸ்நானம் கொடுக்கும்படி கட்டளையிட்டான் என்றும், அப். 19:5-ல் இயேசுவின் நாமத்தினாலே ஞானஸ்நானம் பெற்றார்கள் என்றும் எழுதியிருக்கிறதே என்று கேட்கலாம். இயேசுவை விசுவாசித்த மக்களுக்கு சீஷர்கள் இயேசு கிறிஸ்துவின் கட்டளையின்படி ஞானஸ்நானம் கொடுத்தபடியால் இயேசுவின் நாமத்தினாலே கொடுத்தார்கள் என்று எழுதப்பட்டுள்ளது. இயேசுவே கொடுத்தார் என்று அர்த்தமாகும்.

உதாரணமாக, தாவீதின் வாலிபர்கள் 10 பேர் நாபாலிடத்துக்கு போய் தாவீதின் நாமத்திலே பேசினார்கள் (1 சாமு. 25:5-9). யேசபேல் ஆகாபின் பெயரால் நிருபம் எழுதினாள் (1 இரா. 21:8). சீஷர்கள் தான் ஞானஸ்நானம் கொடுத்தார்கள் (யோ. 4:3). ஆனால் இயேசு தாமே ஞானஸ்நானம் கொடுத்ததாக சொல்லப்பட்டது (யோ. 3:22-26).

ஆனபடியால் நாம் ஞானஸ்நானம் கொடுத்தாலும், யார் கொடுத்தாலும் இயேசுவின் நாமத்தில் கொடுத்தேன் என்றே பொருள். இயேசு கட்டளையிட்டபடி பிதா குமாரன் பரிசுத்த ஆவியின் நாமத்திலே ஞானஸ்நானம் கொடுக்கும்படி கட்டளை பெற்றிருக்கிறோம் என்பதாம் (மத். 25:19).

(தொடரும்)

"என்னைத் தள்ளி என் வார்த்தைகளை ஏற்றுக் கொள்ளாதவனை நியாயந் தீர்க்கிறதொன்றிருக்கிறது; நான் சொன்ன வசனமே அவனைக் கடைசி நாளில் நியாயந் தீர்க்கும்." யோ. 12:48.

## வேத பாடம் (தொடர்ச்சி)

### எண்ணாகமம்

### எண். 18:1-13.

ஆரோனுக்கும், அவனுடைய குமாரருக்கும் இஸ்ரவேல் புத்திரர் படைக்கிற படைப்புகளெல்லாம் சொந்தமாகும். அவர்கள் எனக்கு படைக்கும் எல்லா படைப்பும், எல்லா போஜன பலியும், எல்லா பாவ நிவாரண பலியும், குற்ற நிவாரணபலியும் அவர்கள் எனக்கு அசைவாட்டுகிற எல்லா காணிக்கைப் படைப்பும் உன்னுடையதாயிருக்கும் என்று கர்த்தர் சொன்னார். அவர்கள் கர்த்தருக்குக் கொடுக்கும் அவர்களுடைய முதற்பலனாகிய உச்சிதமான எண்ணெயும், உச்சிதமான திராட்சரசமும், தானியமும் உனக்குரியதாகக் கொடுத்தேன். தங்கள் தேசத்தின் முதல் பழுத்த பழங்களில் அவர்கள் கர்த்தருக்கு கொண்டு வருவதெல்லாம் உனக்குரியதாகும். உன் வீட்டிலே சுத்தமாயிருக்கிற யாவரும் அவைகளைப் புசிக்கலாம். அவைகளை உனக்கும், உன் குமாரருக்கும், குமாரத்திகளுக்கும் நித்திய நியமமாகக் கொடுத்தேன். உன் வீட்டிலே சுத்தமானவர்கள் எல்லாரும் அதைப் புசிக்கலாம்.

பரிசுத்தமானவைகள் அல்லது கர்த்தருக்கென்று ஒப்புக்கொடுக்கப் பட்டவைகளெல்லாம் ஆசாரியனைச் சேரும். சாபத்தீடாக நேர்ந்து கொள்ளப்பட்டவைகள் ஆசாரியனைச் சேரும். முதற்பேறானவைகள் எல்லாம் ஆசாரியனைச் சேரும். ஆனால் அவைகளை மீட்டுக் கொள்ள வேண்டும். மீட்டுக் கொள்வதற்கான தொகையை ஆசாரியனுக்குச் செலுத்த வேண்டும். அசைவாட்டும் மார்க்கண்டமும், வலது முன்னந்தொடை போக தலையீற்றுகள் எல்லாம் ஆசாரியனைச் சேரும்.

இவ்விதமாய் இஸ்ரவேல் புத்திரர் ஏறெடுத்துப் படைக்கும் பரிசுத்தப் படைப்புகள் எல்லாம் உனக்கும், உன் குமாரருக்கும், குமாரத்திகளுக்கும் நித்திய கட்டளையாகக் கொடுத்தேன். குமாரத்திகள் என்றால் விவாகம் ஆகாமல் ஆசாரியனுடைய வீட்டிலே இருக்கிறவர்கள் அல்லது விவாகம் முடிந்து கணவன் இறந்து போனதினால் திரும்ப தன் தகப்பன் வீட்டிலே இருக்கிற - ஆசாரியனுடைய வீட்டிலேயிருக்கிற குமாரத்திகள் அவைகளில் புசிக்கலாமென்று கர்த்தர் கட்டளையிட்டார். இது ஆசாரிய ஊழியத்தைக் குறித்து தேவன் கொடுக்கும் ஆசீர்வாதமாகும்.

## எண். 18:14.

சாபத்தீடாக நேர்ந்து கொண்டதெல்லாம் ஆசாரியனைச் சேரும்.

## எண். 18:15

மனிதரிலும் மிருகங்களிலும் முதற்பேறெல்லாம் ஆசாரியனைச் சேரும். மாட்டின் தலையீற்றையும், ஆட்டின் தலையீற்றையும் பலியிட வேண்டும் (வச. 17). பொருத்தனை செய்யப்பட்டவைகளையும் மீட்கலாம் (லேவி. 27:1-8). ஆடு, மாடு, கழுதை மற்றும் மனிதரில் முதற்பேறானவைகள் எகிப்திலே தேவன் தலைப்பிள்ளைச் சங்காரம் நடத்திய போது இஸ்ரவேலில் தலைச்சன்கள் ஒன்றும் மரிக்காமல் காப்பாற்றப்பட்டபடியினால் தலையீற்றுகளெல்லாம் கர்த்தருக்கு பரிசுத்தமானவைகளாயின. ஆனால் மனிதரில் முதற்பேறானவைகளை அகத்தியமாய் மீட்க வேண்டும் (யாத். 3:2, 12,13; 4:19,20) என்று தேவன் கட்டளையிட்டார்.

ஆகையால் யெப்தாவின் மகள் பலியிடப்படவில்லை என்று சொல்லலாம் (நியா. 11:30; லேவி. 27:2,3; சங். 66:13-15). அவள் வாழ்நாள் முழுவதும் புருஷனை அறியாத கன்னிகையாக வாழ்ந்து இறைபணி செய்தாள் என்று நம்பலாம் (நியா. 11:39). ஏனென்றால் மெய்யான தேவன் நரபலியை ஏற்றுக் கொள்வதில்லை என்று வேதத்தின் மூலமாக அறிகிறோம். ஆனபடியால் நரஜீவனில் முதற்பேறவைகளெல்லாம் அது பொருத்தனையாகவோ, வேறு விதத்திலோ கொடுக்க முடியாது. மீட்டுக் கொள்ள வேண்டும் அல்லது கர்த்தருடைய ஊழியத்திற்கு ஒப்புக் கொடுத்து விட வேண்டும். அன்னாள் சாமுவேலுக்காக விண்ணப்பம் பண்ணி ஒப்புக் கொடுத்தது (1 சாமு. 1:11,28).

பலிபீடத்தின் மேல் இரத்தத்தை தெளித்து விட்டு கொழுப்பை கர்த்தருக்கு சுகந்த வாசனையாக தகனிக்க வேண்டும். அசைவாட்டும் மார்க்கண்டத்தைப் போலும், வலது முன்னந்தொடையைப் போலும் அவைகளின் மாம்சம் பிரதான ஆசாரியனைச் சேரும். இஸ்ரவேல் புத்திரர் கர்த்தருக்கு ஏறெடுத்து படைக்கும் பரிசுத்த

படைப்புகளெல்லாம் உனக்கும், உன் குமாரருக்கும், உன் குமாரத்திகளுக்கும் நித்திய கட்டளையாகக் கொடுத்தேன். இது உனக்கும் உன் சந்ததிக்கும் என்றைக்கும் மாறாத உப்பின் உடன்படிக்கையென்று கர்த்தர் சொன்னார்.

எண். 18:20,21.

கர்த்தர் ஆரோனை நோக்கி: நீ அவர்களுடைய தேசத்தில் ஒன்றையும் சுதந்தரித்துக் கொள்ள வேண்டாம். இஸ்ரவேல் புத்திரர் நடுவே நானே உன் பங்கும், சுதந்தரமுமாய் இருக்கிறேன். லேவிப் புத்திரர் ஆசரிப்பு கூடாரத்தில் அவர்கள் செய்கிற வேலைக்காக இஸ்ரவேலர்களுக்குள்ளவைகள் எல்லாவற்றிலும் தசமபாகத்தை அவர்களுக்கு சுதந்தரமாக கொடுத்தேன் என்றார்.

பொதுவாக எகிப்திலிருந்து மீட்கப்பட்ட எல்லாரும் தேவனுடைய ஊழியர்களே. ஆனாலும் லேவிக் கோத்திரத்தாரை ஊழியத்திற்கென்று பிரித்தெடுத்து அழைத்தபடியினால் அவர்களுக்கு சம்பளமாக, சாப்பாட்டுக்காக இஸ்ரவேலின் மற்ற பதினொரு கோத்திரத்தாருடைய தசமபாகங்களெல்லாம் லேவிக் கோத்திரத்திற்கு சேரும். இஸ்ரவேல் புத்திரர் பெற்ற சுதந்தரங்களின் வருவாயிலிருந்து கொடுத்தார்கள். லேவியர்கள் ஆசரிப்பு கூடார வேலை செய்து மற்ற இஸ்ரவேல் புத்திரருடைய அக்கிரமத்தைச் சுமந்தார்கள். இஸ்ரவேல் புத்திரர் நடுவே அவர்களுக்கு சுதந்தரம் இல்லை என்பதும் கர்த்தருடைய கட்டளையாகும். இஸ்ரவேல் புத்திரர் கர்த்தருக்கு ஏறெடுத்துப் படைக்கும் படைப்பாகிய தசமபாகத்தை லேவியருக்கு சுதந்தரமாகக் கொடுத்தேன்; ஆகையால் இஸ்ரவேல் புத்திரர் நடுவே அவர்களுக்கு சுதந்தரம் இல்லை என்று அவர்களுக்குச் சொல் என்று கர்த்தர் கட்டளையிட்டார்.

தசமபாகத்தைப் பற்றிய விபரம்

(தொடரும்)

"ஆரோனைப் போலத் தேவனால் அழைக்கப்பட்டாலொழிய, ஒருவனும் இந்தக் கனமான ஊழியத்துக்குத் தானாய் ஏற்படுகிறதில்லை" எபி. 5:4.

# பொய் கிறிஸ்தவம்

அசீரியா ராஜா பாபிலோனிலும், கூத்தாவிலும், ஆவாவிலும், ஆமாத்திலும், செப்பர்வாயிமிலும் இருந்த மனுஷரை வரப்பண்ணி, அவர்களை இஸ்ரவேல் புத்திரருக்கு பதிலாக சமாரியாவின் பட்டணங்களில் குடியேற்றினான். இவர்கள் சமாரியாவைச் சொந்தமாகக் கட்டிக் கொண்டு அதின் பட்டணங்களில் குடியிருந்தார்கள் அவர்கள் அங்கே குடியேறினது முதல் கர்த்தருக்கு பயப்படாததினால் கர்த்தர் அவர்களுக்குள்ளே சிங்கங்களை அனுப்பினார். அவைகள் அவர்களில் சிலரைக் கொன்று போட்டது.

அப்பொழுது ஜனங்கள் அசீரியா ராஜாவை நோக்கி: நீர் இங்கே இருந்து அனுப்பி சமாரியாவின் பட்டணங்களிலே குடியேறுவித்த ஜாதிகள் அந்த தேசத்துத் தேவனுடைய காரியத்தை அறியாதபடியினால் அவர் அவர்களுக்குள்ளே சிங்கங்களை அனுப்பினார். அந்த தேசத்து தேவனுடைய காரியத்தை அவர்கள் அறியாதபடியால், ஜனங்கள் சாகிறார்கள் என்று சொன்னார்கள். அதற்கு ராஜா: நீங்கள் சமாரியாவிலிருந்து அசீரியாவுக்கு சிறைக் கைதிகளாய்க் கொண்டு வந்த ஆசாரியர்களில் ஒருவனை அங்கே கொண்டு போங்கள், அவர்கள் அங்கே குடியிருக்கும்படி அவன் அவர்களுக்கு அந்த தேசத்து தேவனுடைய காரியத்தைப் போதிக்கக்கடவன் என்று கட்டளையிட்டான்.

அந்தப்படியே ஆசாரியன் ஒருவன் வரவழைக்கப்பட்டு, கர்த்தருக்கு பயந்து நடக்க வேண்டிய விதத்தை அவர்களுக்குப் போதித்தான். ஆனாலும் அந்தந்த ஜாதிகள் தங்கள் தங்கள் தேவர்களைத் தங்களுக்கு உண்டு பண்ணி, தாங்கள் குடியிருந்த சமாரியா பட்டணங்களிலுள்ள கோயில்களில் வைத்தார்கள் (2 இரா 17: 24-29).

அவர்கள் கர்த்தருக்கு பயந்தார்கள், அதே சமயம் தங்கள் கோவில்களில் ஆராதனை செய்ய தங்களுக்குள்ளே ஈனமானவர்களை ஆசாரியர்களாக வைத்தார்கள் (2 இரா. 17:32).

அவர்கள் கர்த்தருக்கு பயந்தார்கள், ஆனாலும் தாங்கள் விட்டு வந்த ஜாதிகளுடைய முறைமையின்படியே தங்கள் தேவர்களை சேவித்தும் வந்தார்கள் (2 இரா. 17:33).

அந்த ஜாதிகள் கர்த்தருக்கு பயந்தார்கள். ஆனாலும் தங்கள் விக்கிரகங்களை சேவித்தும் வந்தார்கள் (2 இரா. 17:41). அவர்கள் கர்த்தரிடத்தில் அன்பு கூர்ந்து அவருக்கு பயந்து நடக்கவில்லை; தங்கள் சுய திட்டங்கள், முறைமைகளின்படியாகிலும், கர்த்தர் இஸ்ரவேல் என்று பேரிட்ட யாக்கோபின் புத்திரருக்கு கற்பித்த நியாயப் பிரமாணத்திற்கும் கற்பனைக்கும் ஒத்தபடியாகிலும் செய்யவில்லை (2 இரா. 17:34).

இந்த ஜாதிகளைப் போல்தான் இக்காலத்தில் பெரும் பகுதி கிறிஸ்தவர்கள் இருக்கிறார்கள். கர்த்தருக்கு பயந்து ஆராதனை செய்ய ஆலயத்துக்கு போகிறார்கள் வெளியே வந்து தங்கள் ஆசை இச்சையை நிறைவேற்ற தவறாமல் சினிமா சாலை (T. V. காட்சி) போகிறார்கள்.

கர்த்தருக்கு பயந்து வேத புத்தகத்தையும் படிக்கிறார்கள். மூடி வைத்து விட்டு, காதல் காவியங்களையும், கட்டுக் கதைகளையும், அசுத்த பத்திரிக்கைகளையும் படிக்கிறார்கள்.

கர்த்தருக்கு பயந்து முக்காடு போட்டு ஆலயம் செல்கிறார்கள். வீட்டுக்கு வந்ததும் (சிலர் கோயில்களிலும்) நடிகைகளைப் போல் நகையணிந்து, பூச்சூடி, பொட்டும் வைத்து, பட்டுடுத்தி பகட்டை காண்பிக்கிறார்கள்

கர்த்தருக்கு பயந்து யாவரும் ஒன்றாக வேண்டுமென்று ஜெபிக்கிறார்கள். ஆனால் ஜாதி, ஜாதியாக பிரிந்திருக்கிறார்கள்.

கர்த்தருக்கு பயந்து தேவன் ஆவியாக இருக்கிறார் என்று மனதுக்குள் ஜெபிக்கிறார்கள். ஆனால் இயேசு படம், மரியாள் படம் என்று மனுஷர் வரைந்த படத்துக்கு பூ வைத்து தூபம், தீபம் போடுகிறார்கள்.

கர்த்தருக்கு பயந்து காணிக்கை செலுத்துகிறார்கள். ஆனால் கள்ளத் தராசையோ, வட்டி வாங்குதலையோ பொய்யை முதலாக வைத்து பொருளீட்டுவதையோ விடுகிறதில்லை.

கர்த்தருக்கு பயந்து விக்கிரகத்தை சிலர் விட்டு விட்டார்கள். ஆனால் இரண்டகம் பண்ணுதல், பொருளாசை ஆகிய விக்கிரக ஆராதனையை இன்னும் விட வில்லை.

கர்த்தருக்கு பயந்து தேவ ஊழியர்களை உபசரிக்கிறார்கள். காணிக்கை கொடுக்கிறார்கள் ஆனாலும் அவர்கள் உபதேசிக்கிறதை உதாசீனப்படுத்துவதையோ விட வில்லை.

கர்த்தருக்குப் பயந்து ஞாயிற்றுக் கிழமை என்று தேவாலயம் சென்று தொழுகை செய்கிறார்கள். ஆனாலும் சில கெட்டவர்களைப் போல் நாள் பார்த்தல் நிமித்தம் பார்த்தல், சகுனம் பார்த்தல், இராகு, எமகண்டம், காலம் பார்த்தல், குலம் பார்த்தல், குறிகேட்டல் ஆகிய அஞ்ஞான துர்க்கிரியைகளை விட்டு ஓய வில்லை.

கர்த்தருக்கு பயந்து திருமண வைபவங்களில் வாக்கு பிரமாணத்தால் இணைகிறார்கள் ஆனாலும் விட்டு வந்த ஜாதி வழக்கப்படி தாலியும் கட்டிக் கொள்கிறார்கள்.

என்னே கிறிஸ்தவம்? இதுவல்ல கிறிஸ்தவம். அது புதிதும் ஜீவனுமான மார்க்கம். இறைவன் தண்டிப்பார், எரிப்பார் என்று பயப்படுதல் கர்த்தருக்குப் பயப்படும் பயமன்று. இறைவன் என் தகப்பன், அவரிடத்தில் அன்பு கூர்ந்து அவர் சொல்வதை எல்லாம் செய்து அவர் இருதயத்தை மகிழ்விப்பேன் என்பதே கர்த்தருக்கு பயப்படுதலாகும்.

நிலையை வெறுத்து, மெய்க்கிறிஸ்தவர்களாக ஜீவித்தால், ஜீவனில் பிரவேசிக்கலாம். இவர்கள் மெய்க் கிறிஸ்தவர்களாக வேண்டும்.

"உத்தமமான ஜனத்தை கர்த்தருக்கு ஆயத்தப்படுத்தும்படியாக....." லூக். 1:17.

# ஆதி முதல் சபையைக் கெடுத்தவர்கள்

ஆதாமுக்கு காயீன், ஆபேல் என்று இரண்டு பிள்ளைகள் இருந்தார்கள். காயீன் தன் சகோதரன் ஆபேலை கொலை செய்தான். ஆகையால் பூமியில் சபிக்கப்பட்டவனானான். அதோடு பூமியில் நிலையற்று அலைகிறவனானான்.

"பொல்லாங்கனால் உண்டாயிருந்து தன் சகோதரனை கொலை செய்த காயீனைப் போலிருக்க வேண்டாம்."

நோவாவுக்கு சேம், காம், யாப்பேத் என்னும் மூன்று குமாரர்கள் இருந்தார்கள். காம் தன் தகப்பனின் நிர்வாணத்தை சகோதரர்களுக்கு அறிவித்தான். காமின் மகன் கானான் சபிக்கப்பட்டு, தன் சகோதரர்களுக்கு வேலைக்காரனானான்.

தகப்பனின் குறையைத் தூற்றித் திரிந்த காமைப் போலிருக்க வேண்டாம்."

ஆபிரகாமுக்கு இஸ்மவேல், ஈசாக்கு என்று இரண்டு குமாரர்கள் இருந்தார்கள். இஸ்மவேல் தன் சகோதரனை பரியாசம் பண்ணினான் புறம்பே தள்ளப்பட்டான்.

"தன் சகோதரனுக்கு அநியாயம் செய்த இஸ்மவேலைப்போலிருக்க வேண்டாம்."

யாக்கோபுக்கு பன்னிரெண்டு குமாரர்கள் இருந்தார்கள். அவர்களில் ரூபன் கட்டுப்பாட்டை கடைப்பிடிக்காமல் எல்லைமீறி தன் முதன்மை ஸ்தானத்தை இழந்தான்.

"ரூபனைப்போல் அலைசடிப் படுகிறவனாக இருக்க வேண்டாம்."

சிமியோனும், லேவியும் உக்கிர கோபமும், மூர்க்கமும், அகங்காரமும் உடையவர்களாயிருந்து, தகப்பனின் வாசனையைக் கெடுத்துப் போட்டார்கள். அவர்கள் பிரிந்து சிதறினார்கள்.

"மூர்க்கனாகிய சிமியோனைப்போலும், அகங்காரியாகிய லேவியைப் போலவும் இருக்க வேண்டாம்."

மோசேயின் கீழே வனாந்தரத்தில் வழி நடந்த சபையிலே, கோராகு, தாத்தாம், அபிராம் என்பவர்கள் விசுவாசமிழந்து, மோசேயின் அதிகாரத்தை எதிர்த்து நின்றார்கள். பூமி தன் வாயைப் பிளந்து அவர்களையும் அவர்களுக்குரியவைகளையும் விழுங்கிப் போட்டது.

"கோராகைப் போல் தேவ அதிகாரத்தை எதிர்த்து நிற்க வேண்டாம்.

கானான் தேசத்தை சுற்றிப் பார்க்க கர்த்தரின் கட்டளைப்படி மோசேயினால் அனுப்பப்பட்ட பிரபுக்கள் பன்னிரண்டு பேர். அவர்களில் (திரும்பி வந்தவர்களில்) பத்து பேர் அந்த தேசத்தைக் குறித்து சபையார் மத்தியில் துர்ச்செய்தி பரப்பி சபையார் எல்லாரும் மோசேக்கு விரோதமாக முறுமுறுக்கும்படி செய்ததினால், வாதையினால் கர்த்தருடைய சந்நிதியில் செத்தார்கள்.

"துர்ச்செய்தி பரப்பி சபையிலே கலகம் உண்டாக்கின இந்த பத்து பேரைப்போல் நீங்களும் துர்ச்செய்தி பரப்பி சபையாரை மனமடிவாக்க வேண்டாம்."

யோசுவாவின் தலைமையில் இஸ்ரவேலர் எரிகோவைப் பிடித்தார்கள். சபையிலே கர்மீயின் மகன் ஆகான் பாவம் செய்து உடன்படிக்கையை மீறி, சாபத்தீடானதை இச்சித்து எடுத்து, திருடி, வஞ்சித்து எடுத்ததை மறைத்தும் வைத்ததினால் கர்த்தர் சபையை விட்டு வெளியேறினார். இப்படி சபையை கலங்கடித்ததினிமித்தம் குடும்பத்தோடே, கல்லெறியுண்டு செத்தான்

"இந்த ஆகானைப் போல உங்களில் ஒருவ

வும் இச்சிக்க வேண்டாம், எடுக்க வேண்டாம், மறைக்க வேண்டாம், சாகவும் வேண்டாம்."

இஸ்ரவேலரில் பத்துக் கோத்திரத்திற்கு ராஜாவாக இருந்த யெரொபெயாம், ஜனங்கள் எருசலேமில் தேவனை தொழுது கொள்ள போவார்களானால், தன்னை விட்டு பிரிந்து போவார்கள் என எண்ணி துர் நோக்கத்தோடே இஸ்ரவேலர் எருசலேமுக்கு ஆராதனைக்குப் போவதை தடுக்க இரண்டு பொற்கன்று குட்டிகளை செய்து பெத்தேலிலும், தாணிலும் வைத்து, இவைகளே உங்களை எகிப்திலிருந்து கொண்டு வந்த தெய்வம் என துர்போதனை செய்து இஸ்ரவேலரைப் பாவம் செய்யப்பண்ணினபடியால் கர்த்தர் யெரொபெயாமின் வீட்டாரை பூமியின் மேல் வைக்காமல் அதம் பண்ணி அழித்தார்.

"இந்த யெரொபெயாமைப் போல் கபட நாடகத்துக்காய், ஜனத்தை பாவம் செய்ய பண்ணுகிற ஒருவன் நம்மிலே வேண்டாம்."

மிரியாம் மோசேயின் மூத்த சகோதரி. இவள் மோசேயின் மனைவியினிமித்தம் மோசேக்கு விரோதமாக பேசினதினிமித்தம் குஷ்டரோகியானாள். இவள் சுகமடையும் நாள் மட்டும் ஏழு நாளளவும் இஸ்ரவேலரின் பிரயாணம் தடைபட்டது.

"இந்த மிரியாம் செய்தது போல் அதிபதிக்கு விரோதமாக பேச வேண்டாம்."

நம்முடைய கர்த்தருக்கு பன்னிரண்டு சீஷர்கள் இருந்தார்கள். அதிலே யூதாஸ் திருடனாயிருந்து அநீதியாக பணம் பண்ண நீதிபரரைக் காட்டிக் கொடுத்தான். அவன் தலை கீழாய் விழுந்து, வயிறு வெடித்து, குடல் சரிந்து செத்துப் போனான்

"இந்த யூதாஸைப் போல ஒருவனும் துரோகியாக இருக்க வேண்டாம்."

கொரிந்து சபையிலே ஏராளம் பரிசுத்தவான்கள் இருந்தார்கள். அவர்களில் ஒருவன் அசுத்தனாயிருந்து, தன் தகப்பனின் மனைவியை வைத்திருந்து, சபையில் இருக்கிற மற்றவர்களை கெடுக்கப் பார்த்தான். பவுல் அவனை சாத்தான் கையில் ஒப்புக் கொடுத்தார். அதோடு சபை நீக்கம் செய்தார்.

"இந்த பொல்லாதவனைப் போல் உங்களில் ஒருவனும் விபசாரம் செய்ய வேண்டாம்."

இப்படி ஆதி முதற்கொண்டு சபையைக் கெடுத்த சிலர் இருந்தார்கள். உங்களில் யாரும் அப்படி இருந்து அவர்களைப் போல் நீங்காத நிந்தை அடையாதிருங்கள்.

" இவர்கள் துணிகரக்காரர், அகங்காரிகள், மகத்துவங்களைத் தூஷிக்க அஞ்சாதவர்கள்" 2 பேது. 2:10

---

# புதிய எருசலேம் சபையை எவ்வாறு தெரிந்து கொண்டேன்

என் பெயர் அங்கப்பன். நான் ராஜஸ்தான் மாநிலத்திலுள்ள கோட்டாவில்(Kota) இருக்கிறேன்.

கர்த்தருடைய பரிசுத்த நாமத்திற்கு ஸ்தோத்திரம் உண்டாவதாக

நான் இந்துவிலிருந்து இரட்சிக்கப்பட்டு 1975-ம் ஆண்டு செப்டம்பர் 28-ம் தேதி கிறிஸ்துவுக்குள்ளானேன். இரட்சிப்புக்குள் வந்தபின் பரிசுத்த ஆவியானவர் என்னில் காணப்படும் பாவங்களை வசனத்தின் மூலம் உணர்த்திக் கொண்டிருந்தார். நான் இரட்சிப்புக்குள் வந்த ஆரம்ப நாட்களில் பேராவூரில் இருந்தபொழுது என்னுடன் வேலை பார்த்து வந்த சாக்கோ என்ற சிவில் இஞ்சினியர் ஒரு ஜெபக் கூடம் அமைத்து இராணுவத்தில் உள்ள அவருடைய நண்பர்களை எல்லாம் கூட்டிச் சேர்த்து ஜெபித்து வந்தார். அவரோடு கூட நானும் ஐக்கியப்பட்டு ஜெபித்து வந்தேன். அந்நாட்களில் உபதேசத்தைப்பற்றி முழு விளக்கமும் எனக்குத் தெரியாது. ஆனால் ஜெபித்து வந்த நாட்களில் தேவ சமாதானம் என்னை ஆட்கொண்டது. ஆனால் பாவத்திலிருந்து விடுதலை பூரணமாக கிடைக்கவில்லை.

நான் ஐக்கியமாயிருந்த ஜெபக் கூடத்தில் பல்வேறு சபைப் பிரிவை சேர்ந்தவர்கள் இருந்தார்கள் நானும் கிறிஸ்துவைப் பற்றி அறிய அதிக ஆவல் கொண்டிருந்தபடியால் ஒவ்வொருவரிடமும் கேட்டேன். சகோதரர்களில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாக கூறினார்கள். என்னில் குழப்பமே அதிகரித்தது. கிறிஸ்தவர்கள் மத்தியில் இவ்வாறு குழப்பம் இருப்பதை அறிந்து நாம் இரட்சிக்கப்படாமலே இருந்திருந்தால் எவ்வளவோ நல்லது என்று நினைத்ததும் உண்டு. ஆனாலும் எனது தனி ஜெபத்தில் கர்த்தாவே, எனது குழப்பத்தை நீக்கி விடும் என்று ஜெபித்தேன்.

அந்த நாட்களில் சகோதரர்களில் சிலர் C. P. M. ஊழியக்காரர்களை கொண்டு வந்து ஜெபத்தை நடத்த ஆரம்பித்தார்கள் அப்பொழுது கூட்டத்தில் உள்ள சகோதரரில் அநேகருக்கு C. P. M. ஊழியக்காரர் வந்தபின் அநேக குழப்பங்களும் வேறுபாடுகளும் அதிகரிக்க ஆரம்பித்து விட்டன. அப்பொழுது C. P. M. ஊழியர்கள் நாங்கள்தான் மெய்யானசபை எங்களோடு சேர்ந்து தான் ஆராதிக்க வேண்டும் என வற்புறுத்தினார்கள். ஆனால் பரிசுத்த ஆவியானவர் எனக்கு பூரண சம்மதத்தை அளிக்கவில்லை. அவ்வாறு சபையின் ஐக்கியமின்றி ஒன்றிரண்டு வருடங்கள் கழிந்தன.

தேவன் அந்நாட்களில் "மெய்யான திருச்சபை என்று ஒன்று உண்டு அதில் உன்னை ஐக்கியப்படுத்துவேன்" என்று பரிசுத்த ஆவியானவர் மூலம் தெரிவித்துக் கொண்டிருந்தார். அந்நாட்களில் தேவன் தமது தன்மை ஐயாவை எனக்குத் தரிசனத்தில் காண்பித்து அவர்கள் ஒரு சாவிக் கொத்தை எனக்கு கொடுப்பதாக காண்பித்தார். கர்த்தர் சகரியா 3-ம் அதிகாரத்தின் மூலம் அடிக்கடி பேசிக் கொண்டிருந்தார்.

1977-ம் வருட இறுதியில் தேவன் என்னில் அதிகம் அன்பு கூர்ந்தபடியால் புதிய எருசலேம் சபையைச் சேர்ந்த சகோதரர் பால் மணி (ஆலங்கோட்டையைச் சேர்ந்தவர். அப்பொழுது இராணுவத்தில் பேராவூரில் வந்து இருந்தார்) என்பவரை எங்கள் ஜெபக் கூட்டத்திற்கு அனுப்பி தந்தார். அவர் என்னோடு திருச்சபைப் பற்றியும் ஊழியக்காரருக்கு தேவன் அளித்துள்ள வரங்களைப் பற்றியும் விவரித்து சொன்னார். அச்சமயங்களில் எனது ஆத்துமாவில் அதிக சந்தோஷம் ஏற்பட்டது. பாவ மன்னிப்பு பெறும் விதத்தைப்பற்றியும் கூறினார்.

இதைப்பற்றிக் கேள்விப் பட்டபோது பாவத்தை மனிதரிடம் கூறுவதா? அவர்கள் பாவங்களை மன்னிக்க முடியுமா? கிறிஸ்து ஒருவரே பாவத்தை மன்னிக்கக் கூடியவர் - என்ற சில கேள்விகளை மற்ற சகோதரர்கள் எழுப்பி குழப்பத்தை உண்டுபண்ணினார்கள். இருப்பினும் எனது

ஆத்தும பூரண விடுதலையை வாஞ்சித் தது.

அந்நாட்களில் தேவன் வள்ளியூரில் உள்ள பாஸ்டர் சுந்தர்ராஜ், பாஸ்டர் ஏசுதாசன் அவர்களுக்கு பேட்ராடுன் ஊழியத்தைப்பற்றி வெளிப்படுத்தல் உண்டாகி, அவர்கள் தேவ ஆலோசனைப்படி 1978 ஏப்ரல் மாதத்தில் டேராடுன் கடந்து வந்தார்கள். அடியேனுக்கு திருச்சபையைப்பற்றியும் தேவன் அவர்களுக்கு கொடுத்துள்ள அதிகாரத்தைப் பற்றியும் விவரித்துச் சொன்னார்கள். பாவமன்னிப்பைப் பெற்றுக் கொள்ளும் விதத்தைப் பற்றியும் விவரித்தார்கள்.

யோவான் 20:23-ம் வசனத்தை காண்பித்து விவரித்துச் சொன்னார்கள். அதை விசுவாசித்து அன்றையத் தினமே இரவு 12 மணிக்கு என் பாவங்களை எல்லாம் ஊழியக்காரர்கள் முன்பு அறிக்கை செய்தேன். என்றுமில்லாத பரம சந்தோஷத்தை (தேவ சமாதானத்தை. பாவமன்னிக்கப்பட்டதின் நிச்சயத்தை) பெற்றுக் கொண்டேன் அன்று முதல் ஆவியானவர் திருச்சபையோடு அடியேனை ஐக்கியப்படுத்தினார். அல்லேலூயா!

1978 அக்டோபர் மாதத்தில் தலைமை சபைக்கு (பம்பாய்) கடந்து செல்லவும் திருச்சபையோடு ஐக்கியப்படவும் கர்த்தர் கிருபை தந்தார். பாஸ்டர் சுந்தர்ராஜ், பாஸ்டர் ஏசுதாசன் அவர்கள் டேராடுன் வந்த நாட்களில் கர்த்தர் அடியேனுக்கு உணர்த்திய வசனங்களையும் (ஏசா.3-ம் அதி.) தரிசனத்தையும் அவர்களிடம் கூறினேன். அவர்கள்: கர்த்தர் உங்களை ஊழியத்திற்காக அழைக்கிறார். ஒப்புக் கொடுங்கள் ஆசீர்வதிப்பார் என்று கூறினார்கள். அது போல அடியேனும் 1981-ம் ஆண்டு துரைசாமியாபுரத்தில் ஊழியத்திற்காக தெரிந்து கொள்ளப்பட்டேன்.

இவ்வாறு தேவன் என்னில் அன்பு கூர்ந்து இரட்சித்து புதிய எருசலேமோடு ஐக்கியப்படுத்தியதற்காக கோடா கோடி ஸ்தோத்திரம். என்னை திருச்சபையோடு ஐக்கியப்படுத்தின நாள் முதல் தேவன் இது வரை அற்புதமாக வழி நடத்தியுள்ளார். அதற்காகவும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன்.

"கர்த்தர் எனக்கு செய்த எல்லா உபகாரங்களுக்காகவும் அவருக்கு என்னத்தை செலுத்துவேன். இரட்சிப்பின் பாத்திரத்தை எடுத்துக் கொண்டு கர்த்தருடைய நாமத்தை தொழுது கொள்வேன்" (சங். 116:12,13).

கர்த்தருடைய நாமத்தை தொடர்ந்து மகிமைப்படுத்த கிருபை அளிக்க; தேவ சித்தம் செய்ய எனக்காகவும் என்னுடைய குடும்பத்திற்காகவும் ஊழியர்களும் தேவ பிள்ளைகளும் ஜெபத்தில் நினைவுகூர வேண்டுகிறேன்.

Eld. Bro. அங்கப்பன்,
கோட்டை, ராஜஸ்தான்.

"திரளான ஜனங்கள் புறப்பட்டு வந்து: நாம் கர்த்தரின் பர்வதத்துக்கும்; யாக்கோபின் தேவனுடைய ஆலயத்துக்கும் போவோம் வாருங்கள்; அவர் தமது வழிகளை நமக்குப் போதிப்பார்; நாம் அவர் பாதைகளில் நடப்போம் என்பார்கள்; எனெனில் சீயோனிலிருந்து வேதமும்; எருசலேமிலிருந்து கர்த்தரின் வசனமும் வெளிப்படும்." ஏசா.2:3.

கவிசேகர்

# ஒரே பரிகாரம்

மனிதர்கள் பிறக்கிறார்கள், இறக்கிறார்கள். பிறந்த மனிதன் மரணத்திற்காக நியமிக்கப்படுகிறான். பாவத்தைத் தொடர்ந்து சாபமும், மரணமும், ஆக்கினையும் மனிதர் மேல் தண்டனையாக வருகின்றன. பாவமும், மரணமும் வேறுபாடின்றி எல்லா மனிதர் மேலும் நியமிக்கப்பட்டிருக்கிறது. எல்லா மனிதனையும் அது சமமாக பாதிக்கிறது. ஏழை பணக்காரன் என்றோ; படிப்பாளி, முட்டாள் என்றோ; உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்றோ, பெரியவன் சிறியவன் என்றோ வித்தியாசமில்லாமல் பாவம் எல்லாரையும் ஆட்கொள்ளுகிறது. பாவிகளாக்குகிறது. அப்படியே மரணமும். "அன்றியும், ஒரேதரம் மரிப்பதும் பின்பு நியாயத்தீர்ப்படைவதும்" மனுஷருக்கு நியமிக்கப்பட்டிருக்கிறது (எபி 9:27).

உலகத்தில் பிறந்த மனிதன் வளர்ந்து இறைவனை அறிந்து பாவத்தை விட்டு மனந்திரும்பி தேவ பக்தனாய் மாறி, இரட்சிக்கப்பட்டு நற்கிரியை செய்து முக்தியடையும் படியாய் அவனுக்கு வாழ்க்கை கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த மனித வாழ்க்கை மிகவும் மேன்மையானதாகும். இது ஒரே தரம் மனிதனுக்கு கிடைக்கிறது. மனிதன் பிறக்கிறதற்கு முன் இல்லை. பிறந்த பின் தொடர்ந்து இருக்கிறான். மனிதன் மரித்தவுடனே அவனுக்கு நியாயத்தீர்ப்பு உண்டாகப்போகிறது. ஆனபடியினால் மனிதன் மனிதனாக இந்த உலகத்தில் ஜீவிக்க வேண்டும். மிருக சுபாவங்களை விட்டு விட வேண்டும். அறியாமையை அகற்ற வேண்டும். தேவனை அறிந்து அவரை வழிபட்டு இறைவனுடைய சித்தப்பிரகாரம் இப்பூவுலகில் வாழ வேண்டும்.

ஏனென்றால் மனிதன் மிருகமல்ல, பட்சியல்ல பறவையல்ல, பிராணியல்ல. மிருகங்கள், பறவைகள், பிராணிகள், போல குருட்டுத்தன்மையுடையவன் அல்ல. நன்மை தீமை அறியத்தக்க அறிவை ஞானவு உடையவனாய் இருக்கிறான். ஆனபடியினால் அவன் மனந்திரும்பி தேவனை விசுவாசிக்க வேண்டும். அதற்கு பாவத்தை விட்டு மனந்திரும்புதலும் மெய் தேவன் மேல் விசுவாசமும் தேவை. பாவத்தை விட்டு மனந்திரும்புவதினால் பாவ மன்னிப்பும், மெய் தேவனை விசுவாசிப்பதினால் தெய்வீக தொடர்பும் உண்டாகும். அதனால் அவன் பரிசுத்தனாய், மனிதனாய் இவ்வுலகத்தில் ஜீவிக்க முடியும். அவன் மனந்திரும்பவும், பாவ மன்னிப்படையவும், தெய்வீகத் தொடர்பு உண்டாகவும் ஒரே நிவாரணம் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் சிலுவை மரணமேயாகும். இது ஒரு பலி. பாவம் போக்க பாவத்திற்காய் செலுத்தத்தக்க வேறொரு பலியில்லை. வேறொரு மார்க்கத்திலும், கொள்கையிலும் மனிதனுக்கு பாவ மன்னிப்பும், பாவத்திலிருந்து விடுதலையும் இல்லை. "வேஷமாகவே மனுஷன் திரிகிறான்; விருதாவாகவே சஞ்சலப்படுகிறான்; ஆஸ்தியைச் சேர்க்கிறான், யார் அதை வாரிக்கொள்வான் என்று அறியான்" (சங். 39:6). மனிதன் சாபத்தினால் உண்டாயிருக்கிற அழிவிலிருந்தும், பாவத்தினால் உண்டான தேவ கோபத்திலிருந்தும், மெய்யான மரணத்திலிருந்தும் (நரகம்) தப்பித்துக் கொள்ள ஒரே நிவாரணம் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவே.

அவரை விசுவாசித்து ஏற்றுக் கொண்டு பாவத்தை விட்டு மனந்திரும்பி ஆத்ம சாந்தியைப் பெற்றுக் கொள்ளுங்கள். பாவங்களினிமித்தம் செலுத்தத்தக்க வேறொரு பலி இல்லை. நியாயத்தீர்ப்பு வருமென்று சத்திய வேதம் கூறுகிறது.

---

"அவராலேயன்றி (இயேசு கிறிஸ்து) வேறொருவராலும் இரட்சிப்பு இல்லை"

அப். 4:12

---

"தேவனைத் தேடு"

**"SEEK GOD"**

Regd. No. 040088/84
Postal Regd. No. MH BY NE-94/93
Tamil Monthly Magazine

மகிழ்ச்சியுடன் கொண்டாடுங்கள்!

# புதிய எருசலேம் சபையின் 26-வது ஆண்டு நிறைவு விழா (8.8.1968 - 8.8.1994).

திருச்சபையின் மக்கள் தாங்கள் அற்பமாயிருக்கிறோம் என்று எண்ணக் கூடாது. நாம் தேவ சரீரத்தின் அவயவமாயிருக்கிறோம். "தேவன் தமது சித்தத்தின்படி அவயவங்கள் ஒவ்வொன்றையும் சரீரத்திலே வைத்தார்" (1கொரி. 12:18). நம் ஒவ்வொருவருக்கும் அவரவருக்குரிய வரமுண்டு; நீங்களும் பிரயோஜனமுள்ளவர்கள். "ஒரு அவயவம் பாடுபட்டால் எல்லா அவயவங்களும்கூட பாடுபடும், ஒரு அவயவம் மகிமைப்பட்டால் எல்லா அவயவங்களும்கூட சந்தோஷப்படும்." புதிய எருசலேம் சபை இப்படி இயங்குகிறது; இருக்கிறது (1 கொரி. 12:26). வெளியே அப்படியில்லை. இந்த 26 ஆண்டுகளாக ஒரே சரீரமாக நிலை நிறுத்தியிருக்கிற இறைவனை மகிமைப்படுத்தி, 8.8.1994 திங்கள் கிழமையன்று 26-வது ஆண்டு நிறைவு விழாவை பண்டிகையாகக் கொண்டாடும்படி இயேசுவின் நாமத்தில் கேட்டுக் கொள்ளுகிறோம்.

ஆசிரியர்

## அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்
   - 22 [வெள்ளி] ஜூலை 1994
   - 22 [திங்கள்] ஆகஸ்ட் 1994
   - 20 [செவ்வாய்] செப்டம்பர் 1994
2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை ஆண்டு சந்தா [illegible]
   வெளிநாடு R[illegible]

   அனுப்ப வேண்டிய முகவரி:

   CHIEF PASTOR R. LAZAR
   "NEW JERUSALEM CHURCH"
   CHURCH LANE, TILAK NAGAR,
   DARGA ROAD, BHANDUP,
   BOMBAY-400 078 INDIA.
3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.
4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.
5. 'புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரூ. 15-(பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் [Capital Letter] எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 122 - AUG. '94



"புதிய எருசலேம் சபை"

[illegible]

[illegible]

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கேற்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்:

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10:40-43).

CHIEF PASTOR N. LAZAR

## இதழின் உள்ளே...

# ஆசிரியர் உரை

தேவ ஜனங்களுக்கு கர்த்தராகிய இயேசுவின் நாமத்தில் அறிவிப்பதாவது: மனிதன் பெலவீனமுள்ளவனும் பாவியாய் இருக்கிறான். மனிதனை முற்றும் முடிய இரட்சிக்கும்படியாய் இறைவன் தம்முடைய குமாரனை கல்வாரிக்கு அனுப்பிக் கொடுத்தார். அவர் சிலுவையில் சிந்தின இரத்தத்தினால் பாவமன்னிப்பு உண்டாயிருக்கிறது. அவர் காயங்களினால் தெய்வீக சுகம் உண்டாயிருக்கிறது. அவருடைய மரண அடக்க உயிர்த்தெழுதலினால் அவர் சம்பாதித்த இரட்சிப்பை புண்ணிய பலன்களை நாம் கிறிஸ்து இயேசுவை விசுவாசித்து, மனந்திரும்பி முழுகி ஞானஸ்நானம் பெறுகிறதின் மூலம் அடைந்து கொள்கிறோம். இந்த இரட்சிப்பு பூரணப்படவேண்டும், தடைபடக் கூடாது. பாவத்தினால் இரட்சிப்பு தடைபடவும், பரிசுத்தக் குலைச்சல் ஆக்கப்படவும், பூரணப்படக் கூடாமலும்போகும். அதிலிருந்து நாம் விடுதலை பெற பாவஅறிக்கை செய்து பாவமன்னிப்பைப் பெற்றுக் கொள்ள தேவன் திருச்சபைக்கு பாவஅறிக்கை, பாவமன்னிப்பு ஆகிய திருவருட்சாதனங்களை கட்டளையிட்டுள்ளார். அதை ஒழுங்காக கைக்கொள்வதின் மூலமாக தடைப்பட்ட இரட்சிப்பில் வேகமாய் வளரவும், பரிசுத்தத்தில் வளரவும், பரிசுத்தமடையவும், புது ஜீவனையும் உற்சாகத்தையும் பெலனையும் நாம் பெற்றுக் கொள்ளவும் முடியும். ஆனபடியால் பாவஅறிக்கை செய்து தங்களை சுத்திகரித்துக் கொள்ள ஆலோசனை பெற்றுக் கொள்ள தீவிரமாயிருக்கவும். இதுவே வழி, இதிலே நடவுங்கள்.

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

(CHIEF PASTOR N. LAZAR)

# கிறிஸ்தவ மார்க்கம் (தொடர்ச்சி)

## ஞானஸ்நானம்

இயேசு நாமக்காரர்கள் இயேசுவின் நாமத்தில்தான் ஞானஸ்நானம் கொடுக்க வேண்டுமென்று ஒரே வாதத்தில் ஈடுபடுவார்கள். அவர்களுடைய நோக்கம் திரித்துவத்தை மறுதலிப்பதே.

ஒரு நாள் நான் வெளியேயிருந்து ஜெரிமெரி – குர்லா (பம்பாய்) சபை வீட்டிற்குள் பிரவேசித்தேன். அங்கே ஜெப அறையில் ஒரு இயேசு நாமக்காரர் (முதலூர்–நெல்லை மாவட்டம்) புதிய எருசலேம் சபை ஊழியர் ஒருவரிடம் காரசாரமாக தர்க்கித்துக் கொண்டிருந்தார். நான் உள்ளே போய் கை, கால் அலம்பிக் கொண்டு திரும்ப வந்து உட்கார்ந்தேன். அறிமுகப்படுத்திக் கொண்டு சுசலம் விசாரித்து விட்டு என்ன, எதை குறித்து தர்க்கிக்கிறீர்கள் என்று கேட்டேன். திரித்துவத்தைக் குறித்து தர்க்கம் பண்ணின விபரத்தை தெரிவித்தார். சரி – நீங்கள் இயேசுவின் கட்டளைக்கு கீழ்ப்படிகிறதுமில்லை, விசுவாசிக்கிறதுமில்லை. இறைவன் என்றாலே பிதா குமாரன் பரிசுத்த ஆவி என்றல்லவா அர்த்தம்.

இயேசு சொன்னதைக் கேளும்: "தேவனிடத்தில் விசுவாசமாய் இருங்கள் என்னிடத்திலும் விசுவாசமாயிருங்கள்" என்றல்லவா சொல்லியிருக்கிறார் (யோ. 14:1). நீங்கள் ஏன் வறட்டு வாதம் செய்கிறீர்கள். தேவனிடத்திற்கு மனந்திரும்புவதும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசிப்பதும் புதிய ஏற்பாட்டில் அவசியமாகும் [அப். 19:21] என்பதை அவருக்கு விவரித்து அவருடைய வாயை அடைத்தேன். அதோடு கூட இதுவே சத்தியம், இந்த முறையிலே புதிய ஏற்பாடு முழுவதிலும் எழுதப்பட்டிருக்கிறது என்று சொல்லி அவரை விசுவாசிக்க சொல்லி ஜெபித்து அனுப்பி விட்டேன்.

மறுநாள் அவர் தம்முடையவரில் ஒருவரைப் பார்த்து ஐயா, உங்கள் ஐயா எங்கள் ஆணி வேரையே பிடுங்கி விட்டார். எனக்கு எல்லாமே குழப்பமாக இருக்கிறது. நான் பம்பாய் வந்த நோக்கமே நிர்மூலமாகிவிட்டது. இன்னொரு முறை வந்து ஐயாவிடம் விளக்கம் பெற்றுக் கொண்டு நான் ஊருக்குப் போகப் போகிறேன் என்று சொல்லியிருக்கிறார்.

முன்னொரு முறை இயேசு நாமக்காரர்கள் தங்களுடைய பத்திரிகையில் பழைய ஏற்பாட்டிலிருந்து திரித்துவத்தை ஸ்தாபிக்கிறவர்களுக்கு இரண்டாயிரம் ரூபாய் பரிசு கொடுக்கிறோம் என்று சொன்னார்கள். நான் போய் திரித்துவத்திற்கு விலை இரண்டாயிரம் ரூபாய் தான் வைத்திருக்கிறீர்களா? சரி இப்போ நான் திரித்துவத்தை ஸ்தாபிக்கிறேன் என்று சொல்லி பழைய, புதிய ஏற்பாட்டிலிருந்து திரித்துவத்தை ஸ்தாபித்தேன். ஆனால் பொய்யர்கள் எனக்கு அந்த இரண்டாயிரம் ரூபாய் கூட தரவில்லை.

ஆனபடியினால் இவர்கள் வேதத்தில் இல்லாத ஒருத்துவ வாதத்தை தவறான உபதேசத்தை பிடித்துக்கொண்டு, அதை ஸ்தாபிப்பதற்கு இயேசுவின் நாமத்தில் ஞானஸ்நானம் கொடுக்க வேண்டும் என்று பிதற்றுகிறார்கள் அது தவறு. கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் கட்டளையை நாம் நிறைவேற்ற வேண்டும்.

அப்போஸ்தலனாகிய பவுல் என் நாமத்தினாலே ஞானஸ்நானம் கொடுத்தேனென்று ஒருவனும் சொல்லாதபடிக்கு நான் அநேகமான பேருக்கு ஞானஸ்நானம் கொடுக்கவில்லையென்கிறார் (1 கொரி

14:17). ஞானஸ்நானம் கொடுக்கிறவர்களுடைய பெயர் வழங்கப்பட்டு வந்தது. ப்படியே யோவான் கொடுத்த ஞானஸ்நானத்திற்கு யோவானின் ஞானஸ்நானம் என்றும், கர்த்தராகிய இயேசு கிறிஸ்து கொடுத்த ஞானஸ்நானத்திற்கு இயேசுவின் ஞானஸ்நானம் என்றும் பெயர். தன் பெயர் ஞானஸ்நானத்தில் சம்பந்தப்படக் கூடாது என்பதற்காக பவுல் அப்படிச் சொன்னார்.

ஞானஸ்நானம் என்பது ஒரு மனிதனை கிறிஸ்துவுக்குள்ளாக்குவதேயாகும் (கலா. 2:27). ஆனபடியினால் நாமச் சண்டையை விட்டு விட்டு உண்மையாய் அந்த ஆத்துமா மனந்திரும்பி இரட்சிக்கப்படுவதையே நாம் முக்கியப்படுத்த வேண்டும். அவர்களுக்கு இயேசுவைப்பற்றி போதிக்க வேண்டும் (அப். 19:4).

சபைக்கு சபை வெவ்வேறு ஞானஸ்நானம் கொடுக்கக் கூடாது. சரியாய் மனந்திரும்பாமலும், முறையாய் அறிக்கை செய்து பாவத்தை விட்டு விடாமலும், தெளிவில்லாமலும் கட்டாயப் படுத்தப்பட்டும் விசுவாசமில்லாமல் தவறான உபதேசத்திலும் ஞானஸ்நானம் கொடுக்கப்பட்டிருந்தால், பெற்றிருந்தால் திரும்ப ஞானஸ்நானம் பெறலாம்.

ஞானஸ்நானம் முழுக்கி, மல்லாக்க பிதா குமாரன் பரிசுத்த ஆவியின் நாமத்திலே என்று ஞானஸ்நானம் கொடுக்க வேண்டும் [எபே. 5:26; தீத்து 3:5; எபி. 10:22]. தெளிப்பு ஞானஸ்நானமோ வேறு எவ்விதத்தில் கொடுக்கிற ஞானஸ்நானமோ சரியானது அல்ல. பிதா குமாரன் பரிசுத்த ஆவியின் நாமத்திலே உனக்கு ஞானஸ்நானம் கொடுக்கிறேன் என்று மல்லாக்க ஞானஸ்நானம் கொடுத்து எழுப்பி விட வேண்டும். இதுவே கர்த்தரின் கட்டளை இப்படி ஞானஸ்நானம் பெற்றவர்கள் இரட்சிக்கப்படுகிறார்கள் (மாற். 16:16; அப். 2:38).

தம் நாமத்தினாலே பிசாசுகளைத் துரத்தவும், வியாதியஸ்தர்களை சொஸ்தமாக்கவும் ஜெபம் பண்ணவும் கட்டளையிட்ட கர்த்தராகிய இயேசு கிறிஸ்து தம்மை விசுவாசித்து ஏற்றுக் கொண்டவர்களை ஸ்நானப்படுத்த பிதா குமாரன் பரிசுத்த ஆவியின் நாமத்திலே ஞானஸ்நானம் கொடுக்கும்படி கட்டளையிட்டார் [மாற். 16:17-20; மத். 28:19]. இதனுடைய அர்த்தம்: ஒரு மனிதனுடைய இரட்சணியம் பூரணப்பட பிதா குமாரன் பரிசுத்த ஆவியாகிய மூவரின் கிரியை அவசியம்.

குழந்தை ஞானஸ்நானம்.

குழந்தை ஞானஸ்நானம், தெளிப்பு ஞானஸ்நானம் இவை இரண்டுமே மனிதனுடைய கற்பனைக்கு உட்பட்டதாகும். அவர்கள் அதற்கு கொடுக்கும் விளக்கம் என்னவென்றால், கொர்நேலியு வீட்டாரிலும், சிறைச்சாலைக்காரன் வீட்டாரிலும் குழந்தைகளும் இருந்திருப்பார்கள் அல்லவா, ஆனபடியால் குழந்தை ஞானஸ்நானம் கொடுப்பது அப்போஸ்தலர் காலத்திலிருந்தே நடைமுறையிலிருக்கும் சம்பவம் என்றும்; ஆதிக் கிறிஸ்தவர்களில் சரங்கக் குகைகளில் வாழ்ந்தவர்கள் வரைந்திருக்கும் சித்திரங்களில் குழந்தைகளுக்கு ஞானஸ்நானம் ஊற்றி கொடுத்திருப்பதாக வரைந்திருக்கிறார்கள் என்றும் புறம்பான காரணங்களைச் சொல்லுகிறார்கள்.

குழந்தை ஞானஸ்நானமோ, ஊற்றிக் கொடுப்பதோ, தெளித்துக் கொடுப்பதோ வேதாகமத்தின் அடிப்படையிலல்ல; மனித கற்பனைகளிலும், புறம்பான சான்றுகள் என்று சொல்லப்படுகிறவைகளிலிருந்தும் சொல்லப்படுபவையே. "விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான்" [மாற். 16:16] என்ற இயேசு சொன்ன வார்த்தையை மாற்றும்படியாக மனுஷ கற்பனையினால் உண்டாக்கப்பட்டதே குழந்தை ஞானஸ்நானமாகும்.

மறுஒரு விளக்கம் இவ்விதமாக கொடுப்பதுண்டு: யூதர்கள் தங்கள் மத சிலாக்கியங்களில் தங்கள் பிள்ளைகளை பங்கு பெறச் செய்ய குழந்தை பிறந்த 8-ம் நாளில் விருத்தசேதனம் செய்கிறதுபோல, கிறிஸ்தவர்கள் கிறிஸ்து நாதரின் புண்ணியங்களில் பங்கு பெறச் செய்யும்படியாக குழந்தைகளுக்கு ஞானஸ்நானம் கொடுக்கிறார்கள் என்கிறார்கள்.

இன்னும் சிலருடைய விளக்கம் என்னவென்றால்: ஆதிப்பெற்றோர்களின் ஜென்ம பாவத்தை குழந்தைகள் சுதந்தரித்துக் கொண்டு பிறப்பதுபோல குழந்தையாய் இருக்கும் போதே கிறிஸ்து நாதரின் இரட்சிப்பை சுதந்தரித்துக் கொள்ள குழந்தையிலே ஞானஸ்நானம் கொடுக்கிறோம் என்கிறார்கள்.

ரோமன் கத்தோலிக்க சபையின் பழக்கமான குழந்தை ஞானஸ்நானத்தை [தெளிப்பு ஞானஸ்நானம்] சுதந்தரித்துக் கொண்டே பிராட்டஸ்டண்ட் சபையார் தங்கள் ஆரம்பத்தை ஆரம்பித்தார்கள். மார்ட்டின் லூத்தரும் குழந்தை ஞானஸ்நானத்தை ஒப்புக் கொண்டவரே. "நீங்கள் உலகமெங்கும் புறப்பட்டுப்போய் சகல ஜாதிகளையும் சீஷராக்கி, பிதா குமாரன் பரிசுத்த ஆவியின் நாமத்தில் அவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுங்கள்" என்று இயேசுவானவர் சொன்னதில் குழந்தைகளும் உண்டு என்று லூத்தர் போதித்தார்.

ரோமன் கத்தோலிக்க சபை, லூத்தரன், மெதடிஸ்ட், ஆங்கிலிகன், பிரஸ்பிடேரியன் ஆகிய சபையோர் குழந்தை ஞானஸ்நானத்தை கடைபிடித்து வருகிறார்கள். குழந்தையிலே ஞானஸ்நானம் கொடுத்து அவர்கள் இரட்சிக்கப்பட்டார்கள் என்றால், பின்பு இரட்சிக்கப்படுங்கள் என்று போதிக்க வேண்டிய அவசியம் என்ன? ஆகையால் பிராட்டஸ்டண்டு சபையாரும் வேதத்தை கடைபிடித்து வருகிறார்கள் என்று சொல்ல இடமில்லை. ரோம மார்க்க கொள்கையையே இவர்கள் கடைபிடித்து வருகிறார்கள்.

ரோமன் மார்க்கத்தார் வேதாகமத்தை அல்ல பாரம்பரியத்தையும், சங்கங்களின் தவறான முடிவுகளையும் பின்பற்றி வருகிறார்கள். அதற்கு தந்திரமான மிக ஞானமான விளக்கங்களை கொடுப்பர். ஆனாலும் மனுஷ ஞானம் கர்த்தருடைய வார்த்தைக்கு முன்பாக எம்மாத்திரம்?

தன்னை செத்த நாய் என்று சொல்லிக் கொள்கிற பிரசங்கி ஒருவர் முழுக்கு ஞானஸ்நானத்தை தூஷித்து புத்தகம் ஒன்று வெளியிட்டிருந்தார். அதை படித்து அதற்கு மறுப்பும் விளக்கமும் எழுதி சவால் விட்டு அவருக்கு ஒரு Reg. Letter அனுப்பினோம். இன்று வரை பதில் வரவில்லை. இப்படியாக மாய்மாலக்காரர்களால் சத்திய மார்க்கம் தூஷிக்கப்படுகிறது.

குழந்தை ஞானஸ்நானம், ஞானஸ்நானம் அல்ல. அவர்கள் வளர்ந்து, நன்மை தீமை அறியும் அறிவை அடைந்து, இயேசு கிறிஸ்துவை சொந்த இரட்சகராக ஏற்றுக் கொண்டு, மனந்திரும்பி, அறிக்கையிட்டு பிதா குமாரன் பரிசுத்த ஆவியின் நாமத்தில் ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ள வேண்டும். குழந்தை பிறந்த 30 அல்லது 40 நாட்களில் தேவ சந்நிதானத்திற்கு கொண்டு வந்து குழந்தையை பிரதிஷ்டை செய்து நாமகரணம் சூட்டிக் கொள்ள வேண்டியது அவசியமாகும். உங்கள் குழந்தைகள் பரிசுத்தமாயிருக்கின்றன (1 கொரி. 7:14) அவைகளுக்கு ஞானஸ்நானம் கொடுக்க வேண்டியதில்லை.

ஊற்றிக் கொடுத்தல்

இயேசு யோர்தான் நதியில் இறங்கினார், ஏறினார் என்று இருப்பதால் யோவான் முழுக்கித்தான் ஞானஸ்நானம்

கொடுத்திருப்பார் என்று அவசியமல்ல, ஊற்றிக் கொடுத்திருக்கலாமே என்று சிலர் சொல்லுவதுண்டு. இவர்களெல்லாம் தப்பு மார்க்கத்தார் எழுதிய எழுத்துக்களையும், அவர்கள் வரைந்த சித்திரங்களையுமே ஆதாரமாக வைத்துப் போதிக்கிறார்கள்; வேதத்தை ஆதாரமாகக் கொண்டு அல்ல. அயினோன் என்னும் இடத்தில் தண்ணீர் அதிகமாய் இருந்தபடியால் இயேசுவானவரும், யோவானும் அங்கே ஞானஸ்நானம் கொடுத்து வந்தார்கள் என்று காண்கிறோம் (யோ. 3: 22,23). தெளித்துக் கொடுக்க கொஞ்சம் தண்ணீர் போதும். மிகுதியான தண்ணீர் தேவையில்லை.

கந்தாகே என்பவளுடைய மந்திரி ரதத்திலே அல்லது படைபரிவாரங்களோடு சென்றபடியால் அவர் குடிப்பதற்கு ஏராளம் தண்ணீர் அவர்களிடம் இருந்திருக்கும். ஆனால் தண்ணீர் அதிகமாக இருந்த இடத்தை கண்ட போது பிலிப்பும், மந்திரியும் ரதத்தை நிறுத்தச் சொல்லி தண்ணீரில் இறங்கினார் (அப். 8:36–38). ஊற்றியோ, தெளித்தோ ஞானஸ்நானம் கொடுப்பதென்றால் ரதத்தில் வைத்தோ அல்லது நிறுத்தச் சொல்லியோ ஊற்றியோ தெளித்தோ கொடுத்திருக்கலாம். முழுக்கு ஞானஸ்நானத்தைப் பற்றியே பிலிப்பு மந்திரிக்கு போதித்துக் கொண்டு வந்தபடியால் தண்ணீர் அதிகமாய் இருக்கும் இடத்தைப் பார்த்ததும் மந்திரி ரதத்தை நிறுத்தச் சொல்லி தண்ணீரில் இறங்கி ஞானஸ்நானம் பெற்றுக் கொண்டான். ஆகவே நீங்களும் முழுக்கு ஞானஸ்நானத்தைப் பற்றியே பிரசங்கியுங்கள் [தீத்து 3:5; 1 பேது. 3:21].

ஞானஸ்நானம் பெற சந்தர்ப்பம் கிடைக்காதவர்கள் (உ. ம்.) மனந்திரும்பிய கள்ளன்; ஞானஸ்நானம் எடுக்க முடியாதவர்கள் – மிகுந்த வியோதிபர்கள், வியாதியஸ்தர்கள், சபையில்லாத இடங்களில் உள்ள மக்கள் போன்றோர் ஞானஸ்நானம் எடுக்க முடியாமல் போனால் தவறொன்றுமில்லை. அவர்களின் விசுவாசத்தின் பலனை கடவுள் அவர்களுக்கு கொடுப்பார். ஞானஸ்நானம் பெற வாய்ப்பிருந்தும் ஞானஸ்நானம் எடுக்காதவர்கள் இரட்சிப்படைய மாட்டார்கள்; ஆக்கினைக்குட்படுவார்கள் (மாற். 16:16).

ஞானஸ்நானம் இரட்சிக்கப்படுகிறதற்கு கொடுக்கப்படுகிறது (மாற். 16.16). சிலர் இரட்சிக்கப்பட்டவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுக்கிறோம் என்கிறார்கள். அதாவது புதிதாய்ப்பிறந்தவர்களை அடக்கம் பண்ணுகிறோம் என்கிறார்கள். அதுவும் தவறே. ஞானஸ்நானம் அடக்கமாகும் (கிறிஸ்துவின் மரணத்தோடு ஐக்கியப்படுத்துதல்). இப்படி இரட்சிக்கப்பட்டு புதிதான ஜீவனுள்ளவர்களாய் மாறின விசுவாசிகள் தங்கள் சபையில் வந்தால், அவர்களுக்குத் திரும்ப ஞானஸ்நானம் கொடுத்து இரட்சிக்கப்பட்டவனை அடக்கம் பண்ணுகிற சில சபையார் உண்டு. இவர்களைக் குறித்தும் தேவ ஜனங்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். இவர்கள் இரட்சிக்கப்பட்ட விசுவாசியை அடக்கம் பண்ணுகிறார்கள். சபைக்கு சபை வெவ்வேறு ஞானஸ்நானம் இல்லை. ஒரே ஞானஸ்நானம் உண்டு (எபே 4:5)

(தொடரும்)

"மனுஷருடைய கற்பனைகளை உபதேசங்களாகப் போதித்து, வீணாய் எனக்கு ஆராதனை செய்கிறார்கள்" மத் 15:9.

# வேத பாடம்

[தொடர்ச்சி]

### எண்ணாகமம்

### எண். 18:25-32 தசமபாகம்

தசமபாகம் என்றால் பத்தில் ஒன்று (1/10) என்று அர்த்தமாகும். தசம் என்றால் 1/10 என்று அர்த்தம். கோத்திர பிதா தசம பாகம் கொடுத்தபடியால் ஆதிகாலம் முதற்கொண்டே எபிரெயர்களிடம் இந்த வழக்கம் இருந்ததாக தெரிகிறது. எபிரெயர்கள் மாத்திரமல்ல, சுமேரியர்கள் மற்றும் புறஜாதிகள் மத்தியிலும் இந்த தசமபாகம் கொடுக்கும் பழக்கம் இருந்ததாக அறிய முடிகிறது. நியாயப்பிரமாணத்தில் இது கட்டளையாக கொடுக்கப்பட்டதாக பார்க்கிறோம். லேவியர்கள், ஆசாரியர்களுக்கு இஸ்ரவேலர்கள் மத்தியில் சுதந்தரம் இல்லாதபடியினால் இஸ்ரவேலர்கள் கர்த்தருக்கு செலுத்தும் தசமபாகங்களை லேவியர்கள், ஆசாரியர்கள் சுதந்தரமாக அனுபவிக்க தேவன் கொடுத்தார். அது அவர்களுடைய ஆகாரத்திற்கும், ஆசரிப்பு கூடார வேலைகளுக்கும் உபயோகப்படுத்தப்பட்டது.

தேசம் கர்த்தருடையது என்று எபிரெயர்கள் நினைத்தபடியினால் தேசத்தின் விளைவில், கனி வகைகளில், மிருக ஜீவன்களில் பத்தில் ஒரு பாகத்தை இறைவனுக்குச் செலுத்தினார்கள் (லேவி. 27:30-33).

புதிய ஏற்பாட்டின் காலத்திலும் தசமபாகம் செலுத்தப்பட்டு வந்தது. நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து தசமபாகத்தைப்பற்றி பேசினார் [மத். 23:23; லூக். 11:42; மத். 6:19,20; லூக். 10:7]. நிருபங்களிலும் அப். பவுல் திட்டமாய் தசம பாகத்தைக் குறித்து போதித்தார் (கலா. 6:6; 1 தீமோ. 5:17,18; 1 கொரி. 9:9-14). ஜீவ கற்பனைகளில் தசமபாகமும் ஒன்று என்று தேவன் வெளிப்படுத்தியுள்ளார். ஊழியர்கள் தாங்கள் வாங்கும் காணிக்கையில், தசமபாகத்தில் தசம பாகத்தைப் பிரித்து பிரதான ஆசாரியனுக்குக் கொடுக்க வேண்டும் [எண். 18:25-28]. அப்படி கொடுத்தால் சாக மாட்டார்கள் [எண். 18:32].

சில ஊழியர்கள் மக்களிடம் தசமபாகம் வாங்க மிக உற்சாகமாக இருப்பார்கள். தாங்கள் தசமபாகம் கொடுக்கமாட்டார்கள். இதினிமித்தமே ஆசீர்வாதக் குறைவு உண்டாகிறது சாபமும் உண்டாகிறது.

### தசமபாகம்

1. இது கர்த்தருடைய கட்டளை (லேவி. 27:30-33; மல். 3:10).

2. லேவியர்களுக்கு சம்பளமாக தேவன் இதைக் கட்டளையிட்டார் (எண். 18:21-24). கர்த்தருடைய வீட்டில் [தேவாலயம், திருச்சபை] ஆகாரம் உண்டாயிருக்க தேவன் இந்த நியமத்தைக் கட்டளையிட்டார் (மல். 3:8).

3. இது இறைவனை கனம்பண்ணுதலாகும் (நீதி. 3:9,10).

4. இது கர்த்தருக்கு உரியது: ஜனங்களுக்குரியதல்ல [செலுத்துகிறவர்களுக்குரியதல்ல] [லேவி. 27:30-34; மல். 3:8].

5. எங்கே கொண்டு வர வேண்டும் என்பதைக் குறித்து: 2 நாளா. 31:11,12; நெகே. 10:38,39; 12:44; 13:5 12; மல். 3:10 ஆகிய வசனங்களில் மிகவும் தெளிவாக குறிப்பிடப்பட்டுள்ளது.

சிலர் தசமபாகத்தை எடுத்து தங்களுக்கு இஷ்டமான பிரகாரம் அதை தங்களுக்கு விருப்பமான ஊழியர்களுக்கும், ஸ்தாபனங்களுக்கும், பத்திரிகைகளுக்கும், கொஞ்சம் ஸ்தல ஊழியர்களுக்கும் கொடுக்கிறதான தாறுமாறான பழக்கம் காணப்படுகிறது. இது தவறு. கர்த்தருடைய ஆலயத்தில் அவரவர்கள் தேவனுக்கு ஆராதனை செய்கிற ஆலயத்தில் கொண்டு வந்து சேர்க்க வேண்டும். தங்களுக்கு அப்பமும், திராட்சரசமும் கொடுக்கிற ஊழியர்களுக்கு, தங்களுக்கு உபதேசிக்கிற ஊழியர்களுக்கு ஊழியருடைய கையிலே அதை கொடுக்க வேண்டும் [மல். 3:10; கலா. 6:6].

6. அதை எடுத்துக் கொள்ள விரும்புகிறவர்கள் அதோடுகூட 20% கூட்டிக் கொடுக்க வேண்டும் (லேவி. 29:31)·

7. அதை மாற்றி செலுத்த நினைத்தால் அதுவும், மாற்ற நினைத்ததும் கர்த்தருடையதாகும் [லேவி. 27:33].

8. இது ஆபிரகாமின் பிள்ளைகள், ஆபிரகாமின் விசுவாசத்தின் அடிச்சுவடில் நடப்பதாகும் [ரோ. 4:12; எபி. 7-ம் அதி.]

9 இது கடவுளுடைய கட்டளைக்குக் கீழ்ப்படிவதாகும் [1 தீமோ. 6:17,18; உபா. 8:10-20].

10. கர்த்தருடைய ஊழியத்திற்கு, ஊழியர்களுக்கு உதவி செய்யும்படியாயும், தேவ ஊழியம் தடங்கலின்றி நடக்கும் படியாகவும் தசமபாகம் கட்டளையிடப்பட்டது [மல். 3:10].

## தசமபாகம் செலுத்துவதினால் உண்டாகும் ஆசீர்வாதங்கள்

1. கர்த்தருடைய வீடு, ஆலயம், சபை அடைபடாமல் தேவனுடைய ஊழியத்திற்கு வேண்டிய பணம் நிறைவாயிருக்கும்

2. தேவன் வானத்தின் பலகணிகளைத் திறந்து இடங் கொள்ளாமல் போகுமட்டும் அவர்களை ஆசீர்வதிப்பார்.

3. உங்களுக்கு வரும் ஆசீர்வாதங்களை தடை செய்கிறவைகளை, தடுப்பவைகளை, அழிப்பவைகளை தேவன் அழிப்பார் ஆசீர்வாதம் தடங்கலின்றி உண்டாகும்.

4. தசமபாகம் காணிக்கை செலுத்துவதினால் தேவாசீர்வாதம் உண்டாகும். இதினால் என்னை சோதித்துப் பாருங்கள் என்று எல்லா மனுஷருக்கும் சொல்லியிருக்கிறார். இது எல்லா மனுஷருக்கும் பொருந்தும்.

5. தேவனாகிய கர்த்தருக்கு எப்பொழுதும் பயந்திருக்கப் பழகும்படிக்கு தசமபாகம் கட்டளையிடப்பட்டது (உபா. 14:22) தசமபாகம் செலுத்தாதவர்களுக்கு தேவ பயம் இருக்காது.

6. தசமபாகம், காணிக்கை செலுத்துவது சுவிசேஷத்தை நன்றியறிதலோடு சாட்சியிடுவதாகும் [2 கொரி. 9:12,13; 1 பேதா. 3:17].

7. இதை அனுபவித்த தேவ ஊழியர்கள் இதினிமித்தம் தேவனை ஸ்தோத்தரிப்பதினால் அது பெரிதும் சம்பூரண பலனைக் கொண்டு வரும் [2 கொரி. 9:12; கலா.6:6,7]

8. கொடுக்கும் கிருபை மிகப் பெரியது [2 கொரி. 8:1-5; 9:6-15; 1 கொரி.16:2].

9. புதிய ஏற்பாட்டு விசுவாசியின் நீதி, பழைய ஏற்பாட்டின் வேதபாரகர், பரிசேயர்களின் நீதியைக் காட்டிலும் அதிகமாயிருக்க வேண்டும் என்று இயேசு சொன்னார் [மத். 5:20]. பழைய ஏற்பாட்டு பக்தனின் நீதி: லூக். 18:12; மத். 23:23; லூக். 11:42. குறைந்த பட்சம் தசமபாகம் செலுத்தாதவன் விசுவாசியே இல்லை. பிறகு ஊழியத்திற்கு எங்கே தகுதி. தசமபாகம் கிரியையில் விசுவாசத்தை காண்பிக்க வேண்டிய காரியமாகும் (யாக். 2:17-26). கிரியையினால் விசுவாசத்தை அவன் வெளிப்படுத்துகிறான்.

10. கொடுங்கள் அப்பொழுது உங்களுக்கு கொடுக்கப்படும்; நீங்கள் எந்த அளவினால் அளக்கிறீர்களோ அந்த அளவினால் உங்களுக்கும் அளக்கப்படும்.

[தொடரும்]

"பரிசுத்தமானதை விழுங்குகிறதும், பொருத்தனை செய்தபின்பு யோசிக்கிறதும், மனுஷனுக்குக் கண்ணியாயிருக்கும்." நீதி. 20:25.

# பயப்படாதே, பரிகாரம் உண்டு

ஓடிக் கொண்டிருக்கிற வண்டி பழுது பட்டால் நின்று விடும். ஆனாலும் நின்ற இடத்திலேயே நிற்பதில்லை. பழுது பார்க்கப்பட்டு மறுபடியும் ஓட ஆரம்பிக்கும். இயங்கிக் கொண்டிருக்கும் இயக்கங்களில் குழப்பம் ஏற்பட்டு இடறல்கள் உண்டாவதுண்டு ஆனாலும் சம்பந்தப்பட்டவர்கள் தலையிட்டு தகுந்த நடவடிக்கைகள் எடுத்து குழப்பங்களை மாற்றி மறுபடியும் சீராக இயங்க ஏற்பாடு செய்யப்படுவதுண்டு.

உருவாக்கப்பட்ட ஒரு பொருள் உடைந்து போனாலும் ஒட்ட வைத்து பயன் படுத்துவதுண்டு. இவ்விதமாக மனிதர்களால் ஏற்படுத்தப்பட்ட எதுவானாலும், ஏற்படுத்தப்பட்ட நோக்கம் நிறைவேற தடைபடுவதுண்டு. ஆனாலும் எல்லாவற்றிற்கும் ஒரு மாற்று உண்டு.

அதுபோலவே இறைவன் ஆதி முதல் அந்தம் வரை திட்டமிட்டு செயல் படுகிறார். அவர் செய்ய நினைத்தது தடைபடாது. அவர் சகலத்தையும் செய்ய வல்லவர் [யோபு 42:2]. தம்முடைய மகிமைக்கென்று தேவன் நம்மையும் உருவாக்கிப் படைத்தார் [ஏசா. 43:7]. அவரின் நோக்கம் மனிதனில் நிச்சயமாய் நிறைவே

னும், மனிதனுக்கு என்ன தீமை நேரிட்டா லும், எந்த தீமையையும் நன்மையாய் மாற்ற வல்லவராய் தேவன் எல்லாவற்றிற் கும் பரிகாரத்தையும் வைத்திருக்கிறார். தீமை வருகையில் வேதனை இருக்கத்தான் செய்யும்.! ஆனாலும் எல்லாவற்றிற்கும் பரி காரமும் உண்டு. இறைவன் வைத்திருக்கிற பரிகாரத்தை, பரிகாரம் செய்யும் விதத்தை (குணமாக்கும் விதம்) அறிந்து தீமையை மாற்றிக்கொள்ளமுடியும். எல்லாம் சரியாக இயங்கிக் கொண்டிருந்தால் பரிகாரம் அவசியமில்லை. எங்கேயாவது மாறுபா டுகள் ஏற்படும் போது, பரிகாரம் தேவைப்படும்

அறிவீனத்தால் அல்லல்கள் உண்டா கும்.

அவசர செய்கையால் சிக்கல்கள் உண்டாகும்.

பிசாசின் கொடுமையால் சேதங்கள் உண்டாகலாம்.

மனிதர்களின் வஞ்சனையால் வலையில் மாட்டிக் கொள்வதுண்டு.

பயம், பதற்றம், வருத்தம், வேதனை, கண்ணீர், கவலை, விரக்தி, சோர்வு, துக் கம், திகைப்பு, ஏக்கம், ஏமாற்றம், சஞ்ச லம் இப்படிப்பட்ட எல்லாவற்றையும் போக்க இறைவனிடம் பரிகாரம் உண்டு என்கிற அறிவு இல்லாததினால் மனிதர்கள் இவைகளாலே பட்சிக்கப்படுகிறார்கள் [ஓசி. 11:3,6].

தேவன் தமது சாயலாக மனுஷனை சிருஷ்டித்தார். அவனை ஆணும், பெண் ணுமாக சிருஷ்டித்தார். மனிதனோடே உலாவினார், மகிழ்ச்சி இருந்தது. சாத்தா னின் வஞ்சக வலையில் மனிதன் சிக்கி னான், ஏமாற்றப்பட்டான். தேவனுக்குக் கீழ்ப்படியாமல் பாவம் செய்து சாத்தா னுக்கு அடிமையானான். மகிமையை இழந் தான். மரணமும் உண்டானது. மீட் புண்டோ என்று பாரம் சுமந்து தவித் தான். எல்லாவற்றையும் முன்னறிந்த தேவன், மீட்புண்டாக ஒரு பரிகாரத்தை யும் ஏற்கெனவே தமது திட்டத்தில் வைத்திருந்தார்.

கிராம புறங்களில், ஒருவனை பாம்பு கடித்து விஷம் இரத்தத்தோடு கலந்து அவன் மரண வாசலை எட்டிப் பார்க்கை யில், கோழியை கொண்டு வந்து அதன் மூலத்தை பாம்பு கடித்த இடத்தில் ஒட்ட வைப்பார்களாம். கோழியானது மனிதனுடைய இரத்தத்திலுள்ள விஷத்தை உறிஞ்ச உறிஞ்ச அந்த மனிதன் எழுந்தி ருப்பான். கோழி விஷத்தை ஏந்த, ஏந்த செத்து விழும்.

இதேப்போல் பாவமற்ற இயேசு கிறிஸ்து, மனிதர்களின் பாவத்தை தன்னில் ஏற்று, சிலுவையில் அறையுண்டு இரத்தம் சிந்தி மரித்தார். இந்த இயேசுவை விசு வாசித்து, அவருடைய மரணத்தின் சாய லில் இணைக்கும் ஞானஸ்நானத்தின் மூலம் சிலுவையோடே தன்னை சேர்த்திணைக்கிற பாவி பாவம் நீங்கப் பெற்று நீதிமானாகி றான். அவருடைய தழும்புகளால் குண மூண்டு (ஏசா. 53:5).

பரிகாரம் தேடுகிறவர்களுக்கு முதலா வது இருக்க வேண்டியது விசுவாசம். இயே சுவின் நாமத்திற்கு வியாதியை குணமாக்க, பிரச்சனையை தீர்க்க வல்லமை உண்டு என்று விசுவாசிக்க வேண்டும். அடுத்து இறைவனை நோக்கி ஜெபிக்க வேண்டும், கூப்பிட வேண்டும் (எரே. 17:14). கர்த்தர் தமக்கு சித்தமான விதத்தில் வியா தியை குணமாக்குகிறார், பிரச்சனைகளை தீர்க்கிறார். சிக்கல்களை விடுவிக்கிறார், பரிகாரம் செய்கிறார்.

எலிசா தீர்க்கரின் நாளில் தீர்க்கதரிசி களின் புத்திரரில் ஒருவன் விறகு வெட்டு கையில் கோடாரி கழன்று நதியில்

விழுந்து விட்டது. அவன் பயந்து போனான், ஆனாலும் தேவ மனிதனை நோக்கி கூப்பிட்டான். இரும்பு கோடாரி மிதந்தது. இவ்வித ஒரு அற்புத செய்கையால் இறைவன்பிரச்சனையைத் தீர்த்தார்.

இதைப் போல் இன்னொரு தீர்க்கதரிசியின் மனைவி கடன் பிரச்சனையால் கலங்கி தேவ மனிதனிடம் வேண்டுதல் செய்தாள். ஒரு அற்புத செய்கையால் கடனும் தீர்ந்தது. எப்படியெனில் ஒரு குடத்திலுள்ள எண்ணெயை பாத்திரங்களில் ஊற்ற ஊற்ற பாத்திரங்கள் எல்லாம் நிரம்பி வழிந்தது. அதை விற்று கடனைத் தீர்த்தாள். பன்னிரண்டு வருடமாய் பெரும்பாடுள்ள ஸ்திரீ இயேசுவின் வஸ்திரத்தை தொட்ட மாத்திரத்தில் குணமானாள். இப்படி ஒரு அற்புத செய்கையால் வியாதி நீங்கிற்று.

இவ்விதமாகத்தான் கர்த்தர் என் வாழ்வில் அற்புதம் செய்ய வேண்டும் என்று அடம் பிடிப்பது அறிவீனம். சிலர் வியாதிப்பட்டால் எனக்கு விசுவாசம் இருக்கிறது. அவர் வியாதிப்பட்ட போது கர்த்தர் அற்புத சுகம் கொடுத்தாரே. எனக்கு அதே விதமாய் சுகம் தர வேண்டும் என்று ஒரே பிடியாய் பிடித்து, வியாதியிலே மரித்து, அல்லது குற்றமற்ற விசுவாசியை கொலை செய்து தேவ நாமம் தூஷிக்கப்பட்டாலும் பரவாயில்லை, ஆ! விசுவாச வீரர் மரணமடைந்தார் என்று புகழ் பாடி, இகழ்ச்சி அடைவதுண்டு.

தனது மருந்து எடுக்கா விசுவாசத்தைக் குறித்து டம்பம் அடித்த ஒருவரிடம் கேட்டேன்: வியாதிப்பட்டு மருந்து எடுக்காமல் மரித்த ஒரு பரிசுத்தவான் பெயராவது பழைய, புதிய ஏற்பாட்டில் எழுதப்பட்டுள்ளதா? வியாதிப்பட்டு சுகமானதாக இருக்கிறது. ஆனால் மருந்து எடுக்காமல் மரித்ததாக இல்லை. ஆனால் உம்முடைய வீட்டில், உம்முடைய சபையில் எத்தனை மரணம். இதுவா கர்த்தருக்கு மகிமை? உம்முடைய இளவயது மனைவி மருந்து எடுக்கக் கூடாது என்கிற துர்ப்போதனையால், பிள்ளைகளை தெருவில் விட்டு விட்டு செத்துப் போனாள். நீர் இரண்டாவதாக ஒரு இந்து பெண்ணைக் கட்டி அவதிப்படுகிறீர். இதுவா விசுவாசத்தினால் வரும் ஆசீர்வாதம்?

இளவயதில் வியாதிப்பட்டு விசுவாசம் விசுவாசம் என்று மரிக்க, மனைவி விதவையாகிறாள். இதுவா விசுவாசத்தின் பலன்? மருந்து எடுக்க மாட்டேன் என்று சாதித்து பாதி வயதில் போதகன் செத்துப் போக, சபை சிதறுண்டு போகிறது. இதுவா தேவ சித்தம்? எச்சரிக்கை. தேவன் நமக்கு சித்தமான வகையில் பரிகாரம் செய்ய வேண்டும் என்று சொல்ல அவர் மேல் நமக்கு என்ன அதிகாரம் உண்டு? அவர் என்ன நமக்கு வேலைக்காரரா?

கர்த்தர் அற்புத செய்கையால் மாத்திரம் பரிகாரம் செய்கிறவர் அல்ல, தம்முடைய வார்த்தையை அனுப்பி பரிகாரம் செய்கிறார் (சங். 107:20).

இஸ்ரவேலர் மாராவுக்கு வந்த போது மாராவின் தண்ணீர் கசப்பாக இருந்தது. ஜனங்கள் வழக்கம் போல முறுமுறுத்தார்கள். மோசே வழக்கம் போல் கர்த்தரை நோக்கி கூப்பிட்டார். கர்த்தர் வழக்கம் போல், கோலினால் அடி என்று சொல்லவில்லை. கர்த்தர் ஒரு பரிகாரம் சொன்னார். அது யாதெனில், ஒரு வகை மரத்தை காண்பித்தார். ஒரு கிளையை அல்ல, மரத்தையே தண்ணீரில் போட்டார்கள். ஒரு மரமோ, பல மரமோ தெரியாது. தண்ணீரின் கசப்பை மாற்றும் தன்மை கர்த்தர் காண்பித்த மரத்திற்கு (மருந்திற்கு) உண்டென தெரிகிறது. பிரச்சனை வரும் போது, குழப்பம் வரும் போது செய்ய வேண்டியது யாதெனில் கர்த்தரை நோக்கி கூப்பிட வேண்டும். அவர் தமது வசனத்தை அனுப்புவார்

(அதாவது என்ன செய்ய வேண்டும் என்று சொல்லுவார்). அவர் சத்தத்தைக் கவனமாய்க் கேட்டு, அவர் சொல்கிறதற்கு கீழ்ப்படிந்து, நியமிக்கிறதை செய்தால் பரிகாரம் உண்டாகும் (யாத்:15:23-26). இந்த இடத்தில் தான் நான் உன் பரிகாரியாகிய கர்த்தர் என்கிறார்.

எலிசா தீர்க்கரின் காலத்தில் கூழ் காய்ச்சுகிற பானையில் அறியாமல் ஒருவன் பேய் கொம்மட்டிக் காய்களைப்போட, அது சாவுக் கேதுவானதாயிற்று. சாவுக்கேதுவானது யாதொன்றைக் குடித்தாலும் சேதப்படுத்தாது என்று குருட்டு விசுவாசம் கொண்டு, கூழைக்குடித்து சாகாதபடிக்கு, தேவனுடைய மனுஷனை நோக்கி கூப்பிட்டார்கள். அவரும் உடனே அவிசுவாசிகளே என்று கடிந்து கொள்ளாமல், அறிவைப் பயன்படுத்தி கூழின் தோஷத்தை மாற்ற வல்ல மாவை அதில் போட்டு, எல்லாரும் குடிக்கும்படி பரிகாரம் செய்தார் (2 இராஜா 4:38-41).

அற்புதங்களைச் செய்யும் வரம் பெற்றவர்கள் அற்புத செயல்களை செய்வார்கள். (உ.ம்) சுவிசேஷகனாகிய பிலிப்பு சமாரியாவிலே பெரிய அற்புத செயல்களை நடப்பித்து அநேகரை விசுவாசத்திற்கு கீழ்ப்படுத்தினார் (அப் 8:6-12). குணமாக்கும் வரம் பெற்றவர்கள் என்னோடு பூசி ஜெபம்பண்ணி, கைகளை வைத்து குணப்படுத்துவதுண்டு.

ஆகையால் ஒருவன் வியாதிப்பட்டால், குணமாக்கும் வரமுடைய சபையின் மூப்பரை வரவழைக்க வேண்டும். அவர்கள் எண்ணெய் பூசி ஜெபிக்க வேண்டும். இந்த வியாதி பாவத்தால் வந்ததென்று கண்டால், உடனே அதிகாரம் பெற்றவர்களிடம் பாவ அறிக்கை செய்ய வேண்டும். சுகமுண்டாகும். அல்லது ஊழியர்கள் மூலம் என்ன செய்ய வேண்டும் என்று கர்த்தர் வசனத்தை (ஆலோசனையை) அனுப்புவார். அதன்படி செய்ய வேண்டும்.

எசேக்கியா ராஜா மரணத்துக்கேதுவான வியாதிப்பட்ட போது, கர்த்தரை நோக்கி கண்ணீர் விட்டு அழுது ஜெபம் பண்ணினார். ஏசாயா ராஜாவிடம் போய் "உன்னை குணமாக்குவேன்" என்று கர்த்தருடைய வாக்கை சொன்னார். பின்னர் ஏசாயா அத்திபழ அடையை கொண்டுவரப்பண்ணி, ராஜாவுக்கு உண்டாயிருந்த பிளவையின் மேல் பற்று போட்ட போது ராஜா மூன்றே நாளில் குணமாகி தேவாலயத்துக்குப் போய் கர்த்தரைத்துதித்து. கர்த்தர் தன்னை குணப்படுத்தினதாக பாட்டுப்பாடுகிறார். அத்திப்பழ அடையை பிளவையின் மேல் பற்று போட்ட போது அவன் பிழைத்தான் என்று 2 இராஜா 20.7 ல்- எழுதியிருக்கிறது. இப்படி எசேக்கியா ராஜா பிழைத்தது கர்த்தர் கட்டளையிட்ட அற்புதம் என்று 2 நாளா. 32:24-ல் எழுதியிருக்கிறது. இது கர்த்தர் அருளிய இரட்சிப்பு (பரிகாரம்) என்று ஏசாயா 38:20-ல் எழுதியிருக்கிறது.

கர்த்தர் எவ்விதம் பரிகாரம் செய்கிறார் என்று அறியாதபடி, வியாதிப்பட்டால் சிலர் வேகமாய் டாக்டரிடம் ஓடுகிறார்கள். பிரச்சனை வந்தால் உலக ஞானிகளிடம் ஓடுகிறார்கள். கஷ்டம் வந்தால் உறவினர்களை நாடுகிறார்கள். நீங்களோ தேவனுடைய பிள்ளைகளே, தேவனை நோக்கி கூப்பிடுங்கள், ஜெபம் பண்ணுங்கள். தேவ மனுஷனுக்கு அறிவியுங்கள். உண்டாகிற ஆலோசனைக்கு கவனமாய் செவி கொடுங்கள். கீழ்ப்படியுங்கள்.

மருத்துவமனைக்கு போ என்று ஆலோசனை உண்டானாலும், போ அப்பொழுது சுகமுண்டாகும். போக மாட்டேன், அதே தேவன் மருந்து எடுக்காமலேயே குணமாக்க முடியாதா, மருந்து சாப்பிடாமலேயே தேவன் பிழைக்க வைக்க முடியாதா, நான் செத்தாலும் போக மாட்டேன் என்று கீழ்ப்படியாமல் சுய சித்தம் செய்ய விரும்புகிற நீ சாக வேண்டியது

தான் சரி. விவாதத்தைப் பற்றிய நோய் கொண்டவர்களை விட்டு விலகுங்கள். அவர்கள் போகட்டும். நீங்கள் கீழ்ப்படியுங்கள். பிழைப்பீர்கள்.

தேவன் குணமாக்க ஒரு காலமுண்டல்லவா? [பிர. 3:3] அக்காலத்திற்காய் காத்திருங்கள். பரிகாரம் உண்டாகும் நானே உன் பரிகாரியாகிய கர்த்தர்.

---

"நிச்சயமாகவே முடிவு உண்டு, உன் நம்பிக்கை வீண் போகாது" நீதி. 23:18.

---

# நீதி உண்டோ, நியாயம் உண்டோ

பூமியிலே நீதி உண்டோ? நியாயம் உண்டோ? நீதி நியாயம் செய்கிற தேவன் உண்டோ? என்ற கேள்விகள் மனிதரில் உண்டு. ஏழைகள் ஒடுக்கப்படுகிறார்கள், நீதி நியாயம் புரட்டப்படுகிறது. மனிதர்களிடம் தேவ பயம் இல்லை; துர்க்கிரியைக் கேற்ற தண்டனை சீக்கிரம் நடவாதபடியால், மனுப்புத்திரர் துணிகரம் கொண்டு பொல்லாப்பு செய்கிறார்கள். வஞ்சிக்கிறார்கள், திருடுகிறார்கள். அநியாயம், அக்கிரமம் பெருகுகிறது.

துன்மார்க்கர் உயர்ந்திருக்க, சண்டாளர் எங்கும் சுற்றித் திரிகிறார்கள். கேட்பார் இல்லை. நீதி ஸ்தலத்தில் அநீதி. வழக்கைத் தீர்க்க வகை இல்லை. நியாயம் கேட்கப்படவில்லை. ஆகவே மனிதர்கள் குமுறுகிறார்கள், குமம்புகிறார்கள். நீதி உண்டோ? நியாயம் உண்டோ? பூமியிலே நீதி, நியாயம் செய்கிற தேவன் உண்டோ? என்று கூக்குரலிடுகிறார்கள்.

ஞானி அதை கண்டேன், இதைக் கண்டுபிடித்தேன் என்று தன் ஞானத்தைக் குறித்து மேன்மைபாராட்ட வேண்டாம்; பராக்கிரமன், என் பலத்தால் அவனை மேற்கொண்டேன், இவனைக் கீழ்ப்படுத்தினேன் என்று தன் பலத்தைக் குறித்து மேன்மைபாராட்ட வேண்டாம்; ஐசுவரியவான், எனக்கு திரவியம் திரளாய் உண்டு, என் ஐசுவரியத்தால் அவைகளை வாங்குவேன், இவைகளையும் வாங்குவேன் என்று தன் ஐசுவரியத்தைக் குறித்து மேன்மைபாராட்ட வேண்டாம்.

ஞானியே, பலசாலியே, செல்வசீமானே, தேவன் பூமியிலே நீதியையும் நியாயத்தையும் செய்கிறவர் என்று உனக்குத் தெரியுமா? யார் இதை அறிந்து உணர்ந்திருக்கிறானோ அவனே மேன்மை பாராட்டக்கடவன், என்று கர்த்தர் சொல்கிறார் (எரே. 9:23,24).

தேசத்தில் ஏழைகள் ஒடுக்கப்படுகிறதையும், நீதியும் நியாயமும் புரட்டப்படுகிறதையும் நீ காண்பாயானால், அதைக் குறித்து ஆச்சரியப்படாதே. உயர்ந்தவன் மேல் உயர்ந்தவன் காவலாளியாயிருக்கிறான். அவர்கள் மேல் உயர்ந்தவரும் ஒருவர் உண்டு (பிர. 5:8).

அரசனின் தீர்ப்புக்கும், ஆண்டவன் தீர்ப்புக்கும் மிக வித்தியாசம் உண்டு. அரசன் அன்று கொல்வான், தெய்வம் நின்று கொல்லும் என்பது பழமொழி. ஒருவனை கொலை செய்தால், கொலையாளியை ஒருமுறை அரசன் தூக்கிலிடுவான். ஒருவன் பலரைக் கொலை செய்தாலும் ஒருமுறை தான் அரசன் தூக்கிலிட

முடியும். அரசனின் தீர்ப்பு எல்லைக்குட்பட்டது. இறை தீர்ப்பு சரியாக இருக்கும்.

துன்மார்க்கன் துஷ்ட கிரியைகளை செய்து விட்டு, நீதி ஸ்தலம் சென்று கைக்கூலி கொடுக்கிறான். நீதி ஸ்தலம் சென்று பலத்தால் பயமுறுத்துகிறான். நீதியும் நியாயமும் புரட்டப்பட்டு, துன்மார்க்கன் சன்மார்க்கனாக தீர்க்கப்படுகிறான். துன்மார்க்கத்தால் சன்மார்க்கனுக்கப்பட்ட துன்மார்க்கனையும், துன்மார்க்கத்தில் அகப்பட்ட துன்மார்க்கனையும் இறைவன் நியாயாயம் தீர்ப்பார் (பிர. 3:16,17).

கர்த்தர் நீதி நியாயம் செய்கிறது, மனுமக்களுக்கு எளிதாக விளங்குகிறதில்லை. விதையைப் போட்டு, நீர்ப்பாய்ச்சினால் அது முளை விட்டு வளரும். அதை பார்த்துக் கொண்டே இருந்தால் அது வளர்வதை நாம் காண்பதில்லை. ஆனால் தூங்கி எழுந்து காலையில் பார்க்கையில் அது வளர்ந்திருப்பது தெரியும். அது வளர்கிறது. ஆனால் பார்க்கையில் வளர்வது தெரியாதது போல் இருக்கும். அதேப் போல் இறைவன் பூமியில் நீதி, நியாயம் செய்வது தெரியாதது போல் இருக்கும். ஆனால் அவர் நீதி, நியாயம் சரியாக செய்கிறார்

(பாருங்கள், தேவன் பட்ச பாத மற்றவர். அப்படியிருக்க யாக்கோபை சிநேகித்தேன். ஏசாவை வெறுத்தேன் என்று எழுதியிருக்கிறது. இது நியாயமா? இறைவன் இப்படி பட்சபாதமாக இருக்கலாமா? என்று எண்ணத் தோன்றும். ஆகவே தேவனிடம் அநீதி உண்டென்று சொல்லலாமா? சொல்லக் கூடாதே (ரோம. 9:13,14). நாம் ஒரு மனிதனின் மேலோட்டமான தற்போதைய கிரியைகளைக் கண்டு நல்லவன் அல்லது கெட்டவன் என்று தீர்க்கிறோம். இறைவனோ ஒரு மனிதனின் பிறப்பிலிருந்து இறப்பு வரை முழுவதையும் முன் அறிகிறவராக இருக்கிறார். ஏசா எப்படி இருப்பான் என்று இறைவன் பார்த்தார். அவன் துன்மார்க்கத்தின் எல்லை என்று கண்டார் (மல். 1:2-4). ஆகவே அவனை வெறுத்தது நியாயமே. உதட்டில் இனிமையையும், உள்ளே கபட்டையும் ஒருவனில் காண்கையில் அவனை வெறுப்பது சரியே.)

கர்த்தர் கானான் தேசத்தை ஆபிரகாமுக்கு தருவதாக வாக்கு கொடுத்தார். அந்த நாட்களில் அங்கே எமோரியர்கள் குடியிருந்தார்கள். கர்த்தருடைய சிநேகிதனை ஆபிரகாமுக்கு, உடனே எமோரியரின் தேசத்தைக் கொடுக்க வில்லை. கானானின் குடிகள் தேவ பயமற்றிருந்தார்கள். ஆனால் அவர்களை அழிக்கும் அளவுக்கு பாவம் பூரணப்படவில்லை (ஆதி 15:16). வரவர அவர்கள் கொடிய பாவிகளானார்கள்.

எமோரியரின் பாவம் நிறைவான போது தேவன் அவர்களை விசாரித்தார் (லேவி. 15:6-27). ஆபிரகாமுக்கு வாக்குப்பண்ணி நாலு தலைமுறைக்குப் பின்பு, இந்த பாவிகளில் ஒரு ஜீவன் கூட உயிரோடே இராதபடி சங்காரம் பண்ண இறைவன் ஒப்புக் கொடுத்தார். 430 ஆண்டுகள் தேவன் நீடிய பொறுமை உள்ளவராக இருந்து நியாயம் செய்தார்.

"வேலைக்காரருடைய கூலியை நிறுத்தி வைக்காதே" என்பது கர்த்தரின் கட்டளை. இதை கவனியாத எஜமான் ஏழையை ஒடுக்கி, அவன் சாரத்தை உறிஞ்சி குடித்து தனது ஐசுவரியத்தைப் பெருக்கி பெருமையிலே உழன்று, கொழுப்பினால் எடுப்பாய் பார்த்து, தேவனுக்கு இது எப்படி தெரியும் என்று அகந்தையாய் கொடுமைப் பேசி தன் பிள்ளைகளின் பிள்ளைகளுக்கு பொருள் சம்பாத்தியம் பண்ணி வைப்பதாக எண்ணி சந்தோஷப்படுகிறார்கள். இதைக் கண்ட ஏழை நீதி எங்கே, நியாயம் எங்கே? தேவன் எங்கே என்று அலறுகிறான்.

எகிப்தியர்கள் இஸ்ரவேலருக்கு இப்படித்தான் அநியாயம் செய்தார்கள். இஸ்ரவேலரை ஒடுக்கினார்கள். சுமை சுமக்கப் பண்ணினார்கள். இஸ்ரவேலரைக் கொடுமையாக வேலை வாங்கினார்கள். சாந்தும், செங்கலுமாகிய வேலையினாலும், வயலில் செய்யும் சகல வித வேலையினாலும் அவர்கள் ஜீவனையும் கசப்பாக்கி, கொடுமையாக நடத்தினார்கள் [யாத். 1:11-14].

அவர்கள் பட்ட உபத்திரவங்களை கர்த்தர் கண்ணோக்கிப் பார்த்தார் [யாத். 4:31]. நாள் வந்தது. மோசேயை கர்த்தர் எகிப்தின் ராஜாவிடம் அனுப்பினார். கர்த்தர் நீதி செய்யும்படி பார்வோன் ராஜாவின் இருதயத்தைக் கடினப்படுத்தினார். எகிப்தியரை மகா வாதையால் வாதித்தார், பலத்த செய்கைகளை நடப்பித்தார். இஸ்ரவேலருக்கு செய்த கொடுமைக்குத்தக்கதாக எகிப்தில் எல்லார் வீட்டிலும் தலைப்பிள்ளை சங்கரிக்கப்பட்டது. இஸ்ரவேலரை கொடுமையாய் வேலை வாங்ினதற்கு கூலியாக எகிப்தியரிடம் இருந்து தேவன் இஸ்ரவேலருக்கு கொள்ளையாக பிடுங்கி கொடுத்தார். இவ்விதம் கர்த்தர் நீதி நியாயம் செய்தார்.

உழைக்கிற மனிதனே நீ உண்மையாய் உழைத்துக் கொண்டிரு. தேவனுக்குமுன் உத்தமமாய் உன் பணியைச் செய். உன் எஜமான் உன் கூலியை உனக்கு தராமல் வஞ்சனை செய்யலாம். தேவன் நீதி நியாயம் செய்கிறவர். அவர் எவ்விதத்திலாகிலும் உன் உழைப்பிற்கேற்ற பலனை வாங்கித் தருவார். அநியாயம் செய்கிறவன் இன்னும் அநியாயம் செய்யட்டும், நீதி செய்கிறவன் இன்னும் நீதி செய்யட்டும், அவனவன் கிரியைக்கேற்ற பலனுண்டு என்று கர்த்தர் சொன்னார்.

ஆகவே உழைக்கிறவன் தொடர்ந்து உழைக்கக்கடவன். பலனை நீ தின்பாய், அல்லது உன் பிள்ளைகள் தின்னும், அல்லது உன் பிள்ளைகளின் பிள்ளைகள் தின்பார்கள். உன் பிரயாசம் விருதாவாய்ப் போகாது.

யாக்கோபை பாருங்கள், பகலிலே வெயிலும் இரவிலே குளிரும் அவரைப் பட்சித்தது. நித்திரை அவர்கண்களுக்கு தூரமாய் இருந்தது. இவ்விதம் 20 ஆண்டுகள் பாடுபட்டார். அவர் பெரும் ஐசுவரியவானாய் மாறினார். அவருடைய எஜமான் பத்து முறை சம்பளத்தை மாற்றிப் பார்த்தான், பல முறை ஏமாற்றப் பார்த்தான். கர்த்தர் யாக்கோபுக்கு துணை நின்று அவரை ஆசீர்வதித்தார் அவர் ஐசுவரியவானானார் (ஆதி. 31:40-42).

உழைக்க விரும்பாதவன் சாப்பிடக் கூடாது. எதையாவது பிரயோஜனமாய் தேவ ஜனம் செய்து கொண்டே இருக்க வேண்டும். குறைந்த பட்சம் ஜெபம் பண்ணுகிற ஊழியத்தையாவது செய்யலாம். பாடுபட்டு என்ன பயன், என்ன கிடைக்கிறது என்று அநேகர் விருதாவாய் நேரத்தைப் போக்குவர். பாடுபட்டால் பலனுண்டு அது எப்போது, எவ்விதம் என்று தெரியாமலிருக்கலாம். ஆனால் பூமியிலே கர்த்தர் நீதி நியாயம் செய்கிறவரானபடியால் பலனுண்டு. என்பது நிச்சயம். பேச்சை குறை உழைப்பைக் கூட்டு.

உழைக்கிறவன் உழைக்கக்கடவன். போதிக்கிறவன் போதிக்கக்கடவன், புத்தி சொல்கிறவன் புத்தி சொல்லக்கடவன், சம்பாதிக்கிறவன் சம்பாதித்து பகிர்ந்தளிக்கக்கடவன், பிரயாசத்திற்கேற்ற பலனுண்டு.

தேசத்தில் பராக்கிரமசாலிகள் எழும்பி பலவீனரை அநியாயமாய் நசுக்குகிறார்கள். குற்றமற்ற இரத்தத்தை சிந்துகிறார்கள். பலவீனனின் நியாயம் புறக்கணிக்கப்படுகிறது, பாதிக்கப்பட்டப் பலவீனன் புலம்புகிறான். பூமியிலே நீதி உண்டோ, நியாயம் உண்டோ? கடவுளுக்கு கண்ணில்லையோ என்றெல்லாம் கலங்குவோருண்டு

கலங்கப்படாதீர்கள். கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை நோக்கிப் பாருங்கள். பாவமற்ற பரிசுத்தர் அடைந்த வேதனைக்கொரு எல்லை உண்டோ? அவர் வையப்படும்போது பதில் வையவில்லை, பாடுபடும்போது பயமுறுத்த வில்லை, நியாயத் தீர்ப்பு செய்கிறவருக்கு தம்மை ஒப்புவித்தார் (1 பேது. 2:23). குற்றம் செய்து அடிக்கப்பட்டால் பொறுமையாக சகித்தால் என்ன பலனுண்டு. தவறு செய்யாதிருக்க அடிக்கப்படும் போது பொறுமையோடே சகித்தால் பலனுண்டு. அது தேவனுக்கு முன் பிரியமாக இருக்கும் (1 பேது. 2:20).

ஒருவன் குற்றம் செய்யாதிருக்கையில் அநியாயமாய் குற்றம் சாட்டப்பட்டால் உண்டாகும் மனவேதனைக்கு தேவன் பதிலீடு செய்வார். பாதிப்புண்டாக்கினவனை கர்த்தர் பழிவாங்குவார். பழிவாங்குதலை நீதிமான் காணும் போது மகிழுவான். அவன் தன் பாதங்களை துன்மார்க்கருடைய இரத்தத்தில் கழுவுவான். அப்பொழுது மெய்யாய் நீதிமானுக்கு பலன் உண்டென்றும், மெய்யாய் பூமியிலே நியாயம் செய்கிற தேவன் உண்டென்றும் மனுஷன் சொல்லுவான் (சங். 58:10,11).

குற்றமற்ற பலவீனரை நசுக்கிய பலவானை கர்த்தர் பழிவாங்கின விதத்தை பாருங்கள்: யோசுவாவின் நாட்களில் கிபியோனியர்கள் சமாதான உடன்படிக்கை செய்து இஸ்ரவேலரோடு குடியிருந்தார்கள். சவுல் ராஜாவான போது இஸ்ரவேல் புத்திரருக்காகவும், யூதா புத்திரருக்காகவும் காண்பித்த வைராக்கியத்தினால் கிபியோனியரைக் கொன்றுப் போட்டான். தேசத்தில் இந்த அநியாயம் நடந்தபடியால் தாவீது ராஜாவின் நாளில் மூன்று வருஷம் மழை பெய்யாமல் ஓயாத பஞ்சம் உண்டாயிற்று (2 சாமு. 21:1-3).

தேசத்துக்காக, இனத்துக்காக, சபைக்காக, சத்தியத்துக்காக வைராக்கியம் இருக்க வேண்டியது அவசியம் தான். அதற்காக குற்றமற்ற இரத்தத்தை சிந்துவது ஆசீர்வாத மழையை நிறுத்திப் போடும். சவுல் அநியாயம் செய்தான். அவன் மகனின் குமாரர்கள் ஐந்து பேரும் தாவீதால் கிபியோனியரிடம் ஒப்புக் கொடுக்கப்பட்டு கிபியோனியரால் மலையிலே தூக்கிலிடப்பட்டார்கள். பின்னர் தேசத்தில் மழை பெய்தது (2 சாமு. 21:4-14). இவ்விதமாய் கர்த்தர் பலவீனருக்கு நியாயம் செய்தார்.

என் மனமே, கர்த்தர் பூமியிலே நீதி நியாயம் செய்கிறவர். அவருக்கு பயந்திரு! அவருக்குள் மகிழ்ந்திரு! அவருக்காக காத்திரு!!!

''ஒருவன் — உன்னதமானவரின் சமுகத்தில் மனுஷனுடைய நியாயத்தைப் புரட்டுகிறதையும், மனுஷனை அவனுடைய வழக்கிலே மாறுபாடாக்குகிறதையும், ஆண்டவர் காணாதிருப்பாரோ? '' புல. 3:34-36.

**பரிசுத்தவிவாகம்**

| மணமகன் | மணமகள் | இடம் | காலம் |
|---|---|---|---|
| Eld. Bro. டானியேல் கிறிஸ்துதாஸ் | Sis. சுஜா | நாக்ஸ்வில் (U.S.A) | 25.6.94 |

சுவிசேஷம்

# மரணம்

இந்த உலகத்திலே மனிதர்கள் ஜீவித்துக் கொண்டிருக்கிறார்கள். பல விதத்திலேயும் இந்த உலக வாழ்க்கையில் அவர்கள் பணம் சேர்த்துக் கொண்டிருக்கிறார்கள்; அக்கிரமங்கள் செய்து கொண்டிருக்கிறார்கள். பலவிதத்திலேயும் இந்த உலகத்தில் செழிப்பாக, நன்றாக இருக்கப் பிரயாசப்படுகிறார்கள்; குறுக்கு வழிகளைத் தேடுகிறார்கள்.

வேதத்தில் ஒரு மனிதனைப் பற்றி வாசிக்கிறோம். தேவன் அவனை நோக்கி: "மதிகேடனே, உன் ஆத்துமா உன்னிடத்திலிருந்து இந்த இராத்திரியிலே எடுத்துக் கொள்ளப்படும், அப்பொழுது நீ சேகரித்தவைகள் யாருடையதாகும்" என்பதாக எழுதப்பட்டுள்ளது. இங்கே மரணத்தைப் பற்றி பார்க்கிறோம். மனிதன் மரணம் என்னும் நியமத்தோடு இந்த உலகத்தில் பிறந்திருக்கிறான். ஒரே தரம் மரிப்பதும் பின்பு நியாயத் தீர்ப்படைவதும் மனிதனுக்கு நியமிக்கப்பட்டிருக்கிறது.

இந்த உலகத்தில் மரணத்தைப்பற்றி சிந்திக்காதபடி, மரணத்தைப்பற்றி தெளிவில்லாதவர்களாய் இலட்சக்கணக்கான மனிதர்கள் வாழ்கிறார்கள். ஆனால் மரணம் அவர்களுக்கு வரப்போகிறது. மரணம் என்பது ஆத்துமா சரீரத்தை விட்டு பிரிந்து போய், ஐம்புலன்களுடைய கிரியைகளும் நின்று, சுவாசம் அற்று, மனிதனுடைய சரீரம் சடமாக மாறுவதாகும்.

ஆபிரகாம் நல்ல நரை வயதிலும், முதிர்ந்த பூரண ஆயுசிலும் பிராணன் போய் மரித்து, தன் ஜனத்தாரோடே சேர்க்கப்பட்டான் (ஆதி. 25:8). ஆனால் உலகத்திலே அநேகர் அரை குறை வயதிலே மரித்துப் போகிறார்கள், சிலர் பிண்டத்திலே மரித்துப் போகிறார்கள், அநேகர் பிறந்ததும் இறந்து போகிறார்கள், அநேகர் குழந்தைகளாய் இருக்கும் போது இறந்து போகிறார்கள். ஆகவே மரணத்தைப் பற்றி மனிதன் சிந்திக்க வேண்டும்.

மரணத்தைப் பற்றி சிந்திக்காத துன்மார்க்கர்களின் மரணம் எப்படி இருக்குமென லூக். 16-அதிகாரத்தில் எழுதியிருக்கிறது. ஐசுவரியவான் மரித்து அடக்கம் பண்ணப்பட்டு பாதாளத்தில் போய் வேதனைப்பட்டான் (லூக் 16:22,23). தரித்திரனாகிய லாசரு மரித்து தேவதூதர்களாலே ஆபிரகாமின் மடியில் கொண்டு போய் விடப்பட்டான். ஒவ்வொரு மனிதனும் மரித்த பின்பு இந்த இரண்டு இடங்களில் ஒரு இடத்திற்கு போய்ச் சேருகிறார்கள். மரணம் என்று சொல்லப்படுவது ஜீவியத்திற்கு நேர்மாறாய் இருக்கிறது (ருத் 1:17). பாவத்தை தொடர்ந்து மரணம் உண்டாயிற்று. மரணத்தைக் குறித்து முதலாவது ஆதியாகம புஸ்தகத்தில் பார்க்கிறோம்.

"நன்மை தீமை அறியத்தக்க விருட்சத்தின் கனியை புசிக்க வேண்டாம்; அதை நீ புசிக்கும் நாளில் சாகவே சாவாய் என்று கட்டளையிட்டார் (ஆதி 2:17). நீ மண்ணாய் இருக்கிறாய், மண்ணுக்குத் திரும்புவாய் என்று சாபமிடப்பட்டதாய் நாம் பார்க்கிறோம். காயீன் ஆபேலை கொலை செய்தான்; ஆபேல் கொலையுண்டு போனான் (ஆதி 4:8). இது கொலை செய்யப்பட்டு, சரீர மரணத்தை அடைந்த முதலாம் சம்பவமாகும்.

மரணம் என்று சொல்வது ஒரு பயப்படத்தக்க சம்பவம். ஏனெனில் மரணமானது மனிதனுடைய வாழ்க்கைக்கு ஒரு முடிவை உண்டாக்குகிறது. மனந்திரும்பாத மக்கள் மரிக்கிறதினாலே பெரிய ஆபத்துக்குள்ளாக சிக்குகிறார்கள். பின்பு அவர்

கள் மனந்திரும்பவோ, இரட்சிக்கப்படவோ, நற்கிரியை செய்யவோ முடியாத நிலைக்குள்ளாகிறார்கள்.

ஒரு சிறுவன் தன் தாயிடம் இவ்விதமாக கேட்டான்: அம்மா, ஒரு மனிதனுக்கு மரணம் எப்போது வருகிறது என்று கேட்டான். அம்மா, மகனிடம் பக்கத்திலே கல்லறை பூமி இருக்கிறது. அங்கே போய் எழுதியிருக்கிற வாசகங்களை யெல்லாம் படித்து விட்டுவா என்று சொன்னாள். அநேக கல்லறைகளில் அவர்கள் பிறந்த தேதி, அவர்கள் மரித்த தேதி, போன்ற விலாசங்கள் குறிக்கப்பட்டிருந்தது. சில கல்லறைகள் நீளமாகவும் சில குட்டையாகவும் இருக்கிறது. சுற்றிலும் அந்த சிறுவன் பார்த்து விட்டு, மரணம் எப்போதும், யாருக்கும் சம்பவிக்கும் என்று அறிந்து கொண்டேன் என்று சொன்னானாம். அங்கே சின்ன பிள்ளைகள், வாலிபர்கள், வயோதிபர் என்று பலருடைய கல்லறைகள் காணப்பட்டிருக்கும்.

மனிதனுடைய ஆவி, ஆத்துமா, சரீரம் மூன்றும் வெவ்வேறாக பிரிந்து செல்கிற நிலையே மரணமாகும். இதிலே இரண்டு விதமான மரணம் காணப்படுகிறது. ஆவி, ஆத்துமா மரணம் அடைவது ஆவிக்குரிய மரணமாகும். இதை புசிக்கிற நாளிலே சாகவே சாவாய் என்று கர்த்தர் கட்டளையிட்டார் [ஆதி. 2:17]. ஆதாமும் ஏவாளும் அதைப் பறித்து புசித்த நாளிலே அவர்களுடைய ஆவி மரித்து விட்டது. ஆவிக்குரிய மரணம் உண்டாகியது. பின்பு அவர்கள் ஏதேனை விட்டு துரத்தப்பட்டார்கள். அங்கேயே முதலாவது கொலை நடந்தது. பின்பு கொலைகளும், இன்னின்னார் இன்னின்ன வருடங்கள் ஜீவித்து மரித்தார்கள் என்கிற பட்டியலும் ஆதி. 5-ல் எழுதப்பட்டுள்ளது.

மரணம் என்பது கொஞ்சம் குறைய அது எல்லாருக்கும் வருகிறது. பரிசுத்தவான்களும் மரித்தார்கள். மேலான ஆசீர்வாதமான நிலையை அடைய பரிசுத்தவான்களும் மரணம் அடைய வேண்டிய அவசியமேற்படுகிறது. பாவம் செய்த சரீரத்திலே அவர்கள் ஜீவிக்கிறார்கள். பரிசுத்தமடைந்து அவர்கள் ஆத்துமாவில் ஜீவிக்க முடியாது. ஆகவே அந்த சரீரம் மரித்து அடக்கம் பண்ணப்பட்டு மறுபடியும் உயிர்த்தெழுந்து பரிசுத்தமுள்ள ஆத்துமா ஜீவிக்கக்கூடிய மகிமையுள்ள சரீரமாக அது மாற வேண்டும். ஆகவே அது மரிக்க வேண்டியதிருக்கிறது.

ஆனபடியினாலே ஆபிரகாம் போன்ற பரிசுத்தவான்கள் மரித்தார்கள். ஆனால் அவர்கள் மரணம் முற்றிலும் வித்தியாசமாயிருந்தது. அவர்கள் மரித்தவுடனே பரத்திக்கு எடுத்துக் கொள்ளப்பட்டு பரிசுத்தவான்களோடு சஞ்சரித்தார்கள். நம்முடைய ஆத்மாதான் உண்மையான மனிதனும். அதற்கு கொடுக்கப்பட்டிருக்கிற ஒரு உறைதான் இந்த சரீரம். இதைப் போன்ற ஒரு ஆவிக்குரிய சரீரம் உள்ளேயிருக்கிறது. அந்த சரீரத்தில்தான் சொப்பனம், காட்சி, தரிசனங்கள் காண்கிறோம். பல அனுபவங்களை அடைகிறோம். அந்த

**ஞானஸ்நானம் பெற்று திருச்சபையோடு சேர்க்கப்பட்டவர்களின் விபரம்:**

| காலம் | இடம் | நபர்கள் |
|---|---|---|
| 28.7.94 | பள்ளப்பட்டி | 30 |

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 123 - SEP. '94

"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவார்(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள் விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன் விழித்திருங்கள்."

- மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்:

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10:40-43).

CHIEF PASTOR N. LAZAR

## இதழின் உள்ளே ...

# ஆசிரியர் உரை

உலகத்திற்கு பதில் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவே. கிறிஸ்துவினாலன்றி உலகத்தில் மாற்றம் உண்டாகாது. உண்மையான கிறிஸ்தவம் அல்லாத மற்ற மதங்கள், மனித உயிர்களைப்பற்றிய சரியான அறிவு இல்லாததினாலே நாட்டில், உலகத்தில் பயங்கரவாதங்கள் தலைவிரித்து ஆடுகின்றன. ஒருவரை ஒருவர் கட்டுக் கொள்கின்றனர். மத வெறி பிடித்து, பிடிபட்டு அழிந்து போகிற மிருகங்களைப் போல் தங்களுக்குத் தெரியாதவைகளையும், தெய்வீகத்தையும் தூஷித்து அழிந்து போகின்றனர். மனிதன் மனிதனாய் வாழ வேண்டும். சமத்துவமாய் வாழ வேண்டுமானால் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை உண்மையாய் விசுவாசித்து அவரை வழிபட்டு, அவருடைய உபதேசத்தைக் கைக் கொள்வதினால் மட்டுமே மனித நேயமும், சுபிட்சமும் உலகத்தில் உண்டாகும். எங்கெங்கு கிறிஸ்துவின் உபதேசம் கைக் கொள்ளப்படவில்லையோ, அங்கு பெருமளவில் ஆத்மிக வீழ்ச்சி உண்டாகும். மனித நேயம் வீழ்ச்சியடைந்து ஒருவரை ஒருவர் பகைத்து அடித்துக் கொன்று சாவார்கள். மெஜாரிட்டி மக்களும், பதவியில் இருக்கிறவர்களும் மைனாரிட்டி மக்களை அல்லது தங்களல்லாத வேறு இனத்தவர்களை ஒடுக்குவார்கள். உலகம் ரணகளமாகப் போகிறது. ஆனபடியால் தேவ ஜனங்கள் ஒரே இனமாய் ஒரே ஜாதியாய், உண்மைக் கிறிஸ்தவர்களாய் மாறி உலகத்தில் மாற்றத்தைக் கொண்டு வருவோமாக. கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவுடைய நோக்கமும் அதுவே இந்த ஜனமே உலகத்தில் மாற்றத்தைக் கொண்டு வரும். கிறிஸ்துவே பதில். உண்மையான திருச்சபையே உலகத்திற்கு பதில். பாவ மன்னிப்பை பெற்ற ஜனமே உலகத்தில் அவிசுவாசத்தை நீக்கி உலகத்தை, தேவ பக்தியுள்ளவர்களை தேவன் இரட்சிக்க கருவியாய் விளங்குவர். மெய் கிறிஸ்தவம், மெய்யான சபையே உலகத்திற்கு பதில், கர்த்தர் நம்மை திருச்சபையோடு சேர்த்து கட்டுவாராக. தேவனுடைய மிகப் பெரிய திட்டம் திருச்சபையே ஆகும். ஆனபடியால் திருச்சபையாய் மாற ஜெபியுங்கள், திருச்சபையோடு கூட சேர்த்து கொள்ளுங்கள், உங்களை இணைத்துக்கொள்ளுங்கள். கர்த்தராகிய இயேசு கிறிஸ்து உங்களை சேர்த்துக் கட்டுவாராக ஆமென்.

கிறிஸ்துவுக்குள்,

(CHIEF PASTOR N. LAZAR)

# கிறிஸ்தவ மார்க்கம்

(தொடர்ச்சி)

பரிசுத்த ஆவியின் அபிஷேகம் புதிய ஏற்பாட்டின் உபதேசமாகும். பழைய ஏற்பாட்டின் பக்தர்கள் பரிசுத்த ஆவியைப் பெற்றிருந்தனர். பழைய ஏற்பாட்டில் எண்ணெயினாலே அபிஷேகம் பண்ணப்பட்டது பரிசுத்த ஆவியின் அபிஷேகத்திற்கு அடையாளமாக நடப்பிக்கப்பட்ட செயல்கள். ராஜாக்கள், ஆசாரியர்கள், தீர்க்கதரிசிகள் ஆகியோர் எண்ணெயால் அபிஷேகம்பண்ணப்பட்டார்கள். ஆரோன் (லேவி 8:12); சவுல் (1சாமு 9:27; 10:1); தாவீது (1சாமு 16:12,13); எலிசா (1இரா 19:16); சாலமோன் (1இரா 1:39); இவ்விதமாய் எண்ணெயினால் அபிஷேகம் பண்ணப்பட்டவர்கள் பரிசுத்தர்கள் எனப்பட்டார்கள். இவர்களை கொலை செய்வது மகா பாதகம் என்று கருதப்பட்டது. தாவீது அரசன் சவுலை கொல்ல மறுத்ததற்கான காரணங்களில் இதுவும் ஒன்று (சாமு 24:6,7).

பரிசுத்த ஆவியின் அபிஷேகம் பெற்றவர்கள் தேவனுடைய மனிதர்கள் என்று எண்ணி மக்கள் பயந்தார்கள். பரிசுத்த ஆவியானவர் ஒருவர் மேல் இறங்குவதும், நிரப்புவதின் நோக்கம் அவர்களுக்கு தேவன் கொடுத்த பணியை, பொறுப்பை நிறைவேற்றவே பரிசுத்த ஆவியானவர் அருளப்படுகிறார், அல்லது நிரப்புகிறார்.

மோசேக்கு உதவியாக 70 மூப்பர்களை தேவன் தேர்ந்தெடுத்து கூடாரத்தின்முன் நிறுத்தும்படி (தேவன் கட்டளையிட்டு அவர்களை ஆவியினால் நிரப்பினார். எதற்காக? மோசேயோடுகூட சேர்ந்து இஸ்ரவேல் ஜனங்களின் பாரங்களை சுமக்கும்படியாக, மோசேக்கு உதவியாக ஊழியம் செய்யும்படியாக தேவன் ஆவியை அருளினார் (எண். 11:16-26). தலைமை வகிக்கும்படியாக அல்ல மோசேக்கு உதவிக்காரராயிருக்கும் பொருட்டே ஆவியானவர் அருளப்பட்டார். மோசேக்கு பின் யோசுவாவை அதிகாரப்படுத்தினதும், ஆவியினால் நிரம்பினதும் மோசேக்குப் பின் தலைமை வகிக்கும்படி, சபையை நடத்தும்படியாகும்.

இவ்விதமாய் ஒருவரை தேவ ஆவியானவர் ஆட்கொண்டு அவர்களை தேவன் நியமித்த பணியை செய்ய நடத்தினார் என்று நாம் பழைய ஏற்பாட்டில் வாசிக்கிறோம். ஆனாலும் தேவ ஜனங்கள் எல்லாரும் பரிசுத்த ஆவியை பெற்றுக் கொள்ளவில்லை. தேவ ஜனங்கள் எல்லாரும் பரிசுத்த ஆவியை பெற்றுக்கொள்ளும் காலம் வரப்போகிறது என்று சொல்லி வேதாகமம் அறிவித்தது. மோசே போன்ற பரிசுத்தவான்கள், கர்த்தருடைய ஜனங்கள் எல்லாரும் பரிசுத்த ஆவியினால் நிரம்பி தீர்க்கதரிசனம் சொன்னால் நலமாயிருக்குமே என்று வாஞ்சித்தார்கள் [எண். 11:29].

பரிசுத்த ஆவியானவர் பழைய ஏற்பாட்டில் தாம் தெரிந்து கொண்ட மனிதர்களைக் கொண்டு தேவன் நியமித்த பணியை செய்யப் பலப்படுத்தினார், எடுத்து உபயோகித்தார். புதிய ஏற்பாட்டில் நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவையும் அவருக்கு முன்னோடியாக வந்த யோவான் ஸ்நானகனையும் பார்க்கிறோம். யோவான் ஸ்நானகன் தன்னுடைய தாயின் வயிற்றிலிருந்தே பரிசுத்த ஆவியினால் நிரம்பியிருந்தார் [லூக். 1:15, 41-44].

நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து பரிசுத்த ஆவியினால் உற்பத்தியாகி, இந்த உலகத்தில் அவதாரமாக வந்தார், பரிசுத்த ஆவியில் வளர்ந்து நமக்காக அவர் ஜீவித்தார். தன்னுடைய 30-வது வயதிலே அவர் ஞானஸ்நானம்

பெற்று கரையேறி ஜெபம் பண்ணின போது பரிசுத்த ஆவியினால் அபிஷேகம் பண்ணப்பட்டார். பரிசுத்த ஆவியின் வல்லமையிலே அவர் தம்முடைய ஊழியத்தை நிறைவேற்றி முடித்தார். பரிசுத்த ஆவியானவர் அவரோடுகூட இருந்து கிரியை நடப்பித்தார் [அப். 10:38].

கர்த்தராகிய இயேசு கிறிஸ்து தம்முடைய ஊழியத்தில், தம்மை விசுவாசிக்கிற மக்கள் யாவரும் பரிசுத்த ஆவியை பெற்றுக் கொள்ளப் போகிறார்கள் என்று வாக்கருளினார் [யோ. 7:37-39]. மேலும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்து உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியை பெற்றுக் கொள்ளுங்கள், பரிசுத்த ஆவி உங்களிடத்தில் வரும் முன்பாக போய் ஊழியம் செய்யக் கூடாது. அது மட்டும் நீங்கள் எருசலேமில் காத்திருங்கள் என்று கட்டளையிட்டார் [அப். 1:4,5,8; லூக். 24:49; அப். 1:8]. பரிசுத்த ஆவியை பெற்றுக் கொள்ளும் மட்டும் அவர்கள் புதிய ஏற்பாட்டின் சபையல்ல, புதிய ஏற்பாட்டின் ஊழியத்தை செய்யக் கூடாது.

ஏற்கெனவே அவர்களில் பரிசுத்த ஆவியானவர் கிரியை செய்து கொண்டிருந்தார். அவர்கள் இயேசுவால் அழைக்கப்பட்டு அப்போஸ்தலர்கள் என்று நாமம் தரிக்கப்பட்டு ஊழியத்திற்கு அனுப்பப்பட்டு பற்பல விதமான ஊழியங்களைச் செய்தார்கள். பிரசங்கம் செய்தார்கள், பிசாசுகளை விரட்டினார்கள், நோயாளிகளை குணமாக்கினார்கள், மரித்தவர்களை உயிரோடு எழுப்பினார்கள், குஷ்டரோகிகளை குணப்படுத்தினார்கள், மக்களை ஸ்நானப்படுத்தினார்கள். ஆனால் அது புதிய ஏற்பாட்டின் சபையின் ஊழியமல்ல. அவர்கள் அபிஷேகம் பெற்றிருக்கவில்லை. கர்த்தராகிய இயேசு கிறிஸ்து இந்த பூமியிலிருக்கும் போது பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தைத்தைப் பற்றிய வாக்குத்தத்தத்தை அவர்களுக்கு கொடுத்தார். தம்மிடத்தில் வேண்டிக் கொள்கிறவர்களுக்கு பிதாவானவர் பரிசுத்த ஆவியானவரை அருளுவார் என்று வாக்கருளினார் [லூக். 11:13; யோ. 14:16,17,26; 16:13-15; 15:26].

கர்த்தராகிய இயேசுவானவர் உயிரோடு எழும்பிய பின் 40 நாட்கள் சீஷர்களோடு சஞ்சரித்து விட்டு பரலோகத்திற்கு எழுந்தருளிப் போன பின்பு பெந்தெகொஸ்தே நாளில் [50-வது நாளில்] பரிசுத்த ஆவியானவர் பரலோகத்திலிருந்து பூமியிலேகூடியிருந்த சீஷர் கூட்டத்தின் மேல் இறங்கினார். அப்போஸ்தலர்களோடு கூட மொத்தம் 120 பேர்கள் கூடியிருந்த போது பரிசுத்த ஆவியானவர் அவர்கள் மேல் இறங்கினார். அப்பொழுது எல்லாரும் பரிசுத்த ஆவியினால் நிறைந்து அந்நியப் பாஷைகளைப் பேசினார்கள் [அப். 2:1-4].

அது முதற்கொண்டு திருச்சபை பூமியிலே எழும்பிற்று. இந்த சத்தத்தைக் கேட்டு கூடி வந்த தேவ பக்தியுள்ள யூதர்களுக்கு அப். பேதுரு 11 அப்போஸ்தலர்களோடு எழுந்து நின்று தம்முடைய முதலாவது பிரசங்கத்தை நிகழ்த்தினார் [அப். 2:14-36]. அதைக் கேட்ட மக்களில் மூவாயிரம் பேர் இருதயத்தில் குத்தப்பட்டவர்களாகி, சகோதரரே நாங்கள் என்ன செய்ய வேண்டும் என்று கேட்டார்கள். நீங்கள் மனந்திரும்பி இயேசு கிறிஸ்துவை இரட்சகராக, மேசியாவாக ஏற்றுக் கொண்டு பாவ மன்னிப்புக்கென்று பாவத்தை அறிக்கை செய்து ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ள வேண்டும். அப்பொழுது நாங்கள் பெற்றிருக்கிற இதே பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தைப் பெற்றுக் கொள்வீர்கள் என்று அவர்களுக்கு ஆலோசனை கொடுத்தார் [அப். 2. 38,39]. பரிசுத்த ஆவியின் அபிஷேகம் புதிய ஏற்பாட்டின் மக்கள் எல்லாருக்கும் வாக்கருளப்பட்டதாகும்.

நான் ஜலத்தினால் உங்களுக்கு ஞானஸ்நானம் கொடுக்கிறேன், எனக்குப் பின் வருகிறவர் என்னிலும் வல்லவராய் இருக்கி

ர். அவர் பரிசுத்த ஆவியினாலும், அக்கினியினாலும் ஞானஸ்நானம் கொடுப்பார் என்று இயேசுவானவரைப் பற்றி யோவான் ஸ்நானகன் பிரசங்கித்தார் [மத். 3:11; மாற். 1:8). கர்த்தராகிய இயேசு கிறிஸ்து: யோவான் ஜலத்தினால் ஞானஸ்நானம் கொடுத்தான், நீங்களோ பரிசுத்த ஆவியினால் ஞானஸ்நானம் பெறுவீர்கள் இன்னும் சில நாட்களில் என்று சொன்னார் (அப். 1:4; 11:16). பரிசுத்த ஆவியை கொடுப்பேன் என்பது பிதாவின் வாக்குத்தத்தம்.

தெயோப்பிலுவே, இயேசுவானவர் தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினாலே அப்போஸ்தலருக்கு கட்டளையிட்டார் [அப். 1:1-3]. அப்போஸ்தலருக்கே கட்டளையிட்டார். எல்லாருக்கும் அல்ல [அப். 10:40-42]. தேவனுடைய ராஜ்யத்துக்குரியவைகளை (திருச்சபை] அப்போஸ்தலர்களுக்கு விளக்கி. அதை எவ்விதமாக கட்டவேண்டுமென்று திருச்சபையின் அஸ்திபார உபதேசங்களை 40 நாட்கள் அவர்களுக்கு விவரித்து காண்பித்தார். அவைகளில் முக்கியமானது, நீங்கள் இவைகளை நடபிக்க பிதாவின் வாக்குத்தத்தமாகிய பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொள்ள காத்திருக்க வேண்டுமென்று கட்டளையிட்டார்.

பரிசுத்த ஆவியின் அபிஷேகம் பெறுமல் ஊழியம் செய்வது புதிய ஏற்பாட்டின் ஊழியமல்ல. ஆதி சபை கி.பி 150-க்கு பின், அப்போஸ்தலர்களுடைய மரணத்திற்கு பின் பரிசுத்த ஆவியின் ஆளுகையை இழந்து விட்டது. கி.பி 300-க்கு பின் சபை மனித ஆளுகைக்கு உட்பட்டு பின் மாற ஆரம்பித்து, உலகம் சபைக்குள் புகுந்து விட்டதினால் பல வித அந்நிய மதக் கொள்கைகளும், சடங்காசாரங்களும் வேறு ரூபத்தில் சபைக்குள் புகுந்தன. சபை ஜீவனும் வல்லமையுமுள்ள மார்க்கமாயிராமல் [எப. 10:19] வெறும் சடங்காசாரங்களாகிய சடங்குகளினால் திருப்தியடைந்து பின்மாறி தூரம் போய் விழுந்து விட்டது.

மார்க்க சீர்திருத்தம் 16-ம் நூற்றாண்டில் உண்டானபோதிலும் அப்போஸ்தலன் எழும்ப வில்லை. மார்க்க சீர்திருத்தம் செய்தவர்கள் மூலம் தேவன் மறைந்து போன சில சத்தியங்களை கொஞ்சம் கொஞ்சமாக வெளிப்படுத்தினாரேயொழிய சபையின் அஸ்திபார உபதேசங்கள் காணபடாமற் போயிற்று. அதாவது கர்த்தராகிய இயேசு கிறிஸ்து ஒருவிடத்திலும் திருச்சபை கட்டும்படியாக, திருச்சபையை மறுபடியும் ஸ்தாபிக்கும்படியாக கட்டளையிடவில்லை. ஏற்கெனவே ஸ்தாபிக்கப்பட்ட திருச்சபையானது பெயர்க் கிறிஸ்தவ சமுதாயமாக மாறிப் போய் விட்டது. மனிதனுடைய அபிப்பிராயங்களும், பிசாசின் உபதேசங்களும், கள்ளத் தீர்க்கதரிசிகள், கள்ளப் போதகர்கள் மூலம் பரம்பி அஸ்திபார உபதேசம் மறைந்து நின்றன (அப். 20:29,30; 2 பேது.2:1-3; 1 யோ. 4:1).

**பரிசுத்தவிவாகம்**

| மணமகன் | மணமகள் | இடம் | காலம் |
|---|---|---|---|
| Bro. விசுவாசம் ஜான் | Sis. இந்திரா | நான்குநேரி | 31.8.94 |
| Bro. மரிய ஜோசப் | Sis. எஸ்தர் | சென்னை | 7.9.94 |

நான் கட்டளையிட்டவைகளைச் செய்ய காத்திருந்து பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொள்ளுங்கள் என்று கர்த்தர் கட்டளையிட்டார். அவ்விதமாக பரிசுத்த ஆவியானவர் அவர்களில் வந்த போது அவர்கள் ஊழியத்தை ஆரம்பித்தார்கள். இது புதிய ஏற்பாட்டின் உபதேசம். ஊழியர்களாயிருக்கட்டும், திருச்சபையின் அங்கமாயிருக்கட்டும் அவர்கள் பரிசுத்த ஆவியின் அபிஷேகம் பெற்றுக் கொள்ள வேண்டும். ஞானஸ்நானம் என்பது தண்ணீர் ஸ்நானமும், ஆவியின் ஸ்நானமும் சேர்ந்ததேயாகும். அது ஜலத்தினாலும், ஆவியினாலும் பிறப்பதாகும் [யோ. 3:3,5; 1 கொரி. 12,13].

(தொடரும்)

"அவருக்குச் சொந்தமானவர்கள் அவருடைய மகிமைக்குப் புகழ்ச்சியாக மீட்கப்படுவார்கள் என்பதற்கு ஆவியானவர் நம்முடைய சுதந்தரத்தின் அச்சாரமாயிருக்கிறார்". எபே. 1:14.

# திருச் சபை

"நீ பேதுருவாய் இருக்கிறாய் இந்த கல்லின் மேல் என் சபையைக் கட்டுவேன்" (மத். 16:18).

திருச்சபை என்பது தேவனுடைய மிகப் பெரிய திட்டமாகும். இறையாட்சியென்பதும், திருச்சபை என்பதும் கிட்டத்தட்ட ஒன்றே. இறையாட்சி என்பது திருச்சபையைக் காட்டிலும் விரிவான தொன்று. ஆனாலும் அநேக இடங்களில் இறையாட்சியும் (தேவனுடைய ராஜ்யமும்), திருச்சபையும் ஒன்றே என்று குறிப்பிடப் பட்டிருக்கிறது. தேவனுடைய ராஜ்யம் அல்லது இறையாட்சி என்பதை நற்செய்தி நூல்களில் 120 முறை வாசிக்கிறோம். திருச்சபை என்கிற சொல் இரண்டு முறை மட்டுமே வருகிறது (மத். 16:18; 18;17). புதிய ஏற்பாட்டின் மற்ற நூல்களில் இறையாட்சி என்பது 32 முறை மாத்திரமே வருகின்றன. ஆனால் சபை (திருச்சபை) என்ற சொல் 110 முறை வருகின்றன.

திருச்சபையென்பது உலகத் தோற்றத்திற்கு முன்னமே தேவன் திட்டமிட்டதாகும் (எபே. 1:4; 2 தீமோ. 1:9). இது இரட்சிப்பையும் பூரணப்படுத்தலையும் பற்றியல்லவா சொல்லுகிறது என்று நீங்கள் நினைக்கலாம். இரட்சிப்பும் திருச்சபையில் அங்கமாய் இருத்தலும் ஒன்றே. இரட்சிக்கப்படுகிறதும் திருச்சபையில் அங்கமாய் இருப்பதும் ஒரே சமயத்தில் நிகழ்ந்த சம்பவமாகும். அன்றைய தினம் 3000 பேர் ஞானஸ்நானம் பெற்று சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள் - 3000 பேர் இரட்சிக்கப்பட்டார்கள். அவர்கள் திருச்சபையில் சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள் (அப். 2:41). எங்கே சேர்த்துக் கொள்ளப் பட்டார்கள்? சபையில் (எக்லேசியா) சேர்த்துக் கொள்ளப் பட்டார்கள். எக்லேசியா என்கிற கிரேக்க பதமானது உலகத்திலிருந்து வெளியே அழைக்கப் பட்ட கூட்டம் - சபை என்று அர்த்தமாகும்.

அந்த சபையோடு சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள். தினந்தோறும் தேவன் மக்களைச் சேர்த்துக் கொண்டு வந்தார். இரட்

சிக்கப்பட்டவர்களை கர்த்தர் அநுதினமும் சபையிலே சேர்த்துக் கொண்டு வந்தார் (அப். 2:47). இந்நாட்களிலே சிலர் நான் இரட்சிக்கப்பட வேண்டும். இரட்சிக்கப்பட்டபின் ஏதாவது ஒரு சபையில் சேர்ந்து கொள்ள வேண்டும் என்றும், இன்னும் சிலர் இரட்சிக்கப்பட வேண்டும் அவ்வளவுதான், நான் எந்த சபையிலும் சேர வேண்டியதில்லை என்றும், இன்னும் சிலர் நான் எந்த சபையில் இருக்க வேண்டும் என்று கேள்வி கேட்டுக் கொண்டும், இன்னும் சிலர் நான் எந்த சபையில் இருந்தாலும் இரட்சிக்கப்பட முடியும் என்று சொல்லிக் கொண்டும் இருக்கின்றனர். அவர்கள் அறிய வேண்டிய செய்தியாய் அவர்களுக்காய் வேதாகமத்தில் காணப்படுகிற திருச்சபையைப் பற்றி இப்பொழுது எழுதுகிறேன்.

திருச்சபை என்றால் பாதி இரட்சிக்கப்பட்டும் பாதி இரட்சிக்கப்படாமலும் இருக்கிற கூட்டமல்ல. இரட்சிக்கப்பட்ட மக்களே திருச்சபை. இரட்சிக்கப்படுகிறவர்களை கர்த்தர் அநுதினமும் சபையிலே கூட்டி சேர்த்துக் கொண்டு வந்தார் (அப். 2:47). அப்போஸ்தலனாகிய பேதுருவை தலைமையாகக் கொண்ட மற்ற அப்போஸ்தலர்களோடு சேர்ந்திருந்த சபையிலே கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து ஏற்றுக் கொண்டு இரட்சிக்கப்பட்டவர்களை தேவன் சேர்த்துக் கொண்டு வந்தார். இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து ஏற்றுக் கொண்டு இரட்சிக்கப்படுகிறது என்றாலே திருச்சபையில் அங்கமாகிறது என்று பொருளாகும்.

இந்த இரண்டு வேத வசனங்களை பாருங்கள்:-

1. திரளான புருஷர்களும், ஸ்திரீகளும் விசுவாசமுள்ளவர்களாகி கர்த்தரிடமாய் சேர்க்கப்பட்டார்கள் (அப். 5:14).

2. எல்லாவற்றையும் அவருடைய பாதங்களுக்கு கீழ்ப்படுத்தி எல்லாவற்றையும், எல்லாவற்றிலும் நிரப்புகிற அவருடைய நிறைவான சரீரமான சபைக்கு அவரை எல்லாவற்றிற்கும் மேலாக தலையாகத் தந்தருளினார் (எபே. 1:22,23).

இதில் நாம் காண்கிறது என்ன?

1. விசுவாசிகள் கர்த்தரிடமாய் சேர்க்கப்பட்டார்கள். ஒருவர் எவ்விதமாய் கர்த்தரிடமாய் சேர்க்கப்படுகிறார்? சேர்க்கப்பட முடியும்? கர்த்தர் பரலோகத்தில் இருக்கிறார். இதை எழுதும் போதும் கர்த்தர் பரலோகத்தில் தான் இருந்தார். அப்படி இருக்கும் போது எப்படி ஆடவரும் பெண்டிரும் கர்த்தரிடமாய் சேர்க்கப்பட முடியும்? இரண்டாவது வசனத்தை கவனிக்க:- 2. திருச்சபை கிறிஸ்துவின் சரீரம். ஆகையினாலே கர்த்தருடைய திருச்சபையில் சேர்க்கப்படுவதும், கர்த்தரிடமாய் சேர்க்கப்படுவதும் ஒரே நிலையான அநுபவ நிகழ்ச்சியாகும் என்பதை நீங்கள் தெளிவாக அறியலாம் (எபே. 1:22,23).

எனவே இரட்சிக்கப்படுவது என்பது ஞானஸ்நானம் பெற்று திருச்சபையில் சேர்வதே (மாற். 16:16). சீப்புரு தீவாரும் சிரேனே பட்டணத்தாரும் கிரேக்க யூதர்களுடனே பேசி கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவைக் குறித்து பிரசங்கித்தார்கள். கர்த்தருடைய கரம் அவர்களோடு இருந்தது. அநேக ஜனங்கள் விசுவாசிகளாகி கர்த்தரிடமாய் சேர்க்கப்பட்டார்கள் (அப். 11:22,24). யூதர்களும், யூத மார்க்கத்தில் அமைந்தவர்களுமாகிய பக்தியுள்ளவர்களில் அநேகர் பவுலையும் பர்னபாவையும் பின்பற்றினார்கள் (அப். 13.43; 14:4; 17:34). சகோதரரே, சகோதரிகளே உலகத்தை விட்டு வெளியேறி இரட்சிப்பிற்குள் வாருங்கள் என்று விடுத்த அழைப்பிற்கு விடை கொடுத்தவர்கள் கர்த்தருடைய திருச்சபையாகிறார்கள். அவர்கள் வெளியே அழைக்கப்பட்டவர்களாய் இருக்கிறார்கள்.

"அவர் நம்மை நம்முடைய நீதியின் கிரியைகளினிமித்தம் இரட்சிக்காமல், தம்முடைய தீர்மானத்தின்படி ஆதிகால முதல் கிறிஸ்து இயேசுவுக்குள் நமக்கு அருளப்பட்ட கிருபையின்படி நம்மை இரட்சித்து பரிசுத்த அழைப்பினால் அழைத்தார் (2 தீமோ. 1:9). இரட்சிப்பும் திருச்சபையின் அங்கத்தினராக இருத்தலும் ஒரே நிலையல்லவா. ஆம். தேவன் ஆதி கால முதலே திருச்சபையை தம் மனதில் வைத்திருந்தார், அழைத்திருந்தார். ஆனபடியினாலே திருச்சபையானது தேவனுடைய மிகப் பெரிய திட்டமாகும்.

திருச்சபை கடவுளுடைய திட்டத்தில் ஒரு துணை நோக்கமுடையதன்று. அது நம்முடைய பரலோக பிதாவின் பெரிய திட்டமாகும். இயேசு கிறிஸ்துவினுடைய ஒரே நோக்கம் திருச்சபையைக் கட்டுவதே. "இந்த கல்லின் மேல் என் சபையைக் கட்டுவேன்" (மத். 16:18). பெந்தெகொஸ்தே நாளில் பரிசுத்த ஆவியானவர் கூடியிருந்த சீஷர்கள் கூட்டத்தின் மேல் இறங்கி வந்தார். அவர்களெல்லாரும் பரிசுத்த ஆவியினால் நிரப்பப்பட்டு வெவ்வேறு பாஷைகளிலே பேசத் தொடங்கினார்கள். அப்பொழுது திருச்சபை பூமியிலே எழும்பிற்று. அவர்கள் ஒரே சரீரமாக, ஒரே ஆவியினால் கட்டப்பட்டார்கள் (அப். 2:1-4).

இவ்விதமாய் அப்போஸ்தலர்களோடு சேர்ந்திருந்த மக்களே திருச்சபையானார்கள். வேதாகமத்தில் காணப்படுகிற திருச்சபை இதுவே. இந்த திருச்சபையிலே கர்த்தர் அனுதினமும் இரட்சிக்கப்படுகிறவர்களை கூட்டிச் சேர்த்து வந்தார்.

(தொடரும்)

"ராஜ ஸ்திரீகள் அறுபதுபேரும், மறுமனையாட்டிகள் எண்பதுபேருமுண்டு; கன்னியருக்கு தொகையில்லை. என் புறாவோ, என் உத்தமியோ ஒருத்தியே..."

உன்னத பாட்டு 6:8,9.

## வேத பாடம் *[தொடர்ச்சி]*

### எண்ணாகமம்

### எண். 18:25-32 தசமபாகம்

இந்நாட்களில் தேவனுடைய ஊழியர்கள் என்று சொல்லிக் கொள்கிறவர்களில் சிலரும் பல விசுவாசிகளும் ஒழுங்காக தசமபாகம் செலுத்துவதில்லை. அதினால் இவர்கள் தேவ ஊழியத்தை, தேவ ஆராதனையை தடை செய்கிறவர்களாக இருக்கிறார்கள் [நெகே. 13:10]. இதினால் அநேக ஊழியங்கள் தடைபடுகின்றன. தேவ ஊழியர்கள் ஊழியத்தை விட்டு ஓடி விடுகிறார்கள். சில மிஞ்சின பரிசுத்தவான்கள் தசமபாகம் புதிய ஏற்பாட்டின் கற்பனை இல்லை என்று சொல்லி மக்களை மருள விழச்செய்து அவர்களை கர்த்தருக்கு விரோதமாய் பாவம் செய்ய வைக்கிறார்கள். இவர்களுக்கு வேதமே தெரியாது என்று சொல்லலாம். காண்:- 1 தீமோ. 5:18; 1 கொரி. 9:14; கலா. 6:6; 2 கொரி. 8:1-5; ரோ. 15:27; 1 கொரி. 9:11; 1 தீமோ. 5:17; லூக். 6:18) இவர்கள் சில தவ

ளான ஊழியர்கள், ஊழியங்களை மனதில் வைத்து இப்படி சொல்லுகிறார்கள் என்றால் அதுவும் தவறுதான் (மத். 7:2). ஏனென்றால் இவர்களே திருடர்களாயிருக்கிறார்கள் என்று வேதம் சொல்லுகிறது. இவர்கள் தசமபாகம் கற்பனையை கைக்கொள்ளுகிறதில்லை; கைக்கொள்ளுகிறவர்களையும் கைக்கொள்ள விடாமல் திருடர்களாக்குகிறார்கள் (மல். 3:8; ரோ. 2:22).

சிலர் இயேசுவைப் போல் நடக்க வேண்டும், அந்த ஊழியர் அப்படியில்லை, இந்த ஊழியர் இப்படியில்லை என்று சொல்லித் திரிகிறார்கள். ஒருவர் இப்படி எனக்கு எழுதியிருந்தார்: அன்று இயேசு தங்க இடமில்லாதிருந்தார்; கால் நடையாய் சுற்றி பிரசங்கம் செய்தார்; ஒரே வஸ்திரம் அணிந்திருந்தார். இப்பொழுது ஊழியர்கள் காரில் போகிறார்கள். நீங்கள் எப்படியோ என்று எழுதியிருந்தார். நான் அவரைக் கண்டு சொன்னேன்: இயேசு நடந்தது போல என்றால் - அவருடைய ஆத்துமீகத்தைப் பின் பற்ற வேண்டும் என்றுதான் அர்த்தமேயொழிய, அவர் தண்ணீரின் மேல் நடந்தார், பகலெல்லாம் பிரசங்கித்து இரவெல்லாம் ஜெபித்தார், தையலில்லாத அங்கி அணிந்திருந்தார், கயிற்றினால் சவுக்கை உண்டு பண்ணி ஆலய வளாகத்தில் வியாபாரம் செய்து வந்தவர்களை, ஆடுமாடுகளை, புறாக்களை அடித்து விரட்டினார், காசுக்காரர்களின் பலகைகளை கவிழ்த்து, புறா விற்கிறவர்களை இங்கிருந்து எடுத்துக் கொண்டு போங்கள் என்று விரட்டினார், கழுதை மேல் பவனி போனார். இப்படியே நாமும் செய்ய வேண்டும் என்று அர்த்தமல்ல.

அவர்பிதாவுக்குமுன்பாக எவ்விதமாய் வாழ்ந்து பிதாவினுடைய சித்தத்தையே செய்து முடித்தாரோ அவ்விதமாகவே நாம் தேவ சித்தம் செய்ய வேண்டும். அந்த மாதிரியையே பின்பற்ற வேண்டும் என்றே அர்த்தமாகும். அப்பொழுது இருந்த வாகன வசதிகளையெல்லாம் கர்த்தர் உபயோகப்படுத்தினார். கால் நடையாய் நடந்து போனார், கழுதை மேல் ஏறிப் போனார், படகுகளில் சவாரி செய்தார். இப்பொழுது யாராவது ஊழியர் ஒருவர் காரில் போகிறாரென்றால், தேவ ஊழியத்தினிமித்தமே காரும் உபயோகப்படுத்தப்படுகிறது. விமானத்தில் போகிறாரென்றால் விமானத்தில் போகட்டும். தேவனுடைய ஊழியத்தினிமித்தமே எல்லா வாகன வசதிகளும் உருவாக்கப்பட்டிருக்கிறது. நீர் அந்த கார் வாங்குவதில் ஏதாவது பங்கு பெற்றிருக்கிறீரா என்று கேட்டேன். இல்லையென்றார். பொறாமையினால் நிறைந்து தெய்வீக பார்வை இன்றி, நம் தேவனுடைய மார்க்கம் பரவவேண்டும், மகிமையில் சிறக்க வேண்டும் என்ற சிறந்த மனமில்லாத போலி கிறிஸ்தவர்களாலே இன்று கிறிஸ்தவம் தாமதிக்கிறது.

காஞ்சி சங்கராச்சாரியாருக்கு வியாதி, சிரத்தை பரிசோதனை பண்ண ஒன்றே கால் கோடிக்கு அமெரிக்காவிலிருந்து இயந்திரம் வரவழைக்கப்பட்டிருக்கிறது என்றும், சாமிக்கு தங்க கிரீடம் சூட்டப்பட்டது என்றும், தங்க தேர் கட்டப்பட்டது என்றும், உண்டியலின் மேல் 15 இலட்சம் கரன்சி நோட்டு ஒரே கட்டாக கட்டிப் போடப்பட்டிருந்ததென்றும், இரண்டு கிலோ தங்கம் மொத்தமாக போடப்பட்டிருந்ததென்றும், இன்னும் அவர்களுடைய சுவாமி வீடுகளில் பிரவேசிக்கும் போது (சிலையல்ல, சாமியார்) பாதக் காணிக்கையாக ஆயிரத்து ஒன்று, பத்தாயிரத்து ஒன்று என்றெல்லாம் காணிக்கை செலுத்தப்படுகிறது என்றும் செய்திகள் மூலமாக அறிய முடிகிறது. அவர் வரும் போது ரத ஊர்வலமும், கொட்டு மேளமும், ஆர்ப்பாட்டம் செய்து வரவேற்று நகர்வலம் கொண்டு போகிறார்கள். இதைப் பார்த்து ஒரு இந்துகூட பொறாமைப்படுகிறதில்லை.

ஆனால், இன்று கிறிஸ்தவனோ தங்கள் ஆத்ம நன்மையைத் தேடும் மேய்ப்பனை அவமதிக்கிறார்கள். அவர்கள் இவர்களிடம் இரந்து நிற்க வேண்டுமென்று கீழ்த்தரமான எண்ணமுடையவனாய் இருக்கிறான். நீ தேவனை பரியாசம் பண்ணாதே (கலா. 6:6,7). தன்னை கிறிஸ்தவனென்று சொல்லிக் கொள்ளுகிற அன்பற்ற பொறாமை கிறிஸ்தவன் - ஊழியர்கள், ஊழியர் குடும்பங்கள் அப்படி சாப்பிடுகிறார்களே, இப்படி உடுக்கிறார்களே, நன்றாய் இருக்கிறார்களே என்று பொறாமைப்படுகிறான். ஊழியர்கள், ஊழியர் குடும்பங்கள் டாம்பீகமாக செலவு செய்யக் கூடாது. கர்த்தருடைய காணிக்கையை பயத்தோடே கர்த்தருக்குள் உபயோகிக்க வேண்டும். ஆனால் அவர்களைப் பார்த்து விசுவாசி பொறாமைப்பட வேண்டாம். அது துர்புத்தியாகும். அவர்களுடைய உழைப்பிற்கு அது சம்பளம். நன்றாய் பாடுபடுகிற ஊழியக்காரன் இரட்டிப்பான சம்பளத்திற்கு பாத்திரவானாயிருக்கிறான் என்று தேவன் 1 தீமோ. 5:18-ல் மிகவும் தெளிவாய் சொல்லியிருக்கிறார் (தேவ ஊழியர்கள் ஜனங்களின் காணிக்கையில் வாழ்கிறவர்கள். தேவ பயத்தோடு வாழ்ந்து தேவ ஊழியத்தை செய்து, கர்த்தருடைய காணிக்கையை உதாசீனம் செய்யாமல் கர்த்தருடைய காரியமாய் உபயோகிக்க வேண்டும். இது ஊழியர்களும் கைக் கொள்ள வேண்டிய காரியமாகும்).

அவரவர்கள் தகுதிக்குத்தக்கப்படி அவர்கள் வாழனும், வாழட்டும், கர்த்தர் வந்து நியாய விசாரணை செய்வார். தேவ ஊழியர்களின் மகிழ்ச்சியே திருச்சபையின் மகிழ்ச்சி. திருச்சபையின் மகிழ்ச்சியே கிறிஸ்தவத்தின் மகிழ்ச்சியும் மேன்மையுமாம். விசுவாசியே நீ உன் பங்கை நிறைவேற்று. ஆனாலும் உண்மையுள்ள ஊழியர்கள், தேவ பிள்ளைகளின் தியாகத்தினால் - தசமபாக காணிக்கையினால் இந்நாட்களில் திருச்சபை வளருகிறது. தேவன் ஆராதிக்கப்படுகிறார், தேவனுடைய நற்செய்தி மக்களுக்கு பிரசங்கிக்கப்படுகிறது. மக்கள் இரட்சிக்கப்படுகிறார்கள், தேவ ஆசீர்வாதம் பெறுகிறார்கள், தேவனுடைய இராஜ்யம் பரவிவருகிறது. தேவன் மகிமைப்படுகிறார். கிறிஸ்தவர்கள் தேவனுடைய கற்பனையைக் கைக்கொண்டால் உலகத்தையே தங்கள் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வர முடியும். மெய்க்கிறிஸ்தவர்கள் தேவ ராஜ்யத்தின் அங்கத்தினர்களாகயிருக்கிறார்கள். தசமபாக உபதேசம் தேவன் எதிர்பார்த்த விசுவாச மார்க்கத்தாரின் (கலா. 3:7,9) கொள்கையே (ஆதி. 14:20). இது மெல்கிசேதேக்கின் முறைமைக்குட்பட்டது.

[தொடரும்].

"இவனுக்கு [மெல்கிசேதேக்கு] ஆபிரகாம் எல்லாவற்றிலும் தசமபாகம் கொடுத்தான்" எபி. 7:2.

சுவிசேஷம்

# மரணம்

[தொடர்ச்சி]

இந்த உலகத்தின் மக்கள் தேவனுடைய ஜீவனுக்கு அந்நியராய் இருக்கிறார்கள். தேவனை இழந்து இருக்கிறார்கள். தேவன் இல்லாமலிருக்கிறார்கள். ஆனபடியால் அவர்கள் மரணத்திலிருக்கிறார்கள். அவர்கள் புத்தியில் அந்தகாரப்பட்டு, தங்கள் இருதயக் கடினத்தினால் தங்களில் இருக்கும் அறியாமையினாலே தேவனுடைய ஜீவனுக்கு அந்நியராயிருந்து (எபே.4:18). மிருகங்களைப் போல மரித்து போகிறார்கள். ஆனால் தேவ மக்களுடைய மேன்மை மிகவும் பெரியதாகும்.

சரீர மரணத்தைப்பற்றி வேதாகமத்தில் நித்திரையென்று எழுதியிருக்கிறது (யோ. 11:11; 1 தெச. 4:14). இரட்சிக்கப்பட்டு மரித்துப்போன பரிசுத்தவான்களை நித்திரையடைந்தவர்கள் என்று வேதத்தில் எழுதியிருக்கிறது. பொதுவாக தேவனுடைய பிள்ளைகளுக்கு மரணம் என்பது நித்திரை என்று பார்க்கிறோம். அது பயப்படத்தக்கதான காரியமல்ல. மகிழ்ச்சியான காரியம். ஏனென்றால் பரிசுத்தவான்களெல்லாம் அந்த மரணத்தை அதிகமாக வாஞ்சித்தார்கள் (2 கொரி. 5:1; பிலி.1:21).

கர்த்தராகிய இயேசு கிறிஸ்து எனக்கு அறிவித்தபடி நான் என் கூடாரத்தை விட்டுப் போவது சீக்கிரத்தில் நேரிடுமென்று அறிந்து இந்த நிருபத்தை எழுதினேன் என்று சந்தோஷமாகச் சொல்லுகிறார் அப்.பேதுரு (2 பேது.1:13). பரிசுத்தவான்களுக்கு மரணம் பயங்கரமானதாக அல்ல. அது அவர்கள் வாஞ்சித்ததாக இருந்தது. அப். பவுல் அடிக்கடி சொல்கிறது என்னவென்றால் இந்த கூடாரத்தை விட்டு கடந்து போக எனக்கு மிகவும் ஆசை தான், ஆனாலும் நான் இங்கே இருப்பது பிரயோஜனமாயிருக்குமென்று சொல்லுகிறார். நான் திரும்பி வராத வழியில் போவேன் என்று யோபு சொல்கிறார் [யோபு 16:22].

மரணம் என்று சொல்வது சரீரத்திலிருந்து ஆத்துமா பிரிந்து செல்வதாகும். பரிசுத்தவான்களுடைய மரணம் தேவனுடைய பெரிய விருப்பமாயிருக்கிறது. மரணத்திலே நித்திரை செய்கிற நிலையாயிருக்கிறது. அது ஒரு பெலகீன நிலையாயிருக்கிறது. அது மௌனத்தில் இறங்குகிற நிலை. அங்கே மரித்தவர்கள் கர்த்தரைத் துதியார்கள் என்றும் வேதத்தில் எழுதப்பட்டுள்ளது.

பொதுவாக மரணம் ஒரு சந்தோஷமான காரியமல்ல. ஆனால் தேவனோ பரிசுத்தவான்களின் மரணத்தை விரும்புகிறார் அதில் அவர் சந்தோஷப்படுகிறார் (சங். 116:15). சில வேளைகளில் நெருக்கடியிலே எங்களை எடுத்துக் கொள்ளுமென்று பரிசுத்தவான்கள் ஜெபிக்கலாம். நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் வருகை பிந்துமானால் நாமும் மரிக்கலாம். அல்லது கர்த்தருடைய வருகையிருக்குமென்றால் நாம் மரிக்காமலும் எடுத்துக் கொள்ளப்படுவோம்.

மரணமடைகிறதினாலே ஒன்றும் பயப்பட வேண்டியதில்லை. இங்கேயிருந்து விடுபடவும், அங்கே போய் கர்த்தரோடு குடியிருக்கவும் விரும்புகிறோம். ஆனால் பாவிகளுடைய மரணமென்றால் ஒரு பயங்கரமான சம்பவமாகும். அநேக மக்கள் மரணத்தைப்பற்றி தெளிவில்லாதவர்களாய் மிருகங்களைப் போல மரித்துப் போகிறார்கள்.

உண்மையான மரணமென்பது ஆவிக்குரிய மரணமாகும். தேவனை விட்டுப் பிரிந்திருப்பதாகும். இது ஒரு பயங்கரமான நிலையாகும். அவர்கள் இந்த நிலை

யிலே மரித்து விட்டால் கர்த்தருடைய வருகையின் போது நியாயந்தீர்க்கப்பட்டு அவர்கள் கர்த்தருடைய சந்நிதானத்தை விட்டு துரத்தப்படப் போகிறார்கள் (2தெ. 1:10). தேவ சந்நிதானத்தை விட்டு மனிதன் துரத்தப்படுகிறதே மரணமாகும். கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசியாதவர்களுக்கும், சுவிசேஷத்திற்கு கீழ்ப்படியாதவர்களுக்கும் தேவனால் உண்டான தண்டனையாவது. அவர்கள் தேவனுடைய சந்நிதானத்தை விட்டு துரத்தப்படுவார்கள், மகிமையிலிருந்து நீங்கலாக்கப்படுவார்கள், அவர்கள் நித்திய அழிவாகிய தண்டனையை அடைவார்கள். அங்கே எரிகிற நெருப்பும் கந்தகமும் இருக்கும் எப்பொழுதும் நித்திய அக்கினி அவியாமலும் அவர்கள் புழு சாவாமலும் இருக்கும். பிசாசுகளுக்கும் அவனுடைய தூதர்களுக்கும் ஏற்படுத்தப்பட்டுள்ள நித்திய அக்கினியில் போங்கள் என்று தேவன் அவர்களைத் தள்ளிவிடுவார்.

ஆகையினால் இரட்சிக்கப்படாத மக்களுக்காக நாம் மிகவும் வருத்தப்பட வேண்டும், கண்ணீர் வடிக்க வேண்டும். ஆகவே மனிதன் மரணத்தை சந்திக்க ஆயத்தமாயிருக்க வேண்டும். இன்று இப்பொழுது மரித்தால் பரதீசில் இருப்போமா? அதுவே நம்முடைய பதிலாக இருக்க வேண்டும். இந்த உலகத்தில் மரணம் என்று சொல்லப்படுவது மனுமக்கள் எல்லோரையும் ஆட்கொண்டிருக்கிறது. பாவத்தை தொடர்ந்து மரணம் கிரியை செய்கிறது. தேவன் நம்மை ஆவியிலே உயிர்ப்பித்தபடியினாலே நாம் மரணத்தினின்று நீங்கி, ஜீவனைப் பெற்றிருக்கிறோம். இயேசு கிறிஸ்துவே அந்த ஜீவனாயிருக்கிறார்.

இந்த மரணத்திற்கு தப்பிக்க ஒரே பரிகாரம் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவே. இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கிறவர்கள் மரணத்தை விட்டு ஜீவனுக்குள் பிரவேசித்து விடுகிறார்கள். பரிசுத்த ஆவியானவர் அவர்களிலே ஒரு புது பிறப்பை உண்டாக்கி அவர்களுக்கு தேவனுடைய பிள்ளைகள் என்கிற அதிகாரத்தைக் கொடுக்கிறார் (யோ 1:12, 5:24). நாம் ஜீவனுக்குள் பிரவேசித்திருக்கிறோம் என்பது மிகவும் மகிழ்ச்சியான காரியம். நாம் ஆவியில் உயிர்ப்பிக்கப்பட்டிருக்கிறோம். மரணத்தின் கருவியாகிய பாவத்திற்கு நாம் ஒருபோதும் நம்மை மனப் பூர்வமாய் ஒப்புக் கொடுக்கக் கூடாது.

"இச்சையானது கர்ப்பந்தரித்து, பாவத்தைப் பிறப்பிக்கும், பாவம் பூரணமாகும் போது, மரணத்தைப் பிறப்பிக்கும்" (யாக் 1:15). என்று பரிசுத்த ஆவியானவர் எழுதி வைத்திருக்கிறார். நாம் மிகவும் எச்சரிக்கையாய் இருக்க வேண்டும். மறுபடியும் ஜீவனை விட்டு மரணத்திற்கு போகக் கூடாது. பின்மாறிப் போகிறவர்களும், பாவத்திற்குள் சிக்கிக் கொள்கிறவர்களும் மரணத்திற்குள் போகிறார்கள். அவர்களை மரணத்தினின்று விடுவிக்க நாம் பிரயாசமெடுக்க வேண்டும் (யாக். 5:20). செவி கொடுக்கிறவர்கள் தப்பித்துக் கொள்ளலாம். பின்மாறுகிறவர்களை தூக்கி எடுப்பது பெரிய காரியமாகும். குறை சொல்லிக் கொண்டிருக்கிறவர்களை திருப்திபடுத்துவது நம்மாலே கூடாத காரியமாகும். ஆனால் அவர்களுக்காக ஊக்கமாக ஜெபித்து விடுதலையாக்க வேண்டும். மரணமென்பது பரிசுத்தவான்களுக்கு தேவன் நியமித்ததாகும். இயேசு கிறிஸ்துவே மரித்து நித்தியத்திற்குள் கடந்து சென்றார். நாமும் அந்த வழியாக கடந்து போக வேண்டி வரலாம்.

பாவம் செய்த சரீரத்தில் நாம் இருக்கிறோம். அது கெட்டுப் போன சரீரம். அது அழியத்தான் வேண்டும். இது அழிந்தால் தான் பயனுள்ள சரீரம் உயிர்த்தெழுதலினால் உண்டாகும். இயேசு கிறிஸ்து வரும் பொழுது நாமும் உயிரோடு இருந்தால், அவருடைய சரீரத்துக்கு ஒப்

பாவ நம் சரீரத்தையும் மாற்றி மகிமைக்குள் எடுத்துக் கொள்வார். நரகம் அது தேவனால் துரத்தப்படுகிறவர்கள் தள்ளுண்டு போகிற அக்கினியும் கந்தகமும் எரிகிற கடல் என்று எழுதப்பட்டுள்ளது (வெளி 21:8). பாவத்தின் சம்பளம் மரணம் என்று ரோம 6:23 -ல் அதற்கு விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது.

ஓர் ஊரிலே ஒரு பெரிய ஐசுவரியவான் இருந்தார். அவருக்கு அநேக நிலங்களும், வேலைக்காரர்களும், வேலைக்காரிகளும் இருந்தார்கள். அந்த ஊரிலே விறகு வெட்டி விற்று பிழைக்கக் கூடிய ஒரு ஏழை மனிதன் ஊரின் கடைசியில் ஒரு குடிசையில் வாழ்ந்து வந்தார். ஆனால் அவர் ஒரு விசுவாசியாகும். அவர் ஒரு நாள் மரம் வெட்டுகிறதற்காக கடந்து சென்றார். மரத்தை வெட்டி கட்டி வைத்து விட்டு அதன் பக்கத்தில் இருந்த ஆற்றோரத்தில் புசிக்க அமர்ந்தார். அமர்ந்து அவர் வைத்திருந்த காய்ந்த ரொட்டியை எடுத்து ஆண்டவருக்கு ஸ்தோத்திரம் செலுத்தினான். அப்பொழுது அந்த வழியாக வந்த ஐசுவரியவான் நிழலுக்காக அந்தமரத்தினடியில் நின்று அந்த ஏழை ஸ்தோத்திரம் செலுத்தின சத்தத்தைக் கேட்டு அந்த பக்கம் பார்த்து ஆ! ஹா! என்று சிரித்திருக்கிறார்.

அந்த ஏழை ஐசுவரியவானைப் பார்த்து ஏன் சிரிக்கிறீர்கள் என்று கேட்க ஐசுவரியவான் பதிலாக ஏன் காய்ந்த ரொட்டியை வைத்துக் கொண்டு தேவனுக்கு ஸ்தோத்திரம் செலுத்துகிறாய். நீ உழைக்கிறாய். நீ சாப்பிடுகிறாய். பின்னர் ஏன் இறைவனுக்கு ஸ்தோத்திரம் செலுத்த வேண்டும்? என்னைப் பார் நான் குதிரையில் சவாரி செய்கிறேன். நான் தேவனுக்கு ஸ்தோத்திரம் செலுத்துவதில்லை. அதற்கு அந்த ஏழை நமக்கு ஆகாரம் கொடுக்கிறதே இறைவன் தான். ஏன் நாம் உயிரோடு இருப்பதே தேவ கிருபைதான் என்றார்.

ஒரு நாள் இந்த ஐசுவரியவானுக்கு அசரீரி சத்தம் உண்டாகி, இந்த ஊரிலுள்ள ஐசுவரியவான் இன்ன நாளில் இரவு 12 மணிக்கு மரிக்கப்போகிறான் என்று கேட்டது. அதிலிருந்து அந்த ஐசுவரியவானுக்கு மரண பயம் உண்டாகி நான் மரிக்கப் போகிறேனே, இந்த சொத்தெல்லாம் யாருடையதாகும் என்று புலம்பலானன். சொந்தகாரர்கள் யாவரும் வந்து விட்டார்கள், டாக்டர்கள் வரவழைக்கப்பட்டார்கள். டாக்டர்கள் பரிசோதித்து விட்டு இவருக்கு வியாதி ஒன்றும் இல்லை என்று கூறிவிட்டார்கள்.

அந்த குறித்த நாளும் வந்தது. ஐசுவரியவானுக்கு நாடி ஒடுங்கிப் போய், சாப்பிட முடியாமல் ஆகி பரிதாப நிலையாயிற்று. இரவு மணி 11.30 ஆகியது.... 11.40 ஆகியது... 11.55 ஆகி விட்டது. இன்னும் 5 நிமிடங்கள்தான் இருக்கிறது அவர் மரிக்க. இப்பொழுது மணி 12 ஆக போகிறது. அவர் பெரு மூச்சு விட ஆரம்பித்தார். நாடி ஒடுங்கிப் போய் கை கால்கள் எல்லாம் சோர்ந்து விட்டது. மரிக்கப் போகிறோம் என்கிற மரண பயத்தால் உடலெல்லாம் வேர்த்துக் கொட்டியது. கண் விழிகள் சொருகி வாய் குழற ஆரம்பித்தது. மணி 12 ஆகி விட்டது. மனைவி பிள்ளைகள் உற்றார் உறவினர் எல்லோரும் கண்ணீர் விட்டு கவலையோடு அழுது கொண்டு நின்றார்கள்.

திடீரென ஐசுவரியவான் கண்களைத் திறந்து சுவரிலுள்ள கடிகாரத்தை பார்த்தார் மணி 12. 05. ஆ! நான் பிழைத்துக் கொண்டேன். இனி சாகமாட்டேன் என்று சொல்லி நடகல் என்று எழுந்து அங்குமிங்கும் நடக்க ஆரம்பித்தார், குதித்தார். எல்லோருக்கும் சந்தோஷம் உண்டாயிற்று. ஐசுவரியவான் புசித்து குடித்து பெலன் அடைந்தார். கொஞ்ச நேரத்தில் ஊரின் தெரு கோடியில் அழுகையின் சத்தம் கேட்டது. அது என்னவென்று ஐசுவரியவான் விசாரித்தார். ஊரின் கடை கோடி

குடிசையில் இருந்த விறகு வெட்டி இரவு 12 மணிக்கு இறந்து போய் விட்டான் என்கிற செய்தி கிடைத்தது. ஐசுவரியவானுக்கு ஒரே திகைப்பாய் ஆகிவிட்டது. உடனே அந்த இடத்திற்கு போக வேண்டுமென்று விரும்பினார்.

அன்றொரு நாள் தான் காட்டில் சந்தித்த அதே விறகு வெட்டிதான் அவன். ஐசுவரியவானுக்கு வெகு ஆச்சரியமாயிற்று. உண்மையிலே இவன் தான் தேவன் பார்வையில் பெரிய ஐசுவரியவான் என்று அறிந்து அந்த விறகு வெட்டியின் அடக்கத்திற்குரிய ஏற்பாடுகளைச் செய்தார். அது முதல் அவர் தான் ஐசுவரியவான் என்கிற அகம்பாவம் நீங்கி கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டு மனந்திரும்பி தேவபக்தனும் மாறிவிட்டார்.

நீ இன்று மரித்தால் எங்கே இருப்பாய்? உன் தேவனை சந்திக்க ஆயத்தமா? உன்னைக் குறித்து நீ தேவனிடத்தில் கணக்கு ஒப்புவிக்க வேண்டும். ஆனபடியால் நீ மனந்திரும்பி கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசி. மரணத்தை விட்டு நீங்கி ஜீவனில் பிரவேசிப்பாயாக.

"நானே வழியும், சத்தியமும், ஜீவனுமாயிருக்கிறேன்"

— கர்த்தராகிய இயேசு கிறிஸ்து.

---

## சாட்சி

கர்த்தருடைய பரிசுத்த நாமத்திற்கு ஸ்தோத்திரம். என்னுடைய பெயர் ரவிஎன்ற மோசஸ். பாவ (மரண) இருளில் ஜீவித்த என்னையும் "மீட்கும்படியாக கிறிஸ்துவாகிய இயேசு உலகத்துக்கு வந்தார்" நான் சில பாவங்களுக்கு அடிமையாகி விடுதலை பெறமுடியாமலும், மன நிம்மதியில்லாமலும், சரீர மரணத்தை நோக்கி கொண்டு இருந்தேன். இந்துகோவில்கள், பல சபைகள், பல எழுப்புதல் கூட்டங்களுக்கு சென்றேன். விடுதலை இல்லை கடைசியில் புதிய எருசலேம் சபையைக் கண்டேன். இயேசு கிறிஸ்துவுக்கு துரோகியாய் ஜீவித்த எனக்கு "புதிய எருசலேம் சபை"-யின் மூலமாக விடுதலை கிடைத்தது.

"நம்முடைய மீறுதல்கள் நிமித்தம் அவர் காயப்பட்டார். நம்முடைய அக்கிரமங்கள் நிமித்தம் அவர் (இயேசு கிறிஸ்து) நொறுக்கப்பட்டார். நமக்கு சமாதானத்தை உண்டுபண்ணும் ஆக்கினை அவர்மேல் வந்தது; அவருடைய தழும்புகளால் நாம் குணமடைகிறோம்" (ஏசாயா 53:5). "இயேசு கிறிஸ்துவின் இரத்தம் சகல பாவங்களையும் நீக்கி நம்மை சுத்திகரிக்கும்." மனந் திரும்பி பாவ அறிக்கை செய்து, முழுகி ஞானஸ்நானம் பெற்றேன். பழைய பாவ கிரியைகள் ஒழிந்தன. என்னுடைய எல்லா பாவங்களிலிருந்தும் விடுதலையானேன். எல்லாம் புதியதாயின கிறிஸ்துவுக்குள் புது சிருஷ்டியானேன் (2 கொரி. 5:17). மரணத்தை நோக்கி இருந்த எனக்கு கர்த்தரால் உண்டாகும் நித்திய ஜீவன் கிடைத்தது (ரோ. 6:23). புதிய எருசலேம் சபையின் மூலமாக பரிசுத்த ஆவியின் வரத்தை பெற்றேன். திருச்சபையோடு அப்போஸ்தல உபதேசத்திலும் அந்நியோந்நியத்தி

ளும் அப்பம் பிட்குதலிலும் உறுதியாக காணப்படுகிறேன் (அப். 2:42).

ஒருவனை அவன் தாய் தேற்றுவது போல் நான் உங்களைத் தேற்றுவேன்; நீங்கள் எருசலேமிலே தேற்றப்படுவீர்கள் ஏசா. 66:13 என்ற வசனத்தின் பிரகாரம் என்னுடைய நெருக்கங்கள், சோதனைகள் இன்னும் அநேக காரியங்களில் திருச்சபையின் மூலமாக தேற்றப்பட்டு வருகிறேன்.

கடைசி நாட்களில் கர்த்தருடைய ஆலயமாகிய பர்வதம் பர்வதங்களின் கொடுமுடியில் ஸ்தாபிக்கப்பட்டு, மலைகளுக்கு மேலாக உயர்த்தப்படும். எல்லா ஜாதிகளும் அதற்கு ஓடி வருவார்கள் ஏனெனில் சீயோனிலிருந்து வேதமும் (புதிய) எருசலேமிலிருந்து வசனமும் வெளிப்படும் (ஏசா. 2:2,3). புதிய எருசலேம் திருச் சபையிலிருந்து தேவன் தமது வழிகளை போதிப்பதால் நித்திய மரணத்தை நோக்கியிருந்த நானும் நித்திய ஜீவ வழியை தெரிந்து கொண்டேன். இயேசு கிறிஸ்துவின் வசனத்தை புதிய எருசலேம் சபை மூலமாக அறிந்து கைக்கொண்டு வளர்ந்து வருகிறேன். அல்லேலூயா!

ஒரு மனிதன் பூரணபட வேத வசனம் முழுவதும் கைகொள்ளவேண்டும், ஜெபம் செய்தும் ஆவியில் வளர வேண்டும். திருச்சபையென்றால் வேதவசனம் அனைத்தையும் கைகொண்டு அதன்படியே போதிக்க வேண்டும். அது புதியஎருசலேம் திருச்சபையே என்று கண்டு கொண்டேன். புதிய எருசலேம் சபையில் வேத வசனம் அனைத்தும் கைக் கொள்ளப்படுகிறது.

தேவனுடைய மணவாட்டியாகிய திருச்சபை "புதிய எருசலேமே" என்றும், தேவனால் தெரிந்து கொள்ளப்பட்ட தலைமை மேய்ப்பருக்கு தேவன் அதிகாரத்தை அளித்து, உள்ளார் என்றும், திருச்சபைக்கு உள்ளாக இருக்கும் தேவ ஜனங்களுக்கு பாதுகாப்பும், இரட்சிப்பும் உண்டு. மற்றவர்கள் கிறிஸ்தவர்களாக இருந்தாலும் அவர்கள் வேத வசனத்தை கைக்கொண்டு நடக்காதபடியினால் சத்துருவினால் தாக்கப்பட்டு மேற்கொள்ளப்படுவார்கள் என்றும் அறிந்துகொண்டேன்.

சாத்தானால் புதிய எருசலேம் சபையை மேற்கொள்ள முடியாது. ஏனென்றால் இது தேவனால் அஸ்திபாரமிடப்பட்ட கன்மலை. நீங்களும் இரண்டாம் மரணமாகிய அக்கினியும் கந்தகமும் எரிகிற வேதனைக் கடலிலிருந்து தப்பித்துக் கொள்ள "புதிய எருசலேம் சபை" யை தேடி சேர்ந்து கொண்டு கடைசி வரை நிலைத்து நில்லுங்கள். இரட்சிக்கப்படுவீர்கள். அப்பொழுது நாம் அனைவரும் தேவனுடைய வருகையில் திருச்சபையோடு எடுத்துக் கொள்ளப்படுவோம் என தெரிவித்து கிறிஸ்துவுக்கு மகிமையாக சாட்சியை முடிக்கிறேன்.

கிறிஸ்துவுக்குள்,
சகோ. E. மோசஸ்,
"புதிய எருசலேம் சபை"
பள்ளிகொண்டா-கிளை.

"உங்களுக்கு உண்டான அழைப்பினாலே நீங்கள் ஒரே நம்பிக்கைக்கு அழைக்கப்பட்டதுபோல ஒரே சரீரமும் (சபையும்) ஒரே ஆவியும் உண்டு" எபே. 4:4.

# மனிதனும், பாவமும்

## மனித இயல்

மனிதனது இயல்பைக் கண்டுபிடிக்கும் பணியில் இறங்கினால் ஒரே குழப்பமாகவே இருக்கும். ஏனெனில் மனிதனைப்பற்றி முரண்பாடான கருத்துக்களும், கொள்கைகளும் மலிந்து காணப்படும் காலத்தில் நாம் இருக்கிறோம். பல தத்துவ மேதைகள், இறையியல் வல்லுனர்கள், எழுத்தாளர்கள் கொண்டுள்ள எண்ணங்களைக் கவனித்தால் மனித இயல்பை விளக்குவதில் அந்த எல்லா எழுத்தாளர்களும் கருத்து வேறுபாடு கொண்டுள்ளனர். மனிதனைப் பற்றிப் புரியாத புதிரான உண்மைகளை நாமும் கொஞ்சம் தெரிந்து கொள்வோமே.

1. மனிதன் இயற்கையின் ஒரு பாகமாய் அமைந்துள்ளான். அவன் படைப்புத் தொகுதி முழுவதுக்கும் பொதுவான காரண காரியம் என்ற ஒழுங்குட்பட்டு 'பொருட்கள்', 'சாமான்கள்' என்ற அமைப்புக்குள் வலுவாக இணைக்கப்பட்டுள்ளான் என்றும், அவன், தான் இயற்கையின் ஒரு பாகமென்பதற்கு மேற்பட்டவன் என்றும் காரண, காரிய அமைப்புக்கு மேலாக உயர்த்தப்பட்டவன், சுயாதீனமுள்ளவன், 'நான்' என்னும் நிலையுடையவன் எனக் கருதும் பரம இரகசியமான உணர்ச்சி உடையவனுயிருக்கிறான்.

2. அரும் பெரும் சாதனைகளை அடைய வேண்டுமென்ற இடைவிடாத ஆவல், தன்னையே கடந்து நிற்க வேண்டுமென்ற அவா, எல்லையற்றதொன்றுக்கு நேரான வேட்கை அவனுக்குள்ளே இருக்கின்றது.

தொழுகையை நாடும் ஒரு பொதுவான தூண்டுதலும், எவரையேனும், எதையேனும் வழிபட வேண்டுமென்ற ஆர்வம் மனிதனுக்குள் உள்ளது. இந்த ஆர்வம் மனிதனை விட உயர்வான அல்லது பொருளோடு அவனுக்கு உள்ள உறவைக் காட்டிக் கொடுக்கின்றது.

4. இறுதியாக மனிதனுக்குள்ளே அக அமைதியின்மையின் ஒரு பொதுவான அனுபவம் இருப்பது. இருக்க வேண்டியது என்ற இரண்டினுக்குமிடையேயுள்ளதொரு போராட்ட உணர்ச்சி உள்ளது. ஆழ்ந்து ஆராய்ந்தால் அப்போராட்டம் அவன் விரும்புகிறதற்கும் விரும்ப வேண்டியதற்கும் இடையேயுள்ளதென்பது தெளிவாய்ப் புலப்படும்.

மனிதனது வாழ்க்கையின் அடிப்படையிலேயே ஒரு பரம இரகசியம் மறைந்து கிடப்பதாக தோன்றுகின்றது. மனிதன் உலக முழுப்படைப்புத் தொகுதியின் ஒரு பகுதி அதாவது உலகதுக்குள்ளேயே உள்ளதொரு உயிருடையப் பிராணியாய் விளக்கற்கரிய ஒரு புதிராயிருக்கிறான். மேலே குறிப்பிட்டுள்ள அவனது தன்மையின் புதிர்களான உண்மைகள் தங்களை விளக்குவதற்கு இவ்வுலகத்துக்கு வெளியே அல்லது மேலே சுட்டிக்காட்டுகின்றன. இப்புதிருக்கு விசுவாசத்தின் மூலமாக மட்டுமே கண்டு கொள்ளக் கூடியதாய், இயற்கையைக் கடந்து நிற்கும் உண்மையில் தான் விடை காண இயலும். அப்பரம இரகசியத்தை அறிய மனு குலத்தின் முயற்சிகள் குழப்பத்தைதான் கூட்டியுள்ளன. எப்படியெனில் அவற்றின் விளைவாக, மனிதன், அவனது துவக்கம், தன்மை, ஊழ் ஆகியவற்றைப் பற்றிமுரண்பாடான கொள்கைகளும் விளக்கங்களும் திரள் திரளாய் முளைத்தெழும்பி உள்ளன என்பதாம்.

எவ்விதத்திலாவது மனிதனைப் பற்றிய குழப்பங்கள் நிறைந்த முரண்பாடான விளக்கங்களைக் கூறுபடுத்துவதில் அல்லது வகைப்படுத்துவதில் மனிதனது ஆள்தத்துவத்தைப் பற்றிய பொதுவான உடல், ஆன்மா என்ற விரிவுகளைப் பயன்படுத்துவது நல்லது. அப்பொழுது நமக்கு இரு பெரும் கருத்துக் குவியல்கள் கிடைக்கும். அவற்றில் ஒன்று மனிதனது ஆவிக்குரிய பகுதியில், அவனது பிரதான தன்மையையும், மற்றது அவனது உடலில் பிரதான தன்மையையும் காண்கின்றன. முதலில் கூறியது பிளாட்டோ முதற்கொண்டு ஹேகல் வரையுள்ள மேற்கத்திய தத்துவக் கருத்துக் கொள்கையோடும் கிழக்கத்திய அத்வைத வேதாந்த கொள்கையோடும் மிக நெருங்கிய தொடர்புடையது.

பொதுவாக மனிதனுடைய புத்திக் கூர்மையும், பகுத்தறிவுத் திறனுமே உலகிலுள்ள ஏனைய பிராணிகளின்று அவனை பேதப்படுத்துகின்றது என்பதே மனிதனது சிறப்பு அம்சம். இந்த தத்துவக் கொள்கையில் கடவுள் தூய்மையான மெய் அறிவாகக் கருதப்படுவதினால், மனிதனும் பகுத்தறிவு பிராணியாக ஏறத்தாழ கடவுளோடு ஒப்பிடப்படுகிறான். ஆனாலும் இக்கருத்து மனிதனுடைய அறிவின்படி அவனது உடல் வசதிக் குறைவானதோர் அம்சமாக அமைகின்றது.

கிரேக்க தத்துவக் கொள்கையில் உடல் மனிதனது ஆவிக்குரிய பகுதிக்குத் தடையானதென்றும், பாரமானதென்றும், கருதப்பட்டு வந்தது. 'உடல் ஆவியின் சிறைக் கூடம்' அல்லது 'கல்லறை' இந்தியாவிலுள்ள அத்வைத கொள்கையில் உடல் பொய்த் தோற்றமான அல்லது உண்மையற்ற மாயா உலகத்தைச் சேர்ந்தது.

மற்றக் கருத்துகள் உலகாயுதத் தத்துவத்தைச் சார்ந்தது. அது ஆன்மா இருப்பதையே மறுக்கின்றது. அதன்படி மனிதன் இயற்கையோடு மிக நெருங்கிய தொடர்புடையவன் என்பதாம். ஆனால் டார்வினுடைய புரட்சிகரமான கோட்பாடுகளுக்குப் பின்னர்தான் மனிதனை விவேகமுள்ள விலங்கு [மிருகம்] என மதிக்கின்ற இயற்கைக் கொள்கை வளரலாயிற்று. மனிதனுடைய புத்தி யாதி மனோ தத்துவங்கள் மூளையின் 'வேலைகள்' (Function of the Brain) எனவிளக்கப்படுகின்றன.

இதையல்லாமல் மனிதனைப் பற்றிய கருத்துக்களைக் கூறுபடுத்தும் மற்றொரு முறையும் உள்ளது.

(தொடரும்)

"ஆதலால் நானல்ல எனக்குள் வாசமாயிருக்கிற பாவமே அப்படி செய்கிறது" ரோ. 7:17.

# பெண்

மனிதனே புதிர். அதில் பெண்ணும் ஒரு பகுதி. பெண் ஆணுக்கு அடிமையல்ல சமமானவர்களே. ஆணும் பெண்ணும் சேர்ந்துதான் மனிதன். ஆண் பெண்ணினால் நிறைவடைகிறான். ஆணின் மேல் பெண்ணில்லை. பெண்ணின்மேல்

ஆணில்லை. இறைவனின்றேல் எதுவுமில்லை. இறைவனின்றேல் எவருமிலர் (ஆதி. 1:26).

பெண்களைப் பற்றி மானத சாஸ்திரம் சொல்வதென்னவென்பதை எல்லோரும் அறிந்து கொள்வது, விசேஷமாக ஸ்திரீகள் அறிந்து கொள்வது அவசியம். பெண்களுக்கு கல்வியும், தேவ பக்தியும் போதிக்க வேண்டும். ஒரு காலத்தில் பெண் கல்வி மறுக்கப்பட்டது. ஆனால் இப்பொழுது அப்படியல்ல. பெண்களுக்கு உண்மையான கல்வியும் போதிக்கப்பட வேண்டும். இப்பொழுது பள்ளிகளில் கற்பிக்கப்படுகிற கல்வியானது உத்தியோகத்திற்காகக் கற்பிக்கப்படுகிற கல்வியாக ஏட்டுச் சுரைக்காயாக இருக்கிறது இது கறிக்குதவாது.

"கற்க கசடறக் கற்பவைக் - கற்றபின்
நிற்க அதற்குத் தக"

என்பது திருவள்ளுவரின் வாக்கு. எந்தவித கல்வியையும் தீரப் படிப்பது என்று சிலர் இக் குறளுக்கு உரை சொல்லித் தீர்வர்.

ஆனால் இந்த குறளுடைய அர்த்தம் என்னவெனில் கல்வி என்பது உள்ளத்தின் கசடு அற அதாவது உள்ளத்தின் மாசுகளான லோப, மோக, மத மாச்சரிய ஆகிய தீய குணங்கள் உள்ளத்திலிருந்து மனிதனை மாசுப்படுத்துகிறது. அது அற நீங்க படி அதுவே கல்வி. பின் அதன்படி ஒழுகு (வாழு) என்பதேயாகும். இந்த உண்மையான கல்வியை மனிதன் படிக்க வேண்டும். தொடர்ந்து உலகத்திருக்கையில் கற்றுக் கொள்ள வேண்டும் அவனே கல்விமான், உயர்வுடையோன், உயர்வுடையான் ஆகும். இது எல்லாப் பெண்களுக்கும் விசேஷமாய் இத்தேசத்துப் பெண்களுக்கும் அவசியம். அக்கல்வி இல்லாததினால் இத்தேசத்தில் அநர்த்த நாசம் உண்டாகிக் கொண்டிருக்கிறது. இதனால் பெண்களுக்கும் சமாதானமில்லை, அவர்களால் புருஷர்களுக்கும் சமாதானமில்லை. இந்நிலை மாற இறைவனை பிரார்த்திப்போமாக.

பிள்ளைகளை நல்லவர்களாக்குவதும் தீயவர்களாக்குவதும் தாய் தந்தையர்களுடைய சுவாதீனத்திலிருப்பதால் பிள்ளைகளுடைய துஷ்டத்தனத்திற்கு பெற்றோர்களே முக்கிய காரண கர்த்தாக்களாகவும் உத்திரவாதிகளாயுமிருக்கிறார்கள். இப்படிப்பட்ட தாய் தந்தையர்களுக்கு ராஜ தண்டனையில்லாவிட்டாலும் தெய்வ தண்டனை அவர்களை விடாது. ஆண் பிள்ளையாவது எப்போதும் தாய் தந்தையர் வீட்டில் இருக்கத்தக்கவர்கள். பெண் பிள்ளைகள் வேறொருவன் வீட்டிற்குப் போக வேண்டியவர்களானதால் அவர்களை உத்தமிகளாக்கி அனுப்புவது அவர்களுக்கே நன்மையாகவும், அப்படியில்லாவிட்டால் அவர்களுக்கே எப்போதும் துன்பமாகவுமிருக்குமே.

நற்குணங்களை ஸ்திரீகளுக்குப் போதியாமல் அவர்களை புருஷன் வீட்டிற்கு அனுப்புவது நீந்தத்தெரியாதவனைக் கடலில் பிடித்து தள்ளுவது போலும், யுத்த சாஸ்திரந் தெரியாதவனை போர் முனையில் விடுவது போலும், குதிரையேறத் தெரியாதவனை கடிவாளமில்லாத துஷ்டக் குதிரை மேலேற்றி துரத்துவது போலுமிருக்கின்றது.

[தொடரும்]

"ஸ்திரீயானவள் எல்லாவற்றிலும் அடக்கமுடையவளாயிருக்க வேண்டும்"
1 தீமோ. 2:11.

"தேவனைத் தேடு"
"SEEK GOD"

Regd. No. 040088/84
Postal Regd. No. MH BY NE-84/93
Tamil Monthly Magazine

"நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினாலே நமக்கு ஜெயங் கொடுக்கிற தேவனுக்கு ஸ்தோத்திரம்" ( 1 கொரி. 15:57).

## புதிய எருசலேம் சபையின் 26-வது ஆண்டு நிறைவு விழா (8.8.1968 - 8.8.1994).

புதிய எருசலேம் சபையின் 26-வது ஆண்டு நிறைவு விழா 8.8.1994 திங்கள் கிழமையன்று பம்பாயிலுள்ள தலைமை சபையிலும், எல்லா கிளை சபைகளிலும் மகிழ்ச்சியாய் கொண்டாடப்பட்டது.

இம்மட்டும் ஒரே சரீரமாய் தம்முடைய நாமத்திற்குப் புகழ்ச்சியாயிருக்கும்படி புதிய எருசலேம் சபையை எழுப்பி, ஒரே சரீரமாய் நிலை நிறுத்தியிருக்கிற பிதாவாகிய தேவனுக்கு ஸ்தோத்திரம்! (எபே. 1:5), கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவுக்கு ஸ்தோத்திரம்! (எபே. 1:11); பரிசுத்த ஆவியானவருக்கு ஸ்தோத்திரம்! (எபே. 1:14). அதற்காய் உழைத்த; தியாகம் செய்த எல்லா பரிசுத்தவான்களுக்கும், தேவனுடைய பிள்ளைகளுக்கும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தினால் வாழ்த்துக்கள்.

**Chief Pastor N. LAZAR**

### அறிவிப்புகள்

1. முழு இரவு விழிப்பு ஜெபம்
   20 [செவ்வாய்] செப்டம்பர் 1994
   19 [புதன்] அக்டோபர் 1994
   18 [வெள்ளி] நவம்பர் 1994
2. புதிய எருசலேம் செய்தி பத்திரிகை
   ஆண்டு சந்தா Rs. 15-00
   வெளிநாடு Rs. 100-00

   அனுப்ப வேண்டிய முகவரி :
   CHIEF PASTOR N. LAZAR
   "NEW JERUSALEM CHURCH"
   CHURCH LANE, TILAK NAGAR,
   DARGA ROAD, BHANDUP,
   BOMBAY-400 078 INDIA.
3. மணி ஆர்டர் கூப்பனில் உங்கள் சந்தா [எண்] நம்பரை குறிப்பிடவும். பழைய சந்தாதாரா அல்லது புதிய சந்தாதாரா என்பதையும் குறிப்பிடவும்.
4. பணம் அனுப்புகிறவர்கள் சந்தாவா அல்லது நன்கொடையா என்பதை தெளிவாகக் குறிப்பிடவும்.
5. 'புதிய எருசலேம் செய்தி' பத்திரிகை வேண்டுவோர் ரூ. 15-(பதினைந்து) சந்தா தொகையுடன் தங்கள் விலாசத்தை தெளிவாக கொட்டை எழுத்துக்களில் [Capital Letter] எழுதி பத்திரிகையை பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

Edited, Printed and Published by: Chief Pastor N. LAZAR, New Jerusalem Church, Church Lane, Tilak Nagar, Darga Road, Bhandup, Bombay-400 078. Printed at: New Jerusalem Press, Tilak Nagar, Bhandup, Bombay-400 078.

# புதிய எருசலேம் செய்தி

## PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 124 - OCT. '94

"புதிய எருசலேம் சபை"

" வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ நடுராத்திரியிலோ சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவார்(ர்)என்று நீங்கள் அறியீர்கள் விழித்திருங்கள் உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன் விழித்திருங்கள் "

மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY. INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமைப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்:

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10:40-43).

CHIEF PASTOR N. LAZAR

## இதழின் உள்ளே...

# ஆசிரியர் உரை

கிறிஸ்துவுக்குள் அன்புள்ள தேவனுடைய பிள்ளைகளுக்கு, கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் நாமத்தில் வாழ்த்துக்கள் பல!

வழி தெரியாமல் அலைகிறவர்களுக்கு வழிகாட்டி அவசியம். வழிகாட்டி வழி தெரியாதவனாயிருந்தால், சரியில்லையென்றால்; அவனைப் பின்செல்லுகிறவர்களும் இடறிவிழுவார்கள். போக வேண்டிய இடத்திற்குப் போக வேண்டிய நேரத்தில் போய்ச் சேர்ந்து கொள்ள மாட்டார்கள். ராஜபாதையை விட்டு வழி விலகிச் சென்று விட்டால், எவ்வளவு நேரம் செல்லுகிறார்களோ; அவ்வளவு தூரம் ராஜபாதையை விட்டு தூரப்பட்டு போவார்கள். பின்பு ராஜபாதைக்கு வந்து சேருவது கூடாதகாரியமாகிவிடும். தேவனை விசாரித்து தேடாதவர்களையும், மெய் இறைவனை விட்டு பின்வாங்குகிறவர்களையும் தேவன் சங்காரம் பண்ணுவது எவ்வளவு நிச்சயமோ [செப். 1:6]; அவ்வாறே வழிகளிலே நின்று, பூர்வ பாதைகள் எவையென்று கேட்டு விசாரித்து,நல்ல வழியில் நடக்காதவர்களுக்கும்; இளைப்பாறுதல் இன்மையும் வீழ்ச்சியும் உண்டாகும். [எரே. 6:16,21]. ஆகையால் தேவ ஜனங்கள் ஆபிரகாமின் அடிச்சுவடில் நடந்து விசுவாச மார்க்கத்தாராய் இறைவனுடைய சித்தத்தை செய்வீர்களாக!

கிறிஸ்துவுக்குள்,

[CHIEF PASTOR N. LAZAR]

# திருச்சபை

(தொடர்ச்சி)

திருச்சபையைப் பற்றி புதிய ஏற்பாட்டில் பல்வேறு உருவகங்கள் கையாடப் பட்டுள்ளன. அவைகள் யாவும் வெவ்வேறு விதங்களில் திருச்சபையின் கூட்டுத் தன்மையையும், ஒற்றுமையையும் வெளிப்படுத்துகின்றன. கடவுளின் ஆலயம் (1கொரி. 3:16; 2கொரி. 6:16; எபே 2:21). இவ்வுருவகம் திருச்சபையின் வாழ்வைப் பற்றிய கருத்தைக் கொடுக்காவிடினும் அது ஐக்கியத்தைப்பற்றி அறிவிக்கிறது.

ஒலிவமரத்தைப் பற்றிய உருவகம் ரோமர் 11:17 - ல் கிறிஸ்து அடிமரம் என்றும், விசுவாசிகள் கிளைகளுமாய் இருக்கிறார்கள் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

இயேசு தாமே உரைக்கும் போது: நான் திராட்சை செடி நீங்கள் கொடிகள் என்றார் (யோவா. 15:1-6). இவ்விரு உருவகங்களும் திருச்சபையின் அங்க வாழ்க்கையையும் வற்புறுத்துகிறது.

உடல், (சரீரம்) என்ற உருவகத்தில் இவ்வம்சம் மிகத் தெளிவாகக் காணப்படுகிறது - ரோமர் 12:5; 1கொரி 10:17,12,13,27; எபே 1:23; 2:16; 3:6; 4:4,12,16; 5:23,30; கொலோ 1:28; 2:14; 3:15 இதில் கிறிஸ்து உடலின் தலை, விசுவாசிகள் சரீரத்தின் அங்கங்கள். இத்தியாதி உயிரியல் உருவகங்கள் கிறிஸ்து தாமே திருச்சபையின் ஒரு பாகமாய் அமைகிறதைப் பாருங்கள். அடிமரம் முழுமரத்தின் பாகமாகவும், தலை உடலின் பாகமாகவும் இருப்பதைப் போன்று கிறிஸ்து தாது திருச்சபையின் பாகமாய் இருக்கின்றார். இவ்வுருவகங்களில் திருச்சபை விசுவாசிகளைக் கொண்டதொரு வெறும் சங்கமெனமட்டுமென்று எண்ணுவது எவ்வளவு தவறு என்பதை விளக்குகிறது. திருச்சபை கிறிஸ்துவையும், விசுவாசிகளையும் கொண்டதோர் அங்க ஐக்கியம், அல்லது கிறிஸ்து தாமே தம்மில் விசுவாசம் கொள்வோர்கள் யாவரையும் தம்மோடு சேர்த்து திருச்சபையாக்கியுள்ளார் என்பதாம்.

அடிமரம் தான் கிளைகளை அதரிக்கிறது திருச்சபை, விசுவாசிகளுக்கு முன்னால் உள்ளதா? அன்றி விசுவாசிகள் திருச்சபைக்கு முந்தி உளரா? என்று கேள்வி கேட்டால் - திருச்சபையே முந்தி உள்ளது என்பதே உண்மை. கிறிஸ்துவுக்கும் விசுவாசிகளுக்கும் உள்ள அங்க ஐக்கியத்தை உருவகங்கள் மிகவும் வலியுறுத்துவதை நாம் மறந்து விடக் கூடாது. கிறிஸ்தவ வாழ்க்கை ஒரு கூட்டு வாழ்க்கையாகும். ஒரு மரத்தின் கிளை அம்மரத்திலும் உடலின் ஓர் உறுப்பு அவ்வுடலிலும் கொள்ளும் ஜீவதார சம்பந்தத்திலும், அச்சம்பந்தம் மூலமாயும் தான் உயிர்வாழ முடியும்.

அதே போன்று விசுவாசி ஒருவன திருச்சபையின் ஐக்கியத்தில் நிலைத்திருந்தால் மட்டுமே அவன் நிதானமும், செம்மையும், முழுமையுமான கிறிஸ்தவ வாழ்க்கை நடத்த முடியும். அவ்வாறே உடலில் உயிர் செம்மையாய் இராவிடில் அதின் குறை தனித் தனி உறுப்பினர் மீதும் தாவிவிடும். அனபடியால் புதிய ஏற்பாட்டிலே திருச்சபையின் இவ்வம்சங்கள் இன்னும் அதிக தெளிவாக தேவனுடைய புதிய இஸ்ரவேலர்கள் என்றும், கடவுளின் ஜனம் என்ற உருவகத்தால் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன - (கலா. 6:16; 3:7; (எபே. 2:19; தீத். 2:15; 1 பேது. 2:9; தீத் 2:14) இந்த வேத பாகங்களில் ஒரு ஜனத்தின் வாழ்க்கையிலுள்ள கூட்டு அம்சத்தையே பார்க்கிறோம். ஒரு ஜனத்தின் ஆவல்கள், நோக்கங்கள், முயற்சிகள் இலட்சியங்கள் - சாதனைகள் தனி மனிதன மீதும் தீர்மானமான விளைவுகளைக்

கொண்டு வருகின்றன. அதைப் போன்று தனி மனிதர்களுடைய மேற்கண்ட காரியங்கள் முழு ஜனத்தையும் பாதிக்கும். ஆனால் ஒரு தனி மனிதனின் விதி முழு ஜனத்தின் விதியாகும் எனக் கூறமுடியாது. ஜனத்தின் விதி அதின் உறுப்பினர்கள் ஒவ்வொருவரையும் நிச்சயமாகப் பாதிக்கும். திருச்சபையின் வாழ்க்கையிலுள்ள கூட்டு அம்சத்தையும் அதின் பயனாக ஏற்படும் கூட்டு இரட்சிப்பையுமே குறிப்பிடுகிறது.

தனி மனிதனுடைய இரட்சிப்பு முக்கியமானது தான். அதைக் காட்டிலும் கிறிஸ்து திருச்சபைக்காகவே தம்மை ஒப்புக் கொடுத்தார். அப்படியொரு ஜன சமுதாயமாய் ஒரு சபையை தமக்கு முன் நிறுத்தவே தம்மை சபைக்காய் ஒப்புக் கொடுத்தார் (எபே. 5:23-27; தீத். 2:14; 1பேது. 2:9,5; வெளி. 1:5,6; கலா 1:4).

இன்றைய பிரசங்கிகள் பிரசங்கிக்கிற பிரகாரமாய், நீங்கள் எங்கேயும் இருங்கள், உங்கள் வீட்டில் இருந்து கொண்டே கிறிஸ்துவை நோக்கி பாவ அறிக்கை செய்து, ஜெபம் பண்ணினால் போதும்; எந்த சபைக்கும் போக வேண்டாம், இரட்சிக்கப்பட சபை தேவையில்லை, அங்கங்கு இருந்து ஜெபித்தால் இரட்சிக்கப்படுவீர்கள். இயேசுவை விசுவாசியுங்கள் போதும் என்கிறார்கள். மாறுபாடான வஞ்சக உபதேசம் அல்லவா? இந்த பிரசங்கிகளுக்கோ இரட்சிப்பு என்றால் என்ன என்று தெரியாது. இவர்கள் பிரசங்கத்தைக் கேட்டு ஒரு பிராமணர் இயேசுவை விசுவாசிக்கிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள். அவர் மனந்திரும்பாமல், (எசே. 8:30-32; 1தெச. 1:9; அப். 3:30; 1பேது. 1:18 19) இயேசுவை அறிக்கையிடாமல் (அப். 8:37; மத். 10:32) ஞானஸ்நானம் பெறாமல் (அப். 2:38 8:37). தேவனைத் தொழுது கொள்ளாமல் (ரோமர் 10:12,13). இரட்சிக்கப்பட முடியுமா? திருவிருந்தில் பங்கு பெறாமல் கிறிஸ்துவின் சரீரத்தின் அங்கமாக இருக்கிறார் என்று சொல்ல முடியுமா? (1கொரி 10:16,17). அவர் கிறிஸ்தவனாக திருச்சபையினண்டை வர வேண்டுமல்லவா! (கலா. 3:27). அவர் தமது இந்து சமுதாயத்தை விட்டு வெளியே திருமுழுக்கு பெறாமல் எப்படி கிறிஸ்துவின் அங்கமாக முடியும் ஆகவே திருச்சபை, நற்செய்தியின் ஒரு முக்கிய பாகமாகும். ஆகையால் "Come, join My Church" என்று கிறிஸ்து சொல்லுகிறார். அதையே நாங்கள் அறிவிக்கிறோம். வேதமும் அப்படியே சொல்லுகிறது.

மூலைக்கல்லோடும், அஸ்திபாரக் கல்லோடும் சேர்கிறதே, இணைவதே ஆலயம். தேவனுடைய வீடு. திருச்சபை. அந்த பணியை நடப்பிக்கின்றவர் தூய ஆவியானவர். தூய ஆவியானவருடைய சத்தத்துக்குச் செவி கொடுக்கிற எல்லாரும் ஞானஸ்நானம் பெற்று திருச்சபையின் அங்கமாய் சேர்கிறார்கள்.

**திருச்சபையின் ஒருமைத்தன்மை.**

கர்த்தராகிய இயேசு கிறிஸ்து இந்தக் கல்லின் மேல் என் சபையைக் கட்டுவேன் [சபைகளை அல்ல] பாதாளத்தின் வாசல்கள் அதை மேற் கொள்வதில்லை என்றார் (மத். 16:18). மனந்திரும்புதலும் பாவ மன்னிப்பும் எருசலேம் தொடங்கி சகல தேசத்தாருக்கும் அவருடைய நாமத்தினால் பிரசங்கிக்கப் படவும் வேண்டும் என்றார். எருசலேமில் என்ன தொடங்கப்பட்டதோ அது முழு உலகிலும் பரப்பப் பட வேண்டும் (லூக். 24:47-49; மாற். 16: 15,16). என்று இயேசு வானவர் கட்டளையிட்டார். அன்று இயேசு கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டவர்கள் திருச்சபையாய் சேர்ந்தவர்கள்.

அவர்கள் அப்போஸ்தலருடைய உபதேசத்தில் உறுதியாய் தரித்திருந்தார்கள். (அப். 2:42). அப்போஸ்தலர் நடபடிகளில் ஆதிசபையின் 30 வருட சரித்திரம் குறி

பிடப்பட்டிருக்கிறது. அதில் எருசலேமிலும், யூதேயாவிலும், சமாரியாவிலும் இன்னும் பல நாடுகளிலும் சபைகள் ஸ்தாபிக்கப்பட்டன. அவைகளெல்லாம் எப்பொழுதும் ஒரே திருச்சரீரமாக கிறிஸ்துவின் ஒரே சபையாகவே விளங்கிற்று. என்று குறிப்பிடப்பட்டுள்ளது. உபதேச குழப்பமோ, வேறு சந்தேகமோ உண்டானபோது அப்போஸ்தலர்களும் மூப்பர்களும் சம்பந்தப்பட்டவர்கள் எல்லோரும் எருசலேமில் கூடி தேவ சமூகத்தில் முடிவெடுத்து அந்த முடிவையே எங்கும் பிரசங்கித்தார்கள் (அப். 16:4,5).

எருசலேம் மக்கள் பெருக்கமுள்ள பட்டணம். தொடக்கத்தில் மூவாயிரம் பேர் சபையில் சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள் (அப். 2:41). பின்னர் அவர்களுடைய தொகை ஐயாயிரமாயிற்று (அப். 4:4). பின்பு ஆசாரியர்களில் ஒரு பெரிய கூட்டம் விசுவாசத்துக்கு கீழ்ப்படிந்து திருச்சபையோடு சேர்ந்தது (அப். 6:7). என்றாலும் அது எருசலேமில் உள்ள திருச்சபையாகவே இருந்தது. எருசலேமில் உள்ள திருச்சபைகளாக இருக்க வில்லை. அந்த பெரிய நகரத்தில் விசுவாசிகளின் திருக்கூட்டங்கள் பல இருந்திருக்கலாம் என்றாலும் அது கடவுளுடைய பார்வையிலும் மனிதனுடைய பார்வையிலும் ஒரே ஒரு திருச்சபையாகவே இருந்தது.

சவுல் வீடுகள் தோறும் நுழைந்து புருஷரையும் ஸ்திரீகளையும் இழுத்துக் கொண்டு போய் காவலில் போடுவித்து சபையைப் பாழாக்கிக் கொண்டிருந்தான். (அப் 8:3) சீரியாவிலுள்ள அந்தியோகியா பட்டணத்திலுள்ள சபை (அப் 13:1) என்றும், எபேசுவிலுள்ள சபையின் மூப்பர்களை அப்போஸ்தலனாகிய பவுல் மிலேத்துவுக்கு வரவழைத்து தேவன் தம் சுயரத்தத்தினாலே சம்பாதித்த சபையை மேய்ப்பதற்கு பரிசுத்தாவி உங்களை கண்காணிகளாக வைத்த மந்தை முழுவதும் (அப் 20:28) என்றும், தெசலோனிக்கேயர் சபைக்கு எழுதும் போது தெசலோனிக்கேயர் சபைக்கு எழுதுவதாவது என்றே எழுதினார் (1தெச 1:1). கொரிந்தியருக்கு எழுதும் போதும் இந்த ஒருமையிலேயே எழுதுகிறார் (1கொரி 1:2).

ஒரு நாட்டில், பட்டணத்தில் பல திருக் கூட்டங்கள் இருந்திருக்கலாம். அந்த சபைகளுக்கென்று எழுதும் போது விசுவாசத்திலும் [கொள்கை], நடைமுறையிலும் [நடத்திப்பு] வெவ்வேறான இயல்புடைய திருச்சபைகளை குறிப்பிட்டு அப்போஸ்தலன் எழுதவில்லை. ஒரே முழு சபைக்கே எழுதினார். நாம் எல்லோரும் ஒரே நம்பிக்கைக்கு அழைக்கப்பட்டது போல ஒரே சரீரமும் உண்டு (எபே 4:4) என்று தெளிவாய் சொல்லியிருக்கிறார். அந்த சரீரமான சபைக்குத் தான் [சபைகளுக்கு அல்ல] இயேசு கிறிஸ்துவை தேவன் எல்லாவற்றிலும் மேலான தலையாக தந்தருளினார் (எபே. 1:23; கொலோ. 1:18,24; ரோமர் 12:5; 1 கொரி 12:13,27,28). இயேசு கிறிஸ்துவின் நோக்கமும், பிரதான ஆசாரிய மன்றாட்டும் அப்போஸ்தலர்களும் விசுவாசிகளும் எல்லோரும் ஒன்றாய் ஒரே ஐக்கியமாய் ஒரே சபையாக இருக்க வேண்டும் என்று இருப்பதால் (யோவா 17:20-23). இந்நாட்களில் சாத்தான் அதற்கு விரோதமாய் கங்கணம் கட்டிக் கொண்டு தேவ ஜனங்கள் பிரிந்து பிரிந்து போய் உலகம் இவர்களைப் பார்த்து இடறலடையும் படியும், பேதமையுள்ள தேவ ஜனங்கள் வஞ்சிக்கப் படும் படியும், சத்தியத்தை விட்டு விலகுகிறவர்களைக் கொண்டு அற்புத அடையாளங்களையும் துர் உபதேசங்களையும்; ஊழியம் என்ற பெயரில் பல தந்திரமான காரியங்களையும் நடப்பித்து, தன் குறிக்கோள் நிறைவேறிவருகிறதையெண்ணி சாத்தான் கொக்கரிக்கிறான்.

ஆனபடியால் தான் இயேசுவோடும் பிதாவாகிய தேவனோடும் ஐக்கியமாயிருக்கிற அப்போஸ்தலர்கள் நீங்களும் எங்களோடே ஐக்கியமுள்ளவர்களாகும் படி இதை

உங்களுக்கு அறிவிக்கிறோம் என்றார்கள் (1யோவா 1:1-3). அப்போஸ்தலர் தீர்க்கதரிசிகளோடு ஐக்கியமாயிருக்கிற சபைக்கே இயேசு கிறிஸ்து தலை.

[தொடரும்]

"எப்படியெனில், சரீரம் ஒன்று, அதற்கு அவயவங்கள் அநேகம்; ஒரே சரீரத்தின் அவயவங்களெல்லாம் அநேகமாயிருந்தும், சரீரம் ஒன்றாகவே இருக்கிறது. அந்தப் பிரகாரமே கிறிஸ்துவும் இருக்கிறார்." [1கொரி 12:12]

# வேத பாடம் [தொடர்ச்சி]

## எண்ணாகமம்

எண்ணாகமம் 19-ம் அதிகாரம்

எண் 19:1-9

***சிவப்பான கிடாரியின் சாம்பல்:-***

பிரேதத்தை தொட்டவனோ, மனித எலும்புகளைத் தொட்டவனோ, தீட்டுள்ள பொருட்கள் எதையும் தொட்டவனோ, அல்லது செத்துப்போன பொருட்கள் தன்மேலோ, பாத்திரங்கள் மேலோ, ஆகாரத்தின் மேலோ விழுந்தாலும் இந்த தீட்டுக் கழிக்கும் ஜலத்தை அவர்கள் மேல் தெளிக்க வேண்டும். சுத்தமான ஜலமெடுத்து அதிலே இந்த சாம்பலை போட்டு; ஆசாரியன் அவர்கள் மேல் தெளிக்கும் போது அவர்கள் தீட்டு நீங்கி சுத்திகரிக்கப்படுவார்கள். பிரேதத்தை தொட்டவன் மூன்றாம் நாளும், ஏழாம் நாளும் அவ்விதமாய்த் தன்னை சுத்திகரித்துக் கொள்ள வேண்டும்.

இந்தக் கட்டளை இஸ்ரவேல் புத்திரருக்கும், அவர்களிடத்தில் தங்குகிற அந்நியனுக்கும் என்று கர்த்தர் கட்டளையிட்டார். [வசனம்-10] அது பாவத்தைப் பரிகரிக்கும். (வசனம்-9.) வெள்ளாட்டுக்கடா, கிடாரியின் சாம்பல் பாவத்தைப் பரிகரிக்குமானால், நித்திய ஆவியினாலே தம்மைத் தாமே பழுதற்ற பலியாக ஒப்புக்கொடுத்த இயேசு கிறிஸ்துவினுடைய இரத்தம் நம்முடைய மனச்சாட்சியை சுத்திகரிப்பது எவ்வளவு நிச்சயமென்று எபி 9:12-14 இல் எழுதப்பட்டிருக்கிறது. இந்தக் காரியங்கள் ஆசாரியனாகிய எலெயாசாருக்கு மூலமாக செய்யப்பட வேண்டும். ஆசாரியனாகிய எலெயாசார் இஸ்ரவேல் புத்திரர்களில் லேவியருக்குத் தலைவனாக நியமிக்கப்பட்டிருக்கிறார். (3:32; 4:16; 16:37,39; 19:3,4) ஏற்கனவே தேவன் எலெயாசாரை பிரதான ஆசாரியனாக ஆக்குவதற்கான பணிகள் எல்லாம் அவனுக்கு கொடுக்கப்படுகிறது. முக்கியமான பணிகள் ஆரோன் இருக்கும் போதே எலெயாசார் தான் செய்கிறார்.

ஆரோன் சீக்கிரமாக மரிக்கப் போகிறதினால் கர்த்தர் எலெயாசாரை ஆயத்தப்படுத்துகிறார். தேவனுடைய பரிசுத்த நாமத்துக்கு ஸ்தோத்திரமுண்டாவதாக! மனிதனுடைய ஆத்துமாவானது வெறும் உபதேசத்தினால் மட்டுமல்ல ஒரு செய்கையின் மூலமாக அது

திருப்தியடைகிறதாகயிருக்கிறது. இப்படியே கிடாரியின் இரத்தம் தெளிக்கப்படுகிறதும், கிடாரியின் சாம்பல் தண்ணீரைக் கலக்கி மேலே தெளிக்கப்படுகிறதும், கர்த்தர் இதனால் மனிதனுடைய பாவம் பரிகரிக்கப்படும் என்று சொன்ன படியினாலும்; கர்த்தருடைய வார்த்தையும், அந்த செய்தியும் மனிதனை சுத்திகரிக்கிறதாக நாம் பார்க்கிறோம். ஆனபடியினால் தேவன் நியமித்த நியமங்களும், சாக்கிரமந்துகளும் மிகவும் அவசியமுள்ளவைகளாகும். இதன் மூலமாகவே மனிதன் பூரண விடுதலையை பெற்றுக் கொள்கிறான்.
19:15 : "மூடி கட்டப்படாமல் திறந்திருக்கும் பாத்திரங்கள் எல்லாம் தீட்டுப்பட்டிருக்கும்."

மனமானது மூடப்பட்டதாயிருக்க வேண்டும். மனதின் அரையைக் கட்டிக்கொள்ளுங்கள் என்று அப்போஸ்தலனாகிய பேதுரு சொல்லியிருக்கிறார். (1 பேதுரு 1:13). மனம் திறந்து இருக்கக் கூடாது. வழியிலே போகிறவர்கள் எல்லாம் நடக்கிற வழியருகே விதைக்கப்பட்டவர்களாகக் காணப்படக் கூடாது. நடந்துபோகிறவர்கள் மற்றவர்களுடைய கருத்து, ஆலோசனைகள் எல்லாவற்றிற்கும் இடங்கொடுக்கிறதாக இருக்கக் கூடாது. சத்தியத்தையே கண்டு சத்தியத்திற்கு இடங்கொடுக்கிறதாக இருக்க வேண்டும். திறந்திருக்கிற பாத்திரங்கள் அசுத்தமாகும். அதில் தீட்டானவைகளும் விழும் செத்தப் பொருள்களும் விழும். ஆனபடியால் பாத்திரங்கள் மூடப்பட்டதாக இருக்க வேண்டும் என்று அப்போஸ்தலன் சொல்லுகிறார்.

நாம் 2 தீமோ 3:14-ல் இவ்விதமாக வாசிக்கிறோம். "நீ கற்று நிச்சயத்துக் கொண்டவைகளில் நிலைத்திரு அவைகளை இன்னாரிடத்தில் கற்றாய் என்று நீ அறிந்திருக்கிறாய்." அப்போஸ்தலன் மூலமாக தீமோத்தேயு உபதேசம் பெற்றுக் கொண்டார். கற்று, நிச்சயித்து அதில் நிலை நிற்க; முதலாவது சரியாக கற்றுக் கொள்ள வேண்டும். பிறகு இது தான் சத்தியம் என்று நிச்சயிக்க வேண்டும். மூன்றாவதாக அதிலே நிலை நிற்க வேண்டும். அநேகர் வழியிலே போகிறவர்களிடம், வருகிறவர்களிடம், உபதேசங்கள், ஆலோசனைகளையெல்லாம் ஏற்றுக் கொண்டு கெட்டுப் போகிறார்கள். உபதேசம் கொடுக்கிறவன் யார்? அவன் அப்போஸ்தலனா? அவனுக்கு உபதேசம் கொடுக்கிறதற்கு என்ன அதிகாரம்? கடவுள் அவனை அனுப்பியிருக்கிறாரா? என்று தேவ ஜனங்கள் சிந்திக்க வேண்டும்.

"நீ கிறிஸ்து இயேசுவைப் பற்றும் விசுவாசத்தோடும் அன்போடும் என்னிடத்தில் கேட்டிருக்கிற ஆரோக்கியமான வசனங்களின் சட்டத்தைக் கைக்கொண்டிரு" (2 தீமோ 1:13.) தீமோத்தேயுக்கு அப்போஸ்தலன் உபதேசங் கொடுத்தார். அப்போஸ்தலனுடைய உபதேசமே சரி. மற்றவர்கள் இன்று ஒரு உபதேசம் சொல்வார்கள், நாளை ஒரு உபதேசம் சொல்வார்கள் அவர்களுடைய உபதேசத்தைப் பற்றியிருக்கிறவர்களும் அதை விட்டு விடப்போகிறார்கள்; அதிலே அவர்கள் மருள விழப்போகிறார்கள். ஏனென்றால் அந்த உபதேசம் தவறு என்பது அவர்களுக்குத் தெரியும். தேவனுடைய மெய்யான உபதேசமானது மனிதனைப் பூரணப்படுத்தக் கூடியதாக இருக்கிறது (2 தீமோ 3:16,17.) இஸ்ரவேல் புத்திரர்கள் ஆசரிப்புக் கூடாரத்தில் கூடிவரும் போது அவர்களுக்கு தேவபயம் உண்டாகி தேவ பிரசன்னம் உண்டாகியிருந்தது கர்த்தருடைய கட்டளைகளைக் கைக்கொள்வதில் அவர்கள் கருத்தாயிருந்தார்கள். மீறுதல் செய்தவர்கள் ஜனபுத்திரரிலிருந்து அகற்றப்பட்டார்கள்.

இந்த நாட்களிலே மக்களுக்கு தேவபயம் இல்லை. தீட்டானவர்கள் தீட்டாகவேயிருந்து கொண்டு கடவுளுக்கு ஆராதனை செய்கிறார்கள். ஊழியஞ் செய்கிறார்கள். உபதே

சஞ் செய்கின்றார்கள். இவர்கள் முதலாவது தங்கள் பாவத்தை வெளிப்படுத்தி சுத்திகரித்துக் கொள்ள வேண்டும். ஆசாரியனிடம் வர வேண்டும்.

[தொடரும்]

"அப்பொழுது யூதேயா தேசத்தார் அனைவரும் எருசலேம் நகரத்தார் யாவரும் அவனிடத்திற்குப்போய், தங்கள் பாவங்களை அறிக்கையிட்டு, யோர்தான் நதியில் அவனால் ஞானஸ்நானம் பெற்றார்கள்" மாற். 1:5

# சத்துரு இடும் முத்தங்கள்

தாவீது ராஜாவை தேவனுகிய கர்த்தர் அபிஷேகித்து இஸ்ரவேலர் மேல் ராஜாவாக ஏற்படுத்தினர். தேவனால் ஏற்படுத்தப்பட்ட இந்த தலைவனின் கீழ் இஸ்ரவேலர் தங்கள் சத்துருக்களின் கைகளுக்கு விலக்கி மீட்கப்பட்டு சுகித்திருந்தனர். இப்படி இருக்கும் காலத்தில் தாவீது ராஜாவின் குமாரர்களில் ஒருவனை அப்சலோமுக்குள் சாத்தான் புகுந்து கிரியை செய்ய ஆரம்பித்தான். அது முதல் அப்சலோம் தாவீது ராஜாவிடமிருந் ஆளுகையைக் கைப்பற்றத் திட்டமிட்டா .

அப்சலோம் செய்த காரியமானது, அவன் காலை தோறும் பட்டணத்து வாசலுக்குப் போகும் வழியருகே நின்றுகொண்டு அங்கு தாவீது ராஜாவிடம் நியாயம் வேண்டி வரும் இஸ்ரவேலரிடம் நயமாய் பேசி, முத்தமிட்டு தாவீது ராஜாவின் ஆளுகையைப் பற்றி தவறான அபிப்பிராயங்களைச் சொல்லி மக்களைத் தன் பக்கம் இழுப்பான். இப்படி தொடர்ந்து அநேகரை வஞ்சித்துப் போட்டான். இப்படி வஞ்சிக்கப்பட்டவர்களின் உதவியுடன் ராஜாவாக முற்பட்டான். முடிவில் அப்சலோமும் அவனைச் சேர்ந்த சுமார் 20,000 பேரும் யுத்தத்தில் அழிந்து போயினர். (2சாமு 15-18அதிகாரங்கள்).

இந்த நாட்களிலும் தேவனுகிய கர்த்தர் தமது அப்போஸ்தலனை அதிகாரப்படுத்தி அனுப்பி "புதிய எருசலேம் சபை" யை எழுப்பி "ஒரே மந்தையும் ஒரே மேய்ப்பனுமாகும்" என்ற வாக்குத்தத்தத்தை நிறைவேற்றி வருகிறார். இப்படியிருக்க தேவ சித்தத்துக்கு மாறாய் அனேகப் போலிகளும், பின் மாற்றக்காரர்களும் எழும்பி கர்த்தரால் அனுப்பப்பட்ட அப்போஸ்தலனைக் குறித்தும், திருச்சபையைக் குறித்தும், மக்கள் மத்தியில் துர்ப்பிரச்சாரம் செய்து தங்களது வஞ்சனையான வார்த்தைகளால் மெய்யர்களை, மக்களை, வஞ்சித்து மக்கள் பூரணத்துவத்தை அடையாதபடி அழிவுக்கு நேராய் நடத்துகின்றனர். இவர்களது முடிவு அப்சலோமுக்கும் அவனைச் சேர்ந்தவர்களுக்கு ஏற்பட்ட முடிவே என்று வேதம் எச்சரிக்கின்றது அப்சலோமின் கிரியைகளை சற்று ஆராய்வோம்.

1. அப்சலோம் மக்களின் விருப்பத்துக்கேற்ப பேசுகிறவனுயிருந்தான்!

கடைசி நாட்களில் மக்கள் ஆரோக்கியமான உபதேசத்தைப் பொறுக்க மனதில்லாமல், செவித்தினவுள்ளவர்களாகி, தங்கள் சுய இச்சைக்கேற்ற போதகர்களைத் தங்களுக்குத் திரளாகச் சேர்த்துக் கொள்வார்கள் என்று (2 தீமோ 4:3)-ல்

அப். பவுல் சொன்னபடி இந்நாட்களில் நடந்து வருகிறது. மக்களின் சுய விருப்பங்களுக்கேற்ப போதனை செய்யும் கள்ளபோதகர்கள் திரளாய் எழும்பியுள்ளனர். இவர்கள் தாங்கள் சத்தியத்தை அறிந்திருந்தாலும் சத்தியத்தை சொன்னால் கூட்டம் சேராதே என்று எண்ணி சத்தியத்தைத் தரையில் போட்டு மிதித்து விட்டு மக்களின் விருப்பங்களுக்கேற்பப் போதிக்கின்றனர்.

மூல உபதேசங்களாகிய முழுக்கு ஞானஸ்நானம், பரிசுத்த ஆவியின் அபிஷேகம் [எபி 6:1,2] போன்றவற்றை மறைத்து விடுகின்றனர். தசமபாகம் கொடுக்கவேண்டிய அவசியம் இல்லை (மல் 3:8-10) என்று போதித்து மக்கள் ஆசீர்வாதம் பெற வேதம் காட்டும் வழியை அடைத்துப் போடுகின்றனர்.

பாவங்களை மறைக்கிறவன் வாழ்வடையமாட்டான் என்று வேதம் கூறியிருக்க, பாவம் வெளியே தெரிந்து விடக்கூடாது என்று எண்ணும் பக்தி வேஷம் போடும் மாய் மாலக் கிறிஸ்தவர்களுக்கு "உங்கள் பாவங்களை நேரடியாக தனி ஜெபத்தில் இயேசுவுக்கு தெரியப் படுத்துங்கள்" என்று பெருந்தன்மையாக அனுமதி வழங்கி மக்கள் பாவத்திலிருந்தும், சாபத்திலிருந்தும், விடுதலை பெற முடியாதபடி செய்கின்றனர் இவர்கள் மக்களின் இச்சைகளை, விருப்பங்களை நிறைவேற்றும் கள்ள ஊழியர்கள். தேவன் திருச்சபைக்குத் தமது இருதயத்துக்கேற்ற மேய்ப்பர்களைக் கொடுப்பார் [எரேமியா 3:15] என்று வேதம் கூறுகிறது. எனவே கள்ள ஊழியர்களை கனிகளால் அடையாளம் கண்டு கொண்டு அவர்களை விட்டு விலகி தேவன் ஏற்படுத்திய மெய்யான அப்போஸ்தலரோடு ஐக்கியப்பட்டு இறைசித்தம் செய்வோமாக.

2 அப்சலோம் பொய் சொல்லி வஞ்சித்தான் -தாவீது ராஜாவின் ஆளுகை முறைமையைக் குறித்து துர்ச்செய்தி பரப்பினான்.

அப்சலோம் செய்தது போல் இந்நாட்களிலும் பலர் பொய் என்னும் அடைக்கலத்தில் கள்ள ஊழியம் செய்து வருகின்றனர். திருச்சபையைக் குறித்தும், இயேசுவால் அனுப்பப்பட்ட அப்போஸ்தலனைக் குறித்தும் தவறான அபிப்பிராயங்களை சொல்லி மக்களை வஞ்சித்து வருகின்றனர். ஒரு கூட்டத்தார், அப்போஸ்தலன் திருமணம் முடிக்கக் கூடாது என்றும் திருமணம் முடிக்காமல் தாங்கள் செய்யும் ஊழியமே பிரதான ஊழியம் என்றும் வேதத்துக்குப் புறம்பான சுய கருத்துக்களைக் கூறி மக்களை வஞ்சிக்கின்றனர். இப்படி பொய்யர்கள் திருமணம் முடிக்கக் கூடாது என்று கட்டளையிடுவார்கள் - பிசாசின் வஞ்சக உபதேசங்களைக் கொடுப்பார்கள் என்று அப். -பவுல் எச்சரித்துள்ளாரே [1 தீமோ :4:1-3]

மேலும் தாங்கள் தான் மணவாட்டி சபை என்றும் கூறி வஞ்சனை செய்கின்றனர். ஒரு காலத்தில் ஒரே கூட்டமாய் ஒரே ஆளுகையில் இருந்த இவர்கள் இன்று பல பிரிவுகளாக சிதறி விட்டனர். தனித் தனி ஆளுகையில், கருத்து வேற்றுமைகளில் இருக்கும் இவர்கள் ஒவ்வொரு கூட்டத்தாரும் தாங்களே மணவாட்டி என்றும் கூறுகின்றனர். கர்த்தருக்கு இரண்டு மூன்று மணவாட்டிகள் கிடையாது. மணவாட்டி - உத்தமி ஒருத்தியே [உன்.பாட்டு 6:9] எனவே இவர்களது கூற்று பொய் என்பது தெளிவு.

கர்த்தருடைய மெய்யான மணவாட்டி "புதிய எருசலேமே!" எனவே பொய் உபதேசங்களால் வஞ்சிக்கப்படாமல், தீட்டுப்பட்டுப் போகாமல் மெய்யான திருச்சபையாம் புதிய எருசலேமில் ஐக்கியப்பட்டு உத்தம மணவாட்டியாய் மணவாளனின் வருகைக்குக் காத்திருப்போமாக. இன்னும் சில ஊழியர்கள் புதிய

எருசலேம் சபையாய் இவர்களை கவந்தாலோசிக்கவில்லை என்று காய்மாகாரம் கொண்டு தூஷிக்கின்றனர் யாராவது கள்ள ஊழியரை சட்டை செய்வார்களா?

3. அப்சலோம் மக்களை மயக்கினான்.

அப்சலோம் தனது நய வஞ்சகப் பேச்சினாலும், முத்தத்தினாலும் மக்களை மயக்கிப் போட்டான். இந்நாட்களிலும் சிலர் சபை வேறுபாடு அற்ற கூட்டங்கள் என்று பறை சாற்றி மக்கள் சபை ஐக்கியத்தை விட்டு விடும்படி போதனை செய்கின்றனர். அதற்கு பத்திரிக்கை ஊழியம், ஜெபம் கூட்டம் என்று சொல்லி எங்கள் வாசகரே, எங்கள் ஜெப வீரரே, செயல் வீரரே, உடன் பங்காளியே என்ற பசப்பு வார்த்தைகளால் மக்களை மயக்குகிறார்கள்.

கர்த்தர் கறை திரை முதலானவைகள் ஒன்றுமில்லாமல் பரிசுத்தமும் பிழையற்றதுமான மகிமையுள்ள சபையாக அதைத் தமக்கு முன் நிறுத்த தம்மை ஒப்புக்கொடுத்தார். [எபே :5:27] என்பது சத்தியமாயிருக்க, இறை நோக்கத்தை முறியடிக்கும்படியாக இந்த வஞ்சகர்கள் தீவிரமாய் வேலை செய்கின்றனர். இந்த வஞ்சக வலையில் அனேகர் சிக்கி மந்தமாகி, கூர் மழுங்கி பிரயோஜனமற்றுப் போகிறார்கள்

"இந்த கூட்டத்துக்கு வந்தவர்கள் எல்லார் பெயரையும் கர்த்தர் ஜீவ புஸ்தகத்தில் எழுதிக் கொண்டார்" என்பார்கள். மக்கள் பாவத்தின் கொடுமையையும், பிசாசுகளின் வேதனைகளையும் அனுபவித்து வரும் மக்களைப் பார்த்து "உங்களுக்கு தமது ஆவியை அளவில்லாமல் கொடுத்திருக்கிறார். எனவே சந்தோஷமாயிருங்கள்" ஆடுங்கள் என்று பலவிதமான வார்த்தை ஜாலங்களால் மக்களை மயக்கி அவர்களது ஆத்மீகக் கண்களைக் குருடாக்கி நரகத்துக்கு நேரே வழிநடத்துகின்றனர். "புத்தியற்றவர்களே! சத்தியத்துக்குக் கீழ்ப்படியாதபடி உங்களை மயக்கினவன் யார்"? என்று அப்பவுல் கேட்டுள்ளபடி (கலா :3:1) புத்தியற்றவர்களாய் நாம் போகாதபடி துர்ப்போதனைகளால் வஞ்சிக்கப் படாதபடி நம்மைக் காத்துக் கொள்வோமாக.

மெய்த்திருச்சபை:

மெய்யான திருச்சபை என்றால் அங்கு இறைவனால் கட்டளை பெற்று அனுப்பப்பட்ட அப்போஸ்தலன் இருக்க வேண்டும் [1கொரி :11:1]. அவர் "நான் இயேசு கிறிஸ்துவை சரியானபடி பின் பற்றுகிறேன். நீங்கள் என்னைப் பின்பற்றுங்கள்" என்று அறைகூவல் விடும் தகுதியுடையவராய் இருக்க வேண்டும். [1கொரி :11:1]. என்னைப் பாராதே - உபதேசத்தைப் பார் என்று ஒடி ஒளிபவர்களாக இருக்கக் கூடாது. இந்த அப்போஸ்தலனுடைய ஒரே நோக்கம்.

"திருச்சபை கற்புள்ள கன்னிகையாக கிறிஸ்து என்னும் ஒரே புருஷனுக்கு ஒப்புக் கொடுக்க வேண்டும் என்று தேவ வைராக்கியமான வைராக்கியம் கொண்டு" செயலாற்றுவதே. [1கொரி :11:2,3]. மெய்யான அப்போஸ்தலன் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவுக்கு சிநேகிதன் [யோவான் :15:15]. தவறான வழிகாட்டிகளான கள்ள ஊழியர்கள் இயேசுவுக்கு சத்துருக்கள். சிலுவைக்கு பகைஞர் (பிலி:3:18,19) கர்த்தருக்கு சிநேகிதனான அப்போஸ்தலன் தவறு செய்யும் ஆத்துமாக்களைச் சீர் பொருந்தும் படி கண்டிக்கிறார். கர்த்தரின் சத்துருக்களான கள்ள ஊழியர்கள் கண்டிப்பதில்லை. முத்தம் போன்ற நய வஞ்சக வார்த்தைகளால் ஆத்துமாக்களை வஞ்சிக்கின்றனர்.

கர்த்தரின் "சிநேகிதன அடிக்கும் அடிகள் உண்மையானவைகள்" கர்த்தரின் "சத்துருக்கள் இடும் முத்தங்கள் வஞ்சனையுள்ளவைகள்" [நீதி :27:6].

எனவே இறைவனின் சிநேகிதரை நாமும் சிநேகித்து திருச்சபையாய் இசைந்து, இணைந்து வஞ்சிக்கப்படாமல் தேவ சித்தத்தைப் பரிபூரணமாய் செய்து முடிப்போமாக.

„உங்களுக்கு உண்டான அழைப்பினாலே நீங்கள் ஒரே நம்பிக்கைக்கு அழைக்கப்பட்டது போல ஒரே சரீரமும், ஒரே ஆவியும் உண்டு, ஒரே கர்த்தரும், ஒரே விசுவாசமும், ஒரே ஞானஸ்நானமும் எல்லோருக்கும் ஒரே தேவனும் பிதாவும் உண்டு... [எபேசி 4:4-6]

# மனிதனும் பாவமும்

மனிதனுக்கு சமயத்தோடுள்ள தொடர்பு, மனிதனைப் பற்றி எந்த விதமான சமயத் தொடர்பற்ற ஏராளமான கருத்துக்கள் தள்ளுண்டு போயின. சமய சார்பற்ற கருத்துக்கள் மனிதனைப் பற்றிய மறுமலர்ச்சி காலத்தொட்டே இருந்து வந்துள்ளன. அக்காலம் தான் மனிதனின் அறிவும், ஆற்றலும் பெரிதும் விருத்தியடைந்த காலம். கொலம்பஸ் அமெரிக்காவை கண்டு பிடித்தது போன்ற பூகோள சம்மந்தமான புது இடங்கள் கண்டு பிடிக்கப்பட்டன. அறிவுக்களம் விரிவடையலாயிற்று.

அக்காலம் இருண்ட திருச்சபையின் துறவறம் நோக்கின. மக்கள் வெறுக்கலாயினர். அப்போதிருந்த திருச்சபையின் விலங்குகளை மக்கள் வெறுக்கலாயினர். அவ்விலங்குகளை உடைத்தெறிந்து விட்டு வாழ்க்கையை துய்க்க, [அநுபவிக்க] மகிழ மக்கள் விரைந்தனர். மனிதனது சுயாதீனம் அக்கால வழக்கத்துக்குள்ளாயிற்று. அவை கடவுளுடைய மகிமைக்காகவா? இல்லை. மனிதனது மகிமைக்காக, மனிதனது ஆற்றலும், கலைத்திறனும் படைப்பு முழுவதில் உள்ள ஆற்றல்களை அவன் அடக்கி ஆள்வதிலும், இவன் பெருமையடைந்து; கடவுளுக்கு நேர் எதிரியாகிவிட்டான்.

கடவுளை விட்டு மனிதனை வணங்கு என்றாகிவிட்டது. மனிதன் தன்னை கடவுள் நிலைக்கு உயர்த்தியதின் பலனாய்; சமயத்தைப் பற்றியுள்ள பக்தியற்று போகவே, பின் வந்த ஆண்டுகளில் லௌகீக கொள்கையும், இயற்கை கொள்கையும் வளர்ச்சியுற ஆரம்பித்தது. 19-ம், 20-ம் நூற்றாண்டில் இக்கருத்துக்களை முற்றிலும் ஆதரிக்க சிலர் எழும்பினர். [காரல்மார்க்ஸ், பிரடெரிக்நீட்சே, சிக்மண்டுபிராய்டு போன்றோர் முக்கியமானவர்கள்]. மனிதனை மனிதனாக சிறப்பித்து காட்டுகிற அவர்களுடைய மறு உருவ கொள்கை மனிதனுக்கு உண்ணுதல், வளமை, பால் உணர்ச்சி போன்ற ஆசைகள் இருப்பதால் மிருகங்களுக்கெல்லாம் தலை சிறந்தவன் எனக்கருதும், ஒரு மிருகம் என்றனர்.

மனிதனை அறிந்து கொள்வதில் உண்டாகும் மாபெரும் குழப்பம் மிக இகழ்ச்சிக்குரியதாகும். இங்கு தான் இன்றைக்கு மனுக்குலத்தின் நம்பிக்கையற்றதே பதிந்துள்ளது. ஆகவே மனிதனது இயற்கை, சர் ஆகியவற்றைப்பற்றிய கிறிஸ்தவ நோக்கு மனிதன்

திருப்புவதைத் தவிர வேறு வழியே அவனுக்கு இல்லை.

மனிதன் ஒரு படைப்பு:-

மனிதனுடைய இயல்பைப்பற்றி கிறிஸ்தவ சித்தாந்தம் மனிதன் கடவுளால் உருவாக்கப்பட்ட வரலாறு சரித்திர சம்பவமா? அல்லது உதாரணமா? என்ற சர்ச்சை கிறிஸ்தவ உலகில் உண்டு. வெளியேயும் உண்டு. விஞ்ஞானம் நிரூபிக்கிறதை நாம் மறுக்க வேண்டியது இல்லை.

பரிணாம தத்துவம்:-

ஒவ்வொரு மனிதனும் உடல் சார்ந்த வாழ்க்கை, உடலுறவு, உற்பத்தி, வெளிப்படுதல் படிப்படியாய் வளர்ந்து முழு நிலை அடைகிறான். சங்கீதக்காரன் நீரே என்னை உருவேற்படுத்தினீர் என்கிறார். [சங் 139-13-16]. அவர் கடவுளுடைய அனுக்கிரகத்தை ஒவ்வொரு சம்பவத்திலும் காணுகிறார். அநுபவிக்கிறார் அடுத்து, விஞ்ஞானம் படைப்பின் நோக்கத்தைக் காணவில்லை மெய்ப்பிக்கவில்லை. அது அவ்வாறு படைப்பின் நோக்கத்தை காணும் அதை மெய்ப்பிக்கும் என்றும்; நாம் எதிர்பார்க்க இடமில்லை.

இறை வழிபாட்டைப் பற்றிய விளக்கமே படைப்பின் நோக்கம், படைப்பின் தன்மையை நமக்கு விளக்கும். மனிதனை அறிவாற்றல் பெற்ற மிருகம் என்பதை வற்புறுத்துகிறவர்களை கூட, நாம் அவர்கள் கூற்றின்படி அவர்களை மிருகங்களைப் போல நடத்துவோமாயின். அவர்கள் ஆத்திரத்தோடு எதிர்த்து நிற்பார்கள் அதனால் அவர்கள் கொள்கை தவறானது என்பதை அவர்களே சுட்டிக் காண்பித்து கொடுத்து விடுவார்கள். இப்பொழுது நாம் மனிதனுடைய சிறப்பைக் காட்டுவோம்.

ஆதியாகமத்தில் நாம் பார்க்கிற படி, மனிதன் இயற்கையில் ஒரு முக்கிய பாகமாகும் ஏனைய படைப்புகளெல்லாவற்றோடும்; முற்றிலும் ஒருமைப் பட்டவனாகவும் அமைக்கின்றான். அவன் பூமியின் மண்ணிலிருந்து உருவாக்கப்பட்டான். பிற உயிரினங்களிலிருந்து அவனை வேறுபடுத்திக் காட்டுகிற ஒரு காரியம், மனுக்குலம் என்ற சொல்லின் சரியான கருத்தின் படி அவனை மனுக்குலத்தில் ஒருவனுக்கும் ஒரு காரியம் நிச்சயமாகவே இருக்கிறது. இந்த மனிதத்துவம் [Humanum] யாது?

கடவுள் சிருஷ்டிகளையெல்லாம் மனிதனுக்கு முன் படைத்து விட்டு கடைசியில் மனிதனைப் படைக்கும் போது தமக்குள்ளே பேசிக் கொண்டதாய் எழுதப்பட்டுள்ளது. தம்முடைய சாயலாகவும், ரூபத்தின்படியும் மனிதனை தேவன் படைத்தார். அந்த சாயல் ஒப்புமை என்னவெனில், தன்னைப் போல் ஆளுமை திராணியை மனுஷனுக்குக் கொடுத்தார் என்றும், இன்னும் அதில் பல விளக்கங்கள் இருக்கின்றன. அதனால் மனிதன் தெய்வத்தின் அம்சமா? இல்லையே. ஏனைய உயிரினங்களுக்கு அவனைத் தலைவனாக்கினார். (ஆதி 1: 26-31; 2:1-7); இவையெல்லாம் உற்று நோக்கும் போது மனிதனில் மட்டும் மற்றெல்லா பொருட்களிலும் காணப்படாத ஏதோ ஒரு புதுமை உருவாக்கப்பட்டுள்ளது.

அவன் கடவுளோடு உறவு கொண்டாடத் தக்கதாயும், உறவு கொண்டாடும் அளவில் ஒரு ஆளாகவும் படைக்கப்பட்டுள்ளான். அவனே கடவுளல்ல, கடவுளுடைய சாயல் - நிழல் தான். இந்து தத்துவம் கூறுகிற படி 'தத்வமசி' 'அதுவே நீ' 'அகம் பிரம்மாஸ்மி' 'நான் பிரமன் என்று கடவுளையும்' மனிதனையும் ஒன்றிக்கிறது. அது தவறாகயிருக்கிறது. மனிதன் படைக்கப்பட்ட ஒருவன் என்ற திருமறையின் கருத்துக்கு இந்தமத தத்துவம் முற்றிலும் முரணானது. கடவுள் மனிதனைப் படைத்து அவன் நாசியில்

உயிருண்டாக்கும் சுவாசத்தையே ஊதினார். (ஆதி 2:7) சரீர உயிர்தான் ஊதப்பட்டது. [மிருகங்கள், பறவைகள் போல்] பரிசுத்த ஆவி ஊதப் படவில்லை என்பதை மறந்து விடக் கூடாது. ஆனால் அவன் கடவுளின் ஆவியைப் பெறலாம். கடவுளின் ஆவியைப் பெற்று அவருடன் உறவாடும் ஒரு அம்சம் மனிதனில் இருக்கிறது. விசுவாசத்தின் மூலம் தேவ ஆவியை பெற்று புது சிருஷ்டியாகலாம். (2கொரி 5:17). கடவுளுடைய புத்திரனாகலாம் (ரோம 8:14) இந்த வாய்ப்பு மனிதனுக்கு இருக்கின்றது. இது மனிதனுக்கே இருக்கிறது.

(தொடரும்)

"நீர் அவனைத் தேவ தூதரிலும் சற்று சிறியவனாக்கினீர்; மகிமையினாலும் கனத்தினாலும் அவனை முடி சூட்டினீர்; உம்முடைய கரத்தின் கிரியைகளின் மேல் நீர் அவனுக்கு ஆளுகை தந்து, சகலத்தையும் அவனுடைய பாதங்களுக்கு கீழ்ப்படுத்தினீர்" சங். 8:5,6.

## கிறிஸ்தவ மார்க்கம் (தொடர்ச்சி)

### திருவிருந்து [நற்கருணை]

### [LORD'S SUPPER]

கர்த்தராகிய இயேசு தாம் காட்டிக் கொடுக்கப்பட்ட அன்று இராத்திரியிலே, [தம்முடைய சீஷருடனே பஸ்கா போஜனம் பண்ணும் போது] அப்பத்தை எடுத்து, ஸ்தோத்திரம் பண்ணி, அதைப் பிட்டு நீங்கள் வாங்கி புசியுங்கள்; இது உங்களுக்காகப் பிட்கப்படுகிற என்னுடைய சரீரமாயிருக்கிறது என்னை நினைவு கூரும்படி இதைச் செய்யுங்கள் என்றார். போஜனம் பண்ணின பின்பு அவர் அந்தப்படியே பாத்திரத்தையும் எடுத்து, இந்தப் பாத்திரம் என் இரத்தத்தினாலாகிய புதிய உடன்படிக்கையாயிருக்கிறது; நீங்கள் இதைப் பானம் பண்ணும் போதெல்லாம் என்னை நினைவு கூரும்படி இதைச் செய்யுங்கள் என்றார் (1 கொரி. 11:23-26).

இதிலே இந்த ஞான விருந்தின் ஸ்தாபக வரலாறு அடங்கியிருக்கிறது. அப்படியே மத்தேயு 26:26-30; லூக்கா 22:14-20; மாற்கு 14:22-26 ஆகிய வேத பாகங்களிலும் இந்த திருவிருந்தின் விபரம் எழுதப்பட்டுள்ளது. எந்த ஒரு எழுத்தாளனும் இயேசுவானவர் திருவுளம் பற்றின எல்லாக் காரியங்களையும் எழுதாமல், ஒருவர் எழுதாமல் விட்டதை இன்னொருவர் எழுதினார். இவை எல்லா வரலாறுகளுக்கும் முந்தியது அப்போஸ்தலனாகிய பரிசுத்த பவுல் எழுதியதாகும் 1 கொரி. 11 ம் அதிகாரம் 23 முதல் 26 வரை.

உலகத்தின் பாவத்தை சுமந்து தீர்த்த ஒரே பிராயச்சித்தப் பலியாகிய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் மரணத்தை அன்புடன் நினைவு கூருவதே நற்கருணையின் முக்கிய நோக்கமாயிருக்கிறது என்பதை இவ்வாக்கியங்களிலேயே நாம் அறிந்து கொள்ளுகிறோம்.

ஞானஸ்நானத்துக்கு விருத்த சேதனம் குறிப்பாய் இருந்தது போல், நற்கருணைக்கு பஸ்காப் போஜனம் ஒருவாறு குறிப்பாய் இருந்தது. அந்தப் பண்டிகையிலே புசிக்கப்பட்ட மாசுமறுவில்லாத ஆட்டுக

ஆடு. தேவாட்டுக்குட்டியாகிய இயேசுவானவரைக் குறிப்பிடுகிறது. பஸ்கா பண்டிகை பார்வோனின் அடிமைத்தனத்திலிருந்து இஸ்ரவேல் மக்களுக்கு மீட்பை அறிவித்ததுபோல், கர்த்தருடைய இராப்போஜனம் பிசாசினுடைய அடிமைத்தனத்திலிருந்தவர்களுக்கு உண்டாகும் ஆத்தும இரட்சிப்பை அறிவிக்கிறதாயிருக்கிறது.

இது கிறிஸ்தவ சபையின் முக்கிய உபதேசங்களில் ஒன்று இயேசுவானவருடைய பரிசுத்த இரத்தம் நமக்காக சிந்தப்பட்டபடியினாலும், அவருடைய சரீரம் நமக்காக அடிக்கப்பட்டபடியினாலும், அதை நினைவுகூரும்படி இயேசுகிறிஸ்து தாம் காட்டிக்கொடுக்கப்பட்ட அன்று இராத்திரியிலே பஸ்கா போஜனம் செய்கிற வேளையில் இதை ஏற்படுத்தினபடியால் இதற்கு இராப்போஜனம் என்றும் சக்கிரமந்து என்ற பெயருண்டாயிற்று. ஐக்கிய விருந்து என்றும் இதிலே கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவோடு கூட விசுவாசிகளும்; விசுவாசிகளோடு விசுவாசிகளும் ஐக்கியப்படுகிறதால் இதற்கு ஐக்கிய விருந்து (Holy Communion) என்று பெயர் கொடுக்கப்பட்டது. யூக்கரிஸ்ட் [Eucharist] என்றும் இதற்கு பெயருண்டு.

கர்த்தராகிய இயேசுகிறிஸ்து அப்பத்தை எடுத்து ஸ்தோத்தரித்த படியினால் ஸ்தோத்திரம் என்றர்த்தங்கொள்ளும் யூக்கரிஸ்ட் என்ற பெயர் உண்டாயிற்று. இந்த அன்பின் விருந்தில் சேர்ந்தவர்கள் கிறிஸ்துவினுடைய சிருபையில் தாங்கள் ஐக்கியமுள்ளவர்களாயிருக்கிறார்கள் என்று காட்டுகிறார்கள். மேலும், கர்த்தருடைய இராப்போஜனத்தில் பங்கு பெறுகிறவர்கள் கிறிஸ்து செலுத்தின பலியில் தங்களுக்கு இருக்கும் நெருங்கிய ஐக்கியத்தைக் காட்டுகிறதினால் இதற்கு ஐக்கிய விருந்து என்றும் பெயரிடப்பட்டது (1 கொரி.10:16). இயேசுவானவர் தம்மைப் பரமார்த்தமாய் இந்த நற்கருணையில், தம்மைப் பகிர்ந்து அருளுகிறபடியால் இதற்கு சாக்ரமந்து என்றும் பல பெயர் இதற்கு சூட்டப்பட்டுள்ளது (யோ. 6:32-58).

இரண்டாம் முறை இரட்சகர் வரும் வரை இவ்விருந்து திருச்சபையிலே நடந்து வருமென்று அப்போஸ்தலனாகிய பவுல் சொல்லியிருக்கிறார். ஆதிச்சபையார் ஆரம்பத்திலே தினந்தோறும் நற்கருணைவாங்கி வந்தார்கள். (1கொரி. 11:20-22). அவர்கள் அப்பம்பிட்கிற சபையாய் இருந்தார்கள். அதன் பின்பு பவுல் அப்போஸ்தலன் வாரத்துக்கொரு முறை இராப்போஜனம் எடுக்கச் சொன்னதாகத் தோன்றுகிறது (அப்.20:7; 1கொரி.16:2). இப்பொழுது இது பல சபைகளில் பல காலங்களிலே வழங்கி வருகிறது. மேலும் ஆதிசபையிலே அன்பின் விருந்து (அகப்பா) என்னும் ஒரு விருந்து முடிந்த பின்பு இந்த ஞான விருந்து நடந்ததாகத் தெரிகிறது 1 கொரி 11:20-34 இல் அப்போஸ்தலன் அதிகமாய் புத்தி சொல்லுகிறார்.

இதுவுமல்லாமல், அப்போஸ்தலன் 1 கொரி.11:26-30 இல் உரைத்திருக்கும் எச்சரிப்பை கிறிஸ்தவர்கள் யாவரும் ஞாபகம் பண்ணிக்கொள்ள வேண்டும். யோவா 13:26-30 ல் யூதாஸ்காரியோத்து நற்கருணை வாங்கவில்லையென்று அநேகர் நம்புகிறார்கள்.

[தொடரும்]

"என் மாம்சத்தைப் புசித்து, என் இரத்தத்தைப் பானம் பண்ணுகிறவனுக்கு நித்திய ஜீவன் உண்டு; நான் அவனைக் கடைசி நாளில் எழுப்புவேன்."
யோவா. 6:54.

# சாட்சி

கர்த்தருக்கு ஸ்தோத்திரம்; அவர் என் விண்ணப்பங்களின் சத்தத்தைக் கேட்டார் (சங் 28:6). கர்த்தர் என் பெலனும் என் கேடகமுமாயிருக்கிறார்; என் இருதயம் அவரை நம்பி இருந்தது.நான் சகாயம் பெற்றேன், ஆகையால் என் இருதயம் களிகூறுகிறது. என் பாட்டினால் அவரைத் துதிப்பேன் (சங் 28.9).

தேவனுடைய பரிசுத்த நாமத்திற்கு மகிமை உண்டாவதாக! என் பெயர் விமலா லீதியாள். நான் ஒரு இந்து குடும்பத்தில் பிறந்தேன். இந்துவாகவே வளர்க்கப்பட்டேன். இந்து முறைப்படி என்னுடைய திருமணம் 1970-ஆம் ஆண்டு நடந்தது. நான் பிறந்து வளர்ந்த என்னுடைய பெற்றோர் ஊரிலே C.S.I கிறிஸ்தவர்கள் இருந்தார்கள். ஆனால், எனக்கு கிறிஸ்தவர்களை சுத்தமாக பிடிக்காது என்னுடைய பெற்றோர் வீட்டிலும், மாமியார் குடும்பத்திலும் இந்து வைராக்கியமுடையவர்கள். எனக்கும் அதனால் கிறிஸ்தவர்களை பிடிக்காது.

1972 - ஆம் ஆண்டு எனக்கு முதல் பிரசவம் நடந்தது. அன்றிலிருந்து ஐந்தாவது நாளில் எனக்கு கடுமையான வயிற்றுவலி தொடங்கியது. அந்த வயிற்றுவலியானது சுமார் ஏழு மாதம் வரைக்கும் தொடர்ந்து காணப்பட்டது. எத்தனையோ டாக்டர்களின் மருந்துகளும் என்னை சுகப்படுத்தவில்லை. மேலும் திரு நீறு பூசுதல், காவடி எடுத்தல் போன்ற பொருத்தனைகள் செய்தும் பலனில்லை. வயிற்றுவலியின் கொடுமை மட்டும் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டேயிருந்தது ஏழு மாதமளவும் எனக்கு சிகிச்சை கொடுத்த டாக்டர் கடைசியாக வேலூர் C.m.C ல் ஆபரேஷன் செய்தாக வேண்டும் என்று கூறி விட்டார்கள். என்னுடைய பெற்றோர்கள் இரவு பகலாக என்னுடைய வேதனையைப் பார்த்து அழுதுக் கொண்டே இருந்தார்கள்.

அப்பொழுது எங்களுடைய கிறிஸ்தவ உறவினர் ஒருவர் எங்களிடம் வந்து ஒரு டாக்டர் எங்களுடைய வீட்டிற்கு வருகிறார் அவரிடம் பாருங்கள் சுகம் கிடைத்தாலும் கிடைக்கும் என்று கூறினார்கள். என்னுடைய கணவர் அப்பொழுது இராணுவத்தில் இருந்தார். அவரும் ஆபரேஷன் எதுவும் செய்ய வேண்டாம் என்று கடிதம் போட்டு விட்டார். மேலும் நாங்கள் ஏற்கனவே பார்த்துக் கொண்டிருந்த டாக்டரிடம் எவ்வளவோ பணம் செலவு செய்தும் பயனில்லை. எத்தனையோ இந்து தெய்வங்கள் என்று சொல்லப்படுகிறவைகளுக்கு பொருத்தனை செய்தும் பலனில்லை. ஆகவே அந்த கிறிஸ்தவ உறவினர் சொன்ன டாக்டரிடமாவது போகலாம் என்றுச் சொல்லி என்னுடைய தாயார் அங்கு அழைத்துக் கொண்டு போனார்கள். அந்த டாகடர் கிறிஸ்தவர் அவர் என்னை பரிசோதனை பண்ணிவிட்டு ஆபரேஷன் செய்ய வேண்டிய நிலையில் தான் உள்ளது. ஆனாலும் நீங்கள் இயேசு கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டால் நானல்ல கர்த்தர் நிச்சயம் உங்களுக்கு ஆபரேஷன் இல்லாமல் சுகம் கொடுப்பார். உங்கள் முடிவை கூறினால் தான் நான் சிகிச்சை கொடுக்க முடியும் என்று கூறினார்கள்.

இதைக் கேட்டவுடன் என்னுடைய பெற்றோர்கள் என் மாமியார் குடும்பம் மிகுந்த இந்து வைராக்கியம் கொண்ட குடும்பமாக காணபபடுகிறபடியால் என்னை கிறிஸ்துவைக் ஏற்றுக் கொள்ள ஒப்புக் கொடுக்க பயந்தார்கள். ஆனால் அடியாள் வியாதிக் கொடுமை தாங்க முடியாத நிலையிலுள்ள போது என்னுடைய உள்ளத்திலிருந்து ஒரு சக்தி துணிந்து "நான் கிறிஸ்துவை ஏறறுக் கொள்கிறேன்" என்று கூற ஏவியது. நானும்

கூறினேன். டாக்டர் எனக்கு சிகிச்சை கொடுத்தார்.

நான் கிறிஸ்துவை ஏற்றுக் கொள்ளு கிறேன் என்று கூறிய மூன்றாவது நாளே கர்த்தர் எனக்கு ஆபரேஷன் இல்லாமல் சுகம் கொடுத்தார். அல்லேலூயா! அன்றி லிருந்து இதுவரை எனக்கு அப்படிபட்ட வியாதி வரவே இல்லை.

மேலும் அந்த டாக்டரும் வருடத் துக்கு 10 காணிக்கையை கிறிஸ்மஸ் தினம் அன்று செலுத்தச் சொன்னார்கள். அப் படியே கிறிஸ்துமஸ் தினமன்று அந்த காணிக்கையை கொடுத்து விட்டு வந்து விடுவேன் அவ்வளவு தான் மற்றபடி எனக்கு கிறிஸ்துவைப் பற்றி வேறு எது வும் தெரியாது. நான் பழையபடி இந்து வாகவே ஜீவித்து வந்தேன். நான் எப் பொழுதாவது "புதிய ஏற்பாடு" வைத்துக் கொண்டு படிப்பேன். ஆனால் ஒன்றும் புரியாது. பொருத்தனை பண்ணின காணிக் கையைக் கொடுக்க கிறிஸ்மஸ் அன்று C.S.I ஆலயத்திற்கு போவேன் மற்றப் படி அங்கு சொல்வது ஒன்றும் விளங்காது.

இப்படியிருக்கும் போது குடும்பத்திலே பிரச்சனைகள், கவலை, சண்டை, சந்தோஷ மில்லாமை ஆகியவற்றால் மிகவும் கஷ்டப் பட்டேன். மேலும் அடியாளை ஒரு பிசாசு (காளி) பிடித்திருந்தது அது எங்கா வது பம்பை, உடுக்கை போன்ற சத்தம் கேட்டவுடன் என்னையுமறியாமல் எவ்வள வு கட்டியிருந்தாலும் ஆடவைக்கும். ஆனால், என்னுடைய கணவர் கிறிஸ்துவை தெரிந்துக் கொண்டிருந்தார். சத்தியம் தெரி யாது எனக்கு அப்படிபட்ட பிசாசு ஆட் டிப்படைக்கும் போது இனஜனபந்துக்கள் சாமி! சாமி! என்று கூறுவார்கள் அவரோ இது ஒரு பேய், பிசாசு என்று சொல்லு வார். என்னுடைய கணவர் இராணுவத்தி லிருந்து ஓய்வு ஆகி ஊருக்கு வந்தார் அப்பொழுது எங்கள் குடும்பத்திற்கு விரோதிகள் எங்கள் கணவர் கையில் அதிக பணமிருக்கிறது என்றும்; என்னை சாகடித்து விட்டு எப்படியாவது அந்த பணத்தை தாங்கள் பெற்றுக் கொள்ள வேண்டுமென்று எனக்கு பில்லி சூனியம் செய்து வைத்து விட்டார்கள். அப்பொ ழுது என்னுடைய நான்காவது மகள் குழந்தையாக இருந்தாள். எனக்கு அவளு டைய நினைப்புக் கூட இருக்காது.

பில்லி சூனிய மந்திரவாத கட்டுகளால் பாதிக்கப்பட்டு நோய்வாய்ப்பட்டு, மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த போது என்னை ஒரு மந்திரகாரியிடம் கொண் டுபோனார்கள். அவர்கள் எனக்கு பிசாசு பிடித்திருக்கிறது என்று கூறி ஒரு கோழி வாங்கச் சொல்லி ஒரு காலை தலையில் வைத்து வேப்பிலையால் அடித்து விரட்ட நான் அந்த கோழியின் காலை கடித்தேன் நடந்த ஒன்றும் எனக்கு தெரியாது. இன்னொரு மந்திரவாதி கழுத்திலே ஒரு தாயத்தை கட்டினான் ஆனாலும் தொல் லை தீர்ந்தபாடில்லை. அப்பொழுது தான் நான் மீண்டுமாக கர்த்தரை தேட ஆரம்பிதேன். ஊரில் R.C ஆலயத்திற்கு கூட்டிக் கொண்டு போனார்கள். ஆனால் அந்த பில்லி சூனியம் அடியாளை விட்டு போகவில்லை.

அடியாளுடைய கணவருக்கு சென்னை யில் வேலைக்கிடைத்தது. சென்னை வந்த பிறகு அடியாள் ஆலயத்துக்கு போக ஆரம்பித்தேன். கர்த்தர் சுகம் கொடுப்பார் என்ற நம்பிக்கை வந்தது. இருப்பினும் குடும்பத்தில் கணவருக்கும் எனக்கும் அடிக்கடி சண்டை வந்துக் கொண்டே இருந்தது. ஒரு நாள் சண்டையின் போது கழுத்திலுள்ள அந்த தாயத்தை அறுத்து வீசி எறிந்து விட்டேன். ஆனாலும் இந்த பழக்கத்தை விடாமலிருந்தேன் கணவருக் கும் எனக்கும் சண்டை அதிகரித்துக் கொண்டேயிருந்தது. சத்துருக்களின் பில்லி சூனிய தொல்லைகள் அதிகமாகிக் கொண்டே இருந்தது. நான் தற்கொலை செய்துக் கொள்ளலாம் என்றுக் கூட எண்ணி

னேன். ஆனால் இந்த நான்கு பிள்ளைகளை யார் பார்த்துக் கொள்வார்கள் என நினைத்து முடிவை மாற்றிக் கொண்டேன்.

அதன் பிறகு நானும் பிள்ளைகளும் C.S.I ஆலயத்துக்கு தொடர்ந்து போக ஆரம்பித்தோம் ஆனால் சத்தியம் தெரியாது. வசனம் ஒன்றும் புரியாது. தொடர்ந்து போய் வந்தேன். குடும்பமாக C.S.I சபைக்கு போக ஆரம்பித்தோம். வீட்டிலும் ஜெபம் செய்து வந்தோம். கொஞ்சம் கொஞ்சமாக குடும்பத்திலே சமாதானம் கிடைத்தது.

1986 – ஆம் ஆண்டு குடும்பமாக C.S.I ல் தெளிப்பு ஞானஸ்நானம் பெற்றோம். ஆனாலும் பாவம் செய்வதை விடவில்லை. சினிமா, டி.வி பார்ப்பது போன்ற காரியங்களை விடவேயில்லை. அவை பாவம் என்றும் எங்களுக்கு யாரும் சொன்னதுமில்லை. குடும்ப ஜெபம்செய்வது கூட டி.வி நிகழ்ச்சியை தவிர்த்து விடாமல் செய்வோம். இப்படியிருக்கும் போது வீட்டுமனை வாங்கியதால் பொறாமைக் கொண்டவர்கள் குடும்பத்திலே கலகம் உண்டாகும்படியாக பில்லி சூனியம் செய்து வைத்து விட்டார்கள். அதனால் கணவர் வேலைக்கு போக முடியாமல் அடியாள் மீது சந்தேகம் ஏற்பட்டு சண்டை ஏற்பட்டது. அந்த சண்டை நாள் தோறும் அதிகமாகிக் கொண்டேயிருந்தது. பல ஆவிக்குரிய சபைகளுக்கு சென்றோம். அவர்களெல்லாரும் எங்கள் கஷ்டம் போக வேண்டுமானால் ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ள வேண்டுமெனக் கூறினார்கள். A G சபையின் கிளை ஒன்று Fire of God என்ற பெயரில் விளாகத்தில் உள்ளது. அங்கு சென்றபோது ஒரு மாதத்திலே எனக்கும் என் கணவருக்கும் முழுக்கு ஞானஸ்நானம் கொடுத்தார்கள். பாவ அறிக்கை எதுவும் செய்ய வில்லை, செய்யச் சொல்லவுமில்லை. நகை ஒன்றும் கழற்றவில்லை. கழற்ற சொல்லவுமில்லை. அந்த சபையைச் சேர்ந்த ஊழியக்காரிகள் வந்து வீட்டில் ஜெபம் பண்ணினார்கள். ஆனால் வீட்டிலே சண்டைத் தீரவில்லை, சமாதானமில்லை. யாருமே எங்கள் பிரச்சனைக்கு என்னக் காரணம் என்றுக் கூறவே இல்லை. ஞானஸ்நானம் எடுத்தபிறகு சண்டை மிகவும் பலத்துவிட்டது.

(தொடரும்)

## பெண்கள்

[தொடர்ச்சி]

பிள்ளைகளுக்கு விசேஷமாய் பெண் பிள்ளைகளுக்கு சரியான கல்வியையும் தேவதாபக்தியையும் படிப்பிக்க வேண்டும். சிறு பிராயத்தில் தாய் தகப்பன்மார்கள் அடக்கி நன்மார்க்கத்தில் கொண்டு வந்ததினால் நற்குணங்களில் சிறந்து தேவதா பக்தியோடு விளங்கிய ஒரு கிறிஸ்தவஸ்திரீயினுடைய குணாதிசயங்களை ஒருவர் வர்ணித்துள்ளதைப் பாருங்கள்! அவள் புண்ணிய பொக்கிஷம், பொறுமைக்கு இருப்பிடம், ஞானக் களஞ்சியம், நற்குணப் பாத்திரம், கற்பாலங்காரி, கனவு உபகாரி, அற்புத சுந்தரி, அறிவிலே மந்திரி விற்பன விசாரணி, வினய சம்பூரணி அவள் வாடாத புஷ்பம், மங்காத தீபம் ஆடாத மாமயில், அலையாத மாங்குயில் ஓடாத புள்ளிமான், பறவாத பைங்கிளி மாற்றிலா தங்கம், மாசிலா மாணிக்கம், கோதிலா கரும்பு, குறையில்லா சந்திரன்.

அவளைப் பார்த்தாலும் பசிதீரும், அவளைக் கண்டாலும் கலி நீங்கும்; அவள் பிராணன் போனாலும் ஒரு பொய் சொல்லத் துணியாள். பாவமென்றால் பாம்பைக் கண்டது போல் நடுங்குவாள். அவள் எந்த வேலையைச் செய்தாலும் கடவுளைத் தியானிக்க மறவாள். அவள் எந்த உயிரையும் சொந்த உயிர்போல எண்ணி உபகாரஞ் செய்வாள். கணவனுக்கு அற்ப வருத்தமுமில்லாமல் குடும்ப பாரங்களையெல்லாம் தானே தாங்கிக் கொள்வாள். குடும்பத்துக்கு வேண்டிய பண்டம் பாடிகளையெல்லாம் தக்க காலத்தில் சேர்த்து வைத்துவிடுவாள். வருமானத்துக்கு மிஞ்சி செலவு செய்யாள். தன்னுடைய அந்தஸ்துக்கு தகுந்த காரியங்களை யாதொரு குறைவும் செய்யாள். தன் வீட்டுக் காரியங்களை வெளியே பேசாள். பிறர் மேல் நிந்தையான வார்த்தைகளை தானும் பேசாள் பிறர் பேசவும் இடங்கொடாள்.

அவளுடைய உள்ளம் எப்படி நிர்மலமோ அப்படியே அவளுடைய தேகமும் ஆடையும் எப்பொழுதும் பரிசுத்தமாயிருக்கும்; அவளுடைய வீடு, பாத்திர முதலியவைகளை துலக்கி கண்ணாடி போல வைத்திருப்பாள் அசுத்தமென்றால் மருந்துக்குக்கூட அவளுடைய வீட்டில் அகப்படாது. அவளுடைய குடித்தன பாங்கும் அன்பும் மரியாதையும் அற்புதம், அற்புதம் என்று யாவரும் மெச்சுவார்கள். அந்த கற்புக்கரசியின் மேல் தோஷம் நினைத்தால் தலை வெடிக்குமென்று பயந்து காமதூரர்களும் அவளுடைய கற்புக்கு தீங்கு நினையார்கள். அவள் வேலைக்காரர்களை பிரீதியாகவும் விவேகமாகவும் நடத்தும் தன்மையினால் அவர்கள் சகல வேலைகளையும் தாங்களே மனோ உற்சாகமாய் செய்து முடிப்பார்கள்.

அவளுடைய கைப்பட்டால் வேம்பும் கரும்பாகும் அவள் சமைத்தால் பிடிசாதம் இறங்காதவர்களும் படிசாதம் உண்ணுவார்கள். அன்னதுவேசம் உள்ளவர்களும் போஜனப்பிரியராவார்கள். தீராத ரோகிகளும் சுகமடைந்து திடகாத்திரமாவார்கள். அவள் ஆக்கும் கறி கமகமவென்று வீடெல்லாம் மணக்கும். உண்ட வாயும் மணக்கும் கை கழுவிய நீரெல்லாம் மணக்கும். பின்னும் ஊரெல்லாம் மணக்கும். அவளுடைய வீட்டில் சாப்பிடக்கூடாதவர்களும் அவளுடைய சமையலுக்கு வாய் ஊறுவார்கள்.

அவள் வீட்டு வேலைகளையெல்லாம் குறையற செய்து முடித்த பின்பு நல்ல புத்தகங்களை எடுத்து வாசிப்பாள். வேதம் படிப்பாள் சில நேரம் சங்கீதம் பாடுவாள். பிரார்த்தனையில் ஈடுபடுவாள். சில நேரம் தையல் முதலிய சிற்சில வேலைகளைச் செய்வாள் கணவனே அவளுக்குகதி. அவளுக்கு நிதி, பர்த்தாவுடன் கூடி வாழ்வதே அவளுக்கு பரமானந்தம். பர்த்தா இருக்குமிடம் காடாயிருந்தாலும் அவளுக்கு ராஜதானி பட்டணத்துக்குச் சமானம். பட்டணமாயிருந்தாலும் பர்த்தா இல்லாத இடமே அவளுக்கு பாழ். கணவனுடைய பட்சமே அவளுடைய இலட்சியம். அவளுக்கு என்ன துன்பம் வந்தாலும் கணவனுடைய கிருபா நோக்கம் பட்டால் அவளுடைய கஷ்டமெல்லாம் சூரியனைக் கண்ட பனி போல் நீங்கும். அவளுக்கு எவ்வளவு பாக்கியம் இருந்தாலும் கணவனுடைய கிருபை மட்டும் நீங்கினால் ஜலத்தை விட்டு நீங்கிய தாமரை போலவும், நிலத்தை விட்டு நீங்கிய பயிர் போலவும் வாடுவாள்.

(தொடரும்)

---

"குணசாலியான ஸ்திரீயைக் கண்டுபிடிப்பவன் யார்? அவளுடைய விலை முத்துகளைப் பார்க்கிலும் உயர்ந்தது" நீதி. :31:10).

# புதிய எருசலேம் செய்தி

## PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் 125 - NOV. '94



"புதிய எருசலேம் சபை"

" வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவார்(ர்)என்று நீங்கள் அறியீர்கள் விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்.."

- மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதகர்களுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10:40-43).

CHIEF PASTOR N. LAZAR

## இதழின் உள்ளே...

# ஆசிரியர் உரை

அனைவருக்கும் மகிழ்ச்சியுண்டாகும் விழாக் காலங்கள் வரப்போகிறது. இதோ எல்லா ஜனத்துக்கும் மிகுந்த சந்தோஷத்தை உண்டாக்கும் நற்செய்தி: கிறிஸ்துவின் பிறப்பு!

அவர் பிறந்த நாளைக் குறித்து வாக்குவாதங்கள் இருந்தாலும் ஆண்டு அது தான். உலகத்தில் யாருடைய பிறப்பினாலும் எல்லா ஜனத்துக்கும் சந்தோ ஷம் உண்டானதில்லை. ஆனால் கிறிஸ்துவின் பிறப்பினால் உண்டாயிற்று. மனிதர்களுக்குத்தான் மிகுந்த சந்தோஷம். பேய்களுக்கு குலை நடுக்கம்தான். ஆம், உண்மையான மனிதனுக்கே சந்தோஷம். அவரை விசுவாசித்த மக்க ளுக்கெல்லாம் சந்தோஷம் உண்டாயிற்று. அந்த பட்டணத்தில் மிகுந்த சந்தோ ஷம் உண்டாயிற்று (அப். 8:8). எங்கெல்லாம் கிறிஸ்துவின் வெளிச்சம் பிர வேசித்ததோ அங்கெல்லாம் நாகரிகமுண்டாயிற்று. மூட பாரம்பரியங்களும், கொடுமையும் நிறுத்தப்பட்டன.

இன்று இந்தியாவில் சிலர் கிறிஸ்துவையும், கிறிஸ்தவ மார்க்கத்தையும் பகைக்கிறார்கள். மததுவேசத்தைப் பரப்பி பாமர மக்களை வஞ்சிக்கிறார்கள். அறிவுள்ளவர்கள் சிந்திக்க வேண்டும். இந்துமதத்தில் காணப்பட்ட மூடப் பாரம்பரியங்களாகிய சரக பூஜை: 30 அடி கம்பத்தில் கட்டப்பட்ட கயிற்றில் கொக்கி மாட்டி அம்மனுக்கு நேர்ச்சை செய்தவர்கள். அந்த கொக்கிகளை விலாவில் மாட்டி சுற்றுவது; இதில் சாகிறவர்கள் அம்மனுக்கு பிரீதியானவர்கள் என்கிற பழக்கம். இதுவே சரக பூஜை. இந்தக் கொடூர பாதகக் கொலை செயலை 1863-ம் ஆண்டில் அரசாங்க சட்டத்தால் நிறுத்தப்பட்டது.

"ஹரிபோல்" "ஹரிபோல்":- ஒருவன் மரிக்கும் தருவாயில் அவனை கொண்டு போய் "போல் ஹரி" என்று வற்புறுத்தி, சொல்லச் செய்து கங்கை ஆற்றில் முக்கிக் கொல்வது. இது 1831-ம் ஆண்டு சட்ட பலத்தால் நிறுத்தப் பட்டது.

"சதீதகனம்" - உடன்கட்டை ஏறுதல் என்பது. கணவன் மரித்ததும், அவன் முக்தி சேர அவன் மனைவியையும் அவனோடே கூட தீயிலிட்டுத் தக னிப்பது. இதுவும் 1841- ல் அரசாங்க சட்டத்தால் தடைசெய்யப்பட்டது.

"மஹா பரஸ்தானம்" - நீரிலாவது, நெருப்பிலாவது தானாகவே விழுந்து மரிப்பது. இதுவும் அரசாங்க சட்டத்தால் தடை செய்யப்பட்டது.

"பருகூத் பன்னம்" - கங்கை நதியில் இந்து சுவாமிக்கு அர்பணமாக குழந்தைகளை எறிந்து விடுதல். இதையும் அரசாங்கம் சட்டம் இயற்றி தடுத்தது.

"நாமதேயம்" - இது இந்து யாகத்தில் வெளியூர்க்காரனையாவது, ஏழையையாவது பிடித்து கொலை செய்வது. இதுவும் 1845-ம் ஆண்டு அரசாங்க சட்டத்தால் நிறுத்தப்பட்டது. ஆனாலும் இந்துக்கள் ஆங்காங்கு இதை செய்கிறார்கள். தினசரியில் வருவது அதுதான்.

"கங்காரேவா ஸமபாதனம்"- பெற்றோர்கள் தங்கள் முதல் பிள்ளையை கங்கை கடல் சங்கமமாகுமிடத்தில் 'கங்கா சாஹர சங்கமம்' என்னுமிடத்தில் நீரில் வீசிவிடுவது. இக் கொடிய பழக்கத்தை 1885-ம் ஆண்டு அரசாங்கம் சட்டமியற்றி நிறுத்தியது. இன்றும் இந்துக்கள் தங்கள் பெண் குழந்தைகளை கள்ளப் பிள்ளைகளைக் கொல்லுவதைப் பார்க்கிறோம். இது தமிழ் நாட்டு சின்ன சேலம் ஜில்லாவில் அதிகம்.

"அம்மனுக்கு விடுதல்" - பக்தியின் பெயரால் தங்கள் பிள்ளைகளை அம்மனுக்கு விடுதல். விபசார வாழ்க்கையற்ற இந்து கோயிலில் கொண்டு போய் விடும் அவலம். இந்நாட்களிலும் தென் இந்தியாவில் விசேஷமாக கர்நாடகத்தில் நடைபெறுகிறது.

கிறிஸ்து மார்க்க வெளிச்சத்தினால் அல்லவா இக்கொடிய பாதகங்கள் நிறுத்தப்பட்டன. என்பதை மறந்து விடக்கூடாது. "இதோ நான் உலகத்துக்கு ஒளியாயிருக்கிறேன்" என்ற இறைவனின் பிறப்பே எல்லா ஜனத்துக்கும் மிகுந்த சந்தோஷமும், விடுதலையும், சமாதானமும் சுகமுமாம். மனிதனை முக்தி சேர்க்கும் ஒரே வழி சத்தியம், ஜீவன் இயேசுவே (யோ. 14:6). வாருங்கள் நாம் எல்லோரும் சந்தோஷப்படுவோம்!

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

(CHIEF PASTOR N. LAZAR)

# இயேசு கிறிஸ்துவின் பிறப்பு

### தேவன் அவதரித்துவருவார் என்று நம்ப ஆதாரமுண்டா?

யாதாமோர் ஆச்சரியமான காரியம் நடந்ததோ இல்லையோ என்று விசாரிக்குமிடத்தில், நாம் சாதாரணமாக உள்ள ஸ்திதியைக் கொண்டு அவ்வகைக்காரியம் நடந்ததோ நடக்கவில்லையோ, நடந்ததென்றால் காரணம் ஏதாவது உண்டா? காரணம் இருக்கும் பட்சத்தில் அவ்விதம் நடக்குமென்று நம்புவதற்கு தகுந்த ஆதாரம் இருக்கிறதோ இல்லையோ முன்னமே விசாரித்து, நிச்சயித்து பிறகு அக்காரியத்தைக் குறித்து சாட்சியை குறித்து, பரிசோதிப்போம்

வியாச்சிய காரியங்கள் விஷயத்திலும், சாதாரண சங்கதிகள் விஷயத்திலும் இவ்வண்ணம் விசாரிக்கிறதுண்டு. ஒரு விஷயம் நடந்திருக்கவே முடியாதென்று நிச்சயிக்கப்படுமானால், அப்படியிருக்கும் பட்சத்தில் அது நடந்ததென்று எத்தனைபேர் சாட்சி கொடுத்தாலும் அவர்கள் சாட்சி அங்கீகரிக்கத்தகாதவை என்று எண்ணுவோம்.

இதுவுமன்றி, ஒரு காரியம் கூடியதென்று தெரிந்தாலும் அதற்கு தகுந்த காரணம் இருந்தாலொழிய எந்த சாட்சியையாகிலும் ஏற்றுக்கொள்ளுகிறதற்கு மனமிராது. அல்லாமலும், அது கூடியதாயிருந்து, அதற்கும் போதுமான காரணமிருந்தாலும் அக்காலத்தில் அது நடக்குமென்று நம்புகிறதற்கு கொஞ்சமாகிலும் ஆதாரம் இருந்தாலொழிய நாம் சாதாரணமாக சந்தேகிப்போம் அதிசயமான காரியங்களைக் குறித்து நாம் விசாரிக்கும் போது இவ்வகை சந்தேகங்கள் தோன்றினாலும் நாம் விசாரிக்கையில் சகலமும் அநுகூலமாயிருந்தால் அவை நடந்திருக்கலாமென்று சாதாரணமாய் ஒத்துக் கொள்வோம். எந்தக்காரியம் கூடியதென்று நிச்சயித்து, அதற்கு தகுந்த காரணம் கண்டுபிடித்து, இவ்விதம் நடக்குமென்று, ஆதாரமிருக்கிறதென்று பாவித்துக் கொள்வோமே, அந்தக் காரியத்தைக் குறித்த சாட்சியை அங்கீகரிக்கிறதற்குச் சந்தேகமிராது.

இயேசுகிறிஸ்து நாதர் அவதரித்தவர்தாமோ இல்லையாவென்று விசாரிக்கும் பொழுது, நாம் இவ்விதமாகவே விசாரிக்க வேண்டும். ஆகையால் இவருடைய மகத்துவத்துக்குரிய சாட்சியை விசாரிக்கு முன்னர், நாம் உண்மையான நிலையைக் கொண்டு தேவன் நராவதாரம் எடுத்து வந்தது உண்மைதானா என்று ஜாக்கிரதையாக விசாரித்து, அறிந்துகொள்வது அதிக உத்தமமானது.

ஒரே தேவன் உண்டென்கிற கொள்கையுடைய சமயத்தவர்கள் அவதார உபதேசத்தைதள்ளி, தேவன் நராவதாரம் எடுத்து வருவது கூடாதகாரியமென்று வாதிப்பார்கள். இத்தேசத்திலுள்ள இந்து மதத்திலுள்ள துர்நடக்கைகளைத் தள்ளி, ஆவியாயிருக்கிற ஏகதேவனை ஆராதிக்கிற பிரமசமாஜ சமயத்தார் இவ்விதக்கொள்கையுடையவர்கள்.

அவர்களும் அவர்களைப்போல் மற்ற சமயத்தார்களில் சிலரும் சர்வ வல்லவரும், சர்வவியாபகரும், காணப்படாதவரும், அளவில்லா லட்சணமுடையவருமான சுயம்புவானவருமான, ஞானமுள்ள தேவன் தம்மைக் காலஸ்தல நிபந்தனைக்குள்ளாக்கி எப்படி நரரூபம் தரித்துக் கொள்வாரென்றும், அப்படித்தரித்தால் அதாவது தெய்வீகத்திற்கு பழுதுண்டாகி, அவரது அளவிடப்படாமை நீங்கிப்போகுமென்று சாதிப்பார்கள்.

ஒருவன் தன் அனுமதியின்றி கட்டுப்

பாட்டுக்குள்ளாக்கப்பட்டால், அவன் அந்நிபந்தனைக்குட்பட்டு பூரணமாகமாட்டானேயன்றி, ஒருவன் தகுந்த காரணத்தினால் தானுத்தேசித்துக் கொண்டு எவ்வளவு நிபந்தனைகளுக்குத் தன்னை உட்படுத்திக் கொண்டாலும் அவனுக்கு குறைவொன்றுமிராது எக்காலத்திலும் எவ்விடங்களிலும் ஒளிகொடுக்கும் சூரியன் நீர்த்துளியில் தன் நிஜரூபத்தைக் காட்டுவதுபோல, பரஞ்சோதியான கடவுள் தம் இயற்கை பிரகாசத்தை நரரூபத்தில் காண்பிக்கக் கூடாதா?

மனித ஜாதியை சிருஷ்டித்தபோது தேவன் அவர்களைத் தம் சாயலில் சிருஷ்டித்தமையால், தேவ சுபாவத்திற்கும், நரசுபாவத்திற்கும் சில சம்பந்தங்கள் உண்டு என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையினால் தேவன் நரரூபம் தரித்துக்கொள்ள திருவுளம் கொள்ளும் பட்சத்தில், அவர் தம் இயற்கை லட்சணங்கள் யாவையும் துறந்து வேறு லட்சணங்களை அணிந்து கொள்ள அவசியமில்லையானாலும் தமக்கு இயல்பாய் உள்ள லட்சணங்களைத் தாழ்த்திக் கொண்டு, தம்மைக் காலஸ்தல நிபந்தனைக்குள்ளாக்கிக் கொள்ளும் பட்சத்தில் அந்நோக்கம் சித்திபெறும். மனுமக்கள் ஸ்திதியைப் பரிசோதனை செய்து பார்க்குங்கால், தேவன் மேன்மை வழியொன்று ஏற்படுத்தினாலொழிய, மனுக்குலம் அவருடைய நிஜசுபாவத்தை அறியாமல் எக்காலமும் பாவ அந்தகாரத்தில் சிக்கி, நற்கதியை அடைய முடியாமல் அதிக அவஸ்தைபடும் என்றே அநேக திருஷ்டாந்தங்களினால் தெரிகிறது.

தேவன் உண்டென்று மனிதரெல்லாரும் சாதாரணமாய் தெரிந்திருந்தாலும், தம்மைச் சூழ்ந்திருக்கும் பாவ அந்தகாரத்திலிருந்து விடுதலையடைய முடியாமல் சந்தேகசாகரத்தில் மூழ்கியிருக்கிறார்கள்.

நானா தேசங்களிலுமுள்ள மதாச்சாரங்களையும் மதோபதேசங்களையும் பரிசோதிக்கையில் மானிடர் புண்ணியநெறிதவறி எவ்வளவு மதிகேடராக இருக்கிறார்கள் என்பது நமக்குத் தெளிவாய் விளங்கும். சத்திய வேதம் கூறுகிறபடி, "அவர்கள் தங்கள் சிந்தனையில் வீணரானார்கள்; உணர்வில்லாத அவர்கள் இருதயம் இருளடைந்தது அவர்கள் தங்களை ஞானிகளென்று சொல்லியும் பைத்தியக்காரராகி, அழிவில்லாத தேவனுடைய மகிமையை அழிவுள்ள மனுஷர்கள், பறவைகள், மிருகங்கள், ஊரும்பிராணிகள் ஆகிய இவைகளுடைய ரூபங்களுக்கு ஒப்பாக மாற்றினார்கள். தேவனுடைய சத்தியத்தை அவர்கள் பொய்யாக மாற்றி சிருஷ்டிகரைத் தொழுது சேவியாமல் சிருஷ்டியைத் தொழுது சேவித்தார்கள். (ரோம. 1:22,23, 25) என்பது எவ்வளவு உண்மை.

பாமரர்கள் மாத்திரமல்ல, சாஸ்திரங்கள் படித்துத் தேறிய புலவர்களும்கூட தம்மை சிருஷ்டித்த சர்வேசுவரனைத்தள்ளி, அவருக்குப் பதிலாய் அநேகத்தேவர்களை சேவித்து, அத்தேவர்களுக்கு எத்தனையோ இழிகுணங்களைச் சூட்டி, அவர்கள் சொல்லமுடியாத தீய கிரியைகளைச் செய்ததாக கணக்கில்லா புராணக்கதைகளை கற்பனைபண்ணி விளம்பரம் செய்திருக்கிறார்களல்லவா?

மனிதர்கள் இவ்வித துர் அப்பியாசங்களைக் கையாடுவது ஆச்சரியமல்ல. அது அப்படித்தான் இருக்கும். கண்ணில் சதை வளர்ந்தால் அதின் பார்வைக்கு சகல வஸ்துக்களும் விகாரமாய்த் தோன்றுமேயன்றி ஒன்றையினும் சரிவரக் காணப்படாது. இவ்விதமே பாவக் கறைபிடித்த மனதுக்கு ஒன்றும் சரியாய்த் தோன்றாது.

ஆகையால் தேவனே தம்மை வெளிப்படுத்தினாலொழிய தேவனுடைய உண்மை ஸ்திதியை மனுமக்கள் காணமுடியாது. மனுமக்களுடைய பாவாந்தகாரம் என்றென்றைக்கும் தொலையவே தொலையாது. மனுமக்கள் பட்சத்தில் பார்த்தால் நற்கதி கிடைக்க வழியொன்றுமே இல்லை. தேவனி

ருக்கும் பட்சத்தில் அவர் மனிதர் நிலையைக் கண்டு, மனதிரங்கி, மோட்சமளிக்கும் ஓர் வழியை நியமிப்பார் என்பது நிச்சயம். ஒரு வேந்தன் அரசோச்சும் காலங்களில், ஓர் பட்டணத்தில் ஜனங்கள் நீதி நெறி தவறி முற்றிலும் கெட்டுப்போனால், அவ்வரசன் தன் நகர் துறந்து, அப்பட்டணம் சென்று, துன்மார்க்கர் நிலையை விசாரித்தறிந்து, அவர்கள் பற்றிய துர்ஒழுக்கங்களை நிர்மூலம் செய்து, நீதி நெறிகளை நிலை நிறுத்தும்பொருட்டு தன்னாலான பிரயாசம் படுவானல்லவா? அதனால் தேவன் அவதாரமெடுத்து வரவேண்டியது அவசியமே.

பையன் ஒருவன் கிணற்றில் விழுந்து விட்டால், மற்றவர்கள் ஒருவேளை ஓரத்தில் நின்று கவைக்குதவாத கூச்சல் போடுவார்கள்; ஆனால் தகப்பன் வந்தவுடனே ஜீவனையும் ஒரு பொருட்டென்று எண்ணாமல், கிணற்றில் குதித்து எவ்வகையிலும் தன் குழந்தையைக் காப்பாற்றுவானல்லவா? அப்படியே கடவுள் தம்பிள்ளைகளாகிய மனுமக்களை தூக்கி எடுத்துக் காப்பாற்ற பெத்லகேமிலே மனிதனாய்ப் பிறந்தார் அதுவே கிறிஸ்து பிறப்பின் பண்டிகை. இயேசு என்று அசரீரியாய் நாமந்தரிக்கப் பெற்றார். இயேசு என்ற நாம அர்த்தம் அவர்தம் ஜனங்களை பாவத்திலிருந்தும், எல்லா நெருக்கடிகளிலிருந்தும் இரட்சிக்கிறவர் என்பதாம் [மத். 1:21].

நீ மெய்தேவனை விசுவாசித்தால்; அவரைத் தொழுதுகொண்டால், பாவ விமோசனம் அடைவாய். தம்முடைய பிள்ளைகளையெல்லாம் அவர் தூக்கி இரட்சித்துக் கொண்டிருக்கிறாரே. இதோ இறைஇயேசுவின் பிறப்பின் பண்டிகை! பிறந்த குழந்தையைத் தொழுது கொள்!! இதோ தேவன் பிறந்து விட்டார்!!!

"கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசி; அப்பொழுது நீயும் உன் வீட்டாரும் இரட்சிக்கப்படுவீர்கள்" அப். 16:13.

## கிறிஸ்தவ மார்க்கம் (தொடர்ச்சி)

### திருவிருந்து [நற்கருணை]

### [LORD'S SUPPER]

'இது என் சரீரம்'; 'இது என் இரத்தம்' என்ற வார்த்தைகளுக்கு வேதசாஸ்திரிகளிடையே பல வேறுபட்ட கருத்துக்கள் இருக்கின்றன; அவர்கள் பலவாறுய பொருளுரைக்கின்றனர். ரோமன் மார்க்கத்தார், குருவானவர் லத்தின்மொழியில் அப்பத்தையும், இரசத்தையும் ஆசீர்வதித்தபின் அது இயேசுவின் சரீரமாயும், அவருடைய ரத்தமாயும் மாறிவிடுகிறது என்று சொல்லுகிறார்கள். பிராட்டஸ்டாண்டு காரர்கள் அவ்விதமாய் சாதிக்கிறதில்லை.

ரோமன் மார்க்கத்தார் இப்படி உரு மாற்றுகொள்கையைக் கடைபிடித்தால், இயேசுவை பேழையில் பூட்டிவைத்து, இயேசுவின் சரீரமென்று அதற்கு ஆரா

தனை செய்கிறார்கள். ஒரு இந்துவிடம் உன் சாமி எங்கே என்றால் அவன் கோயிலுக்கு அழைத்து சென்று அவனுடைய கோயிலின் மூல ஸ்தானத்திலிருக்கும் சிலையைக் காண்பிப்பதுபோல; சர்வ வியாபகரும், சர்வ வல்லமையும், மகிமையும் உடையவருமாகிய இறைவனை; சிலை வழிபாட்டை முற்றிலும் மறுத்தவரும் [யாத். 20:4,5; லேவி. 26:1; உபா. 4:16; ஏசா. 40:18-25] அதுவே பாவத்திற்கு அடிப்படையான காரணம் [ரோம. 1:18-32] என்று கூறியவருமாகிய இறைவனை [சிலையாக்கி] மக்கள் மனதை மயக்கி குருடாக்கி கும்பிட வைக்கின்றனர்.

ரோமன் மார்க்கத்தாரும், அவ்வழி வந்தவர்களும் கீழ்படியாத இஸ்ரவேலர்கள் உடன்படிக்கை பெட்டியை தூக்கி யுத்த களத்துக்கு கொண்டு வந்தது போல் [1 சாமு. 4:2-5] நாங்களும் செய்கிறோமென்று பவனியாக வேறு பேழையை கொண்டு செல்லுகின்றனர். அவர்கள் [அன்றிருந்த இஸ்ரவேலர்கள்] இரட்சிக்கப்படாததுபோல [1 சாமு. 4:3,10,11,22] இவர்களும் இரட்சிக்கப்படமாட்டார்கள். இன்னும் இது சம்மந்தப்பட்ட அநேக தப்பறைகளையும், மூடப்பழக்கங்களையும், வேதத்தில் சொல்லப்படாத சடங்குமுறைகளையும் கொண்டு வந்து மெய்யாகவே திருவிருந்தின் மேன்மைகளை மீறிவிட்டனர்.

பிராட்டஸ்டண்டு காரர்களோ நினைவு கூருதல் மட்டும் தான் வேறொன்றும் அதில் அதிசயமொன்றுமில்லையென்றுவெறுஞ்சடங்காச்சாரமாய் ஆக்கி விட்டனர். இதனால் அதின் ஆசீர்வாதங்களை இழந்து அதை முறையாய் விசுவாசிக்காமலும், ஆசரிக்காமலும் இயேசுவின் கட்டளையை விட்டு விட்டனர். இதைப்பற்றி கிறிஸ்தவ சமுதாயம் என்று சொல்லப்படுகிற மண்டலத்தில் காணப்படுகிற வித்தியாசமான கொள்கைகள் பின்வருமாறு:-

1. ரோமன் கத்தோலிக்க் கொள்கை:- [Transubstantiation]

உருமாற்றம் என்பது. அதாவது அப்பம், திராட்சரசம் இரண்டும் இயேசுவின் மாம்சமாகவும் ரத்தமாகவும் மாறிவிடுகிறது என்பதாம். குருமார்கள் லத்தீன் மொழியில் இது என்னுடைய சரீரம், இது என்னுடைய ரத்தம் என்று கூறும் போது இந்த பொருள் மாற்றம் உண்டாகிறது என்பது.

இயேசுவின் திருமொழியை நாம் ஆராய்வோம். இயேசுவானவர் இத்திருமொழியை முதல் முதல் முன் வைத்துச் சொல்லப்பட்ட அப்போஸ்தலர்களோடு நம்மையும் இணைத்துக் கொள்ளலாம். இயேசுவானவர் இது என்னுடைய சரீரமாயிருக்கிறது என்று கூறிய பின்னர் அவர் திடீரென்று மறைந்துபோனதிலையில், அப்போஸ்தலர்கள் அவரைக் காணாமல் அப்பத்தை மட்டும் கண்டிருந்தால், அவருடைய திருச்சரீரம் அற்புதமாய், அப்பமாய் மாறிவிட்டதென்று புரிந்து கொண்டிருப்பார்கள். ஆனால் ஆண்டவருடைய பரிசுத்த சரீரம் இன்னும் அங்கேயிருந்தது. அவருடைய திருக்கரங்களில் ஏந்தியிருந்த அப்பமும் கூட அங்கேயேயிருந்தது. இப்படித் தான் விளங்கிக்கொள்ளும்படி கர்த்தர் அப்படிச் செய்தார்.

அப்போஸ்தலனாகிய பவுல் சொல்லுகிறதையும் கேளுங்கள். நான் உங்களுக்கு ஒப்புக்கொடுத்ததை கர்த்தரிடத்தில் பெற்றுக் கொண்டேன். அது என்னவெனில், கர்த்தராகிய இயேசு தாம் காட்டிக்கொடுக்கப்பட்ட அன்று ராத்திரியிலே, அப்பத்தை எடுத்து ஸ்தோத்திரம் பண்ணி அதைப் பிட்டு நீங்கள் வாங்கிப் புசியுங்கள்; இது உங்களுக்காக பிட்கப்படுகிற என்னுடைய சரீரமாயிருக்கிறது. என்னை நினைவு கூரும்படி இதைச் செய்யுங்கள் என்றார். போஜனம் பண்ணின பின்பு, அந்தப்படியே பாத்திரத்தையும் எடுத்து, இந்தப் பாத்திரம் என் ரத்தத்தினாலாகிய புதிய உடன்படிக்கையாயிருக்கிறது. நீங்கள் இதில் பானம் பண்ணும்போதெல்லாம்

என்னை நினைவு கூரும்படி இதைச் செய்யுங்கள் என்றார் [1 கொரி. 11:23-25] இப்படிச் சொன்னபின் இந்த அப்பம், இந்த பாத்திரம் என்கிறார் 1 கொரி. 11:26,28 மேலும் கர்த்தருடைய அப்பம் கர்த்தருடைய பாத்திரம் என்று சொல்கிறார் (1 கொரி. 11:27).

ஆனபடியால் அது பிரதிஷ்டை பண்ணப்பட்ட பின்பும் கர்த்தருடைய சரீரமாகவும் கர்த்தருடைய ரத்தமாகவும் மாறவில்லை இன்னும் அப்பமாகவேயிருக்கிறதென்று அறிகிறோம். அப்படி உருமாறிவிட்டதென்றால் என்னை நினைவுகூரும்படி இதைச் செய்யுங்கள் என்று சொல்லியிருக்கமாட்டாரே.

2.லூத்தரன் சபையார் லூத்தரின் கொள்கையைப் பின்பற்றி வந்தனர். அதற்கு உடன் பொருள் கொள்கை [Consubstantiation] என்று பெயர்.

லூத்தர் பொருட்களில் மாற்றம் உண்டாகிறது என்பதை நம்பவில்லை. திருவிருந்து பொருட்களில் கிறிஸ்துவின் ரத்தமும்; சரீரமும் இருந்தன என்று நம்பினார். அதாவது அப்பத்தில் சரீரமும; திராட்சரசத்தில் ரத்தமும் இருந்ததென்றார்.

லூத்தர் தம் மரணபரியந்தம் சத்திய வேதத்துக்கு ஒத்தபடி இந்த சாக்ரமெந்தில் அப்பத்திலும், இரசத்திலும்; கிறிஸ்துவின் சரீரமும்; ரத்தமும் மெய்யாய்ப் பிரசன்னமாயிருக்கிறதென்றே போதித்தார்.

3.இராஸ்மஸ் என்பவருடைய உருவகக் கொள்கை [SYMBOLIC THEORY]:-

சீர்திருத்தக்காலத்தில் ஸ்விஸ் நாட்டைச் சேர்ந்த சுவிங்கிலி என்பவர் இக்கருத்தை மக்களிடையே பெரிதும் பரவச் செய்தார். அவர் அப்பத்தையும், திராட்சரசத்தையும் கிருபை பெற்றுக் கொள்வதற்கு ஒரு வழி என்பதைவிட ஏற்கனவே பெற்றுக் கொண்ட கிருபைக்கு அடையாளம் என்றார். மேலும், ஆண்டவருடைய திருவிருந்தில் கிறிஸ்து உண்மையாய் பிரசன்னமாயிருக்கிறார் என்று நம்புகிறோம். ஆம் அவருடைய அத்தகைய பிரசன்னம் இல்லாமல் திருவிருந்து இல்லை கிறிஸ்துவின் உண்மையான சரீரத்தை திருவிருந்தில் உண்கிறோம் என்று நம்புகிறோம். தசையுடனும், ருசியுடனுமல்ல ஆனால் புனிதமான ஆவிக்குரிய சின்னங்கள் என்னும் நிலையில் மாற்று ஈடுபாடும் நம்பிக்கையும் பக்தியும் உள்ள இதயத்துடன் உண்கிறோம் என்கிறார்.

லூத்தரிலிருந்து வேறுபட்ட சுவிங்கிலி: ஆவியில் கிறிஸ்துவானவர் பிரசன்னமாயிருக்கிறதை உணர்த்துகிறது வாயினாலே அல்ல ஆனால் விசுவாசத்தின் மூலமாக இதயத்தில் பெறும் தன்மையைக் கூறுகின்றது என்பதே.

**பரிசுத்தவிவாகம்**

| மணமகன் | மணமகள் | இடம் | காலம் |
|---|---|---|---|
| Bro' பிலிப்பு | Sis' புஷ்பா-பாய் | காப்புக்காடு | 12.10.94 |

4. ஜான் கால்வின்:-

இவர் திருவிருந்தில் நிறுவப்பட்டதை ஒரு உருவகப்பொருளில் விளங்கிக் கொண்டார் என்றாலும், சின்னங்கள் வெறுமையானவையல்ல ஆனால் அவை கண்ணுக்குப் புலப்படாத பொருள்களின் உறுதியை அருளிச்செய்தன நாம் பரிசுத்த ஆவியானவர் மூலமாக விசுவாசத்தினாலே ஆண்டவருடைய திருவிருந்தில் பங்கு பெறும் போது, நாம் அவசியமான ஆவிக்குரிய பொருள்களினாலே உணவு கொடுக்கப்படுகிறோம். அந்த ஆவிக்குரிய பொருட்கள் கிறிஸ்துவினுடைய இரத்தமும், சரீரமாகும். அவர் ஆண்டவருடைய திருவிருந்திலே உடலிலே ஆண்டவர் பிரசன்னமாயிருப்பதை மறுத்தார். ஆனால் ஆவியில் உண்மையாய் பிரசன்னமாயிருப்பதை, உயிருடன் வாழும் கிறிஸ்துவுடன் நடைமுறையில் திருவிருந்தில் பங்கு பெறுவதை அவர் அழுத்திக் கூறினார்.

கிறிஸ்துவுக்கும், விசுவாசிகளுக்கும் இடையில் நடக்கும் திருவிருந்தினை ! நிறைவடையச் செய்வது பரிசுத்தாவியானவரின் அருள் செயலாகும். கர்த்தருடைய திருவிருந்தில் பங்குபெறும் ஒருவருக்கு பரிசுத்தாவியானவர் ஒரு வல்லமையை அருளிச் செய்கிறார் என்றார் என்பதே.

(தொடரும்)

"அந்த ஒரே அப்பத்தில் நாமெல்லாரும் பங்குபெறுகிறபடியால், அநேகரான நாம் ஒரே அப்பமும் ஒரே சரீரமுமாயிருக்கிறோம்". 1 கொரி. 10:17.

## திருச்சபை (தொடர்ச்சி)

நாம் மேலே கண்ட இவ்வுருவகங்கள் கிறிஸ்துவுக்கும், விசுவாசிகளுக்கும் உள்ள அங்க ஐக்கியத்தை மிகுதியாய் வற்புறுத்துகின்றன. கிறிஸ்தவ வாழ்க்கை கூட்டு வாழ்க்கையாகும். ஒரு மரத்தின் கிளை மரத்திலும், உடலின் ஒரு உறுப்பு உடலிலும் கொள்ளும் ஜீவாதாரசம்மந்தத்திலும், அச்சம்மந்தம் மூலமாயும் தான் உயிர் வாழ முடியும். அதேபோன்று விசுவாசி ஒருவன் திருச்சபையின் ஐக்கியத்தில் நிலைத்திருந்தால் மட்டுமே அவன் நிதானமும், செம்மையும், முழுமையுமான கிறிஸ்தவ வாழ்க்கை நடத்தமுடியும்.

அத்தன்மைபோலவே, உடலின் உயிர் செம்மை இல்லாவிடில் அதின் குறை தனித்தனி உறுப்பினர்கள் மீதும் தாவிவிடும். ஆனால் இந்நாட்களில் பெயர் கிறிஸ்தவ சமுதாயத்தில் சங்கங்களில், குழுக்களில், சொஸைட்டிகளில் இருந்து கொண்டே தாங்கள் திருச்சபையின் அங்கம் தான் என்று நினைத்துக் கொண்டிருக்கின்றனர். அவர்கள் அங்கமாயிருக்கும் ஸ்தாபனத்தின் கொள்கைகளுக்கும், முடிவுகளுக்கும், பாவங்களுக்கும் தேவதுரோகங்களுக்கும், மாய்மாலங்களுக்கும் இவர்கள் பங்குதாரரே. அதற்கு உண்டாகும் தீர்ப்புக்களும் இவர்கள் மேலும் வரும் (2 யோவா. 11).

தொழுகையைக் குறிக்கும் புதிய ஏற்பாட்டின் போதனை மிகவும் தெளிவாயுள்ளது. வேறுபாட்டு ஜீவியம் வேண்டும்; அப்போஸ்தல ஐக்கியம் வேண்டும்; திருச்

சபை ஐக்கியம் வேண்டும். சுத்த இருதயத்தோடு கர்த்தரைத் தொழுது கொள்ளுகிறவர்களுடனே சேர்ந்து தான் இறைவனைத் தொழுது கொள்ள வேண்டும் [அப். 2:40-42 2 தீமோ. 2:22].

புதிய ஏற்பாட்டிலே திருச்சபையின் இவ்வம்சங்கள் இன்னும் தெளிவாகக் கடவுளின் ஜனம் என்ற உருவகத்தால் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. [கலா. 6:16; 3:7; எபே. 2:19; தீத். 2:15; 1 பேது. 2:9].

நாம் ஏற்கனவே பார்த்துள்ளபடி இவ்வுருவகங்கள் இயேசுவானவரின் நோக்கமாயிருந்தது என்று சொல்லலாம். மனுக்குலம் ஒழுக்கமாறுதலடைந்து அதற்கேற்ற உலக ஒழுங்கின் மாறுதலில் அமைவதால் மறுஉருவமடைந்த உலக ஒழுங்கை ஒப்படைக்கத்தக்கதாய் மாறுதலடைந்த மனுக்குலத்துக்குத் திருச்சபை மையமும் ஐக்கமும் தரும் சாதனமாகிறது.

கிறிஸ்துவின் புதிய இஸ்ரவேலராகிய இச்சமுதாயம் அகிலத்துலக முக்கியத்துவம் வாய்ந்தது. இந்து சமுதாயம் இத்தகைய முக்கியத்துவத்திற்கு உரிமை கொண்டாடுவதில்லை. இந்து சமுதாய புரட்சிசெய்து கொண்டிருப்பவர்கள் தனி மனிதனோ, சமுதாயமோ, மாறுதலடைந்து திருந்திவாழ வேண்டுமென்று எண்ணுவதேயில்லை அதன் நோக்கமும் இல்லை. கொடும் வட்டி வாங்குவோனையோ, விபச்சாரக்காரனையோ, சாராயக்காரனையோ, வெறியனையோ, பலதாரம் படைத்தவனையோ, பெண்களைத் தீயிட்டு கொளுத்துகிறவனையோ, ஜாதிதுவேசம் பாராட்டுகிறவனையோ, அது திருத்துவதுமில்லை; தன் சமுதாயத்திலிருந்து தள்ளிவைப்பதுமில்லை; தள்ளவும் முடியாது. தள்ளினால் இந்துத்துவம் என்று சொல்லுகிறார்களே. இந்து சமுதாயம் இது ஒழிந்துவிடும்; ஒருவனும் மீந்திருப்பதில்லை.

கிறிஸ்துவின் திருச்சபையோ, புதிய இஸ்ரவேலாகிய இச்சமுதாயமோ உண்மையான சர்வலோக சரித்திரத்துக்குள்ளே அமைக்கப்பட்டுள்ளது. இக்கருத்தை இந்து சிந்தனை ஒருபோதும் உருவாக்கவில்லை. மேலும் திருச்சபை கடவுளின் புனிதமாக்கப்பட்ட ஜனமும் புதிய இஸ்ரவேலுமாய் இருப்பதினால் அது மறுஉருவாக்கப்பட்ட புதிய ஒழுங்கமைப்பு; நம்பகமான ஒப்படைக்கப்போகும் மையமும் ஐக்கமும் பெறும் சாதனமாய் விளங்குகிறது.

அண்டம் முழுவதுக்குமேயுரிய தெய்வீகத் திட்டத்தில் மாபெரும் பிரதானமானதும் மையமானதுமான இடம் திருச்சபை வகித்து வருகிறது. இங்கே திருச்சபைக்கு அளிக்கப்பட்ட மையமான இடம், பன்னிரு அப்போஸ்தலர்களை மேசியாவின் ஜனத்தின் உட்கருவாக இயேசு தெரிந்தெடுக்கச் சித்தம் கொண்டார் என்பதாம். இதற்கு அப்போஸ்தலனாகிய பவுலின் சாட்சியும் இசைந்திருக்கிறது. அத்தீர்மானத்தின்படியே சகலத்தையும் கிறிஸ்துவுக்குள் கூட்டிச்சேர்க்க வேண்டுமென்பதே அவருடைய தயவுள்ள சித்தமாயிருந்து, கிறிஸ்துவை எல்லாவற்றுக்கும் மேலாக தலையாகத்தந்தருளினார்.

அந்த திருச்சபை, எல்லா விஷயங்களிலும், எல்லாரிலும் எல்லாவற்றாலும் நிரப்புகிறவருடைய நிறைவான சரீரம். எபே. 1:5,10.22. திருச்சபை இந்தியாவிலும் அடிப்படையான நிலையினுடைய அடிப்படையான முக்கியத்துவம், அதனை உலகத்திலுள்ள ஏனைய சமய சங்கங்களோடு ஒப்பிட்டுப்பார்க்கின் மிகத்தெளிவாகத் தெரியும்.

இந்து சமயம் தனி மனிதன் மீது கெட்டியாக பற்றிக் கொள்ளுகின்ற முற்றிலும் பிரத்தியேகமானதொரு சமுதாய வாழ்க்கையினை உருவாக்கியுள்ளது. ஜாதி ஏற்பாடு இந்து சமய சித்தாந்தத்தின்படி அவர்கள் படைப்பிலே வேரூன்றியுள்ளது. அது உலக ஒழுங்கின் பாகமாயும், அகிலத்துலக திட்டத்தை சார்ந்தது. அதனுல்

எந்த விதத்திலும் புதிய ஒழுங்கமைப்பின் மையமென அதை நாம் கொள்ளவே முடியாது. [அது தவறானதுமாகும்]

ஆனால் திருச்சபையோ தெய்வீகப் பணி ஆணையின் நோக்கத்தை நம்பி மனுக்குலத்தின் சரித்திரத்தை லட்சியம் செய்கின்றது. கிறிஸ்தவ மதம் மட்டுமே, புது சமுதாயத்தைப் பற்றிய எண்ணங் கொள்ள முடியும். அதுவே படைப்பில் உள்ள இலக்கின் கருவாயும், கருவியாகவும் உள்ளது.

இயேசுவானவர் சீஷர்களின் குழு ஒன்றைக் கூட்டி தேவ ஜனத்தின் உட் கருவாக பன்னிரு அப்போஸ்தலர்களை ஏற்படுத்தினார். அதே சமயத்தில் அவர்களை இறையாட்சியின் கருவியாகவும் நியமித்தார். இவ்வுட்கருவினின்று திருச்சபை வளர்ந்தோங்கியுள்ளது. இந்த அப்போஸ்தலர்களும், அவர்களோடு சேர்ந்தவர்களும் ஓரிடத்தில் கூடிவந்த பொழுது, பரலோகத்திலிருந்து தேவனுடைய பரிசுத்த ஆவியானவர் அவர்கள் மேல் இறங்கினார்; அவர்கள் திருச்சபையானார்கள்; கிறிஸ்துவின் சரீரமானார்கள்; ஒரே ஆவியினால் ஆட்கொள்ளப்பட்ட சரீரமானார்கள்; அதற்கு இயேசுகிறிஸ்து தலை. தனித்தனி ஆத்துமாவுக்கு இயேசுகிறிஸ்து தலை அல்ல தனித்தனி உறுப்புக்கு தலை கிடையாது. [சுண்டு விரலுக்கு ஒரு தலை, கட்டைவிரலுக்கு ஒரு தலை, காலுக்கு ஒரு தலை என்று கிடையாது] சரீரத்தில் இணைந்த உறுப்புகளுக்கே அவர் தலை: சரீரத்திற்கே, சபைக்கே அவர் தலை. திருச்சபைக்கே அவர் தலை. கொலோ. 1:18. எப்படியெனில், சரீரம் ஒன்று: அதற்கு அவயங்கள் அநேகம்; ஒரே சரீரத்தின் அவயவங்களெல்லாம் அநேகமாயிருந்தும் சரீரம் ஒன்றாகவேயிருக்கிறது. அந்தப்பிரகாரமாக கிறிஸ்துவும் இருக்கிறார் [1 கொரி. 12:12].

[தொடரும்]

"அவரே சபையாகிய சரீரத்துக்குத் தலையானவர்; எல்லாவற்றிலும் முதல்வராயிருக்கும்படி, அவரே ஆதியும் மரித்தோரிலிருந்து எழுந்த முதற்பேறுமானவர்".

கொலோ. 1:18.

# தேவனாலே எல்லாம் கூடும்

இயேசு: சீஷர்களைப்பார்த்து மனுஷரால் இது கூடாதது தான்; தேவனாலே எல்லாம் கூடும் என்றார் - மத். 19:26.

நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து இரட்சிப்பைக் குறித்து பேசிய இடத்தில் இந்த வார்த்தையை உரைக்கிறார். இரட்சிப்பு மாத்திரமல்ல, தேவனாலே எல்லாக் காரியங்களும் கூடுமென்று கர்த்தர் சொல்லுகிறார். நம்முடைய தேவனாகிய கர்த்தருடைய வல்லமையினாலே எல்லாம் கூடும். அவர் தம்முடைய சர்வ வல்லமையினால் எல்லாவற்றையும் செய்யக் கூடியவராயிருக்கிறார். வல்லமை தேவனுடையது சங். 62:11.

எந்தக் காரியம் மனிதர்களுக்கு அரிதானதாயும், ஆச்சரியமானதாயும், முடியாததாயுமிருக்கிறதோ அந்தக் காரியம் தேவனுக்கு சாதாரணமான காரியமாயிருக்கிறது.

தீர்க்கதரிசிகள் அந்நாட்களின் பட்டணமாகிய எருசலேமைக் குறித்து இந்த தேசம் கட்டப்படும், செழிப்பாகும், மணவாளன், மணவாட்டியுடைய சத்தமும், குழந்தையினுடைய சத்தமும் கேட்கப்படும்; எங்கும் மகிழ்ச்சியின் சத்தமும், ஆரவார சத்தமும், கேட்குமென்று அறிவித்தார்கள். அந்தபட்டணத்தின் ஆலயம் இடிக்கப்பட்டு மண் மேடுகளாயும் தேசம் பாழடைந்து காடாயும் வெறுந்தரையாயுமிருக்கும் போது இப்படிச் சொன்னார்கள். சிதறடிக்கப்பட்ட நாலா திசைகளிலுமிருந்து நான் என்னுடைய ஜனங்களைக் கூட்டிச் சேர்த்து அதை இந்த தேசத்திலே நிருபித்துக் காண்பிப்பேன். இது உங்களுக்கு ஆச்சரியமாயிருக்கலாம். ஆனால், என் பார்வைக்கு அது ஆச்சரியமல்ல என்று கர்த்தர் சொன்னார் சகரி 8:6-8. ஆம் தேவனாலே எல்லாம் கூடும்!

தேவனுடைய குணங்களில் ஒன்று அவருடைய சர்வ வல்லமை ஆகும். அவர் அதை பற்பல விதத்திலேயும் வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறார். அவர் கொல்லுகிறவரும், உயிர்ப்பிக்கிறவருமாயிருக்கிறார் உபா. 32:39. வானத்திலும், பூமியிலும் தமக்குச் சித்தமானவைகளையெல்லாம் செய்கிறார். (தானி. 4:35) தாம் நினைத்ததை செய்து முடிக்கிறார் மனுஷரால் இது கூடாததுதான். தேவனாலே எல்லாம் கூடும்.

அவருடைய வல்லமை ஆராய்ந்து முடியாதது உலகத்தையும் மனுபுத்திரரின் உள்ளத்தில் வைத்திருக்கிறார். ஆனபடியால் ஆதிமுதல் அந்தமட்டும் அவர் செய்து வரும் கிரியையை மனுஷன் கண்டுபிடியான் - பிர. 3:11. சரியான நேரத்திலே தக்க நடவடிக்கைகளை எடுப்பார். அந்தக் காரியத்தைச் செய்து கை கூடிவரப்பண்ணுவார் நம்முடைய சத்துருக்களை முறியடித்து நம்முடைய ஜனங்களை இரட்சிப்பார். குறித்த நாள், குறித்த வேளையிலே சம்பவங்கள் நடந்ததாக வேதத்தில் எழுதப்பட்டுள்ளது. நம்முடைய ஜனங்களைக்குறித்த காரியத்திலேயும், பொதுவாய் மனிதர்களுடைய வாழ்க்கையிலும் தேவன் தலையிடுவார். ஐயோ! நம்மைக் கைவிட்டு விட்டார் என்று நாம் அலறலாம். அவரோ அவசரப்படாமல் தக்க நேரத்திற்காக அமைதியாயிருப்பார். தேவனுடைய காலங்களும், நியமங்களும் நாம் திட்டமாய் அறிய முடியாதவைகளாக இருக்கிறது. அவர் கிரியை நடப்பிக்கும் போது நாம் திட்டமாய் அறிந்து கொள்ளுகிறோம். தேவனாலே எல்லாம் கூடும்.

நாம் அவருடைய வல்லமையை நிறைவாய் பெற்று அதினால் நிரப்பப்பட்டவர்களாயிருக்க வேண்டும். அவருடைய வல்லமையில் பலப்பட வேண்டும் எபே. 6:10. வானமண்டலத்தின் பேய்களோடு போராட நமக்கு வல்லமை தேவை. நம்முடைய தேவனுக்கு ஒப்பான தேவன் இல்லை. தேவனால் எல்லாம் கூடும் என்பதை வேதமும், நமது அநுபவமும் விளங்கப் பண்ணுகிறது.

இயேசு கிறிஸ்துவைக் குறித்த செய்தி சாதாரணமானது அல்ல. அதைப் பிரசங்கிக்கும் போது வல்லமை புறப்படுகிறது ரோம. 1:16. வல்லமையுண்டாக்கும் ஆயுதம் தேவ வசனமே. மனிதனில் உள்ளான நிலைமாற்றமாகிய இரட்சிப்பு சுவிசேஷத்தின் வல்லமையினால் தான் உண்டாகிறது. தமது ஜனங்களை இரட்சித்து, பரிசுத்தப்படுத்தி, அற்புத அடையாளங்களை நடப்பித்து பலப்படுத்தி ஆசீர்வதிப்பதில் தேவன் தமது வல்லமையை விளங்கப் பண்ணிக் கொண்டிருக்கிறார். அவரோ நம்மில் விசுவாசத்தையும், நம்பிக்கையையும் எதிர்பார்க்கிறார். தமது வல்லமையை வெளிப்படுத்துவதற்கு உத்தம இருதயத்தாரைக் காண பூமியெங்கும் அவருடைய கண்கள் உலா வருகிறது 2 நாளா. 16:9.

தேவனுடைய வல்லமையைப் பகைக்கும் சத்துருக்களை அது அழித்துப்போடும்.

கொஞ்சம் பேரான யூதர்கள் அடிமைகளாய், ஏழைகளாய் சூசான் நகரில் இருந்தார்கள். சத்துருவாகிய ஆமான் இவர்களை அழித்துப்போட திட்டம் தீட்டினான். ஆனால் ஆமானும் யூதர்களுடைய எதிரிகளுமே அழிந்தார்கள் காரியம் மாறுதலாய் முடிந்தது. இது தேவனுடைய வல்லமையினாலே ஆயிற்று. தேவனுடைய மக்களைப் பகைத்துக் கொள்ளுகிறவர்களுக்கு என்ன நேரிடும் என்பதை எஸ்தரின் புஸ்தகம் அறிவிக்கிறது.

நாம் தேவனுடைய பிள்ளைகள்! எந்த சமயத்திலும் நாம் எதிர்பார்த்திராத காரியங்களை அவர் நடப்பிப்பார். நாம் கொஞ்ச பேர்களாயிருக்கலாம். தேவன் நம்மோடிருக்கிறார். எவ்வளவு பெரிய விரோதிகளையும் நமக்கு கீழ்ப்படுத்துவார். அவருடைய ஜனத்தை, அவருடைய வல்லமையைப் பகைக்கிறவர்களுக்கு மென்மேலும் நஷ்டமும், நெருக்கடியும் உண்டாகும். அவர் தம்முடைய கிரியைகளின் மூலம் தமது வல்லமையை நிரூபிப்பார். தேவனாலே எல்லாம் கூடும். அல்லேலூயா!

"…. அநேகம் பேரைக் கொண்டாயினும், கொஞ்சம் பேரைக் கொண்டாயினும் ரட்சிக்க கர்த்தருக்குத் தடையில்லை" [1 சாமு. 14:6]

# புறம்பேயிருக்கிறவர்களிடம் ஞானமாய் நடக்க....

பெந்தெகொஸ்தே நாளன்று ஒருமனப்பட்டுக் கூடியிருந்த சீஷர் கூட்டத்தில் பரிசுத்த ஆவியானவர் பொழியப்பட்டபின் இவ்வாறு அபிஷேகம் பெற்ற தேவஜனங்கள் பிற ஜனங்களை விட்டு வேறுபிரிந்து ஒரு தனிமந்தையாய் - சபையாய் கூடிச் சேர்ந்தனர். இவ்வாறு இரட்சிக்கப்படுகிறவர்களைக் கர்த்தர் அனுதினமும் சபையோடு கூட்டிச் சேர்த்தார். (அப். 2:47) இவர்கள் அப்போஸ்தலரின் ஆலோசனைக்குட்பட்டு அவர்களால் கொடுக்கப்பட்ட உபதேச சட்டங்களைக் கைக்கொண்டு விசுவாசத்தில் ஸ்திரப்பட்டு நாளுக்குநாள் வளர்ந்து வந்தனர் (அப். 16:4,5).

இப்படி உலகத்திலிருந்து வேறுபிரிக்கப்பட்ட ஜனங்கள் சபைக்குள்ளாக இருந்தனர். இப்படி சபைக்குள் இருப்பவர்கள் எப்படி நடக்கவேண்டும் என்று அப்போஸ்தலர்கள் பல நிருபங்களை ஆவியானவரால் ஏவப்பட்டு எழுதிவைத்துள்ளனர். சபைக்குள்ளாக இருக்கும் நீங்கள் சபைக்குப் புறம்பேயிருக்கிறவர்களிடம் ஞானமாக நடவுங்கள். (கொலோ. 4:5) என்று அப். பவுல் கொலோசே சபைக்கு ஆலோசனை எழுதுகிறார். புறம்பே இருக்கும் சிலதரப்பட்ட மக்களின் தன்மையைக் குறித்தும் அவர்களிடம் நடந்து கொள்ளும் விதத்தைக் குறித்தும்; திருவசனத்தின் வெளிச்சத்தில் கவனிப்போம்.

1. புறம்பேயிருக்கும் துஷ்டர்கள்.

ஆதிச்சபையாருக்கும், ஆதி அப்போஸ்தலருக்கும் புறம்பேயிருந்த சிலயூதரால் மிகுந்த போராட்டங்கள் இருந்தன. ஒரு

சில துஷ்டயூதர்கள் அப்.பவுலைக் கொலை செய்ய வேண்டும். என்று கங்கணம் கட்டியிருந்ததாய் நாம் அப். நடபடிகளில் வாசிக்கிறோம். இப்படி ஒரு சந்தர்ப்பத்தில் அப்.பவுல் பிரயாணப்பட்டு சென்றசமயத்தில் விசுவாசிகளும் ஊழியர்களுமாகிய 7பேர் அடங்கியகுழு அவருக்கு வழித்துணையாகச் சென்றார்கள் (அப். 20:3,4). இன்னொரு சந்தர்ப்பத்தில் தமஸ்குபட்டணத்து அரேத்தா ராஜாவின் சேனாத்தலைவன் பவுலைப்பிடிக்கும்படியாக தமஸ்கு பட்டணத்தைக் காவல் வைத்துக் காத்த சமயம் சில விசுவாசிகள் அப். பவுலை ஒரு கூடையில் வைத்து ஒரு ஜன்னலிருந்து மதில் வழியாய்க் கீழே இறங்கிவிட்டுத் தப்பவைத்தனர் [அப். 9:22-25; 2 கொரி. 11:32,33].

(திருச்சபையின் தலைவர்களைப் பாதுகாப்பது சபையாரின் கடமையாகும். கர்த்தர் எப்படியாவது காப்பாற்றிக் கொள்வார் என்று இக்கட்டான சமயங்களில் ஒதுங்கிக்கொள்ளக் கூடாது. நாம் நமது முழு பலத்தோடும் இறைவனில் அன்புகூரக் கடனாளிகளாயிருக்கிறோம். நமது சரீரம் தேவனுடைய ஆலயம். அந்த ஆலயத்தை பரிசுத்தமாய் காத்துக்கொண்டு இறைவனுக்கென்று நல்ல போர்ச்சேவர்களாய் வாழவேண்டும். பாவம் செய்கிறசரீரத்தில் வியாதிகுடிகொள்ளும். பரிசுத்த ஜீவியம் தேவ பயம் - தேவ ஆரோக்கியத்தைக் கொண்டுவரும். (நீதி. 3:7,8) நினிவேபட்டணத்தார் பாவிகளும், பேடிகளுமாயிருந்தார்கள் (நாகூம் 3:13) பயப்படுகிற கோழைகளிடம் தேவன் பிரியமாயிருப்பதில்லை. எனவே துஷ்டசக்திகளால் திருச்சபை பாதிக்கப்படாதவாறு நாம் ஜெபிக்க; போராடக் கடமைப்பட்டுள்ளோம்.)

2.புறம்பேயிருக்கும் குதர்க்கவாதிகள்:-

ஆதிச்சபைக்குப் புறம்பே பல குதர்க்கவாதிகள், தர்க்கசாஸ்திரிகள இருந்தனர், இப்படிப்பட்ட சிலர் எழுந்து ஸ்தேவானுடன் தர்க்கம் செய்தனர். ஸ்தேவான் வேத அறிவிலும், விசுவாசத்திலும், தேவ வல்லமையிலும் நிறைந்து காணப்பட்டார். தர்க்கசாஸ்திரிகள் தோற்று வெட்கப்பட்டுப் போனார்கள். (அப். 6:9,10).

நமது கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவிடம், உயிர்த்தெழுதல் இல்லை என்று சாதிக்கிற சில சதுசேயர் வந்து வாதிட்டபோது நமது கர்த்தர் அவர்களுக்குச் சரியான உத்தரவு கொடுத்து அவர்களது வாய்களை அடைத்தார் (மத். 22:23,34). மேலும் "நீங்கள் வேதவாக்கியங்களை சரியானபடி அறியவில்லை", என்று அவர்களது அறிவின்மை உணர்த்திக்காண்பித்தார்.

(சத்தியத்தை ஸ்தாபிக்கும் படியாகக் கர்த்தர் நம்மைத் தெரிந்துகொண்டுள்ளார். எனவே நாம் சத்தியத்தைக் குறித்து சரியானத் தெளிவும்; அறிவும் உடையவர்களாய் காணப்பட்டுப் புறம்பேயிருக்கிறவர்களுக்குத் திருச்சபையை வெளிப்படுத்திக் காண்பிப்போமாக.)

3.எதிர்க்கும் அதிகாரங்கள்:-

ஆதிசபைக்கு, பரிசுத்தவான்களுக்கு அதிகாரங்களால் பல போராட்டங்கள், உபத்திரவங்கள் கடந்து வந்தன. அப். பவுல் அச்சந்தர்ப்பங்களில் எப்படி ஞானமாய் நடந்து கொண்டார் என்று வேதம் விளக்குகிறது. எருசலேமில் அப். பவுலைக் கொலைசெய்யும்படியாய் யூத தீவிரவாதிகள் கூக்குரலிட, சேனாபதி நூற்றுக்கு அதிபதியிடம் பவுலை சவுக்கால் அடித்து விசாரிக்கச் சொன்னான். அந்தப்படி பவுலை வாரினால் அழுந்தக் கட்டும்போது பவுல் பக்கத்தில் நின்ற நூற்றுக்கு அதிபதியிடம் "ரோமனும் நியாயம் விசாரிக்கப்படாதவனுமாயிருக்கிற மனுஷனை அடிக்கிறது உங்களுக்கு நியாயமா?" என்று கேட்டார். (அப். 22:25) ரோமன் என்று கேள்விப்பட்டு அடிக்க எத்தனப்பட்டவர்கள் விட்டு விட்டார்கள். சேனாபதி பயந்தான்.

சிலர் கிறிஸ்தவர்கள் என்றும் மூடிவாயைத் திறக்கக்கூடாது. என்று போதித்து

கிறிஸ்தவர்களைக் கோழையாக்குகின்றனர். அப். பவுல் ஞானமாய் நடந்தார். "இது நியாயமா?" என்று அதிகாரிகளிடம் நியாயத்தைக் கேட்டார். "உங்களை விரோதிக்கிறவர்கள் ஒருவரும் எதிர்பேசவும், எதிர்நிற்கவும் கூடாத வாக்கையும், ஞானத்தையும் நான் உங்களுக்கு கொடுப்பேன்" என்று நமது கர்த்தராகிய இயேசு சொல்லியிருக்கிறார் (லூக். 21:15). எல்லா சந்தர்ப்பங்களிலும் வாய்பேசாமல் மவுனம் சாதிக்க வேண்டும் என்று இருந்தால் ஒருவரும் எதிர்நிற்கவும், எதிர்பேசவும் கூடாத ஞானத்தைக் கர்த்தர் தரத்தேவையில்லையே. எனவே ஆவியானவர் நடத்துகிற நடத்துதல்படி நாம் ஞானமாய் நடந்து, பேசி தவறான அதிகாரங்களை அடக்கவேண்டும்.

4. எதிர்பார்க்கும் நல்லவர்கள்:-

ஆதிசபையை சிலர் பகைத்தாலும் பலர் மேன்மையாக எண்ணினார்கள். ஒருமனப்பட்டிருந்த விசுவாசிகளின் ஐக்கியத்தையும், அன்பையும், அப்போஸ்தலரால் நடந்த பலத்த செய்கைகளையும் கண்ட ஜனங்கள் சபையாரை மேன்மையாக எண்ணினார்கள். சபையாரைக் குறித்த பயம் பிறரை ஆட்கொண்டிருந்தது. ஆனாலும் சபையாரோடு சேர இவர்கள் துணியவில்லை (அப். 5:12,13).

இந்நாட்களிலும் சிலர் பகைத்தாலும், எதிர்த்தாலும் திருச்சபையாரை – அனேகர் மேன்மையாக எண்ணுகிறார்கள். கடினமான உபதேசம் என்று சிலர் சேரப் பயந்து நிற்கிறார்கள். நாமோ தேவவசனத்தைக் கடைபிடிக்கிறோம். உலகம் நம்மிடம் நல்லவற்றை எதிர்பார்க்கிறது. எனவே நாம் நல்லவர்களாகவும், நாணயம் உடையவர்களாகவும், நற்கிரியைகளில் ஐசுவரியவான்களாயும் காணப்பட்டு பிறரைக் கர்த்தருக்கென்று ஆதாயப்படுத்த எப்போதும் கருத்தோடு செயல்படுவோமாக.

"புறம்பேயிருக்கிறவர்களுக்கு முன்பாக ஞானமாய் நடந்து, காலத்தைப் பிரயோஜனப்படுத்திக்கொள்ளுங்கள்"
(கொலோ. 4:5).

## வேத பாடம் [தொடர்ச்சி]

### எண்ணாகமம்

எண்ணாகமம் 20:1-

*மிரியாமின் மரணம்:-* 38 வருஷம் வனாந்தரத்தில் அலைந்து திரிந்தபின் மறுபடியும் காதேசுக்கு வந்திருக்கிறார்கள். மிரியாமின் மரணம். மிரியாம் மோசே, ஆரோனுடைய தமக்கை, ஸ்திரீகளுக்குள் முன்னிலையில் இருந்தாள். ஆனால் சகோதரன்தானே என்று ஆரோனுடன் சேர்ந்துகொண்டு மோசேக்கு விரோதமாய் போராட்டம் நடத்தினதினால் தேவனால் தண்டிக்கப்பட்டு குஷ்டரோகியானாள். மோசேயின் பரிந்து மன்றாடுதலினால் சுகம் பெற்று மறுபடியும் பாளயத்தில் சேர்த்துக்கொள்ளப்பட்டாள் எண். 12:1-16.

இந்நாட்களிலும் அநேகர் இவர்தானே, நமக்கு தெரிந்தவர்தானே, இவர்தானே என்று பரிசுத்த வான்களுக்கு விரோதமாய்ப் பேசி, எழுதி தண்டனையை வாங்கிக் கொள்கிறார்கள். சிலர் செத்தும் போகிறார்கள். அவரவர்கள் எல்லையிலே இருக்கவேண்டும். தங்களுக்கு அடாத விஷயத்திலே தலையிடக்கூடாது. தேவனுக்கு பயந்து இருக்க வேண்டும் லேவி. 19:32. எண். 12:8.

இஸ்ரவேலர் எகிப்திலிருந்து புறப்பட்ட 40 வருஷம் முதலாம் மாதத்தில் மரணமடைகிறாள்.

எண். 20:2-5

இஸ்ரவேலருக்கு குடிக்க தண்ணீர் இல்லாதிருந்தது. அவர்கள் கூட்டங்கூடி மோசேயோடே வாக்குவாதம் பண்ணி விரோதமாய் கலகம் பண்ணினார்கள். இஸ்ரவேலருக்கு வனாந்தரத்தில் மூன்று தடவை தண்ணீர் இல்லாமல் போயிற்று - [1] மாராவில் யாத். 15:22. [2] ரெவிதீமில் யாத். 17:1. [3] காதேசில் எண். 20:2.

எண். 20:6

மோசேயும் ஆரோனும் தேவ சமூகத்தில் முகங்குப்புற விழுந்து தேவனை சேர்ந்தார்கள். நமக்கு நெருக்கங்கள், ஆபத்துக்கள் வரும்போது தேவ சமூகம் சேரவேண்டும். முகங்குப்புற விழுந்து தஞ்சமடையவேண்டும். தேவனுக்கு ஒப்புக்கொடுக்க வேண்டும். தேவனை நோக்கி ஜெபிக்கவேண்டும். மோசேயின் வாழ்க்கையில் அப்படி 6தடவை விழுந்ததாகப் பார்க்கிறோம்.

1. யாத். 32, உபா. 9:19 2. உபா. 9:25, எண். 14:5 3. எண். 16:4 4. எண். 16:22 5. எண். 16:45 6. எண். 20:6. அவ்வளவு பெரிய பரிசுத்தவானே அப்படிச் செய்தார். கர்த்தருடைய மகிமை அவர்களுக்குக் காணப்பட்டது.

"அவர்களில் சிலர் முறுமுறுத்து சங்காரக்காரனாலே அழிக்கப்பட்டார்கள்; அதுபோல நீங்களும் முறுமுறுக்காதிருங்கள் 1 கொரி. 10:10".

[தொடரும்]

[தொடர்ச்சி]

# சாட்சி

1959 ஆம் ஆண்டு மே மாதம் இனி கணவருடன் வாழவே முடியாது என்று மிகவும் கவலைப்பட்டு என் தாயார் வீட்டுக்கு சென்றுவிட்டேன். எனக்கும் என் கணவருக்கும் நியாயம் செய்தவர்கள் நீதியாய் செய்யவில்லை. அப்பொழுதுதான் அடியாளுக்கு மனித அன்பிற்கும், தேவ அன்பிற்கும் உள்ள வித்தியாசம் புரிந்தது. குடும்பம் சிதறிப் போனதால் கணவர் வேலைக்கு போகாமல் அலைந்து கொண்டிருந்தார். அப்பொழுது சென்னை புதிய எருசலேமின் கிளையைச் சேர்ந்த விசுவாசி Sis செல்வி பள்ளிக் கொண்டாவில் இருக்கிறார்கள்.

அவர்கள் என்னுடைய உறவினர். என் கணவர் அங்கு சென்று பிரச்சினையைக் கூறியபோது, அவர்கள் நீங்கள் புதிய எருசலேம் சபைக்குச் செல்லுங்கள்; அங்கு மெய்யான பரிசுத்தவான்கள் இருக்கிறார்கள். அச்சபைக்கு சென்றால் உங்களுக்கு நிச்சயம் விடுதலை கிடைக்குமென கூறியிருக்கிறார். கணவர் அங்கு சென்றபோது சென்னை பாஸ்டர் சாம் இஸ்ரவேல் ஐயா அவர்கள் ஜெபித்து ஆலோசனைக் கூறி, நீங்கள்போய் குடும்பமாக தொடர்ந்து ஆலயத்துக்கு வாருங்கள்; விடுதலை நிச்சயம் கிடைக்குமெனக் கூற, கணவர் என்னை மீண்டும் சென்னைக்கு அழைத்துக் கொண்டுவந்தார்.

அடியாள் முதல் முதலாக புதிய எருசலேம் சபையாகிய மெய்ச்சபைக்கு போகும் போது, சாத்தான் அடியாளுக்கு பலதடைகளைக் கொண்டுவந்தான். அடியாள் சபையின் வாசற்படியில் ஏறவே பிடிக்கவில்லை. மேலும் என் கணவர் அங்கு அழைத்துச் சென்றபோது ஏன் இங்கு கூட்டிக்கொண்டு போகிறீர்கள், நேரம் வேறு ஆகிவிட்டதே என்று கேட்டேன், அதற்கு அவர் லேட்டானாலும் பரவாயில்லை; சென்னை பாஸ்டர் தான் உங்களை வழியிலிருந்தே அழைத்து வரச் சொன்னார்கள். ஆகவே கட்டாயம் போய் பார்த்தாக வேண்டும் எனச் சொல்லி அழைத்துச் சென்றார்கள். நான் ஆலயத்துக்குள் நுழையும்போது சகோதரிகள் எல்லாரும் வெள்ளை ஆடை அணிந்திருப்பதை பார்த்தேன். மேலும் அப்பொழுது சென்னை புதிய எருசலேம் சபையானது Y.M.C.A ஒரு சிறிய இடத்தில் நடந்துகொண்டிருந்தது.

கணவரின் கட்டாயத்தால் உள்ளே போய் குழுங்காமலிருந்தேன். எனக்கு தூக்கம் வருவதுபோல இருந்தது. அப்படியே தூங்கியும் விட்டேன். அப்பொழுது எனக்குப் பக்கத்தில் நீண்ட வெள்ளங்கி தரித்த ஒருவர் நிற்பதுபோலக் காட்சி கண்டு அலறிவிழித்துக்கொண்டேன். அப்பொழுது அடியாளுக்கு இதுவே தேவன் வாசம்பண்ணும் மெய்யான சபை என புரிந்து விட்டது. பாஸ்டர் ஐயாவை ஆராதனைக்குபின் சந்தித்தபோது அவர்கள் சொன்னார்கள், சத்துருக்களின் மந்திரவாத சக்தியினால் உங்கள் குடும்பத்திலே பிரச்சினை உண்டாகி இருக்கிறது. தொடர்ந்து ஆலயத்திற்கு வாருங்கள். பாவஅறிக்கை செய்து அப்போஸ்தலர் இடத்திலே ஞானஸ்நானம் பெற்றுக்கொள்ளுங்கள் முழு சமாதானம் உங்களுக்கு கிடைக்கும்.

கிறிஸ்துவுக்குள்
விமலா வீதியாள், தானியேல் தாமோதரன்
சென்னை புதிய எருசலேம் கிளை
சென்னை.

---

என் தேவனாகிய கர்த்தாவே உம்மை நோக்கிக் கூப்பிட்டேன்; என்னை நீர் குணமாக்கினீர். கர்த்தாவே நீர் என் ஆத்துமாவை பாதாளத்திலிருந்து ஏறப்பண்ணினீர், குழியில் இறங்காதபடி என்னை உயிரோடே காத்தீர் சங். 30:2,3.

# பெண்கள்

[தொடர்ச்சி]

கணவனுடைய மனமும்; அவளுடைய மனமும் ஒன்றாயிருப்பதால் கணவனுக்கு எதில் விருப்பமோ அதில் அவளுக்கும் விருப்பம். கணவனுக்கு எதில் வெறுப்போ அதிலே அவளுக்கு வெறுப்பு; கணவன் புசித்தால் அவளுக்கு சந்தோஷம் உண்டாகும். கணவனுடைய துக்கமே அவளுக்கும் துக்கம்; புருஷனுக்கு ஆபத்து வருங் காலத்திலே இவளே படைக்கலம். புருஷன் துக்கப்படும் காலத்தில் அவளே சுகம். அவன் வியாதிபடும் காலத்தில் அவளே பரம சஞ்சீவி. தரித்திர காலத்தில் அவளே சௌபாக்கியம்.

கணவன் அழகில் ஆயிரம் அமாவாசைக்கு சாமானமானவனாயிருந்தாலும் அவனை அதிரூப சௌந்தரியமுள்ளவனாகப் பாவிப்பாள். அவன் தரித்திரனாயிருந்தாலும் குபேர சம்பத்துள்ளவனாக என்னுவாள். தான் அரசகுமாரத்தியாயிருந்தாலும், புருஷனுக்குத் தன்னை ஊழியக்காரியாகப் பாவிப்பாள். கல்லானாலும் கணவன், புல்லானாலும் புருஷன், மரமானாலும் மணாளன்; ஆதலால் புருஷனுக்கு எப்போதும் ராஜஉபகாரஞ் செய்வாள். புருஷன் ஒன்றுந்தெரியாத ஜடமாயிருந்தாலும் கணவனுடைய வாக்கை வேத வாக்கியம் போல என்னுவாள். ஒரு விஷயத்திலும் கணவனுக்கு கோபம்வரும்படி நடவாள். கணவன் நிர்நிமித்தமாய் [காரணமில்லாமல்] கோபித்தாலும் பொறுமையுடன் சகித்துக் கொண்டு, சமயம்பார்த்து அமிர்த விருட்சம்போல இன்பமான வார்த்தைகளைப்பேசி, கணவனுடைய கோபத்தை விளக்கி சொல்லி தணிப்பாள்.

அந்த குணவதியைப் பார்த்துவேறொரு ஸ்திரீ உன் தகப்பனோ தேசமாளும் அரசன், தாயோ அரசி. இப்படிப்பட்ட தந்தை தாயையும், உடன் பிறப்புகளையும், தோழிகளையும், அரண்மனைகளையும் விட்டு நீங்கி நீ ஒரு ஏழையை விவாகம் செய்துகொண்டு அவனுடைய சிறுமனையில் வசிக்கும்படி உனக்கு ஏற்பட்டு விட்டதே என்க: அதைக்கேட்ட அந்த புண்ணியவதி என்னுடைய கணவர் வீடு சிறுவீடானாலும் எப்போதும் அவர் சமீபத்திலிருக்கும் சிலாக்கியம் பெற்றேன். அவர் ஏழையானதால் அவருடைய ஊழியங்கள் யாவையும் என்னுடைய கையால் செய்யும்படியான அதிர்ஷ்டமும் எனக்கு கிடைத்தது. விசாலமான பல அரண்மனைகளையும் பல ஊழியக்காரர்களும் உடைய என் தாய் தந்தையாருக்கு இந்த பாக்கியம் இல்லை. அவருடைய செல்வம் பரந்தது. பின்னும் என்னுடைய புருஷரே எனக்கு அரசர்; அவருடைய சிறுகுடிலே எனக்கு அரண்மனை; அந்த அரசருக்கு நானே குடி; அவருடைய அன்பே எனக்குச் செல்வம். என்னுடைய கற்பே நான் அவருக்கு கொடுக்கும் கடமை என்று மொழிந்ததாக நீதிநூல் புருடபாசியரியல்பு 14வது, 15வது, பாடல்களில் சொல்லப்பட்டுள்ளது.

ஏந்தலாய் தந்தைதாய் சகியர்கோ
 யிலையிட்டோ ரெளியர் சிற்றிற்
சார்ந்தனென் றிகழுமின்னே சிற்றில்லா
 லரசருகே தங்கப் பெற்றேன்
சேர்ந்த மிடியா லவர்தம் பணியாவுமெனது
 கையாற் செய்யப்பெற்றேன்
பார்த்தவ மீதின்றி யெந்தை யன்னையவே
 ருக்குநிதி பாழ்ந்ததன்றே [14]

மிடியுளார், கேள்வனென்றுரைத்த மின்னை
 ளெய்
கடிநகர் சிறுகுடில் காந்தர் வேந்தரா
மடியனே குடியவரென்பன் செல்வமாங்
குடியிறை யென்னிறை குறையுண்டோ
 சொலாய் [15]

# புதிய எருசலேம் செய்தி

**PUDHIYA YERUSALEM CHEIDHI**

எக்காளசத்தம் 126 - DEC. '94



"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள் விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

- மாற்கு 13 : 35-37

**EDITOR : CHIEF PASTOR N. LAZAR**

**BOMBAY, INDIA**

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒரு மனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும்படியாகவும், தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும் சபையானது வஞ்சகப் போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசு கிறிஸ்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் 7 (அப். 1:1-3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள் :

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள் -மத். 28:18; மாற்கு 16:15.
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப்படுத்துங்கள்-மத் 28:19 (இயேசு மாதிரி [Through Action] செய்து காண்பித்தார்).
3. திருச்சபையைக் கட்டி (மத். 16:18) நான் உங்களுக்கு கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்-மத். 28:20
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்-யோவான். 20:23.
5. அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்-யோவா. 21:15-17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக்கொண்டு (அப். 1:5-8)
7. நான் வருகிற வரையிலும் என்னை நினைவுகூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்-1 கொரி. 11:23-26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கின்றனர் வேறு சிலர் ஏழு (7) என்கின்றனரே, அதெப்படி? என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக : இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி. 9:1-6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும், அதிகாரங்களுமாகும். இவைகளை நான் உனக்குக் கொடுக்கிறேன் என்றார் (அப். 1 : 1; 10:40-43).

CHIEF PASTOR N. LAZAR

## இதழினுள்ளே...

# ஆசிரியர் உரை

மதம் மனிதனை மயக்கும். மதத்தின் பெயரால் நடக்கும் அக்கிரமங்களும், அநியாயங்களும் பெருகி வருகின்றன. மக்களை ஏமாற்றி வஞ்சிக்கின்றனர். அதற்கு துணை போகிற துன்மார்க்கர்களும், அரசியல்வாதிகளும், வசதி படைத்தவர்களும், அதிகாரத்திலிருக்கிறவர்களும் அநேகர். இறைவழியாம் மெய்வழியான கிறிஸ்தவமே மெய் மார்க்கம். மற்ற மதங்களெல்லாம் மனிதன் தன் முயற்சியினால் மாத்திரம் முக்தி எய்த முடியும் என்று சொல்லும்போது, கிறிஸ்தவமோ தேவ கிருபையினால் முக்தியடைய வழிகாட்டுகிறது. இந்நாட்களில் நல்லறிவுள்ளவர்கள் கண்களைத் திறக்க வேண்டுமென்பதே நம்முடைய அவா. மற்ற மதங்களில் வசதியும், வாய்ப்பும் உள்ளவர்களுக்கே அந்த பாதையில் சென்று பிறர் பிரமிக்கும் சித்து வேலைகளைச் செய்ய முடியும். சாதாரண மக்களுக்கோ கதியில்லை. வயிற்றுப்பாட்டைப் பார்க்கவே நேரமில்லை; இரவும் பகலும் பாடுபட்டு உழைக்க வேண்டியதிருக்கிறது; யோகம் செய்து ஞானமடைவதற்கு நேரமேது. யோகிகள் ரிஷிகள் என்று பிரமாதமாக ஆர்ப்பாட்டம் செய்தவர்கள், நாற்றமெல்லாம் வெளிப்பட்டு சந்தி சிரிக்கிறது. ஓ! கிறிஸ்தவ மார்க்கத்தில் மேல் நாடுகளில் சீர் கேடு இல்லையா என்று சிலர் கேட்கலாம், உண்டு. ஆனால் வேதத்துக்கு கீழ்ப்படியாமல் வேதத்துக்கு மாறாக நடக்கும் சிற்சில காரியங்களே அவை. ஆனால் இங்கே நடப்பதோ அவர்கள் வேதத்தின்படி நடக்கிறது. அவர்கள் கர்த்தாக்கள் முன் மாதிரியின்படி நடக்கிறதாகும். ரஜனீஷ் சாமியார் சொன்னார்: நான் போதிக்கிறதும் நான் நடப்பிக்கிறதும்தான் இந்து மதம்; மறுக்க யாருக்கும் தைரியமுண்டா என்றார். ஆனபடியால் இறை மார்க்கமாகிய கிறிஸ்தவம் ஓங்குகிறது. இது உண்மையான மக்களை ஆட்கொள்ளும். இதுவே மெய்வழி. இது இந்தியாவில் மாத்திரமல்ல, உலகமெங்கும் பரவி ஆட்கொள்ளும். இயேசுவை விசுவாசியுங்கள்; அவர்தம் பாதம் சேருங்கள்.

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

(CHIEF PASTOR N. LAZAR)

# கிறிஸ்தவ மார்க்கம் (தொடர்ச்சி)

## திருவிருந்து [நற்கருணை]

## [LORD'S SUPPER]

ஜீவ அப்பம் நானே... இதிலே புசிக்கிறவன் மரியாமலிருக்கும்படி வானத்திலிருந்து இறங்கின அப்பம் இதுவே. நானே வானத்திலிருந்து இறங்கின ஜீவ அப்பம்; இந்த அப்பத்தைப் புசிக்கிறவன் என்றென்றைக்கும் பிழைப்பான்; நான் கொடுக்கும் அப்பம் உலகத்தின் ஜீவனுக்காக நான் கொடுக்கும் என் மாம்சமே என்றார் யோ. 6:48-51. அதற்கு இயேசு அவர்களை நோக்கி நீங்கள் மனுஷகுமாரனுடைய மாம்சத்தைப் புசியாமலும், அவருடைய இரத்தத்தை பானம் பண்ணாமலும் இருந்தால் உங்களுக்குள் நித்திய ஜீவனில்லை என்று மெய்யாகவே மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். என் மாம்சத்தைப் புசித்து என் இரத்தத்தைப் பானம்பண்ணுகிறவனுக்கு நித்திய ஜீவனுண்டு.

நான் அவனை கடைசி நாளில் எழுப்புவேன். என் மாம்சம் மெய்யான போஜனமாயிருக்கிறது. என் மாம்சத்தைப் புசித்து என் இரத்தத்தில் பானம்பண்ணுகிறவன் என்னிலே நிலைத்திருக்கிறான்; நானும் அவனிலே நிலைத்திருக்கிறேன். ஜீவனுள்ள பிதா என்னை அனுப்பினது போலவும், என்னைப் புசிக்கிறவனும் என்னாலே பிழைப்பான். வானத்திலிருந்து இறங்கின அப்பம் இதுவே; இது உங்கள் பிதாக்கள் புசித்த மன்னாவைப் போலல்ல. அவர்கள் மரித்தார்களே. இந்த அப்பத்தை புசிக்கிறவனோ என்றென்றைக்கும் பிழைப்பான் என்றார் யோ. 6:53-58.

"அவர்கள் போஜனம் பண்ணுகையில் இயேசு அப்பத்தை எடுத்து ஆசீர்வதித்து, அதைப்பிட்டு, சீஷர்களுக்குக் கொடுத்து, நீங்கள் வாங்கிப் புசியுங்கள்; இது என்னுடைய சரீரமாயிருக்கிறது என்றார்" மத். 26:26.

இதன் மூலமாய் நாம் அறிகிறது என்ன? திருவிருந்தில் அபிஷேகம் பெற்ற தேவ ஊழியர்கள் இயேசுகிறிஸ்துவின் சரீரத்திற்கு அடையாளமாயிருக்கிற அப்பத்தை எடுத்து அதற்காய் ஸ்தோத்தரித்து இயேசு செய்த படி அதைப்பிட்டு, இயேசு சொன்ன வார்த்தையைச் சொல்லி, "இதை வாங்கிப் புசியுங்கள்; இது உங்களுக்காகப் பிட்கப்படுகிற என் சரீரமாயிருக்கிறது." என்று அதே வார்த்தைப் பாட்டை உச்சரித்து, அதை பரிமாறும் போது, அந்த அப்பத்தில் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் மாம்சமும், அந்தப்படியே போஜனம் பண்ணின பின்பு பாத்திரத்தையும் எடுத்து, ஸ்தோத்திரம் பண்ணி, நீங்களெல்லாரும் இதிலே பானம்பண்ணுங்கள்; இது பாவமன்னிப்புண்டாகும்படி அநேகருக்காக சிந்தப்படுகிற புது உடன்படிக்கைக்குரிய என்னுடைய இரத்தமுமாயிருக்கிறது என்றார் மத். 26:26-28. என்ற வார்த்தையை உச்சரித்து பாத்திரத்தைப் பரிமாறும் போது அந்தப் பாத்திரத்தில் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் இரத்தமும் ஐக்கியமாயிருக்கிறது.

ஆனபடியினால் அவருடைய மாம்சத்தைப் புசித்து, அவருடைய இரத்தத்தில் பானம் பண்ணுவது நற்கருணையே. கோதுமை அப்பமும், திராட்சை ரசமும் ஆசீர்வதிக்கப்பட்டபின், இயேசுகிறிஸ்துவினுடைய சரீரமாயும், இயேசுகிறிஸ்துவினுடைய இரத்தமாகவும் உருமாறிவிடவில்லை. இயேசுகிறிஸ்துவும் அதில் பிரசன்னமாகிவிடவில்லை, ஆனால் அவருடைய மாம்சமும், இரத்தமும் அவைகளில் ஐக்கியமாயிருக்கிறது. ஏனென்றால் "ஒருவன

தகாத விதமாய்த் திருவிருந்தில் பங்குபெறுவானேல் அவன் கர்த்தருடைய சரீரத்தையும், கர்த்தருடைய இரத்தத்தையும் குறித்து குற்றமுள்ளவனாயிருப்பான் என்றும், அபாத்திரமாய்ப் போஜனம் பண்ணுகிறவன் கர்த்தருடைய சரீரம் இன்னதென்று நிதானித்து அறியாததினால் தனக்கு ஆக்கினைத் தீர்ப்பு வரும்படி போஜனம் பண்ணுகிறான். இதினிமித்தம் உங்களில் அநேகர் பலவீனரும், வியாதியுள்ளவர்களுமாயிருக்கிறார்கள் அநேகர் நித்திரையும் அடைந்திருக்கிறார்கள் 1 கொரி. 11.27–30 என்று அப். பவுல் சொல்லுகிறதையும் கவனியுங்கள்.

ஆனபடியால் திருவிருந்து சிலர் சொல்லுகிறபடி வெறும் அடையாளமோ, ஞாபகார்த்தமோ மாத்திரமல்ல; மெய்யாகவே நற்கருணையே. இது தேவ இரகசியம். வேறு பலர் சொல்லுகிறபடி அப்பமும், இரசமும் இயேசுகிறிஸ்துவினுடைய சரீரமாகவும், இரத்தமாகவும் உருமாறிவிடவும் இல்லை. அதனால் அதை வணங்கவும் கூடாது, கும்பிடவும் கூடாது. இயேசு அப்பத்தில் பிரசன்னமாயிருக்கிறார் என்று சொல்லவும் கூடாது. கர்த்தருடைய மேஜையில் நாம் கூடிவரும் போது அங்கே இயேசு பிரசன்னமாகி, திருவிருந்தைப் பகிர்ந்தளிக்கிறார். வேளைவந்தபோது அவரும் அவருடனே கூடபன்னிரண்டு அப்போஸ்தலரும் பந்தி இருந்தார்கள் லூக். 22:14.

[தொடரும்]

"என்னை நினைவு கூரும்படி இதைச் செய்யுங்கள்" 1 கொரி. 11:24.

## திருச்சபை (தொடர்ச்சி)

"நீ பேதுருவாய் இருக்கிறாய், இந்தக் கல்லின் மேல் என் சபையைக் கட்டுவேன்..." மத். 16:18.

இங்கே சபை என்பது ஒரு கட்டடமல்ல; விசுவாசிகளாகிய மனிதர்களாகும். பேதுருவைக் கர்த்தர் பாறை என்றார். பேதுரு அப்போஸ்தலனை அஸ்திபாரமாகக் கொண்டு தம் சபையைக் கட்டுவேன் என்று இயேசு சொன்னார். பொதுவாக இந்த வேதவாக்கியத்தைக் குறித்த விளக்கம் பல வாக்குவாதங்களால் பாதிக்கப்பட்டுப் போயிற்று என்பது திண்ணம்.

கர்த்தராகிய இயேசுகிறிஸ்து மனிதஜாதியின் பாவங்களுக்காக இப்பூலோகத்தில் வந்து, பாடுபட்டு, சிலுவையில் இரத்தம் சிந்தி, மரித்து அடக்கம் பண்ணப்பட்டு மூன்றாம் நாளில் உயிர்த்தெழுந்து 40 நாட்களுக்குப்பின் பரலோகத்திற்கு எழுந்தருளி அங்கே தேவனுடைய சிங்காசனத்தில் அமர்ந்த பொழுது அவர் பரம சீயோனில் திட அஸ்திபாரமான மூலைக்கல்லாய் தேவனால் நியமிக்கப்பட்டார் [ஏசா. 28:16].

திருச்சபை அஸ்திபாரமிடப்பட்டது பரலோகில். அவரை இன்னாரென்று அறிந்து முதல் கிறிஸ்தவ அறிக்கை செய்தது அப். பேதுருவே (மத். 16:16). ஆனபடியினால் அப். பேதுருவே முதல் கிறிஸ்தவன். இயேசுவாகிய மூலைக்கல்லோடு முதலாவதாக இணைக்கப்பட்ட கல் அப். பேதுருவே.

"மேலும் நான் உனக்குச் சொல்லுகிறேன். நீ பேதுருவாய், இருக்கிறாய் இந்தக் கல்மேல் என் சபையைக் கட்டுவேன்; பாதாளத்தின் வாசல்கள் அதை மேற்கொள்ளுவதில்லை. நீ பூலோகத்தில் கட்டுவது எதுவோ அது பரலோகத்தில் கட்டப்பட்டிருக்கும். பரலோக இராஜ்யத்தின் திறவுகோல்களை நான் உனக்குத் தருவேன். நீ பூலோகத்தில் கட்டவிழ்ப்பது எதுவோ அது பரலோகத்திலும் கட்டவிழ்க்கப்பட்டிருக்கும் என்றார்" [மத். 16:18,19].

இந்த வேதவாக்கியத்தைக் குறித்து நிலவும் விளக்கங்கள் ரோமன் மார்க்கத்தார் பேதுருமேல் சபை கட்டப்பட்டது என்று இதை ஆதாரமாக வைத்து போப்புவின் அகில உலகஆட்சியை ஆதரிக்கின்றனர் இக்கருத்தின்படி பேதுருவின் மரபினர் பாப்புக்களே. ஆதலால் தற்போதுள்ள திருச்சபை பாப்புவின் மேல் கட்டப்பட்டது என்பதுவே அவர்கள் கூறும் தர்க்கம்.

இந்த கொள்கைக்கு எதிராக புரோட்டஸ்தந்து சபையார், திருச்சபைக்கு ஒரே கன்மலை (பெற்ரா) கிறிஸ்து என்பர். கர்த்தர் பேதுருவை நோக்கி பெட்ராஸ் என்றார். நீ சிறிய கல் என்றார். பெட்ராஸ் என்றால் கன்மலை என்று பொருட்படாமல், கல் என்று பொருட்படும். இக்காரணத்தால் பேதுருவின் மேல் அன்று, பேதுரு தம் மேல் வைத்த விசுவாசத்தின் மேல் கிறிஸ்துவானவர் தம் சபையைக் கட்டினார் என்று எதிர்வாதம் செய்கின்றனர்.

இவர்கள் கிரேக்க மொழிபெயர்ப்பையே ஆதாரமாகக் கொண்டு அப்படிச் சொல்லுகின்றனர். ஆனால் இயேசுவானவர் பேசியது அராமேயிக மொழியாகும். அராமேயிக் மொழியில் கிரேக்க மொழியில் காணப்படும் வேறுபாடு கிடையாது. கிரேக்க மொழியில் பெற்ரா பெண்பாலைக் குறிக்கும். ஆண்பாலுக்குரிய பெற்ராஸ் என்பதற்கு கல் அல்லது கற்பாறை என்ற அர்த்தமே உண்டு. நீ கேபா (நீ பெற்ராஸ்) நீ பேதுரு- இந்த பெற்ராவின் மேல் என் சபையைக் கட்டுவேன் என்றார். ஆண்டவருடைய அரேமெயிக் மொழி மொழிபெயர்க்கப்பட்டபோது பெண்பாலுக்குரிய பெற்ரா என்று மொழிபெயர்க்கப்படாமல் பெ ற் ரா ஸ் என்ற ஆண்பாலை உபயோகிக்க வேண்டியதாயிற்று. அப்போஸ்தலன் ஆண்பாலாகும் இவ்வுண்மைக்கிசைய இவ்வாசகத்தைப் பொருள்படுத்தினால் இயேசுவானவர் பேதுருவையே கற்பாறையாகக் கருதினார் என்பது தெளிவு. தெலுங்கு பாஷையில் ராய் என்றால் கன்மலை கற்பாறை என்றே அர்த்தம்.

இதில் நாம் கவனிக்க வேண்டியது என்னவென்றால், இப்பொழுது மாத்திரமல்ல பேதுருவை முதல் முதல் கண்டவுடனே இயேசுவானவர், நீ யோனாவின் மகனாகிய சீமோன், நீ கேபா என்டுவாய் என்றார். கேபா என்பதற்குப் பேதுரு என்று அர்த்தமாம் (கேபா அரமெயிக் சொல். பேதுரு கிரேக்க வார்த்தை) யோவா. 1:42. ஆனபடியால் விசுவாசிகளாகிய திருக் கூட்டத்தார் எழும்பும் போது அப். பே து ரு வை அஸ்திபாரமாகக் கொண்டு தம் அப்போஸ்தலர்களை அஸ்திபாரமாகக் கொண்டு தம் திருச்சபையை எழுப்பப்போகிறதாகவே இயேசுவானவர் சொன்னார் என்பதே மெய்.

ஆனால் ரோமன் மார்க்கத்தார் கூறுகிறபடி பேதுரு ரோமாபுரியில் வந்து ஆட்சி செய்தார்; ஆதலால்ரோமாபுரியில் ஆளுகை செய்யும் போப்புகளே திருச்சபையின் தலைவர் என்பது சரியில்லை. பேதுரு எருசலேமிலேயே இருந்தார். அவர் யூதேயா, சின்ன ஆசியா, பாபிலோன் முதலான தேசங்களில் பிரசங்கம் பண்ணினார். சபைகளைச் சுற்றிப்பார்த்தார் அப். 9:32. அப்படியே ரோமாபுரிக்கும் ஊழியமாய் போய் வந்திருப்பார். சிலகாலம் தங்கியிருந்திருப்பார். என்று நம்பலாம். ஆனால் அவர் அங்கேயே ஆட்சி செய்தார் என்பதை

நம்புகிறதற்கேதுவில்லை. ஏனென்றால்:-

1. அப். பேதுரு கி.பி. 49-ம் வருஷத்திலே எருசலேமில் கூடிய சங்கத்தில் இருந்தார். கி.பி. 68-ம்வருஷத்தில் இறந்தார்.

2. பரி. லூக்கா அப். பவுலோடே கூட கி.பி. 61ல் ரோமாபுரிக்கு சென்றபோது அப். 28 அதி. பரி. பேதுருவைப்பற்றி ஒன்றும் சொல்லவில்லை.

3. அப். பவுல் ரோமாபுரியாருக்கு நிருபம் எழுதும்போது ரோமாபுரியிலுள்ள பரிசுத்தவான்களை வாழ்த்துகிறார் ரோமர் 16 அதி. அங்கே ரோமாபுரி சபையில் பேதுரு இருந்திருந்தால் முதலாவது பவுல் அவர்களையே வாழ்த்தி இருப்பார்.

4 அவ்விடத்திலுள்ளவர்கள் எல்லோரும் தம்மைக் கைவிட்டதாக எழுதுகிறார் 2தீமோ 4:16. பரி. பேதுரு அப்போஸ்தலன் ரோமாபுரியிலிருந்தால் அப்படிச் செய்வாரா? ஆனபடியால் பேதுரு அப்போஸ்தலன் ரோமாபுரிக்கு வந்துபோயிருப்பார் என்று நம்பலாம்.

அப். பவுல் 1 கொரி. 3:10.11ல் நான் அஸ்திபாரம் போட்டேன்; போடப்பட்டிருக்கிற அஸ்திபாரமாகிய இயேசுகிறிஸ்துவையல்லாமல் வேறே அஸ்திபாரத்தைப் போட ஒருவனாலும் கூடாது என்று எழுதியிருப்பது, அப். பவுல் திருச்சபைக்கு அஸ்திபாரம் போடவில்லை; அவர் விசுவாசியாகிறதற்கு முன்னே நூற்றுக்கணக்கான சபைகள் எழும்பி இருந்தன; ஆயிரக்கணக்கான மக்கள் விசுவாசிகளாயிருந்தனர் (கலா. 1:22; 1 தெச. 2:14): அவர் இங்கே சொல்வது கிறிஸ்தவ வாழ்க்கைக்கு இயேசுகிறிஸ்து அஸ்திபாரமாயிருக்கிறார் என்பது. அப்போஸ்தலர்கள் தீர்க்கதரிசிகளே திருச்சபைக்கு அஸ்திபாரமென்கிறார். இயேசுகிறிஸ்து மூலைக்கல் என்கிறார் எபேசி. 2:20.

திருச்சபையின் தலைவராகிய இயேசுகிறிஸ்து தம்மோடு இணைந்து திருச்சபையின் அஸ்திபாரமாயிருக்க அப்போஸ்தலர்களை நியமித்தார். இவர்களில் முதன்மையானவர் பேதுரு அப்போஸ்தலனே மத். 16:18.

எந்த ஒருசங்கமோ, கூட்டமோ அதற்கு ஆதாரமாகஒருவர் வேண்டும். கொள்கையில்மாறுபாடோ, பிரச்சினைகளோ விழ்ச்சியோ வரும்போது அந்த அஸ்திபாரமில்லாதவர்கள்ஒவ்வொருவராய் பிரிந்து விலகிப்போனால் அந்த கூட்டம் எங்கே? இல்லாமல் போகுமல்லவா? "நீங்களும் போய்விட மனதாயிருக்கிறீர்களோ? என்று இயேசுவானவர் கேட்டபோது, யாரிடத்தில் போவோம் ஆண்டவரே நீர் மேசியா என்று அறிந்தும், விசுவாசித்தும் இருக்கிறோம். நித்திய ஜீவனுக்குரிய நித்திய ஜீவ வார்த்தைகள் உம்மிடத்தில் இருக்கிறதே என்று அப்போஸ்தலர்கள் சார்பாக அப். பேதுரு சொன்னதை நினைவு கூர்க [யோ. 6:68-69]. ஆம்! பேதுருவின் விசுவாசம் பாறை போன்றது.

ஆம்! பாறை போன்ற தலைவர் வேண்டும். இவ்வாறு திருச்சபையின் காணக்கூடாத (Invisible) தலைவராக இருக்கும். கர்த்தராகிய இயேசுகிறிஸ்து காணக்கூடிய (Visible) தலைவராக பேதுருவை நியமித்ததுபோல இன்றும் தம் திருச்சபைக்கு காணக்கூடிய தலைமையைக் கொடுக்கிறார். அது அப்போஸ்தலனே. தலைவையுடைய மனைவிக்கு புருஷன் தலை. அப்படியே சபைக்கு கிறிஸ்து தலை. அந்த சபையாகிய மணவாட்டிக்கும் ஒரு தலை [தலைமை] உண்டு தேவனால் ஏற்படுத்தப்பட்ட அப்ஸ்தலனே அந்த தலை; அடித்தளம்.

[தொடரும்]

---

"...யோனாவின் குமாரனாகிய சீமோனே நீ கேபா என்னப்படுவாய் என்றார்"

[யோ. 1:42]

---

(புது வருட செய்தி)

# ஜெயம்

"நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினாலே நமக்கு ஜெயங்கொடுக்கிற தேவனுக்கு ஸ்தோத்திரம்"

1 கொரி. 15:57.

இயேசு கிறிஸ்து மூலமாய் உலகத்தை மீட்க உலகம் மீட்கப்பட்ட வரலாறு சத்துருக்களோடு கடவுள் போர் புரிந்து அடைந்த ஜெயமே திருமறை முழுவதிலும் காட்டப்படுகிறது.

கடவுள் சாத்தானோடு போர் புரிந்து சர்வ வல்லமையுள்ள தேவன் சாத்தானோடு போர் புரிந்து வெற்றி பெற்றார் என்றால் இரண்டு வல்லமைகள் ஒன்றோடொன்று போர் புரிந்தன என்று சொல்லலாகாது. நித்தியக் கடவுளே சர்வ வல்லவர். அவருக்கே இராஜ்யமும், வல்லமையும், ஜெயமும் உரியன. எனவே திருமறையில் இருபொருள் வாதத்திற்கு இடமில்லை. அதாவது ஒளியின் ராஜ்யத்திற்கும், இருளின் ராஜ்யத்திற்கும் போர் நடந்ததாக வேதாகமத்தில் கூறப்படவில்லை.

தொடக்கத்திலேயே சாத்தான் முறியடிக்கப்பட்டான். ஏவாளின் பின்னடியாருக்கு வெற்றி வாக்களிக்கப்பட்டது. (ஆதி. 3:15). பாவத்தை வெல்லும் ஆற்றல் காயீனுக்கு அளிக்கப்பட்டிருந்தது. "நீயோ அதை ஆண்டு கொள்ள வேண்டும்" (ஆதி. 4:7). ஆகையால் ஆபிரகாம் முதல் இயேசு கிறிஸ்து வரை மீட்பின் வரலாறு முழுவதிலும் கடவுளின் வெற்றி விசுவாசத்தின் வெற்றியோடு சேர்த்துக்காட்டப்படுகிறது. இந்த உண்மையும், கடவுள் இஸ்ரவேலரோடு செய்த உடன்படிக்கையையும் அடிப்படையாகக் கொண்டு இஸ்ரவேலின் மூதாதையர் மோசே, யோசுவா, நியாயாதிபதிகள், ராஜாக்கள் அடைந்த வெற்றி வரலாறு. கடவுள் அவர்களோடு கூட இருந்தார். தாம் அபிஷேகம் பண்ணினவர்களோடுகூட இருந்தார். ஆளபடியினால் வெற்றி உண்டாயிற்று என்று சொல்லப்படுகிறது.

அவர்கள் வெற்றியடைந்தபோது மாத்திரமல்ல, அவர்கள் தோற்கடிக்கப்பட்ட சமயங்களிலும் கடவுளின் வெற்றிதான் வெளிப்படுத்தப்பட்டது. இஸ்ரவேலின் தோல்வி, நீதியும், பரிசுத்தமுள்ள தேவனின் வெற்றி. ஏனெனில் அவர்கள் தம் வழியை விட்டு விலகிச் சென்றபோது கடவுள் அவர்களை தோல்வி அடையச் செய்தார். (நியா. 2:10-21) இந்த உண்மை தனி மனிதனின் வாழ்க்கையிலும் காணப்படுகிறது (சங். 51:4).

கடவுள் நியாயம் விசாரிக்கும்போது பரிசுத்தமாய் விளங்கி வந்தார். அவர் தெரிந்தெடுத்த ஜனத்துக்கு வரும் தேவ தண்டனையைப் பற்றி தீர்க்கதரிசனமாக முன்னறிவித்தபோதெல்லாம் அவர்கள் கடவுளது பரிசுத்தத்தின் வெற்றியைத் தெரிவித்தார்கள் (மீகா. 6:1-16). மேசியாவைப்பற்றி முன்னறிவிக்கப்பட்டபோது அவர் மகிமையின் ராஜாவாக, நீதியின் வெற்றியோடு வருவதாக தீர்க்கதரிசிகள் முன்னறிவித்தார்கள் (சங். 24:7,8).

மேசியா இந்த உலகத்தில் வந்திருந்தபோது அவர் செய்த அற்புதங்கள், சாத்தான்மேல்கொண்ட அதிகாரம் அல்லது அவனை மேற்கொண்ட சம்பவங்கள் பற்றி இயேசு கிறிஸ்து சொல்லும் போது, ஆயுதம் தரித்தபலவான் அரண்மனையைக் காத்திருக்கும் போது அவனிலும் பலவான் வந்து அவனை மடங்கடித்து அவனுடைய ஆயுதங்களை பறித்துக் கொண்டு, அவனை கட்டிப் போட்டு அவனுடைய கொள்ளைப் பொருளை பங்கிடுவான் என்றும் (லூக். 11:21,22). சீஷர்கள் கடந்து சென்று வெற்றியோடு ஊழியம் செய்து திரும்பி

வந்தபோது சாத்தான் முறியடிக்கப்படுகிறான் என்றும் கர்த்தர் சொன்னார் (லூக். 10:17-20).

இயேசுவானவர் உலகம், பாவம், மரணம் ஆகியவைகளின் மேல் ஜெயங் கொண்டார் (யோ. 12:31; 16:33). இதில் விசுவாசிகளுக்கும் பங்கு உண்டு (1யோ. 2:13,14; 4:4; 5:4,5). கிறிஸ்து பெற்ற வெற்றியைப் பற்றிபிடித்து தனக்கு சொந்தமாக்கி அது அளிக்கும் பலத்தைக் கொண்டு வாழ்வதே கிறிஸ்தவ வாழ்க்கை என்று சொல்லப்படுகிறது.

கிறிஸ்தவர்களுடைய வெற்றி கிறிஸ்துவோடுள்ள நெருங்கிய ஐக்கியத்திலும், அவருடைய வெற்றியை பற்றிப் பிடித்து தனக்குச் சொந்தமாக்கிக் கொள்வதிலும் ஜெயம் உண்டாவதாகும் (ரோ. 5:1-5; 6:3-11; 1 கொரி. 15:57).

பிற மதங்கள் தங்களுடைய முயற்சியினால் வெற்றியடைய பிரயாசப்பட்டு அவர்கள் வீழ்ச்சியடைகிறார்கள். ஏனென்றால் அது மனிதனுடைய முயற்சியினால் ஆன கட்டுப்பாடாக இருக்கிறது. அது ஒரு நாள் மனிதனை விழத்தட்டிப் போடும். மனித கட்டுப்பாடு முறிந்து போகும்.

கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினால் உண்டான வெற்றி. "நான் உலகத்தை ஜெயித்தேன்" என்று இயேசு திருவுளம் பற்றினார். அவ்விதமாக ஜெயங் கொள்ளும்படியாக கிறிஸ்தவர்களாகிய நாம் அழைக்கப்பட்டிருக்கிறோம். முடிவான வெற்றி இயேசு கிறிஸ்துவினுடைய இரண்டாவது வருகையின் போது நிறைவடையும்.

கர்த்தராகிய இயேசு கிறிஸ்து சிலுவையின் மேல் அடைந்ததை, சாத்தான் மீது அடைந்த வெற்றி என்று திட்டமாக வேதாகமம் அறிவிக்கிறது (கொலோ. 2:15). ஆகையால் கிறிஸ்தவ வாழ்க்கை இம்மையில் போர் நிறைந்ததாக இருக்கும். வெல்லப்பட்ட பாவத்தோடு, பிசாசோடு மீண்டும் நாம் போர் புரிய வேண்டும் (1 யோ. 5:4). கிறிஸ்தவ வாழ்க்கை என்பது ஒரு யுத்தம், போர் என்று அப். பவுல் சொல்லியிருக்கிறார்.

தீமோத்தேயுவுக்கு எழுதும்போது நல்ல போராட்டத்தை போராடு, நற்போர் சேவகனாய் நீங்கனுபவி. தண்டில் சேவகம் செய்கிறவன் பிழைப்புக்கடுத்த அலுவல்களில் சிக்கிக் கொள்ள வேண்டாம் என்று எழுதினது மாத்திரமல்ல, தன்னைக் குறித்து அவர் எழுதும் போது நல்ல போர் புரிந்தேன், விசுவாசத்தைக் காத்துக் கொண்டேன். இது முதல் ஜீவக்கிரீடம் எனக்காக வைக்கப்பட்டிருக்கிறது என்று சொன்னார். நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினாலே நமக்கு ஜெயங் கொடுக்கிற தேவனுக்கு ஸ்தோத்திரம், நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினாலே நாம் ஜெயம் பெற்று வருகிறோம், ஜெயம் பெறுவோம்.

இந்த உலக வாழ்க்கையிலே நாம் ஜெயமடைந்து வருகிறோம் என்றால் தேவன் மேல் உள்ள விசுவாசத்தினால், கிறிஸ்துவைப் பற்றிக்கொள்ளுகிறதினால் ஜெயம் அடைகிறோம், அது தேவனுடைய வெற்றி. இந்த வாழ்க்கையில் நாம் தோல்வியடைகிறோமென்றால் அதுவும் தேவனுடைய வெற்றியே. தேவனுடைய கட்டளைகளையும், கற்பனைகளையும், சாட்சிகளையும் கவனித்து நடக்காததினாலும் கைக்கொள்ளாததினாலும் நமக்கு தோல்வி உண்டாகிறது. கர்த்தரைப் பற்றிக்கொள்ளாமல், அவரோடு கூட சரியான ஐக்கியமில்லாதிருந்தால் தோல்வி உண்டாகும். அதுவும் இறைவனுடைய வெற்றியே. தேவனுடைய கட்டளையை விட்டு விலகும் போது தேவன் தம்முடைய ஜனங்களை தோல்வி அடையும்படியாகச் செய்கிறார். அது தேவனுடைய வெற்றியே.

தேவன் எப்பொழுதும் வெற்றி சிறந்தவராயிருக்கிறார். கர்த்தராகிய இயேசு

கிறிஸ்துவினாலே இந்த 1995-ம் புத்தாண்டில் ஜெயத்தின் மேல் ஜெயம் அடைவோமாக. சாத்தான் வெளியேயிருந்தும், உள்ளேயிருந்தும் போராடலாம். ஆனாலும் நமக்கு ஜெயம் உண்டு. "எவ்விடத்திலும் எங்களைக் கொண்டு வெற்றி சிறக்கப்பண்ணி" என்று சொல்லி அப். பவுல் 2 கொரி. 2:14-ல் சொல்லியிருக்கிறார்.

எங்கும் கிறிஸ்துவினுடைய வாசனையை வீசச் செய்வோமாக! இரட்சிக்கப்படுகிறவர்களுக்கு நாம் ஜீவ வாசனையாகவும், கெட்டுப்போகிறவர்களுக்கு நாம் மரண வாசனையாகவும் விளங்குவோமாக.

புத்தாண்டில் ஜெயத்தின் மேல் ஜெயம் இறைவன் அருளுவார். இறை ஆசீர் நம் எல்லார் மேலும் உண்டாயிருப்பதாக. ஆமென்!

"குதிரை யுத்த நாளுக்காக ஆயத்தமாக்கப்படும்; ஜெயமோ கர்த்தரால் வரும்"
நீதி. 21:31.

# வேத பாடம்

[தொடர்ச்சி]

## எண்ணாகமம்

### எண். 20:7-11

மோசே ஆரோனுடைய பாவம்:-

தேவன் மோசேயை நோக்கி நீ தேவனுடைய கோலை எடுத்துக்கொண்டு நீயும் ஆரோனும் சேர்ந்து சபையாரைக் கூடிவரச்செய்து அவர்கள் கண்களுக்கு முன்பாக மலையைப் பார்த்துபேசுங்கள். அப்பொழுது அது தன்னிடத்திலுள்ள தண்ணீரைக்கொடுக்கும். இப்படி நீ அவர்களுக்கு தண்ணீர் புறப்படப்பண்ணி சபையாருக்கும்; அவர்கள் மிருகங்களும் குடிக்கக்கொடுப்பாய் என்றார். மோசே கர்த்தருடைய கட்டளைப்படி தேவ சந்நிதானத்திலிருந்துகோலை எடுத்தார். மோசேயும் ஆரோனும் ஜனங்களையெல்லாம் கூடிவரச்செய்தார்கள். கன்மலையின் முன் ஆனால் கன்மலையைப்பார்த்துப்பேசி தண்ணீரை வெளியிடச்சொல்லாமல் நாங்கள் இந்த கன்மலையிலிருந்து தண்ணீர் வரச்செய்வோமோ என்று சொல்லி கன்மலையைத் தன் கையிலிருந்த கோலினால் இரண்டு தரம் கோபமாக அடித்தார்: இது தேவனுடைய தெளிவான கட்டளைக்கு கீழ்ப்படியாமல் மீறினதாகும். தண்ணீர் ஏராளமாக வந்தது ஜனங்கள் குடித்தார்கள். அவர்களுடைய மிருகங்களும் குடித்தன.

இந்தக் கன்மலை ஏற்கனவே ஒருமுறை அடிக்கப்பட்டுள்ளது (யாத். 17:6) இப்போ தேவன் மலையைப் பார்த்து பேசும்படிதான் சொன்னார். இந்தக் கன்மலை கிறிஸ்துவுக்கு அடையாளமாக இருந்தது 1 கொரி. 10:4. பழைய ஏற்பாட்டில் பதிவு செய்யப்பட்டுள்ள அநேக செயல்கள் வரப்போகிற கிறிஸ்துவையும், திருச்சபையையும் பற்றிய மாதிரி செயல்

களே. இயேசு ஒருதரம் நம்எல்லோருடைய பாவங்களுக்காக சிலுவையில் அடிக்கப்பட்டு, மரிக்க வேண்டும். மறுபடியும் பலியிடப்படக் கூடாது. மறுபடியும் இயேசு அடிக்கப்பட போவதில்லை. இப்போது மலையைப்பார்த்துபேசினால் அதே ஆசீர்வாதம் புறப்பட்டு வரும் [மத். 7:7-11;21:22; மாற். 11:22-24; யோ. 15:7,16;16:23-26]. ஜனங்கள் நெருக்கினதினால் மோசே பதறி பேசினார். தேவனுடைய வார்த்தையை மீறி கிரியைசெய்தார். சங்.106:32,33.

எந்த சூழ்நிலையிலும் தேவனுடைய மனிதர்கள் பதறிபேசக் கூடாது, ஜனங்களின் எதிர்ப்பைக் கண்டு பயப்படக்கூடாது எந்த நெருக்கடியிலும் தன் தேவனாகிய கர்த்தருக்குள் தன்னைப் பலப்படுத்திக்கொண்டு கட்டளையிட வேண்டும், தேவ ஆலோசனைப்படி செயல்படவேண்டும் [1 சாமு. 30:1-18].

## எண். 20:12

மோசேயும், ஆரோனும் தேவனுடைய வார்த்தையை விசுவாசிக்கவில்லை விசுவாசித்து தேவனை மகிமைப்படுத்தவில்லை. அவர் சொல்லியபடி செய்வதே ஜனங்களுக்கு முன் தேவனை பரிசுத்தம் பண்ணுவது [எசே. 36:23].

தண்ணீர் ஏராளமாகப் புறப்பட்டு வந்தது. ஜனங்கள் குடித்தார்கள். கர்த்தருடைய மாதிரிக்கு மாறாகச் செய்தாலும் பலன் உண்டாகலாம். ஆனால் அது தேவ சித்தத்திற்கு மாறானதே மத்.7:20-27. அவைகள் நிலைத்திருப்பதில்லை. நிலையான பலனைக் கொண்டு வருவதில்லை. கடைசியில் பெருநஷ்டமும் உண்டாகும்.

இப்படி கட்டளையை மீறிச் செய்தது மோசேக்கும், ஆரோனுக்கும் பாவமாயிற்று. இந்த பாவம் அடிக்கடி அவர்களுக்கு ஞாபகமூட்டப்பட்டது. எண்.20:12; 20:24; உபா 32:50-52. சில துணிகரமான பாவங்களும், துரோகங்களும், கீழ்படியாமைகளும் ஞாபகமூட்டப்படும் சுட்டிக்காட்டப்படும். அப்படியே இஸ்ரவேலர்கள் தேவனைப் பரீட்சை பார்த்த காரியமும் குறிப்பிடப்படுகிறது எண். 14:22; 1 கொரி. 10:5-11. மோசேயோடு சேர்ந்து ஆரோனும் இப்பாவத்தில் ஈடுபட்டார். ஜனங்களைக் கூட்டி அவர்கள் கண்களுக்கு முன்பாக மலையை பார்த்து பேசுங்கள் அது தன்னிடத்திலுள்ள தண்ணீரைக் கொடுக்கும் என்று தேவன் சொன்ன சம்பவம் ஆரோனுக்குத் தெரியும். மோசேயும், ஆரோனும் சபையாரைக் கன்மலையின் முன் கூடிவரச் சொன்னார்கள் [வசனம்-10].

### மோசேக்கும் ஆரோனுக்கும் தண்டனை:- எண். 20:12

"இந்த சபையாருக்கு நான் கொடுத்த தேசத்துக்குள் நீங்கள் அவர்களைக் கொண்டு போவதில்லை என்றார்." உபா, 32:48-52. மிகக் கடினமான எகிப்தின் அடிமைத்தனத்தினின்றும்; எகிப்தின் ராஜாவாகிய பார்வோனின் கரத்தினின்றும்; இஸ்ரவேல் ஜனங்களை மீட்டுநடத்தி பல நெருக்கடிகளையும் சமாளித்து கிட்டத்தட்ட வாக்குத்தத்தம் பண்ணின தேசத்தின் சமீபம் வந்த பொழுது மோசேக்கு கட்டளையை மீறின பாவத்தினிமித்தம் தேவ தண்டனை உண்டாயிற்று. நீ அந்த தேசத்துக்குள் பிரவேசிக்கக் கூடாது. இனிமேல் வரும் ஒவ்வொரு ஊழியக்காரருக்கும் எச்சரிப்பாய் இது இருக்கிறது. மோசே அந்த நல்ல தேசத்தைப் போய் பார்க்க அனுமதி கேட்டபோதும் தேவன் இனி இந்த காரியமாய் என்னோடே பேசவேண்டாம் என்று சொல்லிவிட்டார் உபா. 3:25,26. மோசேக்கு மோட்சம் கிடையாது என்று அர்த்தமல்ல. ஊழியம் நிறுத்தப்பட்டது. வெகுகாலத்துக்குப் பின்பு மேசியாவுடன் சம்பாஷிக்க, கானானுக்குள் போக

தேவன் அநுமதியளித்தார் [மத். 17:3; மாற். 9:4; லூக். 9:30,31]. இறைவனே மோசேயின் பூமிக்குரிய வாழ்க்கையை முடித்து அவரை அடக்கம் செய்தார். இந்த மகிமை வேறொருவருக்கும் கிடைக்க வில்லை உபா. 34:1-7.

(தொடரும்)

“நம்மை உண்டாக்கின கர்த்தருக்கு முன்பாக நாம் பணிந்து, குனிந்து முழங்காற்படியிடக்கடவோம் வாருங்கள்” சங். 95:6.

(செப்டம்பர் மாத தொடர்ச்சி)

## மனிதனும் பாவமும்

மனிதன், அவன் கடவுளின் சொல்லின், அச்சொல்லுக்காக அதாவது கடவுளோடு ஆளுறவு கொள்ளுமாறு உண்டாக்கப்பட்டுள்ளான். என்ற கருத்தில் மாத்திரம் மனிதனை நாம் அறிந்து கொள்ளமுடியும். இந்த உண்மைக்கு புதிய வழிவகுத்த ஆற்றல்மிக்க ஊக்கத்திற்காக நாம் வேதாகமத்திற்கு கடமைப்பட்டுள்ளோம். இதனால் நாம் அறிந்து கொள்வது யாது? கடவுள் அழைப்பு கொடுக்கிறார். மனிதன் அதற்கு இணங்கவேண்டும் என்பதே. ஆழ்ந்து ஆராயுமிடத்து கடவுளின் அழைப்பு உயிருக்கும் வாழ்க்கைக்குமே. ஒரு பொருள் அல்லது மிருகத்தின் காரியத்தில் உள்ள ஒன்று அல்ல. இது மனிதன் தானாகவே சுயாதீன உணர்ச்சியோடு கடவுளுடன் இணக்கம் தெரிவித்து, அவரது அழைப்பை ஏற்றுக்கொண்டு தனது வாழ்வினை பெற்றுக் கொள்ள வேண்டும். அவன், கடவுளுக்கு ஆகட்டும் என்று இணங்க வேண்டும். மாட்டேன் என்று சொல்லவும் அவனுக்கு சுயாதீனம் உண்டு. அதன் விளைவாக அவன் தெரிந்து கொள்வது யாது? வாழ்வா அல்லது அந்தோ தாழ்வு சாவு. மனிதன் நம்பிக்கையோடு இணங்குகிற அன்போடு, கடவுள் மீது சார்ந்தவனாய், தன்னை அழைத்து தனக்கென குறித்திருக்கும் வாழ்க்கை விதியை நன்றியோடு ஏற்றுக் கொள்வதன் மூலம் அவருக்கு பதிலளிக்குமாறு நியமிக்கப்பட்டிருக்கிறான். அவனது வாழ்க்கை இணக்கம் தெரிவிப்பதாகும். இணக்கம் தெரிவிக்கின்ற ஒன்றாகும். அது அப்படித்தானிருக்க வேண்டும். ஏனெனில் கடவுள் தனது ஆள் இயல்பாலும், பரஸ்பர அன்பும் ததும்பிய உறவுமாயிருக்கவேண்மென்றே கருதப்படுகின்றது. அன்பு தனக்குரிய இயல்பான தன்மையில் தானாகவும் சுயேட்சையாகவும், ஏற்படுவதாயும், இணக்கமுள்ளதாயும் இருக்கிறது.

அன்பு வலுக்கட்டாயத்தை அறியாது. அன்பு எந்நேரத்திலும் கட்டாயப்படுத்தப் பட்டாலும், அந்நேரமே அது அழிந்து விடுகிறது. அன்பும் சுயாதீனமும் இரு சகோதரர்கள் எனலாம். அதிலும் சுயாதீனத்திற்கு தீர்மானம் ஒன்று அவசியம். அது நாம் தவிர்க்க முடியாத ஒரு கடமை.

பொதுவாக மக்கள் தங்களுக்குத் தாங்களே எஜமான் என்று எண்ணுகிறார்கள். கடவுள் தங்கள் திட்டங்களுக்கும், விருப்பங்களுக்கும் இசைந்தால், அப்பொழுது மட்டும் அவருக்கு ஒரு இடம் கொடுக்கலாம். நமது வாழ்க்கைக்கு நாமோ அடிப்படையோ அல்ல. அப்பொழுது மட்டும் கடவுளுக்கு ஒரு இடம் கொடுக்கலாம் என்று நினைக்கிறார்கள். நமது வாழ்வுக்கு நாமோ அடிப்படை அல்ல. கடவுள் நம்மோடு பேசுகிறார். நாம் மறுமொழி கொடுத்தே ஆகவேண்டும். அந்த மறுமொழி எவ்வாறு இருக்கவேண்டும் என்பதை நாமே தீர்மானிக்க வேண்டும். இவ்வண்ணமாக இணக்கமுள்ள வாழ்க்கையும் ஆகும். நமது இணக்கத்திறமை நமது பொறுப்புடைமை ஆகின்றது. இது கடவுள் அருளும் ஒரு பெரும் சவாலும். ஆனால் அது பயங்கரமானதும்கூட. கடவுளது அழைப்பிற்கு அளிக்கும் பதிலே, அவர் நமக்காக கொண்டுள்ள அருள் நோக்கதை நிறைவேற்றுவதோ, அழித்துவிடுவதோ எல்லாம் நமது கரத்தில்தான் உள்ளது. பொறுப்பை வகிக்கின்றன இச்சுயாதீனத்தின் சுவு மனிதனது அமைப்பிலே உள்ள தீர்மானம் காணும் அம்சமாகிய [Humanum] மனிதத்தன்மையாகும்.

உவமானம்:-

மனிதன் ஒரு பாவி. மனிதனுக்காக கடவுள் கொண்டுள்ள நோக்கம் இழக்கப்பட்டு வருகிறது. மனிதன் கடவுளது சாயலை பிரதிபலிக்கிறதில்லை. அவன் கடவுளது அழைப்புக்கு இணங்குவது கிடையாது. அவன் கீழ்படியாது இருக்கிறான். அந்தோ அவனது இயல்பு பாவத்தினால் கறைபடுகின்றது. இதனை மேலும் ஆராய்வோம்.

பாவம் ஒரு மெய்மை:-

மனிதன் தான் இருக்க வேண்டிய நிலையில் இல்லை. புத்தியுள்ள எவனும் இவற்றை மறுக்கத் துணியான். ஆகிலும் இதனை மெய்ப்பிக்க வேறு சான்று அவசியமில்லை. ஆயினும் துவக்கத்தைப்பொறுத்து விவிலிய வெளிப்பாட்டின் நோக்கம் காணின் இதுவே ஆழ்ந்த பிரச்சனையை எழுப்புகின்றது. கடவுளின் சாயல் மனிதனில் பிரதிபலிக்கவில்லை என்பது தெளிவு. அதற்குப் பதிலாக மனுக்குலத்தோர் முகத்தில் வேறொரு உருவத்தின் தோற்றங்களே காணப்படுகின்றன. மனுக்குலத்தின் சரித்திரமானது தன்னலம், சண்டை, பெருமை, இரத்தம்சிந்துதல், கொலைநிறைந்த ஒருபயங்கர கதை. இது நிறைவுக்கு நேராய்மனிதன் செய்யும் மேலோக்கியபயணத்தின் தாழ்ந்தபடிகளையே குறிக்கின்றது என்னும் கருத்து நிலைநாட்டத்தக்க தன்று. ஏனெனில் அதிக அபாயகரமான தொன்று அதன் வேரில் உள்ளது. மனிதன் நாளடைவில் மேன்மை பெற்று வருகின்றான் என்று கூறுவது ஏற்புடையது அன்று. இயற்கை சக்திகளை அடக்கி ஆள்வதில் அவன் வியக்கத்தக்க வளர்ச்சி அடைந்திருக்கிறான் என்பது உண்மை. ஆனால் ஒழுக்க நெறியிலே வளர்ச்சியின்றி வெளியரங்கமான தளர்ச்சி ஏற்பட்டு வருகின்றது.

பொதுவாக பேசுங்கால், மனிதன் முகச்சாயலில் நெருங்கி ஆராய்வோமெனில் அவன் ஒருபோதும் தம்முடைய காலத்தைவிட அதிகமாய் பெய்தோற்றம் அளித்ததில்லை. கடந்த காலங்களில் அதிக முரடனாயும், நாகரீக மற்றவனாயும் இருந்திருக்கிறானென்றாலும் அதே சமயத்தில் தீமை செய்வதில் குற்றமற்றவனாயும் இருந்திருக்கின்றான். இப்பொழுது பழக்கவழக்கங்களினால் நாகரீகமடைந்திருக்கிறானேயன்றி அந்த தீமை செய்வதிலும் மிகத்தேர்ச்சி அடைந்துள்ளான். இவ்வுண்மைகள் அவைகளை பாரபட்சமின்றி பரிசோதிக்கிற எவருக்கும் தெளிவாக புலப்படத்தக்கவையே. ஆனாலும் மனிதனுடைய பாவம், சீர்கேடு ஆகியவற்றை நாம் நமது சொந்த வாழ்க்கையையும், இருதயத்தையும் கிறிஸ்துவின் ஒளி பரிசோதிக்க அவற்றின் மூலம் மட்டும் கண்டுபிடிக்க முடியும். பாவம் சுய

தாயத்தை கலக்குகின்ற துரோகம் பகை. இரத்தம் சிந்துதல் மட்டுமல்ல அது கடவுளுக்கு விரோதமான எதிர்ப்பு என்பதும் கிறிஸ்துவின் மூலமாகவே தெளிவுபடுத்துகிறது.

(தொடரும்)

> "நான் உலகத்திற்கு ஒளியாயிருக்கிறேன், என்னைப் பின்பற்றுகிறவன் இருளிலே நடவாமல் ஜீவஒளியை அடைந்திருப்பான் என்றார் யோ. 8:12.

# சுவிசேஷம் - நம்மேல் விழுந்த கடமை

"நீங்கள் உலகமெங்கும் போய் சர்வ சிருஷ்டிக்கும் சுவிசேஷத்தை பிரசங்கியுங்கள் என்று இயேசுகிறிஸ்து கட்டளையிட்டுள்ளார் (மாற். 16:15). ஆகவே சுவிசேஷத்தை அறிவிப்பது என்பது நம் எல்லோர் மீதும் விழுந்த கடமையாக இருக்கிறது [1 கொரி. 9:16]. நமக்கும் ஒருவர் கிறிஸ்துவை அறிவிக்காதிருந்தால், நாமும் இரட்சிக்கப்பட்டிருக்கமாட்டோம். தீவுகள் எனக்குக் காத்திருக்கும் என்று வேதம் [ஏசா. 60:9] கூறுகிறது. அங்கேயும் நாம் கடந்து சென்று, காத்திருக்கிற மக்களுக்கு சுவிசேஷத்தை அறிவிப்போமாக.

ஹாலந்து தேசத்தில் உள்ள ஒரு தீவில் துன்மார்க்கமான மக்கள் வாழ்ந்து வந்தார்கள். அவர்களுக்கு சுவிசேஷம் அறிவிக்க வந்தவர்களை எல்லாம் கொன்று போட்டார்கள். எனவே அங்கு சென்று சுவிசேஷம் அறிவிக்க செல்ல மிஷனெரிகள் பயந்து கொண்டிருந்தனர். ஜார்ஜ் என்ற பக்தர் இதைக் கேள்விப்பட்டார். எப்படியாவது அந்த தீவு மக்களுக்கு சுவிசேஷம் அறிவிக்க வேண்டும் என்று பேரவாகொண்டார். இரத்தசாட்சியாய் கிறிஸ்துவுக்காக மரிக்கவும் முன்வந்தார். பயணத்தை ஆயத்தப்படுத்தினார். ஒரு நாள் அந்த தீவை நோக்கி கடற்பயணத்தை மேற்கொண்டார். கப்பலில் இருந்தவர்கள் அவரை அங்கே செல்ல வேண்டாம் என்று தடுத்தார்கள். அவரோ அதை பொருட்படுத்தவில்லை. நீங்கள் மூன்றும் நாள் மாலையில் இதே நேரத்தில் இங்கே மீண்டும் கப்பலில் வாருங்கள். நான் உயிருடன் இருந்தால் இத்தீவு மக்கள் இரட்சிக்கப்பட்டுவிட்டார்கள், என்று அர்த்தம். ஒருவேளை, நான் மரித்துவிட்டால் இந்த தீவுமக்கள் இன்னும் பாவத்திலே இருக்கிறார்கள் என்று நினைத்துக்கொள்ளுங்கள் என்றார். கப்பல் அவரை அத்தீவின் கரையிலே விட்டுவிட்டுச் சென்றது. அந்த தீவு, கடல்மட்டத்திற்கு பல அடிகள் கீழே உள்ள ஒரு தீவாகும்.

அங்கே ஜார்ஜ் தனக்கு ஒரு கூடாரத்தை அமைத்து, அதில் அமைதியாக ஜெபித்துக் கொண்டிருந்தார். தேவனுடைய கட்டளைக்காக காத்திருந்தார். மறுநாள் முழுதும் ஜெபித்தார். மூன்றும் நாள் காலையில் தேவ உத்தரவைப் பெற்றுக் கொண்டு அத்தீவு மக்களுக்கு சுவிசேஷம் அறிவிக்கப் புறப்பட்டார். அத்தீவு மக்கள் திரளாய் கூடிவந்தார்கள். அவர்களின் தலைவன், எங்களுக்கு அந்நிய தெய்வம் தேவையில்லை. எங்கள் கடவுள், எங்களைக் காப்பாற்றி வருகிறார். இப்பொழுதும் நீ இதற்கு விரோதமாக பேசுவாயானால் கொல்லப்படுவது நிச்சயம் என்று எச்சரித்தான். அவன் சொல்வதைப் பொறுமையுடன் கேட்ட ஜார்ஜ் அவனுக்கு பதில

மொழி கூறினார். அன்பான பெரியோர்களே! இயேசு கிறிஸ்து எல்லாரையும் இரட்சிக்கிற தேவன் மற்ற தெய்வங்கள் எல்லாம் கொல்லக்கூடியதாக இருக்கின்றன. ஆனால் இயேசுகிறிஸ்துவோ உயிர்கொடுக்கிறவராக, உயிர்ப்பிக்கிற கடவுளாக இருக்கிறார். அவர் நம்முடைய பாவங்களுக்காக மரித்தும் நாம் நீதிமான்களாக்கப்படுவதற்காக எழுந்தும் இருக்கிறார் (ரோ. 4:25). நீங்கள் என்னை கொன்றுபோட்டாலும், நீங்கள் மனந்திரும்பி இரட்சிக்கப்பட வேண்டும் என்பதே எனது ஆசை. இயேசு கிறிஸ்து எந்த சூழ்நிலையிலும், எல்லோரையும் இரட்சிக்க, பாதுகாக்க வல்லவராயிருக்கிறார் என்று பிரசங்கம் செய்தார்.

அப்பொழுது ஒருவன் பதைபதைக்க அங்கே ஓடி வந்தான். கூட்டத்தில் சலசலப்பு உண்டாயிற்று. கடல்நீர் கரையை உடைத்துக் கொண்டு தீவுக்குள் புகுந்துவிட்டது என்பதே அவன் சொன்ன செய்தி. மக்கள் கலங்கினார்கள். அவர்கள் தங்கள் உயிரைக் காப்பாற்ற தங்கள் தெய்வத்தை நோக்கி கூப்பிட்டார்கள். பதில் ஒன்றுமில்லை. சிலமணிநேரத்தில் தீவு மூழ்கிவிடும் அபாயத்தில் உள்ளதால் செய்வதறியாது மக்கள் திகைத்தனர். பக்தர் ஜார்ஜைத் தேடி திரும்பவும் அவ்விடத்திற்கு வந்தார்கள். அவரோ எதற்கும் கலங்காதவராக அங்கே அமைதியாக நின்று கொண்டிருந்தார். தலைவன் அவரிடத்தில் வந்து, ஐயா! நீர் சொன்னீரே, அந்த இயேசுகிறிஸ்துவே உண்மையான தெய்வமானால், எங்களை இந்த ஆபத்திலிருந்து காப்பாற்றட்டும், நாங்கள் அவரையே சேவிப்போம் என்றனர். ஜார்ஜ் அவர்களைக் ஆறுதல்படுத்தினார். இயேசு கிறிஸ்து எல்லாம் செய்ய வல்லவர். அவரால் கூடாதகாரியம் ஒன்றுமில்லை. அவர் நம்மை இப்பொழுதும் இந்த ஆபத்திலிருந்து தப்புவிப்பார், கலங்காதிருங்கள்! என்று கூறினார். அந்த தேவ மனிதர் தேவனை நோக்கி ஜெபித்தார். வேலை வந்தது. அந்த கப்பல் கரையருகே வந்து நின்றது. அத்தீவு மக்கள் அனைவரும் ஆபத்திலிருந்து காப்பாற்றப்பட்டனர். இயேசுகிறிஸ்துவை விசுவாசித்து. இயேசு கிறிஸ்துவின் சொந்தப் பிள்ளைகளாகிவிட்டார்கள். அல்லேலூயா!

மற்றவர்களுக்கு சுவிசேஷம் சொல்லும்படியாக தேவன் நம்மை அபிஷேகம் பண்ணியுள்ளார் (லூக். 4:18). இன்று நற்செய்தி அறிவிக்கும் நாள். இந்நாளில் நாம் மௌனமாக இருந்தால் குற்றம் நம்முடையதாகும். நமது தேவனாகிய கர்த்தர் கேட்கிறார்! யாரை நான் அனுப்புவேன், யார் நமது காரியமாக போவான்? அதற்கு. கர்த்தாவே! இதோ அடியேன் இருக்கிறேன்; என்னை அனுப்பும் என்று நாம் ஒவ்வொருவரும் சொல்வோமாக.

"சுவிசேஷத்தை நான் பிரசங்கியாதிருந்தால், எனக்கு ஐயோ..."

1 கொரி. 9:16

"சிறுவர் பகுதி"

# தகுதியான வஸ்திரம்

பெஞ்சமினும், ஸ்டீபனும் நல்ல நண்பர்கள். அவர்கள் இருவரும் ஒரே வகுப்பில் படித்து வந்தார்கள். பெஞ்சமின் பணக்கார குடும்பத்தில் பிறந்தவன். பள்ளிக்கூடத்திற்கு செல்லும் போது, அவன் விலையுயர்ந்த ஆடைகளையே அணிந்து

செல்வான். ஸ்டீபன் ஏழைக்குடும்பத்தில் பிறந்தவன் அவன் சீருடைகளையே அணிந்து பள்ளிக்குச் செல்வான். பெஞ்சமின், தனது வீட்டுக் கௌரவத்தைக் காண்பிக்கவும், மற்றவர்கள் தன்னைப் பார்த்தவுடன் மதிப்பு கொடுக்க வேண்டும் என்றும், தான் மற்றவர்களைவிட உயர்வானவன் என்று காண்பிக்கவும், மினுக்கான ஆடைகளையே விரும்பி அணிவான்.

ஒருநாள் பள்ளிக்கூடத்திற்கு திடீரென்று மாவட்ட கல்வி அலுவலர் [D.E.O] வந்திருந்தார். மற்ற எல்லா மாணவர்களும் வழக்கம் போல சீருடைகளை அணிந்து வந்திருந்தார்கள். பெஞ்சமினும் தனது வழக்கத்தின்படி பலவர்ண ஆடைகளை அணிந்து வந்திருந்தான். முன்னர் ஸ்டீபனும், மற்ற நண்பர்களும் பலமுறை அவனை சீருடை அணியுமாறு சொல்லிய போதும், பெஞ்சமின் அதை மறுத்துவிட்டான். வகுப்பில் முதல்பகுதி [1st Period] நடந்து கொண்டிருந்தபோது மாவட்ட கல்வி அலுவலர், அவர்களது வகுப்பிற்கு வந்தார். மாணவர்களைப் பார்வையிட்டுக் கொண்டிருந்த போது அவருடைய கண்கள் பெஞ்சமின் மீது குத்தி நின்றன. உடனே அவர் வகுப்பு ஆசிரியரையும் தலைமை ஆசிரியரையும் நோக்கி: யார் இந்த பையன்? ஏன் இவன் சீருடை அணியவில்லை. பார்ப்பதற்கு பணக்கார வீட்டு பையனாக தெரிகிறான். சீருடை வாங்கி அணிவதில் இவனுக்கு என்ன கஷ்டம் இருக்கிறது. என்று கேட்டார். அதைக் கேட்ட தலைமை ஆசிரியர் அவனைப் பார்த்து, டேய்! நீ வந்து வகுப்பு வாசலில் முழங்கால்படியிடு என்று அதட்டிக் கூறினார் பெஞ்சமினின் உள்ளம் படபடவென்று அடித்தது. கால்களும் கைகளும் நடுங்கின. அவமானத்தால் முகம் சிவந்து, கண்களிலிருந்து கண்ணீர் பெருக்கெடுத்து ஓடியது. அன்பான நண்பன் ஸ்டீபன் எனக்கு கூறிய நல்வார்த்தைகள் அப்பொழுது நினைவுக்கு வந்தன. தன்னுடைய தவறுக்காக ஆசிரியரிடம் மன்னிப்பு கேட்டான். தான் இனிமேல் ஒழுங்காக தினமும் சீருடை அணிந்து பள்ளிக்கு வருவதாக வாக்கு கொடுத்தான். அன்றைய தினத்தோடு அவனுடைய ஆணவமும் வீண்கர்வமும் ஒழிந்துபோய் விட்டன. மாலையில்வீடு திரும்பிய பெஞ்சமின், தனது தங்கை லீதியாளிடம் நடந்த சம்பவத்தைக் கூறினான்.

மறுநாள் ஞாயிறுபள்ளிக்கு இருவரும் சென்றார்கள். அங்கு ஞாயிறுபள்ளி ஆசிரியர் மத். 22:11-13 என்ற வேதபகுதியை எடுத்து விளக்கினார். பிள்ளைகளே, பாருங்கள் அன்று ராஜாவின் குமாரனுடைய கலியாண விருந்திற்கு வந்திருந்த ஒருவன் கலியாண வஸ்திரம் அணியாதவனாய் இருந்தபடியால் தண்டிக்கப் பட்டான். ஆகவே நீங்களும் பள்ளிக்கூடத்திற்கு செல்லும் போது சீருடைகளை அணிந்து செல்லுங்கள். திருச்சபையின் ஞாயிறு ஆராதனைக்கு வரும்போது கண்டிப்பாக வெள்ளைநிற ஆடைகளை அணிந்து வாருங்கள். இல்லாதுபோனால் இறைவன் நம்மை சிட்சிப்பார். அதுவரை ஞாயிறும் வெள்ளுடை அணிந்து வராதவர்கள் எழுந்துநின்று தங்கள் தவறுகளுக்காக மன்னிப்பு கேட்டுக் கொண்டார்கள். இனிமேல் ஒவ்வொரு ஞாயிறு ஆராதனைக்கும் வெள்ளைநிற ஆடைகளைத்தான் அணிந்து வருவோம் என்று வாக்குறுதி கொடுத்தார்கள். அப்படியே ஆயிற்று.

அன்பான தேவனுடைய பிள்ளைகளே! உங்களுடைய நிலைமை என்ன? நீங்கள் எவ்வாறு உடுத்தி வருகிறீர்கள்? வெள்ளைநிற ஆடைகளை அணிந்து வருகிறீர்களா? அல்லது வேறு ஆடைகளை அணிந்து வருகிறீர்களா? உள்ளம் வெள்ளையாக இருந்தால் போதும், உடையில் என்ன இருக்கிறது? என்று சொல்லும் சாத்தானின் வஞ்சக எண்ணங்களுக்கு இடங்கொடாதீர்கள். புறமார்க்கத்தார்களைப் போல கருப்பு உடைகளை, காவியுடைகளை

அணிந்துவர விரும்புவீர்களோ? வெள்ளை நிறம் பரிசுத்தத்தையும், நீதியையும், சமாதானத்தையும் குறிக்கும்.

உலக வாழ்க்கையில் உள்ள ஒவ்வொருவருக்கும் கூட திட்டமும், ஒழுங்கும் உண்டு ஏன் உங்களுக்குத் தெரியவில்லையா? போலீஸ்துறை, இராணுவம், பள்ளிக்கூடங்கள் போன்ற பலதுறைகளில் உடை அணிவதில் ஒழுங்கும் கட்டுப்பாடும் உண்டு. கண்டிப்பான பள்ளிக்கூடங்களில் மாணவர்கள் சீருடை அணிந்து வராவிட்டால் உள்ளேவர அனுமதிக்கப்படமாட்டார்கள்.

நீங்கள் தகுதியான வஸ்திரங்களை அணியவேண்டும். என்று வேதம் (1 தீமோ. 2:10) சொல்கிறது. நீங்கள் சீர்கெட்ட உடைகளை விட்டுவிட்டு, சீருடைகளை அணியவேண்டும் என்று கர்த்தர் விரும்புகிறார். திருச்சபையின் பிள்ளைகள் எவ்விதமாக உடுத்த வேண்டும் என்று வேதம் பிரச.9:8 ல் சொல்கிறது. 1 கொரி. 6:12 சொல்கிறபடி, எல்லாவற்றையும் அனுபவிக்கஎனக்கு அதிகாரம் உண்டு. ஆகிலும் எல்லாம் தகுதியாயிராது என்று அறிந்து தகுதியான வஸ்திரங்களை அணிவோமாக.

"சுத்தமும் பிரகாசமுமான மெல்லிய வஸ்திரம் தரித்துக் கொள்ளும்படி அவளுக்கு அளிக்கப்பட்டது" வெளி. 19:8.

## பெண்கள் [தொடர்ச்சி]

அவள் அந்நிய புருஷனை அறியாமல் இருக்கிற அறியாமையேயன்றி வேறு அறியாமை அவளிடத்தில் இல்லை, தான் புண்ணியவதியாயிருக்க தன்னை பாவி என்று சொல்லுகிற பொய்யை தவிர வேறு பொய் சொல்லி அறியாள். பாவத்தின் மேல் அவளுக்கு பகையை தவிர, வேறெருவரிடத்திலும் அவளுக்குப் பகையே இல்லை. சிரேஷ்டர்களைப் பார்த்து அவர்களைப்போல் அபாரயோக்கியதை நமக்கு இல்லை என்று அவளுக்கு உண்டாகிற பொறுமையைத் தவிர வேறு பொறுமை அவளிடத்தில் இல்லை. இவளைப்போலுண்டோ என்று சகல ஜனங்களும் சொல்லுகிற புகழ்ச்சிகளை அவள் சர்வ கொள்ளையடிப்பதேயல்லாது வேறு திருட்டு அவளிடத்திலில்லை.

பாத்திரமறியாமல் பிச்சையிடுகிற விஷயத்தில் அவள் செய்கிற லோபமே அல்லாமல் பாத்திரம் அறிந்து பிச்சையிடுவதில் எவ்வளவும் லோபமில்லை. அவளும் அவளுடைய குடும்பத்தாரும் தர்மம் செய்வதில் ஒருவருக்கொருவர் முந்தி செய்யப் பிரயாசப்பட்டு சண்டை செய்துகொள்ளுகிற சண்டையே தவிர வேறு சண்டை, மனஸ்தாபம், குரோதம், வர்மம் முதலிய துர்க்குணங்கள் அவளிடத்திலில்லை. ஜெகதீசனுடைய பாதாரும் இன்பத்தை அடைவதில் அவளுக்குப் பேராசையே தவிர வேறு பேராசை அவளிடத்திலில்லை.

அவளுடைய வீட்டிற்கு வருகிற ஈக்களும், எறும்புகளும் அகத்தம் அகப்படாமல் பட்டினியாயிருக்குமேயல்லாமல் அவளிடத்தில் வருகிற ஏழைகள் பட்டினி

யாயிருப்பதில்லை. தன் கையில் இல்லாத காலத்திலும் தான் உண்ணும் அன்னத்தை ஏழைக்கு பங்கிட்டு தன் வயிற்றுக்கு அவள் செய்யும் துரோகத்தைத் தவிர வேறே துரோகம் அவள் செய்வதில்லை. பாவத்தை செய்யாமலிருப்பதுமன்றி அதை நெஞ்சிலும் நினையாமல் மனம், வாக்கு, கிரியை மூன்று வகை தன்மையாயிருப்பாள். பாவம் செய்யாமல் புண்ணியம் செய்யவேண்டுமென்பது சர்வலோக நாயகனுடைய வேத வாக்கியமானதாலும் அந்த வாக்கியத்தை (அசித்தி செய்யும்) மீறச் செய்ய புருஷனுக்கு வல்லமை இல்லாமையினாலும், பாவம் செய்யும்படி புருஷன் கட்டளையிட்டால், அந்த கட்டளையை மட்டும் நிராகரிப்பாளேயல்லாது மற்ற விஷயங்களிலெல்லாம் புருஷ வாக்கிய பரிபாலனம் செய்யத் தவறாள்.

தெய்வபக்தி உள்ளவர்கள், தெய்வத்திற்குரிய ஆலயம் முதலியவர்களிடத்திலும் சிரத்தை உள்ளவர்களாயிருப்பது போலபுருஷபக்தியுள்ள சீமாட்டி, தன்கணவனைப் பெற்ற தாய் தந்தைகளை தன்னுடைய தாய் தந்தைகளிலும் அதிகமாய் எண்ணி அவர்களுக்கு பாதம் பணிந்து பணிவிடை செய்வாள். வார்த்திக தசையில் சரீர மெலிவினால் சிலருக்கு கோபம் வருவது சகஜமானதால் தன்னுடைய மாமன் மாமி முதலியவர்கள் சாதாரணமாய் தன்னை கோபித்தாலும் அதை பாராட்டாமல் மதுரமாய் பேசி அவர்களுடைய கோபத்தை சாந்தப்படுத்துவாள்.

அவர்கள் எங்கள் மருமகள் போலுண்டோ. இவளே எங்கள் கண்மணி. இவளே எங்களைப் பெற்றவள். இவளே எங்களை வளர்க்கிறவள். இவளே எங்களை காப்பாற்றுகிறவள். இவள் தேடி கிடையாத திரவியம், காணக்கிடையாத கற்பகம் என்று மகிழும்படி உபசரிப்பாள்.

கொழுந்தனார், நாத்தனார்களை தன்னுடைய சகோதர சகோதரிகளிலும் அதிகமாய் எண்ணி அவர்களுடைய காலில் பட்டதை தன்னுடைய கண்ணில் பட்டதாக எண்ணி நினைத்து பூரணபட்சம் காட்டுவாள். அவளும் அவளுடைய குடும்பத்தைச் சேர்ந்தவர்களும் நடக்கிற ஒழுங்கையும், மரியாதையையும் அவர்களுக்குள்ளிருக்கும் நித்திய சமாதானத்தையும், மாறுதபட்சத்தையும் அதனால் உண்டாகிற ஆனந்தத்தையும் யோசிக்குமிடத்தில் அவளுடைய வீட்டை பூலோக மோட்சம் என்று சொல்லத் தடையில்லை. அவளுக்கு எப்பொழுதும் பரோபகார சிந்தையைத் தவிர வேறு சிந்தையில்லை.

அன்னமில்லாதாருக்கு அன்னம் படைப்பாள். வஸ்திரம் இல்லாதார்க்கு வஸ்திரம் தருவாள். தாயில்லா பிள்ளைகளை தாய் போல் தாங்குவாள். துக்கமுள்ளோரை தேற்றுவாள். அழுவாரோடு அழுது அழுதல் செய்வாள். வியாதிக்காரரை விசாரித்து அவர்களுக்கு வேண்டிய பக்குவங்கள் செய்வாள். புத்தியில்லாதாருக்குப் புத்தி போதிப்பாள். பக்தியில்லாதாருக்கு பக்தியை படிப்பிப்பாள். வையாரையும் வாழ்த்துவாள். வாழ்த்துவார் முன்னே தன்னை தாழ்த்திக் கொள்வாள். தீமை செய்வோருக்கு நன்மை செய்வாள். ஏழைகளுக்கு தன்னால் முடியுமட்டும் உதவி செய்வாள்.

திரவிய சகாயம் செய்ய தன்னால் இயலாதபோது வாக்கு சகாயமாயினும் செய்வாள், பிறர் துன்பத்தை நீக்க தன்னால் முடியாதபோது அழுது இரங்கி கடவுளுக்குக் காத்திருப்பாள். இன்னும் இவளுடைய மங்கள குணங்களை சொல்ல அளவின்றி விரிவுமாதலால் இம்மட்டில் நிறுத்துகிறோம். நிறுத்தினோம்.

(தொடரும்)

---

“குணசாலியான ஸ்திரீ தன் புருஷனுக்கு கிரீடமாயிருக்கிறாள். இலச்சை உண்டுபண்ணுகிறவளோ அவனுக்கு எலும்புருக்கியாயிருக்கிறாள்” நீதி. 12:4.

---

# உன் பெயர் என்ன?

பெயர் என்பது உலகத்திலுள்ள எல்லா மனுஷருக்கும், ஜீவ ராசிகளுக்கும், பொருட்களுக்கும் அவசியமான ஒன்றாகும். பெயர் ஒவ்வொரு மனிதனுக்கும் அடையாளமாகவும் (Identification) மற்றவர்களிடமிருந்து வேறுபடுத்தி காண்பிப்பதற்கும் உதவுகிறது. ஒரு ஆளின் பெயரை நினைத்து அந்த மனிதனின் ஆள்தன்மையை [Personality] மனக்கண்முன் கொண்டுவர முடியும்.

அநேகப் பெயர்கள் காரணப்பெயர்களாக அர்த்தமுள்ளதாக இருக்கிறது.

ஏவாள் – ஜீவனுள்ளோருக்கெல்லாம் தாயானவள்.

மோசே – தண்ணீரிலிருந்து எடுக்கப்பட்டவன்.

சாமுவேல் – கர்த்தரிடத்தில் கேட்டு பெற்றவன்.

இயேசு – ஜனங்களின் பாவங்களை நீக்கி இரட்சிக்கிறவர்.

இம்மானுவேல் – தேவன் நம்மோடிருக்கிறார்.

தேவ ஜனங்கள் தங்கள் பிள்ளைகளுக்கு நல்ல பெயர்களை சூட்ட வேண்டும். ஏனென்றால் நம்முடைய பெயர் பரலோகத்தில் உள்ள ஜீவ புத்தகத்தில் எழுதப்பட வேண்டும் (வெளி. 21:27). நம்முடைய பெயரே கிறிஸ்தவன் அல்லது கிறிஸ்தவள் என்று சாட்சி பகருகிறதாக இருக்க வேண்டும். தேவனுடைய வெளிப்படுத்துதல் இருந்தால் அதன்படி வைக்கலாம் அல்லது வேதாகமத்தில் உள்ள பரிசுத்தவான்கள் பெயரை வைக்கலாம். நாம் என்ன நோக்கத்தோடு பெயர் வைக்கிறோமோ அந்த நோக்கம் நிறைவேறும்.

அந்நிய தேவர்களின் பெயராக இருந்தால் பெயரை மாற்றிக்கொள்வது நல்லது. ஏனென்றால் அந்நிய தேவர்களின் பெயரை சொல்ல வேண்டாம் (யாத். 23:13). அந்நிய தேவர்களின் நாமங்களை என் உதடுகளினால் உச்சரிக்கமாட்டேன் என்று தாவீது சொல்கிறார் (சங். 16:4). புறமதப் பெயருள்ளவர்கள் அரசாங்க சட்டமுறைப்படி தங்கள் பெயரை மாற்றிக் கொள்வது நல்லது.

ஒரு சில கிறிஸ்தவர்கள் படிக்கிறதிலும், வேலைவாய்ப்பிலும் அரசாங்க சலுகைகள் கிடைப்பதற்காக கிறிஸ்தவ பெயரை இந்து பெயராக மாற்றுகிறார்கள். அப்படி செய்வது கிறிஸ்துவை மறுதலிப்பதாகும். அப்படி செய்கிறவர்கள் இம்மையிலும் மறுமையிலும் ஆசீர்வதிக்கப்படுவதில்லை.

அக்காலத்திலே இஸ்ரவேலர்கள் நியாயப்பிரமாணத்தின்படி பிள்ளை பிறந்த எட்டாம் நாளிலே விருத்தசேதனம் பண்ணி பெயரிட்டதாக நாம் வேதத்தில் வாசிக்கிறோம் (லூக். 1:59-63, 2:21). அதன்பின் சுத்திகரிப்பின் நாட்கள் முடிந்தபின் கர்த்தருடைய ஆலயத்திற்கு கொண்டு வந்து கர்த்தருக்கு ஒப்புக் கொடுத்து காணிக்கை செலுத்தினதாக வாசிக்கிறோம் (லூக். 2:22-27). அதே போல ஆண்பிள்ளையாக இருந்தாலும், பெண்பிள்ளையாக இருந்தாலும் சுத்திகரிப்பின் நாட்கள் [குறைந்தது 30 நாட்கள் அல்லது 40 நாட்கள்] கழிந்தபின் ஞாயிறு பரிசுத்த ஆராதனைக்கு அழைத்துவந்து பரிசுத்தவான்கள், ஊழியர்கள் மூலம் பெயர் சூட்டி ஆசீர்வாதத்தை பெற்றுக் கொள்ள வேண்டியது அவசியம்.

தேவனுடைய பிள்ளைகளாகிய நாம் நம்முடைய பிள்ளைகளுக்கு பரிசுத்தவான்கள், பரிசுத்தவாட்டிகளுடைய பெயரை சூட்டி பரிசுத்த சந்ததியை உருவாக்குவோமாக. உன்னை பெயர் சொல்லி அழைக்கிற இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர் நானே (ஏசா. 45:3).

---

"...உன்னை பெயர் சொல்லி அழைத்தேன்; நீ என்னுடையவன்" (ஏசா. 43:1).

---